# திருவேங்கடமலை வரலாற்று மாலை

ஆசிரியர்:

திரு. உ.வே. தி.அ. கிருஷ்ணமாசாரியர்




வெளியீடு:

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

2000

**TIRUVENGADAMALAI VARALATRU MALAI**

Author: Sri U.Ve. T.A. Krishnamacharya



T.T.D. Religious Publications Series No. 465

First Edition: 1997

Second Edition: 2000

Copies: 3000

Published by:

**Dr. I.V. Subba Rao,** I.A.S.,
Executive Officer,
T.T.Devasthanams, Tirupati.

Printed at:

T.T.Devasthanams Press,
Tirupati - 517 507.

# "PUBLISHER'S NOTE"

Lord Venkateswara is a Prathyaksha Daiva in Kaliyuga. Puranas like Brahmanda, Bhavishyoththara, Skanda, Garuda, Padma, Markandeya, Vamana, Varaha and so on have glorified his fame and greatness in its texts.

In the history of Tirumala Tirupati Devasthanams, the dedicated services rendered by Acharyas, like Periya Tirumala Nambi, Sri Ramanuja and Tirumala Ananthalwan are great.

It is said that Sri Veṇkatachala Ithihasa Mala, a Sanskrit work of 900 years old, was written by Tirumala Ananthalwan. This work is a garland of narrations of various incidents that took place in Tirumala over a 100 year period during the life time of Sri Ramanuja and some decades after that.

The Telugu script of this work was first published by Mahavidwan Sri T.A. Srirangacharya Swami of Tirupati about a century ago.The T.T.D. has published the Devanagiri script in 1937 edited by Dr. S. Krishna Swamy Iyengar.

Having known the beauty and value of this work. Sri U.Ve. T.A. Krishnamacharya Swami, an erudite scholar in Ubhaya Vedanta and a retired Lecturer & Head,. Department of Nyaya, S.V. Oriental College, Tirupati, has translated this work in Tamil under the

title 'Tiruvengada Malai Varalatru Maalai" and T.T.D. serialised it in Sapthagiri from April 1982 to November 1985.

Now with a view to create awareness among the asthikas about the greatness of the history of Tirumala, the Tamil version, serialised in Sapthagiri is given in a book form.

This book containing seven sections deals the very interesting and inspiring incidents like proving the Lord only as Vishnu and not Subramanya , Siva or Sakti, showing evidences from Vedas and Puranas by Ramanuja, establishment of a fine flower garden over the Hills by Ananthalwan; Swami pushkarini a vishnu tirta; importance of Namam adorned on the forehead of the deity; consecretion of Sri Lakshmi on the Lord's chest; appointment of Jeeyars and Ekangi Sri Vaishnavas - all these and more finding a place.

We are happy to bring out the second edition of 'Tiruvengadamalai Varalatru Maalai' which has become very popular among the Tamil - speaking devotees.

Executive Officer<br>
T.T. Devasthanams, Tirupati.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# நூன்முகம்

ஸ்ரீ வைகுண்டநாதன் திருவேங்கடமுடையானென்னும் அர்ச்சாவதாரமாகத் திருமலையில் தோன்றிய வேளையின் நன்மையினாலும், நம்மாழ்வார் 'அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா' என்றருளிச் செய்தபடியே செல்வத் தெய்வமான திருமகள் அப்பெருமானின் திருமார்பில் நீங்காமல் தங்கியிருக்கும் திண்மையினாலும், திருமங்கையாழ்வார் 'செங்கயல் திளைக்குஞ் சுனைத் திருவேங்கடத்துறை செல்வனை' என்று மங்களாசாஸனம் செய்த வன்மையினாலும், ஸ்ரீவைஷ்ணவ மதத்தை அரும்பாடுபட்டு வளர்த்தருளிய பகவத் ராமாநுஜ முனிவர், திருமலைச் செல்வம் மேன்மேலும் தழைத்தோங்குவதற்காகவே ஸ்வர்ணமயமான திருமகள் திருமேனியை நிருமாணம் செய்வித்து இப்பிரானது திருமார்பில் பிரதிஷ்டை செய்வித்தருளிய பெருமையினாலும், திருமலையில் திருவேங்கடமுடையானுடைய செல்வம் தினந்தோறும் பெருகி வருவதும், தரும சிந்தனை பெரிதுமுடைய திருமலை திருப்பதி தேவஸ்தாநாதிகாரிகளால் உலக நன்மையொன்றையே கருத்தில் கொண்டு அச்செல்வப் பரப்பில் பெரும்பகுதி, அன்னதானம், வசதி குறைந்த பல கோவில்களின் நிருவாகம், திருமலை திருப்பதி திருச்சுகனூர் முதலிய தமக்குரிய ஊர்களிலும் நாட்டில் பல்வேறு நகரங்களிலும் மக்கள் தங்கும் வசதியுள்ள சத்திரங்களும் தனித்தனி வீடுகளும் அமைத்தல், ஆழ்வார்கள் ஆசாரியர்கள் அன்னமாசாரியர் புரந்தரதாஸர் முதலான பெரியோர்களின் பிறந்தநாள்களைக் கொண்டாடுதல், அன்னோரின் நன்னூல்களை அச்சிட்டுப் பரப்புதல், அவற்றைப் பற்றிய சொற்பொழிவுகளை ஏற்படுத்தல் ஆகிய நற்பணிகளுக்காகச் செலவிடப்பெற்று வருவதும் உலகப் பிரசித்தமானது.

இங்ஙனம் வருவதும் செல்வதுமாக இருக்கும் செல்வமேயன்றி நிலைத்து நிற்கும் . செல்வங்களும் திரு

வேங்கடமுடையானுக்கு உள்ளன. அவை திருமலையில் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் காலம் வரையிலும் ஒரு படிப்பட்டு விளங்கும். அவை யாவையெனில் - கிருத திரேதா துவாபரயுகங்களில் உண்டான - திருவேங்கடமு டையானது சரிதைகளை, ஸ்ரீவேதவியாசபகவான் தாம் இயற்றிய பல புராணங்களில் குறித்தருளியதாய் சற்றே றக்குறையப் பன்னீராயிரம் ச்லோகங்களைத் தன்னகத்தே கொண்ட ஸ்ரீவேங்கடாசலமாகாத்மியம் என்னும் தொகுப் புநூலும், திருவேங்கடமுடையானைப் பற்றிய இக்கலி யுகச் சரித்திரங்களை விவரித்து, இராமாநுசர்காலத்தில் அவர்தம் சீடரான திருமலையனந்தாழ்வான் வடமொழி யில் இயற்றியருளிய ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலை யும், அதற்குப் பின்பு தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் தோன்றிய திருமலையொ ழுகும் பிறவும் ஆகும். அழியாத ஐச்வரியங்களான இவற்றினுள்ளே ஸ்ரீவேங்கடாசலமாகாத்மியமென்னும் வட மொழிநூலை, தெலுங்கெழுத்திலும் தேவநாகராக்ஷரத்திலு மாகப் பலதடவைகள் தி.தி. தேவஸ்தான அதிகாரிகள் பதிப்பித்துள்ளனர். ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலையும் திருமலையொழுகும் இதுகாறும் ஒரேஒரு தடவை மட் டுமே பதிப்பிக்கப்பட்டுள்ளது. மறுபடியும் இவற்றைப் பதிப்பித்தால் உலகிற்குப் பேருபகாரமாகும். நிற்க.

இவற்றில் திருமலையொழுகு ஸ்ரீமான் வாசஸ்பதி N.C.V. நரஸிம்ஹாசாரியர் சிரோமணி வித்வான் M.A. (ஓய்வு பெற்ற ஸாஹித்யத்துறைத்தலைவர், S.V.O. காலேஜ், திருப்பதி) அவர்களால் தெலுங்கில் மொழிப்பெயர்க்கப் பட்டு, ஸப்தகிரித் தெலுங்குமாத இதழில் ‘திருமலஸமயாசா ரமுலு’ என்ற பெயரில் வெளியிடப்பெற்று வந்து கொண் டிருக்கிறது. ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலை முன்பே அன்னோரால் தெலுங்கில் மொழிபெயர்க்கப்பெற்று, தி.தி. தேவஸ்தானத்தாரால் புத்தகமாக வெளியிடப்பட்டுள்ளது. இந்த இதிஹாஸமாலை, சென்னைப்பல்கலைக்கழகப் பேரா சிரியர் டாக்டர் V.V. ராமாநுஜய்யங்கார் (ஆசிரியர்-யதிரா ஜபாதுகா) அவர்களால் ஆங்கிலத்திலும் மொழிபெயர்க் கப்பெற்று முன்பே ஆங்கில ஸப்தகிரியிதழில் வெளிவந் துள்ளது. அதுவும் புத்தகவடிவில் வெளிவர வேங்கடவன் அருள்செய்யவேணும்.

இப்போது அடியேன் மொழிபெயர்த்து ஏழெட்டு வருடங்கட்கு முன்பே தமிழ் ஸப்தகிரியிதழில் வெளிவந்த ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலை என்னும் நூல் திருவேங்

கடமலை வரலாற்றுமாலை என்ற பெயரில் வெளிவருகின்றது. இப்புத்தகத்தை வெளியிடுமாறு கட்டளையிட்ட தி.தி. தேவஸ்தானச் செயலாட்சித் தலைவர் - திருவாளர் என். ரமேஷ்குமார், I.A.S. அவர்களுக்கு எனது நன்றி கலந்த வணக்கும் உரித்தாகுக.

முன்பு ஸப்தகிரியில் வெளிவந்த நாளிலும், இப்போது புத்தகமாக வெளிவருகின்ற நாளிலும் வேண்டிய முயற்சிகளைத் தன்பேருக ஏற்றுக்கொண்டு பேருதவி புரிந்த ஸப்தகிரி ஆசிரியர் திருவாளர் N.S. ராமமூர்த்தி, M.A. அவர்கள் திறத்தில் நன்றியுடன் சேர்ந்த நமஸ்காரத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அன்றும் இன்றும் இந்நூல் வெளிவருவதற்கு இன்றியமையாத அச்சுத்தாள் திருத்துதல் முதலான பற்பல உபகாரங்களைப் புரிந்த என்தம்பி சிரஞ்சீவி ஸ்ரீமான் T.A. கோபாலாசாரியர் சிரோமணி, முன்னாள் வியாகரணத்துறைத்தலைவர், S.V.O. காலேஜ், திருப்பதி, ஸ்ரீமான் சிரஞ்சீவி - டாக்டர் M. வரதராஜன், M.A., S.V. யூனிவர்ஸிடி காலேஜ் தமிழ்ப்பேராசிரியர் ஆகிய இவ்விருவர்களுக்கும் என்னுடைய ஆசியையும் நன்றியையும் செலுத்தி விடைபெறுகிறேன்.

இங்ஙனம்,

(ஒம்) தி.அ. கிருஷ்ணமாசாரியர்

திருப்பதி

4-12-95

ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸமாலை

# முன்னுரை

'ஸ்ரீ வேங்கடாசலேதிஹாஸமாலா' என்னும் வட மொழி நூல் பெரும்பாலும் உரைநடையாகவும் சிறு-பான்மை செய்யுளாகவும் அமைந்துள்ளது. இதன் கண் கூறப்பட்டுள்ள விஷயங்களுக்குச் சான்றாக மேற்கோள் காட்டப்பெற்ற புராண ஆகமச் செய்-யுட்களே இந்நூலின் அரைப்பகுதியை ஆக்கிரமித்-திருக்கின்றன. திருவேங்கடமலையின் வரலாற்று மாலை என்பது இப்பெயரின் பொருளாகும். இது ஸ்தபகம் என்று குறிக்கப்பட்ட ஏழு உட்பிரிவு-களைப் பெற்றுள்ளது. ஸ்தபகம் = பூங்கொத்து. மாலை என்ற இதன் பெயருக்கு ஏற்ப, உட்பிரி-வுகள் பூங்கொத்துக்கள் எனப்பட்டன. ஆக சில இதிஹாஸங்க(வரலாறுக)ளாகிய மலர்களைச் சேர்த்து ஒரு கொத்தாக்கி, அத்தகைய ஏழு கொத்துக்களாகும் உட்பிரிவுகளை வரிசைப் படுத்தி வைத்துத் தொடுத்த மாலை போன்றது இந்நூல் என்க.

இதில் பகவத் ராமாநுஜ முனிவர் திருமலைக் கெழுந்தருளி, யாதவ ராஜனது சபையில் எதிர்வாதம் செய்த சைவர்க்கு, வேத ஆகம புராணாதிகளிலிருந்து தகுந்த பிரமாணங்களை எடுத்துக்காட்டித் திருவேங்-கடவனை விஷ்ணுமூர்த்தியே என்று நிலைநாட்டிய வரலாறும், திருமலையிலும் கீழ்த் திருப்பதியிலும்

நடுக்காலத்தில் விட்டுப்போயிருந்த சில பழைய ஆசா ரங்களை மறுபடியும் புராண நூல்களைக் கொண்டே ஸ்தாபித்த விதங்களும் மிகத் தெளிவாகத் தெரிவிக் கப்பட்டுள்ளன. இந்நூலைப் படிப்போர்க்கு வேங்கட வனைப் பற்றிய பல ஐயப்பாடுகள் விலகுமென்பதில் ஐயமில்லை.

முதல் ஸ்தபகத்தில் - திருவேங்கடமலை திருமா லின் திருப்பதியே என்றும், இரண்டாம் ஸ்தபகத்தில்- ஸ்வாமி புஷ்கரிணி திருமாலின் தீர்த்தமே என்றும், மூன்ரும் ஸ்தபகத்தில் - அதன் தென்கரையில் சேவை தந்தருளும் தேவன் - சந்தனல்லன் சிவபெருமானல் லன் ஹரிஹராவதார மூர்த்தியுமல்லன், ஸாக்ஷாத் விஷ்ணுமூர்த்தியே என்றும் இராமானுசர் விளக்கிய விஷயம் கூறப்பெற்றுள்ளது. மற்ற நான்கு ஸ்தப கங்களில் வெள்ளிக்கிழமைத் திருமஞ்சனம், மூலவரின் திருமண்காப்பு, உத்ஸவரின் திலகம், மூலவர் திருமார் பில் லக்ஷ்மீப்ரதிஷ்டை, கீழ்த் திருப்பதியில் கோவிந் தராஜனின் ப்ரதிஷ்டை அவருக்கு வலது புறத்தில் ஆண்டாளின் ப்ரதிஷ்டை., வேங்கடவன் மோவாயில் பச்சைக் கருப்பூரப் பரிமளம், கோபுரத்தில் தொங்கும் கடப்பாறை, திருமலை நம்பிகள்ஸந்நிதியில் இரா மானுசர் ஸ்ரீராமாயண ரகஸ்யப் பொருள் கேட்டல், அந்நம்பிகளுக்கு வேங்கடத்தான் வேடனாகக் காட்சி யளித்தல் அது காரணமாகத் தண்ணீரமுது உத்ஸவம் கொண்டாடுதல், திருமலை அனந்தாழ்வான் வரலாறு, திருமலையில் மக்கள் பின்பற்ற வேண்டிய ஒழுங்குமு றைகள், தொண்டு செய்வதற்காக ஜீயர் ஸ்வாமியை யும் அவருக்கு உதவியாக ஏகாங்கிஸ்ரீவைஷ்ணவர் களையும் நியமித்தல், திருமலையில் இராமானுசரின் விக்கிரஹப் பிரதிஷ்டை முதலிய நாம் அவசியமாக அறியவேண்டிய பல செயதிகள் அறிவிக்கப்படுகின் றன.

இந்நூலை இயற்றியவர் அனந்தார்யர் என்பது ஒவ்வொரு ஸ்தபகத்தின் முடிவிலும் காணப்படுகின்ற 'அனந்தார்ய கும்பிதாயாம் இதிஹாஸமாலாயாம்' (அனந்தார்யர் தொடுத்த வரலாற்றுமாலையில்) என்னும் வாக்கியத்திலிருந்து அறியப்படுகிறது. திருமலையனந்தாழ்வான் ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலையை இயற்றினாரென்னும் கர்ணபரம்பரைச் செய்தி உள்ளதனாலும்,, இந்நூலில் பலவிடங்களில் இவர் இராமாநுச முனிவரால் அனந்தார்யர் என்றே அழைக்கப்பட்டிருத்தல் காணப்படுதலாலும், பெரிய திருமலை நம்பிகளோடும் தம் ஆசாரியராகிய இராமாநுசரோடும் நெருங்கிப் பழகிய இவர் யாதவராஜனது சபையில் சைவர்களோடு இராமாநுசர் வாதம் புரிந்து அவர்களை வென்ற போது கூடவே இருந்து அவர் அவர்களை வென்ற விதத்தையும், திருமலையிலும் கீழ்த்திருப்பதியிலும் அம்முனிவர் நடத்தி வைத்த தரும காரியங்களையும் பிற்பட்ட நம் போல்வார் அறிந்து கொள்ளாமல் இழக்கக்கூடாதென்று கருதிக் கருணையுடன் அவற்றை ஒரு நூலாக எழுதியிருக்கலாமென்பதில் தகுதியிருப்பதனாலும், இராமாநுசர் பரமபதமெய்திய செய்தியைக் கூறும் இந்நூல், திருமலையனந்தாழ்வான் தம் குமாரருடன் கூடத் திருமலையப்பனுக்குத் தொண்டு செய்து வாழ்ந்து வந்தார் என்பதைக் கூறுதலன்றி அனந்தாழ்வான் பரமபதமடைந்ததைப் பற்றிக் கூறுமையாலும், ஏறக்குறையத் தொள்ளாயிரமாண்டுகட்குச் சற்று முன்பும் சற்றுப் பின்புமாகத் திருமலையில் நிகழ்ந்த பெரிய திருமலைநம்பி இராமாநுசர் அனந்தாழ்வான் முதலியவர்களைப் பற்றிய செய்தி தவிரப் பிற்காலச் செய்தி ஒன்றும் இதன் கண் காணப்படாமையாலும் - இந்நூலில் ஐந்து, ஆறு, ஏழாம் ஸ்தபகங்களில் கூறியபடியே - திருவரங்கத்திலிருந்து இராமாநுசமுனிவரின் ஆணையின்படித்

திருமலைக்கு வந்து ஏரியும் குளமும் பூந்தோட்டமும் தாமும் தம் தேவியாருமாகவே நிருமித்துத் திருவேங் கடவன் கோயிலில் யமுனைத்துறைவரின் பெயரால் ஒரு மண்டபம் கட்டுவித்துத் தோட்டத்தில் மலரும் மலர்களை அம்மண்டபத்துக்குக் கொண்டுவந்து திரு மாலை கட்டித் திருமலையப்பனுக்குச் சாத்தி வந் தவரும், இராமாநுசர் விண்ணுலகிற்கு எழுந்தருளிய பின்பு அவருடைய திவ்ய மங்கள விக்கிரகத்தைத் திருமலையப்பனின் அனுமதி பெற்றுத் திருமலை கோயிலில் ப்ரதிஷ்டை செய்வித்தவருமாகிய திரு மலையனந்தாழ்வானே இந்நூலினை இயற்றியிருக்க லாம் என்றுதோன்றுகிறது. நிற்க.

இந்நூல் ஏறக்குறைய நூறுண்டுகட்டு முன்பே, திருப்பதியில் மஹா வித்வானாய் ஸ்தலாசார்ய புரு ஷருமாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீ.உ.வே.தி.அ. புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமிகளால் தெலுங்கெழுத்திலும் 1937-ஆம் ஆண்டில் T.T.D. கமிஷனர் திரு. A. ரங்கநாத முதலியார், B.A.B.L. அவர்கள் காலத்தில், ராஜஸேவக, திவான்பகதூர் டாக்டர் S. கிருஷ்ண ஸ்வாமி அய்யங் கார், M.A., Phd. அவர்களால் ஆங்கிலச் சுருக்கத்துடன் தேவநாகரிலிபியிலும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இனி இந்நூல், வித்துவான், சிரோமணி திரு. தி.அ. கிருஷ்ணமாசாரியார் அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு திருவேங்கடமலை வரலாற்று மாலை என்னும் பெயருடன் இங்கு வெளியிடப்பெ றுகிறது.

* * *

# திருவேங்கடமலை வரலாற்றுமாலை

## பொருளடக்கம்

## நான்காம் ஸ்தபகம்

## ஐந்தாம் ஸ்தபகம்



## ஆறாம் ஸ்தபகம்

## ஏழாம் ஸ்தபகம்



* * *



திருமலை அனந்தாழ்வான்

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீவேங்கடாசல
இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம :
ச்ரியை ஸ்ரீபத்மாவத்யை நம :
ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

## முதல் ஸ்தபகம்

---

திருநெற்றியில் பச்சைக் கருப்பூரத் திருநாமமும் திருமுடியை விடாத மகுடமும் அழகிய திருமூக்கும் திருக்காதுகளில் சாத்திய மகர (சுறுமீன் வடிவுள்ள) குண்டலங்களின் ஒளிவீசும் திருக்கன்னங்களும் புன்சிரிப்பும் கோவைப்பழம் போல் சிவந்து கனிந்த திருவாயிதழும் நிறைந்து நீடித்த கருணை பொங்கிய கடைக்கண்ணேக்கமும் தானுமாய் **விளங்குகின்ற** திருவேங்கடமுடையானுடைய திருமுகமண்டலம் அடியேனுடைய உள்ளத்தின் கண் உருவெளிப்பாடாய்த் தோன்றி உறைந்தருள்க.

திருவேங்கடமலையின்கண் கலியுகத்தில் நிகழ்ந்த புண்ணிய வரலாறுகளென்னும் நறிய நன் மலர்களைக் கொண்டு ‘ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸமாலை’ என்னும் நூலென்கிற அழகிய மாலையை அடியேன் தொடுக்கிறேன். திருமகளைப் பிரியாத ஹரியும் அவனிடம் அன்புமிக்க அடியார்குழாமும் இம்மாலையைத் திருமார்பிலும் திருவுள்ளத்திலும் தரித்தருள்வாராக.

திருமகள் மணவாளனும் திருவைகுந்தங் கோயில் கொண்டவனும் நித்திய முக்தர்களால் அனுபவிக்கப் படுபவனும் (இவற்றால்) உயர்வற உயர்ந்த ஆனந்தம் சேரப்பெற்றவனும் அனைவரையும் அடக்கி ஆளுமவனும் கரைபுரண்ட கருணையைத் தனக்கு இயல்பாக உடையவனுமாகிய பகவான் - தனக்கு எப்போதும் தொண்டு செய்து இன்புறுவதைப் பற்றிச் சிறிதும் அறியாமல் மிகக் கொடியதும் தொலைவில்லாத துன்பங்களுக்குக் கொள்கலமுமாகிய இந்த ஸம்ஸாரமாகிற (பிறப்புத் தொடர்ச்சியாகிற) கடலிலே மேன்மேலும் மூழ்கியெழுவதிலேயே கருத்து ஊன்றப்பெற்று எத்தனை நாட்கள் கழிந்தாலும் இதைக் கடக்க வழியறியாது உழலும் உயிர்களை, தன்னுடைய தாமரை போன்ற திருவடியிணையைத் தஞ்சமாகக் காட்டித் தூக்கியெடுத்து உய்விக்க விரும்பி, வைகுந்தத்தை விட்டு வெகுதூரமான இவ்வுலகுக்கு எழுந்தருளித் திருவேங்கடமலையில் அர்ச்சாவதாரமாக (பூஜிக்கப்படும் பிம்பவடிவமாக) அகலாமல் அணுகி நின்று பரம கருணையோடு தனது வலத்திருக்கையினால் எல்லாரையும் தன் திருவடியிணைத் தாமரைகளைத் தஞ்சமாக அடையுமாறு காட்டியும், முழந்தாளினருகில் வைத்த தனது இடத்திருக்கையினால் அங்ஙனம் தன் திருவடிமலர்களை அடைந்த எல்லோர்க்கும் இப்பிறவிக்கடல் முழந்தாளளவாக வற்றிக் கொடுக்குமென்பதை விளக்கியும், எல்லாவுயிர்களின் ஊனக் கண்களுக்கும் புலனாகிப் பொலிந்து விளங்குகின்றான் என்பது அனைவரும் அறிந்ததேயன்றோ?

இன்றுள்ள பிரமதேவனது ஆயுட்பகுதியின் பின்பாதியில் முதலாவது சுவேதவராக கற்பத்தில் ஏழாவதாகிய வைவஸ்வதமநுவின் அதிகாரகாலத்தில் பதினெட்டாவதான இம்மஹாயுகத்தில் கலியுகத் தொடக்கத்தில் நைமிசாரணிய க்ஷேத்திரத்தில் தீர்க்கஸத்ரம் என்னும் பெரிய வேள்வி ஒன்று நடைபெற்ற போது மகரிஷிகள் கூட்டங் கூட்டமாகக் குழுமியிருந்த சமயத்தில் எல்லா இதிஹாஸ புராணப்பொருள்களையும் நன்கறிந்தவரும் வேதவியாஸ

பகவானுடைய சிஷ்யரும் உரோமஹர்ஷணரின் புதல்வருமான சூதர் தாம் அறிந்த இதிஹாஸ புராணார்த்தங்கள் அனைத்தையும் அறிவிக்க ஊக்கங்கொண்டு திருவேங்கடமலையின் பவித்திர சரித்திரங்களையும் கூறிக்கொண்டே, வருங்காலத் திருவேங்கடமலைச் சரித்திரங்களில் - கடந்தகாலத் திருவேங்கடமலைச் சரித்திரங்களுக்கு எடுத்துக்காட்டாகச் சிலவற்றை விரிவாகவும் சிலவற்றைச் சுருக்கமாகவும் கூறியுள்ளார். அவற்றுக்கும் பிற்பட்ட இக்ககலியுகத்திய சில விசேஷ சரித்திரங்கள் இந்த நூலில் கூறப்படுகின்றன.

புராண வசனத்தினால், அவதரிக்கப் போகிறானென்று முன்பே அறியப்பட்டவனும் தொண்டைமான் சக்கரவர்த்தி என்று பிரசித்தி பெற்றவனும் ஸ்ரீநிவாஸப் பெருமானின் பெரும் பக்தனுமாகிய பேரரசன் ஒருவன் - இக்கலியுகத்தில் விக்கிரமாதித்தன் முதலிய சகபுருஷர்களுக்குப் பின்பு இக்காலத்திற்குச் சிறிது முன்பு வாழ்ந்திருந்தான்.

தன்னால் பொறுக்க முடியாத பகைவரது சேனையை அழிக்க ஆசை கொண்ட அவ்வரசனுக்கு, பரம தயாளுவான பகவான் திருவேங்கடநாதன் தனக்கே உரிய லக்ஷணங்களாகிய சங்கு சக்கரங்களை அளித்துவிட்டு, அன்றுமுதல் அத்தகைய தன் பெருங்கொடைத் தன்மையைப் பிரசித்தமாக்கி அதனால் உலக மக்களைத் தன்வசமாக்கிக் கொள்வதற்காகத் தன் தாமரைக் கைகளில் சங்கு சக்கரங்களைத் தாங்காமலேயே சில நாட்கள் விளங்கிக்கொண்டிருந்தான்.

அப்போது பூமண்டலத்தில் எல்லாவிடங்களிலும் பரவிய கலியின் பெருங்கொடுமையினால் சாதி ஆச்சிரம தருமங்கள் எல்லாம் பெரும்பாலும் அழியப்பெற்றும் திருமாலின் திருக்கோவில்கள் இடிக்கப்பெற்றும் அரசர் பாவச் செயல்களில் பற்றுடையவராகப் பெற்றும் மக்கள் வேத நிந்தை செய்யுமவராகப் பெற்றும் எல்லா இடங்களிலும் தருமம் சிதையப்பெற்றும் இருக்க, கரைகடந்த கருணைப் பெருங்கடலாகிய திருமகள் நாதன், தருமநெறியின் தவ

றுதலைப் பொறுக்கமாட்டாமல் ஒருகால் தன் அந்தரங்க வடியவனாய்த் தனக்குப் படுக்கையுமான அனந்தனை (ஆதிசேஷனை) அழைத்து நீ சென்று தாரணியில் அவதாரம் செய்து சாதி ஆச்சிரம தருமங்கள் அனைத்தையும் நிலைநிறுத்தி, வேதத்தை நிந்திப்பவரும் அதற்கு அவப்பொருள் உரைப்பவருமாகிய பாஷண்டிகளை வென்றோட்டிப் பரமபாவனமான பரமவைஷ்ணவ தருமத்தைத் தழைத்து வளரச் செய்து, பண்டுபோலவே திருமாலின் கோயில்களில் எப்போதும் எல்லாப்பூஜைகளும் நடக்குமாறு நிலைநாட்டி உலகனைத்தையும் தக்கபடியே காக்கக் கடவாய் என்று கட்டளையிட்டருளினான்.

அவ்வாறு பகவானால் ஆணையிடப்பெற்ற ஆதிசேஷன், பூவுலகில் வருண ஆச்சிரம தருமநியதி சிறிது எஞ்சியுள்ள தமிழ்நாட்டில் தொண்டை மண்டலத்தில் பாலாற்றின் பக்கத்தில் உள்ள ஸ்ரீபெரும்பூதூரில், கலி 4118, சாலிசகம் 939 ஆண்டுகள் கழிந்தபிறகு அடுத்த பிங்களவாண்டில் சூரியன் மேஷராசியைச் சேர்ந்த சித்திரை மாதத்திய திருவாதிரை நாளில், நாடறிந்த நற்புகழெய்தியவரும் வைதிகர்தலைவரும் ஹாரீத கோத்திரதிலகருமான கேசவ யஜ்வாவிற்குத் தனயனாய்த் தோன்றினான்.

கலியுக வருஷங்களில் 4118 ஆண்டுகள் சென்ற பின்பு அடுத்த பிங்கள வருஷத்தில் சூரியன் மேஷராசியையும் சந்திரன் திருவாதிரையையும் அடைந்த போது (சித்திரைமாதத் திருவாதிரையில்) ஹரித குல மணியான கேசவனென்னும் பார்ப்பனச் சிட்டரிடமிருந்து பூதபுரியில் இப்பூமியின்கண் ஆதிசேஷன் அவதரித்தான்.

இங்ஙனம் அவதரித்த ஆதிசேஷ பகவான் ஸ்ரீராமாநுஜனென்னும் திருப்பெயர் இடப்பெற்று எல்லாக் கலைகளிலும் வல்லமை பெற்று வடமொழி தென்மொழிகளாலாகிய இருவகை வேதங்களையும் அங்க உபாங்கங்களுடன் (துணை நூல்களுடன்) ஆழ்ந்தறிந்து ஸாரமான அவற்றின் பொருள்களைத் திரட்டித் தாமருளிய வேதார்த்த

ஸங்க்ரஹம் ஸ்ரீபாஷ்யம் முதலான நூல்களினால், உயிர் இறைவன் வாழ்வாகிய பயன் அதனைப் பெறுவிக்கும் உபாயம் அப்பயனைப் பெறவொட்டாமல் தடுக்கும் பகை ஆகிய இவ்வைந்தின் தன்மைகளையும் விளக்கி அதன் வாயிலாகப் பாஷண்டிகளை வென்று ஓட்டி வேதநெறியை முன்பிருந்த படியே ஸ்தாபித்து, ஆங்காங்கு நேர்ந்த தேவாலய வழிபாட்டின் மாறுபாட்டினை நீக்கித் திருத்தி மிக மிகத் தூய வைணவ தருமத்தைத் தழைக்கச் செய்து கொண்டு திருமால் திருப்பதிகள் அனைத்துக்கும் தலைய ணிமணியாய்த் தொன்மையூராகிய திருவரங்கமென்னும் திவ்விய நகரத்திலேயே பெரும்பாலும் வாஸம் செய்து வந்தார்.

இச்சமயத்தில் முற்கூறிய இத்திருவேங்கடநாதனுக்குத் தொண்டு செய்கின்ற ஸ்ரீவைகாநஸ ஸ்ரீவைஷ்ணவர்கள் அவ்வப்போது அப்பெருமானுக்குச் செய்யத்தக்க உபசாரங் களைச் செய்வதின்கண் ஊக்கம் குறைந்திருந்தது காரண மாக அப்போதைய அரசனான யாதவராஜனென்பவனால் பலவகையாகத் தண்டிக்கப்பட்டு அங்கிருக்க முடியாமல் தேசாந்தரம் சென்று சேர்ந்தனர்.

இங்ஙனம் அறிவும் அநுபவமும் வயதும் முதிர்ந்த அர்ச்சகர்கள் வேறிடம் சேரவும் அறிவு முதலியவற் றில் வல்லமைமிக்க ஸ்ரீவைஷ்ணவர்கள் யாரும் அப்போது அங்கு இல்லாமலிருக்கவும் கண்ட சில சைவர்கள் வைகாநஸர்செய்த அபசாரங்காரணமாக வைஷ்ணவர்க ளிடம் சிறிது சீற்றங்கொண்டிருந்த யாதவராஜனென்னும் அந்நாட்டு மன்னனிடம் சென்று சேர்ந்து மெல்ல மெல்ல அவனிடத்தில் தமக்குச் செல்வாக்கையும் சேக ரித்துக்கொண்டு இவ்வாறு ஸமர்த்தனம் (மெய்யென்று தோன்றுமாறு பொய் சொல்லுதலைச்) செய்தனர்.

## சைவர்கள்

ஓ மகாராஜனே, திருவேங்கடமலையில் ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் திகழ்கின்ற தேவன் ஸ்கந்தபகவானே ஆவான். அவனுக்குக் குமாரஸ்வாமி என்ற பெயரும் பிரசித்தமாயுள்ளதனால் அவனருகிலுள்ள அந்தப் புஷ்கரிணியும் அவனுடையதாகவே ஸ்வாமி புஷ்கரிணி என்று மக்கள் அனைவராலும் வழங்கப்படுகிறது. பீமசேனனை பீமனென்றும் ஸத்யபாமையை பாமையென்றும் வழங்கக் காண்பது கொண்டு முழுப்பெயரின் ஒரு பகுதியினாலும் அதன்பொருளைக் குறிப்பது பொருந்துமென்று கருதலாமாகையினால், ஸ்வாமி புஷ்கரிணி என்பதிலுள்ள ஸ்வாமி என்ற சொல்லால் குமாரஸ்வாமியைக் குறிப்பது பொருந்தும்.

மேலும் வாமனபுராண - வேங்கடாசல மாஹாத்மியப் பகுதியில் இரண்டாம் அத்தியாயத்தில் - கந்தன் தன் தந்தையாகிய சிவபெருமானுடைய, பாபம் போக்கி மங்களமுண்டாக்கும் வார்த்தையைக் கேட்டு மிக மகிழ்ந்து, தத்துவம் அறிந்த அத்தந்தையை, ஸ்வாமீ தவம் செய்ய விரும்பும் எனக்கு எவ்விடத்தில் இடையூறுகள் ஏதும் ஏற்படாதிருக்குமோ அத்தகைய தவத்துக்குரிய சுபத்துடன் கூடிய க்ஷேத்திரம் இன்னதென்று விளக்கியருள்க. பிறவித்துன்பம் துடைக்குமவரே, அந்த க்ஷேத்திரத்துக்கு உமது ஆணை பெற்றுச் சென்று தவம் புரியக் கடவேன் என்று மறுபடியும் வினாவினான் - என்று தொடங்கி, 'கந்தன் பிருகஸ்பதிக்கு வரம் தந்து தேவர்கள் அனைவரையும் அனுப்பிவிட்டுத் தனது மயிலேறி விருஷபாசலம் (வேங்கடமலை) சென்றான். அங்கு அழகும் தூய்மையுமுடைய ஓரிடத்தில் தேவபூஜைக்கு உரிய தாமரை குவளை மலர்களால் மிக்க அழகியதொரு குளத்தைக் கண்டான். அதில் நீராடி அதன் கரையில் வாயுதேவனும் தவம் புரிந்து கொண்டிருக்கக் கண்ட அவ்வறுமுகக்குமரன் அமர்ந்து காலை பகல் மாலை என்ற

முச்சந்திகளிலும், தேவதேவர் தலைவனாய்ச் சங்குசக்கர தாரியாய்ப் பரதேவதையான நாராயணனை நினைத்துத் தியானித்துச் சமாதிநிலையை அடைந்து கடுந்தவம் புரிந்தான். தன்னுடைய இரண்டு பாதங்களினால் பூமியை அலங்கரித்துக் கொண்டும் பொன்னொத்த தன் மேனியொளியினால் பளபளவென்று விளங்கிக் கொண்டும் இருக்கும் குமரன், எது உயர்ந்த எல்லாவற்றையும்விட உயர்ந்ததோ - எதுதான் பெரிய எல்லாவற்றையும்விடப் பெரியதோ அத்தகைய பரப்பிரம்மத்தைத் தியானம் செய்து கொண்டிருந்தான் - என்பதிறுதியாக சுப்பிரமணியனென்று மறுபெயர் பூண்ட குமாரஸ்வாமி திருவேங்கடமலையில் ஒப்பற்றதொரு குளத்தின் கரையில் தவம்புரிந்துகொண்டிருந்தான் என்று தெரிவிக்கப்பட்டுள்ளதனால் ஸ்வாமிபுஷ்கரிணிக்கரையிலிருக்கும் இத்தேவன் குமரக் கடவுளே. தவவொழுக்கத்தில் ஊக்கங்கொண்ட இவரால் தமக்கே உரிய பாசமும் அங்குசமும் தற்காலத் தவநிலைக்குத் தடையானவையாகையாலே கைவிடப்பட்டன. அதனால் அவை தென்படவில்லை, ஆக இப்படிப்பட்ட காரணங்களினால் இம்மலைச் சிகரம் சைவக்ஷேத்திரமே யாகும். பிற்காலத்தில் தான் ஒரு சில வைஷ்ணவர்கள் புராணப்பொருளை மாறாக வருணித்து இத்தேவன் விஷ்ணு என்று மயக்கி அரசனையும் அநுமதிக்கச் செய்து, பூஜைக்கு உரிய சில வைஷ்ணவ பிம்பங்களைக் கோவிலில் புகுத்தித்திருவிழா முதலியற்றை நடத்தி வருகின்றனர். உண்மையில் கந்தன் தவம் புரிந்த இந்தத் தலம் சைவக்ஷேத்திரமாகவே இருக்கத்தகும். ஆகையால் இப்போது இங்கு எல்லா விதிகளும் சைவாகமப்படியே உன்னால் நிறைவேற்றப்படவேண்டும் - என்று. (ஸமர்த்தனம் செய்தனர்.)

இவ்வாறு - கீழ்க்காட்டிய வாமன புராண வேங்கடாசல மாகாத்மியப் பகுதியின் கருத்தை - இதற்கு முன்னும் பின்னும் உள்ள சந்தர்ப்பங்களுக்கும் வராக புராணம் முதலிய பல்வேறு புராணங்களில் கந்தனது தவத்தைக்

களை வெளியிடாமல் அவற்றுக்கு முரணுகத் தம் இஷ்டப்படியெல்லாம் சொல்லுமவர்களும், மேலெழுந்தவாருகத் தோன்றி ஆராய்ந்தவாறே நிலைநில்லாத கருத்தைக் கூறி மயக்குவதில் நோக்கமுடையவர்களும், பணம் மற்றும் தாம் விரும்பும் பொருள்கள் அரண்மனையில் ஒருயர்ந்த பதவியில் நிலைபெற்றிருத்தல் ஆகியவற்றில் பேராசை கொண்டவர்களும், க்ஷேத்திரத்தை ஆக்கிரமிப்பதிலேயே ஊற்றமுடையவர்களும், பிடிவாதம் ஒன்றுமே உடையவர்களுமாகிய சில சைவ மக்களால் அறிவிக்கப்பட்ட யாதவராஜன் இவ்விதம் சிந்தித்தான்.

**யாதவராஜன் :**

இந்நாள்வரையில் திருவேங்கடமலை விஷ்ணுக்ஷேத்திரமென்றே பிரசித்தமாயிருக்கிறது. அங்கு எப்போதும் நிகழ்ந்து கொண்டிருக்கும் தேவன் ஸ்ரீமஹாவிஷ்ணுவென்றே பிரசித்திபெற்றுள்ளான். இந்த ஸ்வாமி புஷ்கரிணியும் திருமாலுக்குரிய தீர்த்தமென்றே நன்ருக அறியப்பட்டதாய் இருக்கிறது. ஸ்ரீவைஷ்ணவர்கள் மட்டுமே இப்பெருமானுக்கு இதுவரையிலும் வழிபாடு திருவிழா முதலியவற்றைச் செய்து கொண்டுவருகின்றனர். இப்படியிருக்க இப்போது சைவர்களால் ஏன் இங்ஙனம் கூறப்படுகின்றது? இவற்றில் எது உண்மை? நன்ருக ஆராய வேண்டும். ஆராயாமலே திடீரென்று எதையும் மாறுபடுத்துவது உசிதமன்று - என்று. (சிந்தித்தான்.)

அச்சமயம் அங்கிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் புராணப் பொருளை உள்ளபடியே அரசனவையில் எடுத்துரைத்து தமது மதத்தினை நிலைநிறுத்திக்கொள்ளப் போதுமான ஆற்றலில்லாதவர்களாய். திருவரங்கத்தில் நாராயணன் சமயத்தை நன்ருக நாட்டவல்ல ஆசாரியராக விளங்குமவரும் கலைவல்லவர் பலரைத் தம்மிடம் கூட்டமாகச் சேர்த்துக்கொண்டிருப்பவரும் அறிவு ஒழுக்கம் ஆற்றல் முதலிய நற்பண்புகள் படைத்தவருமாகிய இராமாநுசமுனிவருக்கு, இங்குள்ள எல்லாச் செய்திகளையும் தெரிவிக்கு

மதான ஓர் விண்ணப்பவோலை எழுதி உடனே அனுப்ப லாயினர்.

அந்த ஸ்ரீபகவத்ராமாநுஜமுனிவர் தமக்கு வந்த ஓலை யைக் கண்டு திருவுள்ளங் கலங்கப்பெற்றுத் திருவரங்கத்தை விட்டு உடனே புறப்பட்டனர். சில நாட்களுக்குள்ளேயே. வெகுதொலைவுள்ள வழிகளைக் கடந்து வேகமாக வேங் கடமலையருகிலுள்ள திருப்பதியை அடைந்தனர். பின்பு அந்நாட்டு மன்னனாகிய யாதவராஜனை அணுகி ஆசீர் வதித்துக் கொண்டாடித் தமது கடமை அனைத்தையும் அவனிடம் அறிவித்தனர். சில சைவர்களின் தீய நோக் கத்தினால் கற்பிக்கப்பட்ட ஐயமென்னும் கடலில் மூழ்கும் யாதவமன்னவனை யதிராஜயோகியானவர் கைகொடுத்து எடுக்க எண்ணி இங்ஙனம் உரைக்கலாயினர்.

## இராமாநுச முனிவர் :

அரசே, திருவேங்கடமலை ஸ்வாமி புஷ்கரிணி ஸ்ரீவேங் கடேசபகவான் என்று இம்மூன்று விஷயங்களில் சைவ மக்கள் உனக்கு எந்த ஐயப்பாட்டினை உண்டாக்கினரோ, அதை வேருடன் களைந்தெறிந்து உண்மையறிவை உனக்கு ஊட்டுவதற்காக வெகு தூரதேசத்திலிருந்து இங்கு உன்னிடம் யாம் வந்திருக்கிறோம். யார் உனக்கு இத்தகைய பெரிய சந்தேகத்தைப் பிறப்பித்தனரோ அவர் கள் அனைவரும் இப்போது வந்து உனது சபை யில் தம் கொள்கையைக் கூசாமல் கூறுவார்களாக. பின்பு நாம் அக்கொள்கையை மறுத்து உண்மைப் பொருளையும் நிலைநாட்டி உன்னுடைய ஐயத்தை நீக்குகிறோம் என்று. (உரைக்கலாயினர்.)

இவ்வாறு இராமாநுசரால் சபையில் உரைக்கப்பட்ட யாதவமன்னன் ஆசையுடன், வாதம் செய்யும் சைவர் களை வரவழைத்தான். பின்பு அரசனால் அழைக்கப்பட்ட அச்சைவர்கள் நீறணிந்த மேனிகளும் உருத்திராக்கக் கங்க ணங்களும் தாமுமாய்க் கூட்டமாகச் சபையில் இருந்தனர்.

சபையில் ஒரு பக்கம் வெண்மையான திருமண்காப்பணிந்த ஸ்ரீவைஷ்ணவர்திரளும் மற்றொரு பக்கம் புகைநிறத்த நீறணிந்த சைவர் திரளும் இருந்தது. பின்பு வாதம் தொடக்கமாக, ஒருபால் வைணவரும் மற்றொருபால் சைவருமாய்ச் சேர்ந்திருந்து தந்தம் கொள்கைகளுக்குத்தக்க யுக்திகளாகிய கயிற்றைச் சுற்றித் தத்தம் பக்கமாக வலித்திழுக்க, பண்டொருநாள் பாற்கடலைக் கடைந்த காலத்தில் அமரரும் அசுரருமாய் இருபக்கமும் சேர்ந்து நின்று வாசுகியாம் கயிற்றைச் சுற்றித் தத்தம் பக்கமாக வலித்திழுக்கும்போது அக்கடலின் கண் அங்குமிங்கும் தள்ளாடிச் சுழன்ற மந்தரமலைபோல் மன்னவன் மனம் சுழன்றான். அச்சபையில் முதன் முதலாகச் சைவர் வாதம் செய்தனர்.

## சைவர் :

திருவேங்கடமலையில் ஸ்வாமி புஷ்கரிணியின் தெற்குக் கரையில் திகழ்கின்ற தேவன் - குமாரஸ்வாமி ஸுப்ரமண்யன் முதலிய மறுபெயர்களைப்பெற்ற ஸ்கந்த பகவானே ஆவான். அவனுக்கு அருகிலுள்ள புஷ்கரிணியும் ஸ்வாமி புஷ்கரிணியென்று அவனுடையதாகவே குறிப்பிடப்படுகிறது. ஏனெனில் - முழுப்பெயரில் அடங்கிய ஒரு பகுதியினால் முழுப்பெயரின் பொருளை அறிவதென்ற வழக்கின்படி, ஸ்வாமி புஷ்கரிணி என்ற சொல்லிலுள்ள ஸ்வாமி என்ற பகுதியினால் குமார ஸ்வாமி என்னும் முழுப்பெயரின் பொருளான கந்தனையே அறிவிக்கப் புராணவாசிரியர் கருதியிருக்கக்கூடுமல்லவா?

வாமனபுராண - வேங்கடாசல மாஹாத்மியப் பகுதியில் இரண்டாம் அத்யாயத்தில் - பாபம் போக்கிச் சுபந்தரும் தந்தை கூறிய சொல்லைக் கேட்ட மைந்தனாங் கந்தன் மிகவும் மகிழ்ந்து தத்துவமறிந்த தந்தையாரை மேலும் வினவினான் - என்று தொடங்கி, தன்னுடைய இரண்டு பாதங்களினால் பூமியை அலங்கரித்துக்கொண்டும், பொன்னொத்த தன் மேனியொளியினால் பளபளவென்று விளங்கிக் கொண்டுமிருக்கும் குமரன் - எது

உயர்ந்த எல்லாவற்றையும்விட உயர்ந்ததோ, எதுதான் பெரிய எல்லாவற்றையும் விடப் பெரியதோ அத்தகைய பரப்பிரம்மத்தைத் தியானம் செய்து கொண்டிருந்தான் - என்பதிறுதியான நூற்பகுதியால், குமாரஸ்வாமி தன் தந்தையின் சொற்படியே திருவேங்கடமலையை அடைந்து ஒருபுண்ணிய தீர்த்தத்தின் தீரத்தில் நின்று கொண்டு கடுந்தவம் புரிந்தான் என்ற கதை விவரமாகச் சொல்லப் படுவது காணப்படுகின்றதல்லவா?

அதனால் அப்புராண நூற்படி அவன் தவமியற்றுமிடமாகிய ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில், தன் இரண்டடிகளாலும் பூமியைப் பற்றி நின்று கடுந்தவம் புரிவதில் கருத்தூன்றியவனாய்ச் சடைமுடியனாய்த் தவவொழுக்கத்திற்குத் தடையாயிருப்பதனால் தனக்கேயுரிய பாசாங்குசங்களாகிய படைகளை விட்டவனாய்க் குமாரஸ்வாமி ஸுப்ரஹ்மண்யன் முதலிய வேறு பெயர்களையுமுடைய ஸ்கந்தபகவான்தான் அத்தவக்கோலத்துடன் அர்ச்சை வடிவமாகப் பிரதிஷ்டை செய்யப்பெற்றுத் தன்னை வழிபடும் மக்களுக்கு வேண்டிய வரங்களை வழங்கிக்கொண்டு விளங்குகிறான். இவ்வாறு கந்தன் தவமியற்றும் இடமாக அறியப்படுகின்ற இவ்வேங்கடமலைச் சிகரம் சைவ க்ஷேத்திரமாக இருத்தல் தகும்.

இப்பெருமான் விஷ்ணுவாயிருந்தால் - அவனுக்கேயுரிய சங்கு சக்கரம் தொடக்கமான திவ்யாயுதங்கள் தென்படாமலிருத்தலும், வேறு தேவதைக்கேயுரிய சடை நாகாபரணம் இவை தென்படுதலும் ஒருவாற்றானும் பொருந்தாதன ஆகும். உண்மைநிலை இவ்வாறு இருப்பினும், ஒரு காலத்தில் அரசன் அநுகூலனாயிருந்ததனால் வைணவர்களால் வலிந்து கவர்ந்து கொள்ளப்பட்ட இத்தேவாலயம் சில வைணவ பிம்பங்களால் நிரப்பப்பெற்று, வைணவ ஆகமத்தை ஒட்டி நடத்தப்படும் நித்திய பூஜை சிறப்புப்பூஜை திருவிழா முதலியவற்றின் முறையை உடையதாய் இருக்கிறது. இதனால் தான், இப்பெருமான் வைணவர்களால்

வழிபடப்பெற்றுவரும் இக்காலத்திலும் தொன்றுதொட்டு வந்த வழக்கத்தைப் பின்பற்றி ஒரு மாதத்தில் வேறு தேவதைக்கேயுரிய பில்வத் தழைகளால் அர்ச்சனை செய்வதென்பது இன்றும் தொடர்ந்து காணப்படுகிறது. இதனால் சைவ க்ஷேத்திரமான இத்திருவேங்கடக்கொடு முடியில் இருக்கும் தேவாலயம் எங்கள் வசத்திலேயே ஸ்தாபிக்கப்பட வேண்டும். சைவாகமம் கூறிய முறைப் படியே இங்கு வழிபாட்டுவிதிகள் எல்லாம் நிறைவேற்றி வைக்கப்பட வேண்டும் என்று. (வாதம் செய்தனர்.)

பின்பு பகவத் ராமாநுஜ முனிவரும் ப்ரதிவாதம் செய்தனர்.

## ஸ்ரீராமாநுஜ முனிவர் :

அரசே, இச்சைவர்கள் - முற்கூறிய வாமன புராண வசனங்களின் பொருளையும் முன்னும் பின்னுமுள்ள சந் தர்ப்பங்களின் கருத்தையும் வாராகம் முதலிய பல பல பிற புராணங்களில் கூறிய கந்தனின் தவத்தைத் தெரி விக்கும் சந்தர்ப்பங்களின் கருத்துக்களையும் அறியாமலோ அறிந்துவைத்தும் அவற்றை மறைத்தோ அவற்றோடு மாறு பாடாகச் சொல்லுமவர்களாய், தனம் தாம் விரும்பும் மற்ற பொருள்கள் அரசனிடம் ஒருயர்ந்த பதவியில் நிலைபெற்றி ருத்தல் ஆகியவற்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு இந்த க்ஷேத்திரத்தை ஆக்கிரமிப்பதில் ஊக்கங்கொண்டு உன்னை மயக்குகிறார்கள். திருவேங்கடமலைச் சிகரம் ஸ்ரீவிஷ்ணுக்ஷேத்திரமென்றே உலக வழக்கிலும் நூல் வழக்கிலும் மிகவும் பிரசித்தமாக உள்ளது. அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவனும் ஸ்ரீமந் நாராயணனே. ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணியும் ஸ்ரீவிஷ்ணு தீர்த்தமே. இங்கு மற்ற தெய்வங்களின் முக்கியத்துவம் பற்றிய ஐயத்திற்குச் சிறிதும் இடமில்லை. இது திருமாலின் திருத்தலமென்பது முற்கூறிய வாமன புராணத்திலேயே கூறப்பட்டுள்ளமை மிக விளக்கமாகக் காணப்படுகிறது.

அதில் முதல் அத்தியாயத்தில் திருவேங்கடத்தலமான்மிய வருணனைக்கு முகவுரையாகத் தோன்றிய நாரத வான்மீகி ஸம்பாஷணையில், "நாரதரே, மூவுலகின் கண்ணும் மிக மிக உயர்ந்த விஷ்ணு க்ஷேத்திரம் பூவுலகில் உள்ளதாமே அது எது? பிரமலோகம் வரையில் உள்ள விசேஷங்களெல்லாவற்றையும் நீர் பார்த்திருக்கிறீர். எத்தீர்த்தத்தில் எல்லாத் தீர்த்தங்களும் இருக்கின்றன? எத்தலத்தில் வாழுமவர்களுக்கு அந்தமில்லாத புண்ணியமுண்டாகுமென்று சொல்லப்பட்டுள்ளது? எந்தத் தலத்தில் பல நற்பண்புகள் படைத்த புருஷோத்தமனான திருமால் திருமகளுடனும் மண்மகளுடனும் எழுந்தருளியிருக்கிருன்? தேவ ரிஷியே, மூவுலகிலும் புனிதமான அத்தீர்த்தமும் அத்தலமும் இன்னதென்று அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டுகிறேன்" என்று வால்மீகி நாரதரைக் கேட்ட கேள்வியிலிருந்து திருவேங்கடமலை திருமாலின் தலமென்று தெளிவாக அறியப்படுகிறது.

இவ்வாறு வான்மீகி கேட்ட கேள்விக்கு விடையளிப்பதற்காக, நாரத முனிவர் கந்தனுக்கும் மகாதேவனுக்கும் நடந்த ஸம்பாஷணம் ஒன்றினைக் குறிப்பிடுகிருர். தாரகாசுரனைக் கொன்றதனால் தனக்கு நேர்ந்த பிரமஹத்யா தோஷத்தைத் தொலைக்க விரும்பிய கந்தன் என் பாதகம் போக்கும் புண்ணிய தீர்த்தம் எதுவென்று மகாதேவனைக் (சிவபெருமானைக்) கேட்க, மகாதேவன் தக்ஷனது தலையை அறுத்ததனால் தன் கையில் ஒட்டிக்கொண்ட அவனது கபாலத்தையும், அதனாலுண்டான பிரமஹத்யாதோஷத்தையும் பிரயாகை என்னும் விஷ்ணு க்ஷேத்திரத்தின் மகிமையினால் தான் போக்கிக்கொண்ட செய்தியைக் கூற, பிறகு கந்தன் தன் பாதகம் போக்கும் புண்ணிய க்ஷேத்திரம் எது என்று கேட்ட கேள்வியில் வேங்கடம் விஷ்ணு க்ஷேத்திரமாகவே அறியப்படுகிறது. அது வருமாறு :

முற்காட்டிய வாமன புராணத்தின் இரண்டாமத்தியாயத்தில் - பாபம் போக்கி நன்மையைத் தரவல்ல தன்

தந்தையின் சொல்லைக்கேட்ட கந்தன் மிக மகிழ்ந்து தத்துவமறிந்த தந்தையாரை, "ஸ்வாமீ தவம் புரிய விரும்பும் எனக்கு எவ்விடத்தில் இடையூறுகள் ஏற்படாவோ, அத்தகைய தவத்துக்குரிய சுபத்துடன் கூடிய க்ஷேத்திரமின்னதென்று விளக்கியருள்க. பிறவித் துன்பம் துடைக்குமவரே, அந்த க்ஷேத்திரத்திற்கு உமது ஆணை பெற்றுச்சென்று தவம் புரியக்கடவேன். யோகியர் பெருமக்கள் வந்திக்கும் திருவடியிணையை உடையவரும் ஆனந்தத்தையே வடிவாக உடையவருமாகிய சங்கரரே, அத்தகைய உத்தம விஷ்ணுக்ஷேத்திரத்தை அடியேனுக்கு உபதேசிக்க வேண்டும்" என்று மேலும் கேட்கலானான் - என்றுள்ளது.

இதற்கு விடையாக மகாதேவன் கூறிய நூற்பகுதியிலும் இத்திருவேங்கடம் திருமாலின் தலமேயென்று தெளிவாகத் தெரிகின்றது. அது வருமாறு :

முற்கூறிய அதே இரண்டாம் அத்தியாயத்தில் - சித்தர்களும் முனிவர்கூட்டங்களும் அம்மலையில் எப்பொதும் தவமியற்றுகின்றனர். புலையர் யவனர் முதலிய அவைதிகர்களாலும் நாத்திகராலும் அப்புண்ணிய உத்தம பருவதம் ஏறவும் முடியாதது. சுகர் முதலிய முனிவரும் ப்ருகு முதலான தபோதனர்களும் பிரஹலாதன் தொடக்கமான புண்ணிய புருஷர்களும் அம்பரீஷாதியான அரசர்களும் அத்திருவேங்கடமலையை விஷ்ணுவின் வேறொரு திருமேனியாகவே மதித்து அதன்கண் அடிவைத்து ஏற அஞ்சி அதன் சுற்றுப்புறங்களிலேயே இருந்து அதிலிருந்து புறப்படும் ஆறுகளிலேயே நீராடித் தருப்பணம் செய்து கொண்டு ஜநார்த்தனனான திருமாலைக் கண்கூடாகக்காண விரும்பித் தவமியற்றுகின்றூர்கள். எதன் கொடுமுடியைக்கண்டால் கொடும்பாவமும் அப்போதே அகன்று விடுமோ அத்தகைய நித்தியமான தூய்மையை உடையது அம்மலையரசு. அங்கு மகாவிஷ்ணு ஆதிவராக மூர்த்தியாய்த் தான் இடந்தெடுத்த தரணி (பூமி) தேவியைத் தன் மடியில் வைத்து அணைந்த திருக்கோலத்துடன் 'இருந்து

சேவை தருகிறான். முச்சந்தியிலும் முழுநம்பிக்கையுடன் முனிவர் கணங்களால் பூசிக்கப்பட்டு வருகிறான். அது முதல் அப்புண்ணிய தலம் வராக க்ஷேத்திரமென்று கூறப்பட்டு வருகிறது. வராகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் மிகப் புனிதமான அவ்வேங்கடம்மலையில் பூவராகன் கோவிலில் நித்திய விரதத்துடன் சாத்திரம் விதித்த கட்டளையின்படி உயர்ந்த வராகமந்திரத்தை இடைவிடாமல் ஒரு மாதகாலம் மனத்தை அடக்கி ஜபம் செய்வோர்க்கு வீடு நிலம் முதலாக விரும்பும் பயன்கள் யாவும் உடனே கைகூடும் என்று உள்ளது.

இங்கு 'விஷ்ணுவின் வேறொரு திருமேனியாகவே அம் மலையை மதித்தார்கள்' என்று - பிரகலாத அம்பரீஷாதி பகவத்பக்தர்பெருமக்களாலே மதிக்கப்பட்டதாக அறியப்படும் இவ்வேங்கடமலையை - சிற்றறிவாளிகளும் தெளிவாக 'இது விஷ்ணுக்ஷேத்திரமே' என்று அறியக்கூடிய இதனைப் பித்தனல்லாத பிறன் எவனும் சைவக்ஷேத்திரமென்று கூற மாட்டான்.

மேலும் பிரளயக்கடலில் அழுந்திய பூமிதேவியை எடுத்து, அதுமுதற் கொண்டு அவளை மடியிலிட்டு அணைத்தவண்ணமாக இவ்வேங்கடமலையில் வராகப்பெருமாள் விளங்கி வருவது காரணமாக இம்மலை வராக க்ஷேத்திரமென்றே இங்குக் கூறப்பட்டிருப்பதனால், இதை சைவ க்ஷேத்திரமோ என்று ஐயப்படுதற்குச் சிறிதுமிடமில்லை.

மேலும் தன் தந்தையான மகாதேவன் தக்ஷன் தலையைத் தறித்ததனால் தனக்கு உண்டான பிரமஹத்தி முதலிய தோஷம் பிரயாகை என்னும் விஷ்ணுக்ஷேத்திரத்தை அடைந்து அதன் பிரபாவத்தினால் கழிந்த கதையை அவனே சொல்லக்கேட்ட மைந்தன் கந்தனும் அவ்விதமாகவே தானும் தாரகாசுரவதத்தினால் தனக்கு நேர்ந்த பிரமஹத்தி முதலான தோஷத்தை, விஷ்ணுவைப் பூஜித்து அதனால் போக்கிக்கொள்ள விரும்பித் தந்தையாம் மகா

தேவனிடமிருந்து ஒரு விஷ்ணு மந்திரத்தை உபதேச மாகப் பெற்று, மிகப் புண்ணிய வைணவத் தலமாக அம்மகாதேவனாலேயே உபதேசிக்கப்பட்ட திருவேங்கடம லையை அடைந்து தவஞ்செய்தானென்பதே புராணத் திலிருந்து புலப்படுவதனால் திருவேங்கடமலை விஷ்ணு க்ஷேத்திரமென்று மிக விளக்கமாக அறியப்படுகிது. "சங் கரரே, உத்தமமான விஷ்ணு க்ஷேத்திரத்தை அடியேனுக்கு உபதேசிக்க வேண்டும்" என்று முன்காட்டிய வாக்கியத் தில், விஷ்ணு க்ஷேத்திரமே தான் தவமியற்றுவதற்காகக் குமரனால் வினவப்பட்டதென்பது தெளிவு.

கீழ்க்காட்டிய வாமன புராண இரண்டாமத்தியாயத் திலேயே, "சம்புவே, வைஷ்ணவ மந்திரங்கள் எல்லா வற்றையும்விட உத்தமமானதும் பிற வரங்களைத் தருவ தும், அவ்விஷ்ணுவையே அடைவிக்கும் உபாயமுமாகிய விஷ்ணு மந்திரத்தை அடியேனுக்கு உபதேசிக்க வேண்டும்" என்று மேற்கொண்ட பணியைப் பயன்படுமாறு வருத்த மறச் செய்து முடிக்கும் குமரனால் விண்ணப்பிக்கப்பட்ட சம்புவானவர் உடனே மந்திர நூன்முறைப்படி அவ னுக்கு ஸ்ரீராம தாரகமந்திரத்தை உபதேசித்தார். கந்தனும் தந்தையிடமிருந்து அம்மந்திரத்தைப் பெற்று மகிழ்ந்தான் - என்றுள்ள வாக்கியங்களினால், தவஞ்செய்யும் போது ஜபிக்கும் மந்திரமாக விஷ்ணுமந்திரமே மகாதேவனிடமி ருந்து குமரனால் பெறப்பட்டதென்பதும் தெளிவு.

இத்திருவேங்கடமலை குமரன் தவமியற்றுவதற்கு இட மாதல்மட்டுமே பற்றி அவனுடைய தலமாக வேண்டி யிருந்தால் இதற்கு முன்பு வெகுகாலம் கடுந்தவம் புரிந்த வாயுதேவனுடைய தலமாகவே இம்மலை ஏன் ஆகக்கூ டாது?

பல சொல்லிப்பயனென்? திருவேங்கடநாதனாகிய ஸ்ரீநிவாஸ பகவான் வெளிப்படையாகத் தோன்றியருளு வதற்கு முன்பு, அப்பெருமானைக் குறித்து இம்மலையில் பிரமதேவன் சிவபெருமான் இந்திரன் முதலிய எல்லாத்

கந்தருவ கிந்நரரகளும் சங்கன் தயரதன் முதலான ராஜ ரிஷிகளும் தவச் செயல் புரிந்தனர் என்று மிக விளக்க மாகப் புராணங்களிலிருந்து தெரியவருதலால், இவ்வாறு தவம் புரிந்தவர் பலர் இருக்கையில் அவர்களில் ஒருவ னான கந்தனுடையதே இந்தத் தலமென்று பித்தனன்றி மற்றொருவனும் சொல்ல கில்லான்.

இப்படி அதே வாமனபுராணத்தில் 33 எண்ணிட்ட பதினான்காம் அத்தியாயத்தில், அகத்தியர் முதலியோரும் உபரிசரவஸு முதலியோரும் திருமலையில் ஒருவருக் கொருவர் சந்தித்துச் சேர்ந்து ஸ்வாமி புஷ்கரிணிக் குச் செல்லும்போது அவர்களால் இது ஸர்வோத்தம விஷ்ணு க்ஷேத்திரமென்று சொல்லப்படுகிறது. அது வரு மாறு - பேரரசர்களும் முனிவர் தலைவர்களும் சென்று கொண்டே இம்மலையைக் கண்டு மிகவும் மகிழ்ந்து ஒரு வருக்கொருவர் - பல மரங்கள் நிறைந்து பூமியிலுள்ள இம்மலை உலகினைப் படைத்த சார்ங்கபாணியான வாசு தேவனுக்கு எப்போதும் மிகப்பிரியமானதல்லவா? முன் னோரான முனிவர் இதனை அடைந்து பிறப்பிறப்பற்ற புராண புருஷனான தேவர் தலைவனைக் கண்டாரன்றோ? உலகினைப் போஷிக்கும் புருஷோத்தமனுடைய பக்தர்கள் அவனைத் துதிசெய்து கொண்டே இத்திருமலையில் ஏறி அத்தேவனைக் காணப்போகிறாரன்றோ? இத்திவ்விய மான பெரியதிருமலை மஹாத்மாவான அத்திருமாலுக்கு மிகவும் திருப்தியை உண்டாக்குமதல்லவா? நாராயணன் எழுந்தருளியிருக்கும் ஸ்தலங்களில் இதைவிட உயர்ந்தது வேறொன்று இல்லை என்பதை 'நாராயணாத்ரி' என்ற இதன் பெயரொன்றே கூறுகிறதல்லவா? என்று பேசினமை சொல்லப்பட்டுள்ளது.

இங்ஙனம்-இவ்வாமன புராணத்திலேயே, வராகப்பெ ருமாள் ஸ்ரீநிவாஸப்பெருமாள் இவர்களின் தோற்றம், அவர்கள் இடைவிடாமல் எழுந்தருளியிருத்தல், விஷ்ணு

பக்தர்கள் அனைவராலும் அவ்விருவரும் வழிபடப்பெறு தல் முதலிய - வேறு பொருள் கூறி மயக்க முடியாமல் மிக மிக வலிவு பெற்ற அங்கங்கே அறியப்படுகின்ற அடையா ளங்களால் இவ்வேங்கடமலை விஷ்ணு ஸ்தலமே என்பது மறுக்கவோ மறைக்கவோ முடியாமல் தேறுகிறது.

இவ்வாறே திருவேங்கட மாண்மியத்தைக் கூறும் எல் லாப் புராணப்பகுதிகளிலும் இத்திருவேங்கடமலை திருமா லின் தலமாகவே நன்கு அறியப்படுகிறது.

வராக புராணம் வேங்கடாசல மாஹாத்மியம் முதற்ப குதி 33 எண்ணிட்ட முதல் அத்தியாயத்தில், வேங்கடாசல மான்மியத்திற்கு முன்னுரையாயமைந்த முனிவர் கேள்வி - (முனிவர்:-) "வேத வியாசரின் அருளுக்குக் கொள்கலமாய்த் தருமங்களையறிந்த சூதபகவானே, எல்லா விஷ்ணு ஸ்த லங்களிலும் ஸ்வயம் வியக்தமான விஷ்ணு ஸ்தானங்க ளெல்லாவற்றிலும், எவ்விடத்தில் விஷ்ணுவுக்கு விருப்பம் அதிகமாக உள்ளதோ எவ்விடத்தில் எல்லா நற்கருமங்க ளும் சித்தி பெறுகின்றனவோ மிக வியக்கத்தக்க விஷ் ணுவின் திருவிளையாடல்கள் எங்கு நிகழ்கின்றனவோ எங்கு வாசம் செய்யும் மனிதர்க்கு ஹரியின் ஸாக்ஷாத் காரம் உண்டாகுமோ எத்தலத்தின் செய்திகள் செவிக்கு இன்பம் தருவனவோ எதைப்பற்றிக் காதால் கேட்டால் வேறேதும் கேட்க வேண்டியிராதோ, கண்ணால் காண அழகியதும் ஆச்சரியகரமுமான அத்தகைய விஷ்ணு க்ஷேத்திரத்தை எமக்கு அருளிச் செய்ய வேணும்" என்று உள்ளது.

வராக புராணத்திலுள்ள பூமிதேவி வராக ஸம்பா ஷணமென்று பெயர் பெற்ற இரண்டாம் பகுதியிலும் முதல் அத்தியாயத்தில், "ஸ்ரீவேங்கடாசலமென்னும் பிர சித்தி படைத்ததொரு பெரிய வாசுதேவாலயம் இருக்கிறது" (ச்லோ-42) என்று பிரசித்தமானது போலக் குறிப்பிட்டி ருத்தலால் விஷ்ணு க்ஷேத்திரமாயிருக்கும் இதன் தன்மை கூறப்பட்டது.

பாத்ம புராணப் பகுதியிலும் 24 எண்ணிடப்பெற்ற முதல் அத்தியாயத்தில், (மேருமலையின் உச்சியில் பிரமதேவனது சபையில் முனிவர்கள் புண்ணிய க்ஷேத்திரங்களின் பெருமையைப் பேசிக்கொண்டு வரும்) "கதைத்தொடர்ச்சியில் சுக முனிவர் - இச்சபையில் நாராயணகிரியின் மிக்க பெருமையையும் அங்கு சார்ங்கமென்னும்வில்லையாளும் ஸ்ரீநிவாஸனது தோற்றத்தையும் அருகிலிருந்து கேட்டு அக்கிரியைக் காண ஆசையும் விரைவும் நிறையப் பெற்றுப் பிரமதேவனிடம் விண்ணப்பித்து அவரை நான்கு திக்குகளிலும் சென்று வணங்கி விடைபெற்றுக்கொண்டு, தென்திசை நோக்கிச் சென்றார். பிரம ஞானம் பொருந்திய அம்முனிவர் மிகத் தொன்மை வாய்ந்த (=முழுமுதற்கடவுளான) புருஷோத்தமனென்னும் வாசுதேவனிடம் பக்தி பூண்டு அவனுடைய கதைகளை ஆவலுடன் சொல்லிக் கொண்டே சிரித்த முகமுடையவராய்ச் சென்று அங்கு நாராயணன் வாசம் செய்யும் நாராயணகிரியைக் கண்டார்" என்று - விஷ்ணு பக்த உத்தமர்கள் அடையத் தகுந்த விஷ்ணு க்ஷேத்திரமாந்தன்மையே இம்மலைக்கு உள்ளதாகக் கூறப்பட்டது.

காருட புராணத்துக்கு உட்பட்ட வேங்கடாசலமான்மியத்தைக் கூறும் 63 எண்ணிட்ட அத்தியாயத்தில் அருந்ததீ - வசிஷ்ட ஸம்வாதத்தில் - "மிக உயர்ந்ததோர் விஷ்ணு க்ஷேத்திரத்தில் ஒரு புண்ணிய தீர்த்தத்தில் சில நாட்கள் விஷ்ணுவைக் குறித்துத் தவம் செய்து அதன் பயனாக, உலகோர்க்காக அவன் திருவாக்கிலிருந்து எல்லாத் தருமங்களை விட உயர்ந்த தருமம் எது என்பதனை வெளிவரச்செய்து அவ்வுயர்ந்த தருமத்தை மனிதர்களுக்குக் காட்டிக்கொடுக்க வேணுமென்பது எனது விருப்பம். பெண்களுக்குக் கணவரின் அநுமதி பெற்றுத் தவம் செய்வது உத்தமமல்லவா? அத்தகைய திருமால் தலத்தையும் உத்தம தீர்த்தத்தையும் எனக்கு உபதேசிக்க வேணும்" என்ற அருந்ததியின் கேள்வியாலும், அதற்கு வசிட்டர் "ஸுவர்ணமுகரீ நதியின் கரையில் எல்லா மலைக்குலங்களுள்ளும் உத்தம

மாய் வேங்கடாசலமென்ற பெயரையுடையதொரு மலை உள்ளது. அம்மலையில் மஹாவிஷ்ணுவுக்கு ச்வேதத்வீபம் (பாற்கடலைச் சேர்ந்த இடம்) ஸ்ரீவைகுண்டம் சூரிய மண்டலத்தின் நடுவிடம் ஆகிய இவற்றைக் காட்டிலும் அதிகப்பிரீதி உண்டு" என்று விடையளித்ததனாலும் இதன் திருமால் திருப்பதித் தன்மை மிகவும் வெளிப்பட்டது.

பிரம்மாண்டபுராண வேங்கடாசல மான்மியப்பகுதியிலும் முதல் அத்தியாயத்திலுள்ள பிருகு நாரத ஸம்பாஷணத்தில் - பிருகு முனிவர் "பூசிக்கத்தக்க நாரத முனிவரே, உலக முழுவதும் சுற்றியிருக்கிறீராகையால் உலக வரலாறுகள் எல்லாவற்றையும் நீர் அறிவீர். இவ்வுலகில் க்ஷேத்திரங்களிலுயர்ந்த க்ஷேத்திரமும் தீர்த்தங்களில் உத்தம தீர்த்தமும், இருக்குமாகில், தவத்தையே நிதியாகக் கொண்ட அந்தணர் தலைவரே, அதை அடியேனுக்குச் சொல்லவேணும். எங்கு நினைத்தற்கரிய பெருமையைப் பெற்ற விஷ்ணுதேவர் திருமகளோடு விளையாடிக்கொண்டே எல்லா மனிதர்க்கும் கண்ணுக்கு இலக்காகி வரங்களை அளித்துக்கொண்டு வாழுகிறார்" என்றிது முதலாகக் கேட்ட கேள்வியினாலும், அதுகேட்ட நாரத முனிவர், "அந்தணரே, க்ஷேத்திரங்களில் மிக உயர்ந்த க்ஷேத்திரத்தைப் பற்றி ஊக்கமாகக் கேளும். பூவுலகில் வேங்கடகிரி என்று பிரசித்தமான ஒரு புண்ணிய க்ஷேத்திரம் உள்ளது. மாமுனிவரே, திருமகள் மணவாளன் எந்த மலையில் தனது வைகுந்தத்தையும் விட்டுவந்து திருமகளோடு கூடி இனிதேயிருந்து கொண்டு தேவர்கள் அனைவராலும் ஆராதிக்கப்பட்டு வருகிறாரோ அத்திருமலை பாதகமெல்லாவற்றையும் போக்கிப் புண்ணியத்தை ஒன்று பத்தாக்கி வளர்க்கவல்லது. அதன் பெருமையைத் தேவர்களாலும் பிரமதேவனாலும் வருணிக்க முடியாது. ஏன்? இப்படிப் பட்டதென்று மனத்தினாலும் நினைக்க முடியாது" என்றிது முதலாக விடையளித்திருப்பதனாலும் இது விஷ்ணுஸ்தலமென்றே அறியப்படுகின்றது.

இப்படி வேங்கடாசல மான்மியங் கூறுகின்ற மா[illegible] புராணப் பகுதிகள் எல்லாவற்றிலும் வேங்கடமலை விஷ்ணு ஸ்தலமாகவே கூறப்படுவது காணத்தக்கது. இவ்வாறே புராணங்களில் இம்மலை வைகுந்தலோகத்திலிருந்து கருடனால் கொண்டு வரப்பட்ட கிரீடாசலம் (விளையாட்டுக்குரிய மலை) என்றும், ஆதிசேஷனுடைய அவதார ரூபமானது என்றும் கூறப்படுதலாலும், வைகுண்டாசலம் சேஷாத்ரி கருடாசலம் என்ற பெயர்களால் குறிக்கப்படுதலாலும், இதன் விஷ்ணு க்ஷேத்திரமாந்தன்மை விளக்கமாக அறியப்படுகின்றது.

வைதிகரான அந்தணர் அனைவரும், வேதம் தரும சாத்திரம் இவற்றில் கூறப்பட்ட நித்திய கருமங்களை அனுஷ்டிக்கும்போது, தேச காலங்களைக் குறிக்குங்கால் இந்த ஸ்தலத்தை வராக க்ஷேத்திரமென்றே குறிப்பிடுமவராய்க் 'காணப்படுகின்றனர்.

பலசொல்லிப் பலன் என்னை? ஆதியுமந்தமுமற்று ஒரேவிதமாக இடைவிடாமல் தொடர்ந்து படிக்கப்பட்டுவருவதாய், புருஷனால் இயற்றப்படாமையின் அறிவின்மை ஐயம் திரிபுணர்ச்சி முதலிய குற்றங்கள் சிறிதும் இல்லாததுமான வேதமும் இவ்வேங்கடாசலத்தை விஷ்ணு க்ஷேத்திரமென்றே ஓதுகின்றது.

ருக்வேதம் எட்டாம் அஷ்டகம் எட்டாம் அத்தியாயம் பதின்மூன்றுவது வர்க்கத்தில் "அராயி காணே விகடே கிரிம் கச்ச ஸதாந்வே. சிரிம்பிடஸ்ய ஸத்வபி:, தேபிஷ்ட்வா சாதயாமஸி" என்னும் முதல் ருக்கு (மந்திரம்) திருவேங்கடமலையைப் பற்றியதாக, பவிஷ்யோத்தர புராணத்தைச் சேர்ந்த வேங்கடாசல மாகாத்மியப் பகுதி நான்காவது அத்தியாயத்தில், "அராயிகாணேவிகடே கிரிம் கச்ச என்று தொடங்கும் ருக்வேத மந்திரத்தால் திருவேங்கடமலை குறிப்பிடப்படுவதாகப் பெரியோர் கருதுகின்றனர். ஆதி சேஷபருவதமாகிய இவ்வுத்தம மலை (வேதம் குறிப்பிடுவதனால்) வேதமயமாகிறது" என்று விவரிக்கப்

பட்டுள்ளது. (வேதத்தில் ஐயத்திற்கிடமான பொருளைப் புராணத்தைக் கொண்டன்றே முடிவு கட்ட வேண்டும் என்று பார்ஹஸ்பத்யஸ்மிருதியில் உள்ளது கவனிக்கத்தக்கது.)

இவ்வேத மந்திரத்திற்கு இங்ஙனம் பொருள் விளக்கம் அறியத்தக்கது - வேதபுருஷன் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்களைப் (மனிதர் விரும்பும் பலன்களைப்) பெற விரும்பும் ஜீவாத்மாவை அழைத்து, அவற்றை அடையும் உபாயத்தை உபதேசிக்கிறான். இம் மந்திரத்தில் இடத்தையொட்டி 'த்வயி' என்று ஒரு சொல் சேர்த்துக்கொள்க.

1. (குழந்தாய் ஜீவனே,) த்வயி அராயி ஸதி=நீ இவ்வுலகச் செல்வமும் ஸ்வர்க்காதி மேலுலகங்களிலுள்ள செல்வமும் இல்லாதவனாயிருந்தால், த்வயி காணே ஸதி=நீ வெளிக்கண்ணோ உட்கண்ணோ அற்றவனாயிருந்தால், த்வயி விகடே ஸதி=நீ ஆத்யாத்மிகம் (உடலில் உண்டாகும் ஜ்வரம் முதலியது) ஆதிபௌதிகம் (மனிதன் விலங்கு முதலியவற்றால் நிகழும் துன்பம்) ஆதிதைவிகம் (இடி மின்னல் வெப்பம் தொடக்கமாகத் தேவர்களால் ஏற்படும் துக்கம்) என்கிற மிக்க தாபங்களை அடைந்திருந்தால், த்வயி ஸதாந்வே ஸதி=நீ முற்கூறிய புருஷார்த்தங்களைப் பெறவொட்டாமல் தடுக்கின்ற (அசுரர் போன்ற) பகைவரைப் பெற்றிருந்தால், சிரிம்பிடஸ்ய (ச்ரீம் பீடஸ்ய) திருமகளுக்குத் திருமார்பினால் பீடமாகிய ஸ்ரீநிவாஸனுடையதான, கிரிம்=மலையைக் குறித்து, சிரிம்பிடஸ்ய ஸத்த்வபி: = ஸ்ரீநிவாஸனுடைய பிராணிகளோடு (பக்தர்களோடு) கச்ச= (முற்கூறிய ஆபத்துக்களெல்லாவற்றையும் தீர்த்துக்கொள்வதற்காகச்) சென்று சேர். (சேர்ந்து), தேபி: = அவர்கள் (அப்பக்தர்கள்) மூலமாக, த்வா=நீ, சிரிம்பிடம் சாதயாமஸி= ஸ்ரீநிவாஸனை வேண்டிக்கொள்ளத் தகுதி பெற்றிருக்கிறாய். ஆக, முன் சொன்ன செல்வமில்லாமை தொடக்கமான துன்பங்கள் சேர்ந்தபோது, ஸ்ரீநிவாஸனு

டைய திருமலையைக் குறித்து அவனுடைய பக்தர்களுடன் சென்று அவர்களை முன்னிட்டு அவனை உனக்கு வேண்டிய பலனை யாசிக்க உரியவனாயிருக்கிறாய் என்று வேதபுருஷனது உபதேசம் காண்க.

2. அன்றேல், வடமொழியில் வினையடிக்குப் பல பொருள்கள் உள்ளமையால், சாதயாமஸி என்பதற்கு - 'ஸமர்ப்பிக்கத் தகுதி பெற்றிருக்கிறாய்' என்று பொருள் கூறுதலும் ஏற்கும். சிரிம்பிடஸ்ய த்வா தேபி: சாதயா மஸி=ஸ்ரீநிவாஸனுக்கு உன்னை அப்பக்தர்கள் வாயிலாக (காணிக்கையாக) ஸமர்ப்பிக்கத் தகுதி பெற்றிருக்கிறாய் என்பது பதப்பொருள். ஆக முன் சொன்ன துன்பங்க்ள் சேர்ந்தபோது ஸ்ரீநிவாஸனுடைய திருமலையைக் குறித்து அவனுடைய பக்தர்களுடன் சென்று அவர்களை முன்னிட்டு அப்பெருமானுக்கு உன்னை ஸமர்ப்பிக்க உரிய வனாயிருக்கிறாய் என்று வேதபுருஷன் உபதேசிக்கிறான் என்று கொள்க. (ஸ்ரீநிவாஸனை வேண்டிக்கொண்டால், அல்லது ஸ்ரீநிவாஸனுக்கு உன்னை அர்ப்பணம் செய்தால் துன்பங்கள் நீங்கி, அறம் முதலிய நான்கும் கிட்டும் என்பது உட்கருத்து.)

மந்திரத்திலுள்ள சொல்லைப் பற்றிய சில விளக்கம் வருமாறு-அராயி-ரை என்றால் செல்வம். விகடே - கடம் என்றால் தாஹம்; தாபம். ஸதாந்வே-வேதத்தில் தாரவம் என்பது தார்வம் என்று மாறியது போல், தாநவ: என்பது, தாந்வ: என்று மாறியுள்ளது. சிரிம்பிடஸ்ய - த்ர்யம்பக: என்பது த்ரியம்பக: என்றும் ஸ்வ: என்பது, ஸுவ: என்றும் திரிந்தது போல மஹாலக்ஷ்மியின் பீஜாக்ஷரமான ச்ரீம் என்பது, சிரிம் என்று திரிந்தது. பீட: என்பது, பிட: என்று மாறியது. அல்லது வீசேஷமாக (=நிலையாக) இருக்கும் இடம் என்ற பொருளைத் தருகின்ற விட: என்பது பிட: என்று மாறியதாகவும் கொள்ளலாம்; விப்ராஜமாந: என்பது, பிப்ராஜமாந: என்றாயிற்றென்று கொள்வதுபோல் இதைக் கொள்க.

முன்பு கூறிய முதற்பொருளில் - சிரிம்பிடஸ்ய (=ஸ்ரீநிவாஸனுடைய) என்னும் ஆறும் வேற்றுமைச் சொல்-ஸத்த்வபி: (பக்தர்களுடன்) - கிரிம் (=மலையைக் குறித்து) என்னும் இரண்டு சொற்களோடு சேரும் போது உள்ளபடியே சேருகிறது. சாதயாமஸி (=யாசிக்கக் கடவாய்) என்றதனோடு சேரும் போது மட்டும் பொருளுக் கேற்ப, சிரம்பிடம் (ஸ்ரீனிவாஸனை) என்று இரண்டாம் வேற்றுமைப் பொருள்பட்டுச் சேருகிறது. இரண்டாம் பொருளிலோவெனில், சாதயாமஸி (ஸமர்ப்பிக்கத் தகுதி பெற்றிருக்கிறாய்) என்பதோடு, சிரிம்பிடஸ்ய என்பது சேரும் போது ஸ்ரீநிவாஸனுக்கு என்னும் பொருட்பட்டு ஆறும் வேற்றுமைச் சொல்லாகவே இருந்து சேருகிறது. ஸத்த்வை: என்பது, ஸத்த்வபி: என்றும், தை: என்பது, தேபி: என்றும் திரிந்துள்ளது. முதற்பொருளில் இரண்டாம் வேற்றுமைச் சொல்லாகிய த்வா என்பது நீ என்று பொருளுரைக்க வேண்டியிருப்பதனால் முதல் வேற்றுமைப் பொருளுடைய தாய் மாறியது. 'ஸஹஸ்ர சீர்ஷோதேவ:' என்று முதல் வேற்றுமைப் பொருள்பட, 'ஸஹஸ்ரசீர்ஷம் தேவம்' என்று இரண்டாம் வேற்றுமைச் சொற்கள் மாறியுள்ளது, இதற்கு உதாரணமாகக் கொள்க. இரண்டாம் பொருளில் 'உன்னை' என்று கூறவேண்டுவதனால் 'த்வா' என்பது உள்ளபடியே இரண்டாம் வேற்றுமைச் சொல்லாகவே சேருகிறது. இவையெல்லாம் ச்சாந்தஸமான (வேதத்திலேயுள்ள) மயக்கங்கள். (செய்யுள்களில் விகாரங்கள் இருப்பது இயற்கை தானே?) நிற்க.

இம்மந்திரத்தில் ஸ்ரீநிவாஸனுடைய மலையையும் ஸ்ரீநிவாஸனையும் அவனுடைய பக்தர்களை முன்னிட்டு அடையவேண்டிய நிலையை ஸ்பஷ்டமாகவே வேதம் கூறுகின்றபடியினால் இத்திருவேங்கடமலை விஷ்ணுக்ஷேத்திரமேயென்பது மறுக்கமுடியாமல் உறுதிப்படுகிறது.

இவ்வாறு இராமாநுசர் செய்தருளிய திறமை வாய்ந்த ஆராய்ச்சியினால் அந்த யாதவ மன்னவன் திருவேங்கட

மலையைப் பற்றிய-'சைவக்ஷேத்திரந்தானோ இது' என்ற ஐயம் தீரப்பெற்ருன்.

இங்ஙனம் எதிராசராம் இராமுநுச முனிவர் நல்ல பல யுக்திகளைச் சொல்லிப் பண்டித மனோகரமாகச் செய்த ஆராய்ச்சியால் அரசனது மயக்கம், இரவியின் பேரொளி யினால் கருக்கிருட்டு நீங்குவது போல நீங்கியதல்லவா?

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸ மாலையில் "திருவேங்கடமலை வேறு தேவதைகளுக்குரிய க்ஷேத்திரமோ" என்னும் ஐயப்பாட்டைப் பற்ருேடறுக்கும் முதற்கொத்து முற்றும்.

# இரண்டாம் ஸ்தபகம்

அதன் பின்பு ஸ்ரீராமாநுஜரென்னும் முனிவர் பெருமான் மறுபடியும் யுக்திகளோடு கூடிய தம்முடைய பேச்சுக்களினால் அரசனைத் திருப்தி செய்யக்கருதி, ஏ யாதவமன்னவ, ஸ்வாமி புஷ்கரிணியைப் பற்றிச் சைவர்களால் உனக்கு உண்டாக்கப்பட்ட மயக்கத்தையும் வேரோடு களைந்தெறிகிறேன் கேள் என்று கூறினார்.

**இராமாநுச முனிவர் :**

ஸ்வாமி புஷ்கரிணி என்னும் சொற்றொடரிலுள்ள ஸ்வாமி என்ற சொல்- முழுப்பெயரிலடங்கிய ஒரு பகுதியினால் அம்முழுப்பெயரின் பொருளைக்குறித்தலென்கிற வழக்கின்படி- குமாரஸ்வாமியைக் குறிக்குமென்றும், ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் குமார ஸ்வாமி தவவொழுக்கம் பூண்டிருக்கிறாரென்றும், அதனால் அப்புஷ்கரிணி அவருடையதாகவே ஸ்வாமி புஷ்கரிணியென்று வழங்கப்படுகிறதென்றும் கொண்டு அது வேறு தேவதையின் தீர்த்தமே விஷ்ணுவின் தீர்த்தமன்று என்று சைவர்கள் சொல்லியது தகாது - எல்லாத் தீர்த்தங்களுக்கும் ஸ்வாமி என்னும் கருத்தைக் கொண்டு, ஸ்வாமியான புஷ்கரிணி - ஸ்வாமி புஷ்கரிணி என்று கர்மதாரய ஸமாஸத்தை (இருபெயரொட்டுப் பண்புத்தொகையை) உட்கொண்டே ஸ்வாமி புஷ்கரிணி என்று பெயர் வந்ததென்று புராணங்கள் விளக்கியிருப்பதும், குமாரஸ்வாமி என்னும் தொகைச் சொல்லன்றி ஸ்வாமி என்னும் தனிச்சொல் குமரக்கடவுளைக் குறிப்பதாக எந்நூலிலும் ஆளப்படாமையினால்

முழுப்பெயரிலடங்கிய ஒரு பகுதியினால் அப்பெயரின் பொருளைக் குறித்தலென்கிற வழக்கு இவ்விடத்திற்குப் பொருந்தாமையும், அதற்கு நேர்முரணாக, எல்லாவுலகிற்கும் தலைவனான ஸ்ரீமந்நாராயணனையே ஸ்வாமி என்ற தனிச்சொல் குறிக்கின்றதென்பது பொருந்துமாகையால் ஸ்வாமியின் புஷ்கரிணி என்று ஆறும் வேற்றுமைத் தொகையாகக் கொண்டாலும் அப்பெயரினால் அப்புஷ்கரிணி விஷ்ணுதீர்த்தமென்றே நிலைபெறுவதும் ஆகிய இவையே சைவர் கூற்றின் தகுதியின்மைக்குக் காரணங்களாகும். அதன் கரையின் பிற பலர்போன்று கந்தனும் சிலநாட்கள் தவமியற்றியது மட்டும் கொண்டு அப்புஷ்கரிணி அவருடையது என்று கூறுதலும் பொருந்தாது.

வாதம் செய்யும் சைவரால் தமது கொள்கைக்கு அநுகூலமாக அபிமானிக்கப் பெற்ற வாமனபுராணத்திலேயே 44 எண்ணிட்ட இருபத்தைந்தாம் அத்தியாயத்தில் - தமிழ்நாட்டில் மிகப் புண்ணியமானதும் தேவர்களால் ஸேவிக்கப்பெற்றதும் பருவதங்களில் மிகச் சிறந்ததும் வேங்கடமென்று பிரசித்தி பெற்றதுமான ஓர் மலை இருக்கிறது. அதன் சிகரத்தில் பாபங்களைப் போக்குமதும் புண்ணியமுண்டாக்குமதும் எல்லாக் கோரிக்கைகளையும் நிறைவேற்றுவதும் ஸ்வாமி புஷ்கரிணியென்று பிரிசித்தியடைந்ததுமான மிகப் பெரியதொரு குளம் உள்ளது. ப்ராஹ்மணரே, அது மூவுலகின் கண் உள்ள தீர்த்தங்களுக்கெல்லாம் ஸ்வாமியன்றோ? என்றும், மார்க்கண்டேயரே, எக்காரணத்தினால் எல்லாத் தீர்த்தங்களுக்கும் இது ஸ்வாமியாயிற்றோ அதனாலேயே ஸ்வாமி புஷ்கரிணியென்னும் திருநாமம் இதற்கு உண்டாயிற்று என்றும் (பிரமனால் மார்க்கண்டேயருக்கு) கூறப்பட்டுள்ளது.

வராகபுராணம் முதற்பகுதி 38 எண்ணிட்ட ஆறும் அத்தியாயத்தில் ஸ்வாமி புஷ்கரிணி என்ற சொல் அக்குளத்திற்கு இடுகுறிப்பெயர் ஆகும். தீர்த்தங்களுக்கெல்லாம் ஸ்வாமியாகையால் ஸ்வாமி புஷ்கரிணியென்றே பெரி

யோர்களால் முன்பு அச்சொல் காரணப்பெயராகுமென்று சொல்லப்பட்டுள்ளது. இப்போது பகவானால் இதற்குத் தீர்த்தங்களுக்கெல்லாம் ஸ்வாமியாயிருத்தல் வரமாக அருளப்பட்டிருப்பதனால் இது காரணப்பெயரென்பது பகவானுக்கும் சம்மதமாயிற்று - என்றுள்ளது.

அதிலேயே 50 எண்ணிட்ட பதினெட்டாம் அத்தியாயத்தில் - லோகபிதாமஹனான பிரமனே, இக்குளம் தீர்த்தங்களுக்குத் தலைமை பெற்றிருப்பதனால் ஸ்வாமி புஷ்கரிணியென்று பொருளோடு பொருந்திய பெயரால் வழங்கப்படுகிறது. இப்பூதலத்தில் யாவை சில கங்கை முதலிய தீர்த்தங்கள் உள்ளனவோ அவையெல்லாம் இதிலிருந்தே உண்டாயின. பிதாமஹனே, ஐரம்மத தடாகமென்று ஸ்ரீவைகுண்டத்தில் எத்தீர்த்தம் உள்ளதோ, அதுவே இங்கு ஸ்வாமி புஷ்கரிணியென்று கூறப்படுகிறது - என்று உள்ளது.

அதிலேயே 61 எண்ணிட்ட இருபத்தொன்பதாம் அத்தியாயத்தில் ஸ்ரீவேங்கடேச அஷ்டோத்தர சதநாமாவளியில் - தீர்த்தங்களுக்கெல்லாம் ஸ்வாமியாகிற கோனேரியில் நீராடின மக்களுக்குக் கோரிய வரங்களைத் தரும் வேங்கடவனுக்கு நமஸ்காரம் - என்று சொல்லப்பட்டுள்ளது.

வராகபுராணம் இரண்டாம் பகுதி முதல் அத்தியாயத்தில் - பூமிதேவியே, மூவுலகின் கண்ணும் உள்ள குளங்கள் ஆறுகள் என்னும் எல்லாத் தீர்த்தங்களுக்குள்ளும் ஸ்வாமி புஷ்கரிணியானது தலைமை பெற்றுள்ளதனால் இது ஸ்வாமி புஷ்கரிணியாயிற்று என்று வராகப்பெருமானால் அருளிசெய்யப்பட்டுள்ளது.

இங்ஙனமே பாத்மபுராணப் பகுதியிலும் 32 எண்ணிடப்பெற்றதாய்ப் பாவிகளின் பாவம் போக்கவல்ல பிராயச்சித்தத்துக்குத் (கழுவாய்க்குத்) தக்க பரமபாவனமான புண்ய தீர்த்தம் ஸ்வாமி புஷ்கரிணி என்பதை நிலைநாட்டுகின்ற ஒன்பதாம் அத்தியாயத்தில் - இப்

பூதலத்தில் உள்ள திவ்யமான புஷ்கரிணிகளுக்கெல்லாம் இது தலைமை பெற்றுள்ளதன்றோ? அதனால் ஸ்வாமி புஷ்கரிணியென்று இது வழங்கப்படுகிறது என்று - வாமதேவமுனிவரால் கூறப்பட்டது.

மார்க்கண்டேயபுராணப் பகுதியிலும் மூன்றும் அத்தி யாயத்தில் ஸ்வாமி புஷ்கரிணி எல்லாத் தீர்த்தங்களுக்கும் ஸ்வாமியாய் விளங்குகின்றது - என்று சொல்லப்பட்டது.

இங்ஙனமே ப்ரஹ்மபுராணம் இரண்டாம் அத்தியா யத்தில் ஸரஸ்வதியானவள் எல்லாத் தீர்த்தங்களைவிடத் தனக்கு உயர்த்தி வேண்டுமென்று ஆசை கொண்டு ஆறுக உருவெடுத்துப் பிரம்மாவர்த்தம் என்னும் ஓர் தேசத்தில் பெருகுகின்றவள் புலஸ்தியரின் சாபத்தினால் ஆசைப் பட்ட பேறுகிட்டாமற் போகவே வருத்தமடைந்து திருமா லைத் தன் தவத்தினால் மகிழ்வித்து அவரிடமிருந்து குளமாயிருக்கும் நிலைமையில் அப்பேறு கிடைக்குமாறு வரம் பெற்றுத் திருவேங்கடமலையில் ஸ்வாமி புஷ்கரிணி யாகத் தோன்றினாள் - என்று கூறப்படுவதனால், ஸ்வாமி புஷ்கரிணி என்ற தொடரில் உள்ள ஸ்வாமி என்னும் சொல்லால் தீர்த்தங்களுக்குத் தலைமை பெற் றிருத்தலாகிய ஸ்வாமித்தன்மையே இப்புஷ்கரிணிக்குக் கூறப்படுகின்றதென்று அறியப்படும்:-

"முன்பு ஸரஸ்வதிதேவி தீர்த்தங்களுக்குத் தான் தலை வியாயிருப்பதை விரும்பி ஸரஸ்வதி நதி என்று பிர சித்தியைப் பெற்றுப் பிரம்மாவர்த்தமென்கிற (டில்லிக்கு வடமேற்கிலுல்ள) ஒரு தேசத்தில் அவதரித்தாள்" என்று தொடங்கி, "மூவுலகிலுள்ள மூன்றரைக்கோடி தீர்த்தங்களும் தத்தம் பாவங்களைப் போக்கிக் கொள்வதற்கான வழியை என்னிடம் யாசிக்கப்போகின்றன. மங்களமானவளே, அவற் றின் பாவங்கள் தொலைவதற்காக உன்னிடம் ஸ்நாநம் செய்யும்படி நான் அவற்றுக்கு வரந்தரப்போகிறேன். மார் கழிமாத சுக்லபக்ஷ த்வாதசியன்று அருணோதயகாலத்தில் உன்னிடம் ஸ்நாநம் செய்து வருகின்ற தீர்த்தங்களெல்லாம்

உனக்கு கீழ்ப்படிந்து உன் ஏவலாளர்களாக ஆகப்போகின் றன. அப்போது அவை உன்னைத் தீர்த்தங்களுக்கெல்லாம் தலைவியாயிருக்கும் ஸ்தானத்தில் பட்டாபிஷேகம் செய் யப்போகின்றன" என்று ஸரஸ்வதி திருமாலிடத்தில் வரம் பெற்றதாகப் பிரம்மபுராணத்தில் கூறப்படுவது காண்க. தீர்த்தங்களுக்குத் தலையானது என்ற கருத்தைக் கூறும் அங்கங்குள்ள புராண வாக்கியங்கள் பலவும் இங்கு நினைக்கத்தக்கனவாகும்.

எல்லாவுலகிற்கும் ஸ்வாமிகளான (தலைவர்களான) வராகப்பெருமாள் ஸ்ரீநிவாஸப்பெருமாள் ஆகிய இருவரின் ஸமீபத்தில் இருக்கும் புஷ்கரிணி என்ற காரணத்தைக் கொண்டும் ஸ்வாமி புஷ்கரிணீ என்று பெயர் உண் டாயிற்றென்னும் கருத்தைக் கொண்ட செய்யுட்களும் சில காணப்படுகின்றன. ஸ்கந்தபுராணம் முதற்பகுதி முதல் அத்தியாயத்தில் ஸுவர்ணமுகியாற்றின் கரையில், எல்லா வுலகிலும் பூஜிக்கப்பட்டதும் திருவேங்கடமலையென்று பிரசித்தி பெற்றதுமான திருமால் உறையும் இடம் ஒன்று உள்ளது. பிரமஹத்தியை கள்குடித்தல் பொன்திருடுதல் முதலியவற்றாலுண்டான மாபாதகங்களைப் போக்குவதும் தேவர்களாலும் அசுரர்களாலும் வணங்கப்பெற்றதுமான அப்புண்ணிய சேஷபருவத்தில் எல்லாப் பாபங்களையும் களைகின்ற ஸ்வாமி புஷ்கரிணி என்னும் உயர்ந்த குளம் ஒன்று ஸ்ரீநிவாஸனுக்கு வடக்குப் பக்கத்தில் இருக்கின் றது. அம்மலைக்குச் சென்று மங்களந்தரும் அக்குளத்தில் ஸங்கல்பம் செய்துகொண்டு நீராடி, அதன் மேற்குக் கரை யில் திகழும் ஹரியான வராகப்பெருமாளைச் சேவித்துப் புறப்பட்டுக் கோவிலுக்குச் சென்று பொன்மலையில் வசிப்பவனும் பக்தர்களுக்கு அபயமளிப்பவனும் சங்கு சக் கரங்கள் தாங்குபவனும் வனமாலையணிந்தவனும் பரதே வதையுமாகிய ஸ்ரீநிவாஸப் பெருமாளைத் தரிசித்தால் நீ பாபந்தீர்ந்தவனாக ஆவாய். அந்தணனே, சந்தேகப்பட வேண்டாம் என்று கசியபரைப் பார்த்துச் சாகல்யரால் கூறப்பட்டது காணத்தகும்.

ஸ்கந்த புராணம் இரண்டாம்பகுதியாகிய 37 எண்ணிட்ட அத்தியாயத்திலும் - வைகுந்தத்திலிருந்து விஷ்ணுவினுடைய பெரியதொரு விளையாட்டு மலை, வேகப் பறவையான கருடனால் கொணரப்பட்டு தேவர் திரள்களாலும் முனிவர் கணங்களாலும் பூஜிக்கப்பெற்று மங்களமான ஸுவர்ணமுகி நதிக்கரையின்கண் இருக்கிறது. அத்திருவேங்கடமலையில் ஸாக்ஷாத் நாராயணன் திருமகள் மண்மகள் நீளாதேவிகளுடன் கூடி வேங்கடேசன் என்ற பெயர்பெற்று மோக்ஷமளிப்பவனாய் விளங்குகின்றுன் என்றும், பத்மநாபனென்னும் அந்தணர்பெருமான் மிகப் பாவியான கேசவனென்றும் தன் மைந்தனுடன் வேங்கடமலைக்குச் சென்று ஸ்வாமி புஷ்கரிணியில் விதிப்படியே நீராடி வராகப்பெருமாளைச் சேவித்து ஸ்ரீநிவாஸனது கோயிலை அடைந்து விமானத்தை வலம் வந்து வணங்கினான் - என்றும் உள்ளது காண்க.

இங்கு, வேங்கடம்லை விஷ்ணு க்ஷேத்திரமென்றும், ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் உலகிற்கு ஸ்வாமிகளான வராக - ஸ்ரீநிவாஸப் பெருமாள்கள் எழுந்தருளியுள்ளார்களென்றும் கூறியதனால், ஸ்வாமி புஷ்கரிணி என்னும் தொடரிலுள்ள ஸ்வாமி என்ற சொல்லால் அப்பெருமான்கள் இருவரும் சொல்லப்படுதல் குறிப்பாகக் காட்டப்படுதலால், ஸ்வாமிகளின் புஷ்கரிணி என்று விரித்து இச்சொல்லை ஆறும் வேற்றுமைத் தொகையாகவும் கொள்ளலாம் என்ற கருத்து அறியப்படுகிறது. இப்படியே இப்பொருளைக் கூறும் செய்யுட்கள் பலவும் அங்கங்கு உள்ளவை காணத்தக்கன.

இப்படியே - ஸ்வாமி புஷ்கரிணி வைகுண்ட லோகத்திலிருந்து கொண்டுவரப்பட்ட திருமாலின் விளையாட்டு நடைவாவி என்று குறிக்கப்பட்டுள்ளதனாலும் இது விஷ்ணு தீர்த்தமே என்பது அறியப்படுகிறது. வராகபுராணம் முதற்பகுதி 35 எண்ணிட்ட மூன்றும் அத்தியாயத்தில் - திருமகளாலும் மண்மகளாலும் ஆசையோடு

காக்கப்பட்டதும் திவ்யமான தீர்த்தத்தையுடையதும் நறுமணம் வீசப்பெற்றதும் மிக அழகியதும் கங்கை முதலிய எல்லாத் தீர்த்தங்களுக்கும் பிறப்பிடமானதும் மங்களமான நீரையுடையதும் வைகுந்தலோகத்திலுள்ளது மான திருமால் விளையாடும் நடைவாவியே கருடனால் கொண்டு வரப்பட்டு, எல்லாப் பாவங்களையும் போக்கிப் புண்ணியத்தை உண்டாக்கும் ஸ்வாமி புஷ்கரிணி என்னும் பெயருடையதாய் வேங்கடவன் விளையாடுவதற்காகத் திருவேங்கடமலையில் இருக்கிறது - என்றுள்ளது.

இங்கு பகவான் விளையாடும் வாவி என்று குறிப்பிடப்படுவதனால், ஸ்வாமி புஷ்கரிணி என்னும் தொடரிலுள்ள ஸ்வாமி என்னும் சொல் பகவானைக் குறிக்கின்றமை ஸ்பஷ்டமாக்கப்பட்டதாயிற்று. இங்ஙனமே ஸ்வாமி புஷ்கரிணியில் ஸ்நாநம் செய்தல் முதலியனவற்றால் விஷ்ணு ஸாயுஜ்யம் (அறிவு ஆனந்தம் முதலியவற்றால் உண்டாகும் விஷ்ணுவோடு ஒப்புமை) முதலிய பயன் கூறப்படுவதனாலும் அது விஷ்ணுவின் தீர்த்தமே என்று அறியப்படுகின்றது. ஆகையால் திருமால் எல்லாவுலகிற்கும் ஸ்வாமியானதுபோல் இப்புஷ்கரிணி எல்லாப் புண்ய தீர்த்தங்களுக்கும் ஸ்வாமியானதனாலும், எல்லாவுலகிற்கும் ஸ்வாமியான திருமாலோடு ஸம்பந்தம் பெற்றதனாலும் (இவ்விரண்டு காரணங்களை முன்னிட்டு) ஸ்வாமி புஷ்கரிணி என்னும் பெயர் உண்டாயிற்றென்று புலப்படுதலால் ஸ்வாமி புஷ்கரிணி விஷ்ணுதீர்த்தமே என்பது உறுதிப்படுகிறது.

குமாரனின் பெயரோடு சேர்ந்ததாகக் குறிக்கப்படுகிற தீர்த்தம் குமாரதாரை என்ற தீர்த்தமேயாகும். அங்குத்தான் குமரக் கடவுள் கற்பகாலம் முடியும்வரை வசிப்பதாகப் புராணத்தினால் அறியப்படுகிறது. அதுவும் திருமாலின் தீர்த்தமே. வேறு பல தீர்த்தங்களும் அந்தந்த ரிஷிகள் வாசம் செய்தல் மாத்திரத்தையே கொண்டு (கபில தீர்த்தம், ஜாபாலி தீர்த்தம் என்று) அவர்களின் பெயரோடு

சேர்ந்திருப்பது போல், குமாரதாரை என்ற இத்தீர்த்த மும் குமரன் அங்கு வாசம் செய்வது மாத்திரத்தையே கொண்டு குமாரன் என்ற பெயரோடு சேர்ந்திருப்பதனா லும், திருவேங்கடமலை முழுவதும் திருமாலுடனே ஸம் பந்தம் பெற்றமை அறியப்படுதலாலும் இது அறியலாகும். ஆதலால் ஸ்வாமி புஷ்கரிணிக்குத் திருமாலைத் தவிர வேறெந்த தேவதையோடும் ஸம்பந்தம் இருக்கச் சிறிதும் இடமில்லை.

இங்ஙனமாக பகவத் ராமாநுஜ முனிவர் ஆற்றிய ஆராய்ச்சியுரையைக் கேட்டு யாதவராஜன் நம்பிக்கையு டன் தலையசைத்து, ஸ்வாமி புஷ்கரிணி பரமபவித்திர ரான திருமாலைச் சேர்ந்த புராதந தீர்த்தமே என்பதை நன்றாக இசைந்தான்.

ஸ்ரீமத் ராமாநுஜாசார்யர் மிக மிகத் தக்கவாறு கூறிய நல்வார்த்தைத் திரள்களாகிய அமுதப்பெருக்கினை யாதவ மன்னன் தன் இரண்டு காதுகளாலும் பருகிப் பருகிக் களிப்பெய்தினான். அவ்வார்த்தைகளில் நம்பிக்கையும் அதிக ஆச்சரியமும் உண்டாகப் பெற்றான். அங்குள்ள சைவர்களை, பயனேதுமில்லாமல் வெறும் கூச்சலிடுப வர்களென்றும் விதண்டாவாதிகள் (எதைச்சொன்னாலும் மறுப்பதொன்றையே தொழிலாகக் கொண்டவர்கள்) என் றும் கருதினான்.

(அனந்தார்யர் தொடுத்த இதிஹாஸமாலையில், ஸ்வாமி புஷ்கரிணி தேவதாந்தரத்தைச் (வேறு தேவதை யைச்) சேர்ந்த தீர்த்தமென்னும் கொள்கைக்கு மறுப்பாகிய இரண்டாங் கொத்து முற்றும்.)

# மூன்றாம் ஸ்தபகம்

இங்ஙனம் எதிராசர் பேசிய பேச்சிற்கு வசப்பட்ட மனத்தையுடையவயனாய் மிக மகிழ்ச்சியும் ஆச்சரியமும் அடைந்த யாதவ மன்னவனைச் சைவர்கள் அப்போது பொறுமையுடன் பார்த்தார்கள். ராமாநுஜ முனிவரின் திறமையான ஆராய்ச்சியுரையைக் கேட்பதில் ஆதரமுடையவனும், மெல்ல மெல்ல இம்முனிவர் நம்பத்தக்கவர் என்னும் எண்ணம் தோன்றப் பெற்றவனுமாயிருத்தல் பற்றி யாதவராஜனைக் குறித்துச் சைவர்கள் பொறுதவர்களாய் இங்ஙனம் பேசலாயினர்.

சைவர்கள் :- ஓ அரசனே, வராகப்பெருமாள் எழுந்தருளியிருப்பதனால் இத்திருவேங்கடமலை விஷ்ணுக்ஷேத்திரமென்பதை எப்படி மறுக்க முடியாதோ, அப்படியே கந்தன் எழுந்தருளியுள்ளதனால் இது சைவக்ஷேத்திரமென்பதையும் மறுக்கமுடியாது. மேலும் ஸ்வாமி புஷ்கரிணிக்குக் கந்தனது ஸம்பந்தம் இருந்த போதிலும் தீர்த்தங்களுக்கெல்லாம் ஸ்வாமியாயிருத்தல் அதற்குப் பொருந்துவதில் தடையேதும் இல்லாமையால், ஸ்வாமி புஷ்கரிணி என்னும் பெயரில் ஸ்வாமியான புஷ்கரிணி என்று பண்புத்தொகை கூறிய மாத்திரத்தினால் அது விஷ்ணுதீர்த்தமென்பது முடிவு பெற்றதாகாது. ஆதலால் இதன் தென் கரையில் திகழும் தேவனுக்குக் கந்தனாயிருக்குந் தன்மை மறுக்கமுடியாமல் இருக்கும் வரையில் இம்மலைக்கும் இப்புஷ்கரிணிக்கும் கந்தனது ஸம்பந்தமும் இல்லை செய்ய முடியாததாகும். இப்படியிருக்க இதற்கு வேறாக இம்மு

ளிவர் கூறும் வார்த்தைகளினால் என்ன பயன்? இம் மலையில் வராகப்பெருமாள் இருப்பதையும் இது வராக க்ஷேத்திரமென்பதையும் விஷ்ணு பக்தர்களால் இது வழி படப்பெறுவதையும் நாங்கள் அடியோடு மறுக்கவில்லை. பின்னையோவென்றால், ஸ்வாமி புஷ்கரிணியின் தெற்குக் கரையில் விளங்கும் பெருமான் கந்தனென்றும், அதனால் இம்மலைக்கும் இப்புஷ்கரிணிக்கும் கந்தனது ஸம்பந்தமும் உண்டென்றும் கூறுகின்றோம். அப்பெருமான் திருமால் அல்ல, வேறு தெய்வமே என்று - சாக்குப் போக்குகள் சொல்ல முடியாத முற்கூறிய அத்தாட்சிகளால் மறுக் கமுடியாத நிலை பெற்றுள்ளது. அதனால் ஆராயாமல் திடீரென்று இராமாநுச முனிவரது கூற்றைப் பொருத்த முடையதாக முடிவு கட்டிவிடாதே. (என்று பேசலாயினர்)

இங்ஙனம் சைவர்காள் கூறவும் யாதவ மன்னவன் அச்சைவர் மறுக்க முடியாதபடி பதிலளித்தான் :-

யாதவராஜன் : சைவர்காள், நீங்கள் கூறும் விஷ யத்தைப் பொருத்தமுடையதாக நாம் கருதமாட்டோம். ஏனென்றால், தாரகாசுரனைக் கொன்றதனாலுண்டான பாவத்தைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டுத் தவமியற் றுதற்காகக் கந்தன் வந்தடைந்த இந்த மலை உத்தமமான விஷ்ணு க்ஷேத்திரமென்று புராண வசனங்கள் பறைசாற் றுகின்றமையே அதற்குக் காரணம் மேலும் வேங்கட மலை வைகுண்டலோகத்திலிருந்து கருடனால் கொண்டுவ ரப்பெற்ற திவ்யமான திருமால் விளையாடும் மலையென் றும், ஸ்வாமி புஷ்கரிணி அங்கிருந்து அவனாலேயே கொணரப்பட்ட திவ்யமான நீர்ப்பெருக்கையுடைய அப்பெ ருமான் ஜலக்கிரீடை செய்யும் வாவியென்றும் கூறப் படுகிறது. ஏற்கெனவே பிரசித்தமான பெருமையைப் பெற்றதும் ஸ்வாமி புஷ்கரிணியென்னும் பெயரால் உலக முழுவதும் உணர்ந்ததுமான இப்புஷ்கரிணியின் கரை தவம் புரிவதற்காகக் கந்தனால் அடையப்பட்டதென்று அறி விக்கப்படுதலால், கந்தனது ஸம்பந்தத்தினால் ஸ்வாமி

புஷ்கரிணி என்ற பெயர் இதற்கு உண்டாயிற்றென்று கூறுதல் இயலாது.

இப்படிப்பட்ட பல காரணங்களைக் கொண்டு திரு வேங்கடமலைக்கும் ஸ்வாமி புஷ்கரிணிக்கும் வேறு தெய் வங்களோடு தொடர்புண்மையை மறுத்துத் திருமாலோ டுள்ள தொடர்பையே கூறுகின்ற ஸ்ரீராமாநுஜ முனிவரைக் குறித்து, அவ்விரண்டிற்கும் வேறு தெய்வங்களோடு தொடர்புண்மையை நிலைநாட்டுதற்குத் தக்க விடை ஏதும் உங்களால் கூறப்படவில்லை. இராமாநுச முனிவர் செய்த ஆராய்ச்சியுரையானது அவரது கொள்கையை நிலைநிறுத்தப் போதுமான அத்தாட்சியென்று நாம் நம் புகிறோம். ஆதலால் இப்போது ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் விளங்கும் தேவன் திருமாலா அல்லது கந் தனா என்ற இந்த அம்சம் ஒன்று மட்டும் ஆராய்ந்து முடிவுகட்ட வேண்டியதாய் எஞ்சியுள்ளது. அதைமட்டும் இராமாநுச முனிவரிடம் கேட்கிறேன் - என்று கூறிச் சபையிலுள்ள சைவர்களை மறுத்துரைத்து, யாதவரா ஜன் இராமாநுச முனிவரை நோக்கி கௌரவத்துடனும் பக்தியுடனும் இங்ஙனம் கூறினான்.

யாதவராஜன் :- வாரீர் ராமாநுஜ முனிவரே, திரு வேங்கடமலை விஷ்ணு க்ஷேத்திரமே என்றும் ஸ்வாமி புஷ்கரிணி விஷ்ணுதீர்த்தமே என்றும் தேவரீர் ஆற்றிய ஆராய்ச்சியுரை தேவரீருடைய கொள்கையை வலியுறுத் தற்குப் போதுமான மிகத் திறமைபடைத்த அத்தாட்சியே என்று நாம் இசைகின்றோம். இப்போது ஸ்வாமி புஷ்க ரிணியின் தென்கரையில் பிரகாசிக்கும் பெருமான் திருமா லேயன்றி வேறு தேவதையல்ல என்னும் இப்பகுதி ஒன்றே தேவரீரால் ஆராய்ந்து கூறப்பட வேண்டும் - என்று யாதவராஜனால் வினவப்பட்ட யதிராஜர் அவ்வரசனைப் பிரமாணங்களினாலும் யுக்திகளாலும் திருப்தியடையும்ப டிச் செய்துகொண்டே கூறினார்.

மனத்துடன் கேட்பாயாக. மிகவும் விளக்கமாயிருக்கும் இவ்விஷயத்தில் திறமையான ஆராய்ச்சிக்குத் தேவையே இல்லை. பற்பல சான்றுகளாலும் மிக விளக்கமான ஒப் பற்ற தனது மகிமையினாலும் மறுக்கமுடியாத உண்மைத் தன்மையை உடைய இவ்வேங்கடேச பகவான் மதுசூத னனாகிய (மதுவென்னும் அசுரனைக்கொன்ற) தேவனே ஆவான். இவன் தேவனென்னும் பெயரொப்புமையினால் மட்டும் குறைவான ஆற்றல் படைத்த வேறு தேவ தையென்று சிறிதும் ஸந்தேகப்படத் தக்கவனல்லன். கத்யோதம் என்னும் பெயரொப்புமையினால் மாத்திரம் - மறுக்கமுடியாத பொறுத்தற்கரிய தேஜஸ்ஸின் திரட்சி வடிவாகிய சூரிய பகவானைக் கண்ட எவனுக்கும், 'இது மிக அற்பமான ஒளிபடைத்த சோதியான மின்மினிப் பூச்சி' என்னும் திரிபுணர்ச்சி உண்டாகாதன்றோ? இப் போது இங்குப் புலவர்களால் விசேஷமாகப் படிக்கப் படுகின்ற வேங்கடாசல மாகாத்மிய புராணப்பகுதிகள் யாவும் கையை உயரத் தூக்கி 'ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் பிரகாசிக்கும் இப்பெருமான் திருமகள் நாத னாகிய நாராயண பகவானே' என்று பேரொலி செய்து முழங்குகின்றன.

அவற்றில், "ஆச்சரியமான நற்குணநற்செய்கைகள் படைத்தவனும் எல்லையான ஆனந்த முடையவனு மாகிய திருமால் மிகவுயர்ந்ததான வைகுந்தவுலகைவிட்டு ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் மஹாலக்ஷ்மியுடன் மகிழ்ந் துறைகின்றான்" என்று பெரும்பாலும் எல்லாப் புரா ணங்களிலும் கோஷிக்கப்படுகிறது. இவ்வார்த்தை - உண் மையில், ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்குக் கரையிலும் தெற்குக் கரையிலும் முறையே விளங்குகின்ற ஸ்ரீவராஹ ஸ்ரீநிவாஸப் பெருமாள்கள் இருவருள் ஸ்ரீநிவாஸனைப்பற் றியதாகும். ஸ்ரீனிவாஸ பகவானுடைய ஆவிர்ப்பாவத்தை (தோன்றுதலை) வருணிக்கும் கெட்டங்க (நூற்பகுதி)க ளிலேயே இவ்வார்த்தை இருப்பது இதற்குக் காரணம்.

பூமிதேவியுடன் கூடியவனாகவே அறியப்பட்ட வராகப் பெருமானுக்கு மஹாலக்ஷ்மியுடன் கூடியிருக்குந் தன்மை எந்நூலிலும் புலப்படாமையினாலும், கற்பத்தின் ஆதி யில் பிரளயக் கடலில் அழுந்திய பூமியை எடுத்து முன்பிருந்தபடியே நிலைநிறுத்தி, அதன் அபிமான தேவ தையான பூமிதேவியுடன் மேருமலைச் சிகரத்திலிருந்து உடனே புறப்பட்டு வந்து ஸுவர்ணமுகி நதிக்கரையில் உள்ள வேங்கடமலையில் நிலைபெற்றமை தெரியவருத லாலும் , இவ்வார்த்தையில் கூறப்படுகின்ற - நடுக்காலத் தில் வைகுந்தத்தைவிட்டு வருதல் மகாலக்ஷ்மியுடன் சேர்ந் திருத்தல் ஆகிய இவ்விரண்டும் வராகப்பெருமாளைப் பற்றியதாய் இருக்க முடியாதென்பது மற்றொரு காரணம்.

(ஹரிவம்சத்தைச் சேர்ந்த) சேஷ தரும புராணத்தில் உள்ளதாய் வேங்கடாசல மாஹாத்மியத்தைக் கூறுவதான நாற்பத்தெட்டாம் அத்தியாயத்திலோவென்றால், "பெரும் பாக்கியவானே, கங்கையின் புதல்வனே, பீஷ்மப்ரபுவே, ஸ்ரீநிவாஸனுடைய மகிமையை எங்களுக்குச் சொல் லுவீராக. பேச்சில் வல்லவரே, வைகுண்டத்தில் வசிப் பவனும் தேவர் தலைவனும் எங்கும் நிறைந்தவனும் எல்லாம் வல்லவனுமாகிய திருமால் திருவேங்கடம லைக்கு எப்படி வந்தான் என்பதைப் பற்றி எனக்கு நீர் கருணையுடன் கூறுவீராக" என்று தருமபுத்திரர் பீஷ்மரைக் கேட்பதாகத் தொடங்கி, "வைகுந்த வுலகில் தோன்றிய மிகப் புனிதமானதோர் வார்த்தையை நான் கேட்டேன். நல்லோர்களே, அக்கதையைக் கேளுங்கள் சொல்லுகிறேன். ஆச்சரியமான நற்குண நற்செய்கைகள் படைத்தவனும் எல்லையான ஆனந்தமுடையவனுமாகிய திருமால் மிகவுயர்ந்ததான வைகுந்தவுலகைவிட்டு ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் மஹாலக்ஷ்மியுடன் மகிழ்ந்து றைகின்றான் என்னும் மிக ஆச்சரியான வார்த்தையைக் கேட்டு இந்திரனும் மருத்துக்கணங்களும் உலகிற்குத் தந் தையான திருமாலைத் திருவேங்கடமலையில் தரிசனம் செய்ய முயன்றார்கள், நானும் முயன்றேன்" என்று நார

தர் வாயிலாக வைகுந்தவுலகில் பிறந்த வார்த்தையைக் கேட்டவுடன் அவரோடு கூடவே இந்திரன் முதலியோர் திருவேங்கடமலையில் ஸ்ரீநிவாஸனைக் காண முயன்றதைக் கூறி, "கோடி சூரியரோடொத்த ஒளிபடைத்தவனும் கோடி சந்திரரோடொத்த குளிர்ச்சியுடையவனுமான திருமகள் நாதன் ஸ்வர்க்கலோகத்திலிருந்து பூமி வரையில் வியாபித்துத் தோன்றினான். தோன்றி ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் சூரிய மண்டலம் போன்ற விமானத்தில் எல்லாம்வல்ல அந்த ஸ்ரீநிவாஸன் தேவர்களால் வணங்கப்பட்டு வாஸம் செய்தான்" என்பதிறுதியாக ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் ஸ்ரீநிவாஸனுடைய தோற்றம் பீஷ்மரால் கூறப்பட்டது.

வராக புராணம் முதற்பகுதி 43 எண்ணிட்ட பத்தாம் அத்தியாயத்தில் எம்பெருமான் திருவேங்கடமலையில் இப்போது மைம்மலை போன்ற திருமேனியொளியை உடையவனாய் எல்லார் கண்களுக்கும் புலப்படுமவனாய் இன்னாரினையாரென்ற வாசிபாராமல் எல்லார்க்கும் கோரிய பலனை அளிப்பவனாய் எழுந்தருளியிருக்கிறனல்லவா? இப்படிப்பட்ட திருமேனி எந்தப் புண்ணியவானுக்கு பகவானால் காட்டப்பட்டது' என்று ஸ்ரீநிவாஸனது தோற்றத்தைப் பற்றிய கதையைத் தொடங்கி, அசுரரால் துன்புறுத்தப்பட்ட தேவரும் முனிவரும் பகவானைத் தஞ்சமடைவதற்காகப் பாற்கடலுக்குச் சென்று துதிக்கும் போது, இதற்கிடையில் பகவானது பக்தர் திரளில் ஒருவன் சங்குசக்கர கதைகளை யேந்திக்கொண்டு வானத்தில் தோன்றி "முனிவர்களே கேட்பீராக, மாயவனாம் மஹாலக்ஷ்மி நாதன் பூவுலகில் எங்கேயோ ஒரு மலையில் வாஸம் செய்கிறர். ஸநகாதி ஸத்புருஷர்களான நீங்கள் இங்கு ஏன் வந்தீர்கள். அம்மலைக்கே செல்லுங்கள்" என்று கூறித் திரும்பிச் சென்றுன் என்ற வார்த்தை பக்தன் வாயினின்று தோன்றியதென்றும், இங்ஙனமே நாரதர் வைகுண்ட லோகத்துக்குச் சென்ற வளவில் அங்கு ஒரு புருஷன் வாயிலிருந்து "பூமியில் எங்கோ

ஒரு மலையில் திருமால் திருமகளுடன் கூடிக் களிக்கின்றார்" என்ற வார்த்தை தோன்றியதென்றும் காண்கிறபடியினாலும், இதே போல் வேறிடங்களிலும், ஸ்ரீநிவாஸனது தோற்றத்தைக் கூறும் சந்தர்ப்பங்களிலேயே இப்படிப்பட்ட வார்த்தை உண்டாயிற்றென்று கூறக் காண்கையினாலும் முற்கூறிய வார்த்தை ஸ்ரீநிவாஸனைப் பற்றியதே (தவிர வராகப்பெருமாளைப் பற்றியதன்று) என்பது அறிய எளியதாகும். "மைம்மலை போன்ற (கரிய) திருமேனியுடையவனாய் எழுந்தருளியிருக்கிறான்" என்ற ஆரம்பத்தை ஆராய்ந்தாலும் இவ்வார்த்தை வெள்ளை நிறமுடைய வராக பெருமாளைப் பற்றியதல்ல என்று அறியலாகும்.

இதுபோல வராகபுராணம் முதற்பகுதி 34 எண்ணிட்ட இரண்டாம் அத்தியாயத்தில் - பிறகு வெண்ணிற வராகப்பெருமாள் பூமியை எடுத்து ஏழு கடல்களாகவும் ஏழு உலகங்களாகவும் முன்புபோலவே நிலைநிறுத்தி - என்று தொடங்கி, கற்பமுதலில் வராகப்பெருமாள் கடலோடு கூடிய பூமி முதலிய லோகங்களை நிலைநிறுத்தியதைப் பற்றிக்கூறி, பிறகு திருவேங்கடமலையில் ஏறி வெள்ளை வராகராகிய ஹரி, ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்குக் கரையில் உள்ள புனிதமான வனத்தில் நிலையாக இருந்தார் என்று ஆரம்பித்து - அப்போதே கருடனால் வைகுந்தத்திலிருந்து கொணர்ந்து நிறுத்தப்பட்ட வேங்கடமென்னும் பெயர் பூண்ட விளையாட்டு மலையில் ஸ்வாமி புஷ்கரிணியின் மேலண்டைக் கரையில் வெள்ளை வராகபகவான் திவ்ய விமானததின்கண் நின்றார் என்று - கூறிப் பிறகு - பின்பு ஒரு காலத்தில் ஸ்வாமி புஷ்கரிணியின் தென்னண்டைக் கரையில் விமானத்தின் நடுவில், தாமரைக் கண்ணனும் தேவர் தலைவனும் உயர்ந்தோரெல்லோரையும் விட உயர்ந்தவனும் சங்கு சக்கர கதைகளைத்தரித்தவனுமாகிய ஸ்ரீநிவாஸப் பெருமானும் நின்றருளினான் என்று, பிறகு சில காலம் கழித்து ஸ்ரீநிவாஸ பகவான் வந்து ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் திவ்ய விமானத்தில், இருந்ததாகக் கூறப்படு

வதனால், ஸ்ரீவராகப்பெருமாளும் ஸ்ரீநிவாஸப்பெருமாளும் பகவானுடைய தனித்தனி அவதாரங்களாய் வேறு வேறு கோவில்களில் இருந்து கொண்டு வெவ்வேறுபட்ட திவ்ய குணசரித்திரங்களை உடையவர்களாக விளங்குகின்றனர் என்று வெளிப்படையாகவே அறியப்படுகின்றது.

ஆகையால், இத்திருமலையில் ஸ்ரீவராகப்பெருமானென்னும் ஒரு திருமாலின் திருவுருவை மட்டும் இசைந்து, ஸ்வாமி புஷ்கரிணியின் தெற்குக் கரையில் விளங்குமவராகப் புராணங்களால் அறியப்பெறுகின்ற ஸ்ரீநிவாஸப்பெருமானென்னும் மற்றொரு திருமால்திருவுருவை இல்லை செய்து, அவ்விடத்தில் தவம் செய்வதற்காக வந்த கந்தனே அங்கு (அர்ச்சை வடிவாக) ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறானென்று கற்பனை செய்தல் எவ்விதத்திலும் பொருந்தாததொன்றாகும்.

வராகபுராணம் இரண்டாம் பகுதி முதல் அத்தியாயத்தில், கற்பத்தின் ஆதியில் பிரளயக்கடலில் மூழ்கிய பூமியை எடுத்து முன்புபோலவே ஸ்தாபித்துவிட்டு மேருமலை யுச்சியில் இருந்த வராக பகவானிடம் பூமிக்கு அபிமானி தேவதையான பூதேவி வந்ததைக் கூறி, அவ்விருவர்க்கும் நடந்த ஸம்பாஷணத்தில் ஸ்வாமி புஷ்கரிணியைப் பற்றிய துதியில் இத்தீர்த்தங்களில் மிக உயர்ந்தவள் நல்லதேவியான ஸ்வாமி புஷ்கரிணி. இதன் மேற்குக் கரையில் உன்னுடன் கூடிக் கற்பம் முடியும் வரையில் நான் இருப்பேன். இதன் தெற்குக் கரையில் ஜகத்பதியான ஸ்ரீநிவாஸன் கற்பம் முடியும் வரை இருப்பார் - என்று ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்கு தெற்குத் திசைகளில் பூமிதேவியுடன் வராகப்பெருமாள் ஸ்ரீதேவி பூமிதேவிகளுடன் கூடிய ஸ்ரீநிவாஸப்பெருமாள் ஆகிய திருமாலின் திருவவதாரங்கள் இரண்டும் ஒவ்வொரு கற்பத்திலும் விடாமல் வாஸம் செய்வதை வராகப்பெருமாளே சொல்லுவதாகக் கூறிப் பிறகு அவ்விருவரின் ஸம்பாஷணத்தின் முடிவில் - ஸ்ரீவராகப்பெருமாள் பூமிதேவியை

எடுத்துத் தன் தோள்களினால் தழுவி அவளது திருமு கத்தை மோந்து அவளைத் தனது இடது துடையில் இருத்திக் கொண்டு கருடன் மேலேறித் திருவேங்கடம லைக்குச் சென்றுர். பூதேவி நாதனான அப்பெருமான் நாரதாதி முனிவர்களால் துதிக்கப்படுமவராய்க் கொண்டு உலகோர் பூஜிக்கும் ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்குக் கரை யில் முனிவர் பெருமக்களால் வழிபடப்பெற்றுஅதுமுதற் கொண்டு வசித்து வருகிருர் - என்று பூமிதேவியுடன் கூட அப்பொழுதே கருடவாகனமேறி வந்த வராஹப்பெருமாள் ஸ்வாமிபுஷ்கரிணியின் மேற்குக் கரையில் இருப்பதைக் கூறிப் பிறகு இரண்டாம் அத்தியாயத்தின் முடிவில் - வராகப்பெருமானே, ஜகந்நாதனும் தேவர் தலைவனும் ஜநார்த்தனனும் குற்றமற்றவனுமாகிய ஸ்ரீனிவாஸப்பெரு மான் வேங்கடமென்னும் பெயரையுடைய பெரிய திரும லைக்கு எப்போது எழுந்தருளுவர்? கற்பம் முடியும் வரை எப்படி இருப்பர்? இதைக் கேட்டறிய மிக்க ஆசை உள் ளது எனக்கு. இதைச் சொல்லுவீராக என்று கேட்ட பூமிதேவியின் கேள்விக்கு, மூன்றும் அத்தியாயத்தில் குற்ற மற்றவளே தேவியே, முன்கற்பத்தைச் சேர்ந்த கிருதயுகத்தில் வைவஸ்வதமநுவின் ஆட்சிக் காலத்தில் ஸ்ரீபூமிகளுடன் கூடிய ஸ்ரீனிவாஸ பகவான் வாயுதேவன் பெருந்தவம் புரி வதைக் கண்டு ஸ்வாமி புஷ்கரிணித் தென்கரைக்கு வந் தார். புண்ணியமான அக்கரையின்கண் ஆனந்தமென்னும் பெயர்கொண்ட மிகப்புண்ணியமான விமானத்தில் வாயு தேவனுக்குப் பிரீதியை உண்டுபண்ணும் ஹரியானவர் வசிக்கப்போகிருர். இருடீகேசனான அப்பெருமாள் அங்கு வந்தது முதற்கொண்டு எப்போதும் கந்தனால் பூஜிக்கப் படுமவராய்க் கொண்டு கற்பம் முடியும்வரை யாரும் பார்க்கமுடியாத இவ்விமானத்தில் வாஸம் செய்யப்போ கிருர் - என்று முன் கற்பத்தை உதாரணமாகக் காட்டி வருங்காலத்திலும் சில நாட்கள் கழித்து வாயுதேவனது தவத்தின் பயனாக ஸ்ரீபூமிகளுடன் கூடிய ஸ்ரீநிவாஸன் வந்து ஸ்வாமி புஷ்கரிணியன் தென்கரையில் கந்தனால்

ஆராதிக்கப்பட்டுக் கற்பம் முடியும் வரையில் வசிக்கப் போகிறுர் என்பதாக வராகப் பெருமானே விடையளித் ததாகக் கூறப்பட்டிருப்பதனால், ஸ்ரீநிவாஸப்பெருமாளை இல்லை செய்து கந்தனைக் கற்பனை செய்ய இடமேதும் காணப்படவில்லை.

இதற்கு எதிரிடையாக தாரகாசுரனைக் கொன்ற தோஷத்தைப்போக்கிக் கொள்வதற்காகத் தவம் செய்ய வந்த கந்தன் ஸ்ரீநிவாஸனைப் பூஜை செய்பவனாகவே புராணங்களினால் அறியப்பட்டவன் அங்ஙனமே இருக்கத் தகுதி பெற்றவனாகையால், பூஜிக்கப்படும் தேவதையுரு வோடு அவன் இருப்பதாகக் கற்பிப்பது - அவன் வரு கைக்குப் பயனாகிய பாபம் போக்கிக் கொள்வதென்னும் காரியத்திற்கு முரண்பட்டதாகையால் சிறிதும் பொருந் தாது.

இவ்விதமாகப் பெரும்பாலும் வேங்கடமலையின் மான் மியங்கூறும் புராணப்பகுதிகளில், ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்கு தெற்குக் கரைகளில் (முறையே) ஸ்ரீவராகப்பெருமா ளும் ஸ்ரீநிவாஸப்பெருமானும் தனித்தனியாக எழுந்தருளி யுள்ளமை அறியப்படுகிறது.

ஸ்ரீபாத்ம புராணத்திலும் 27 எண் குறித்த நான்காம் அத்தியாயத்தில் ஒருகால் கருணை காரணமாக உண்டான அளவிடற்கரிய புண்ணிய எண்ணங்கொண்ட விஷ்ணு பக வான் நேராகக் கண்ணுக்கிலக்காகி அனைவர்க்கும் சேவை தருவதற்காக - என்று தொடங்கி, பரமபுருஷனான பகவான் பக்தர்களிடம் தயையுடையவனாய் ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் ஸ்ரீநிவாஸனாகத் தோன்றினான் என்பது இறு தியாக ஸ்ரீநிவாஸனது தோற்றத்தைக் கூறி, பின்பு 28 எண் குறித்த ஐந்தாம் அத்தியாயத்தில் ஸிம்ஹ பருவத் தின் (வேங்கடமலையின்) உட்புறத்தில் ஸ்வாமி புஷ்கரி ணிக்கரையில் வெள்ளைவராகப்பெருமாளுடைய தோற்றம் எங்ஙனம் உண்டாயிற்று என்று ஆரம்பித்து, ஸ்ரீவராகப் பெருமானின் தோற்றத்தை ஸ்ரீநிவாஸனின் தோற்றத்தைக்

காட்டிலும் வெறுபட்டதாகக் குறித்துக்கூறி முடித்துவிட்டு, அது முதற்கொண்டு மிகவும் பலமுடையவராகவுருக் கொண்ட தேவர் தலைவன் பாதாள லோகத்தைவிட்டு இப்பூவுலகின்கண் ஆவல் மிக்வனாய் ஸ்வாமி புஷ்கரிணி யின் மேற்குக் கரையில் - என்று தொடங்கி எல்லோரிட மும் இயற்கையாகவே தோழமையுடையவனும் திவ்யமான திருமேனி தரித்தவனுமான வராக பகவான் அறிவும் ஆனந்தமும் நிறைந்த அமரர்களையும் மற்ற மனிதர் கள் அனைவரையும் மகிழ்வித்துக்கொண்டு எழுந்தருளி யிருக்கிறான் என்பதிறுதியாக வராகப்பெருமான் ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் இருப்பதையும்,

29 எண் குறித்த ஆறும் அத்தியாயத்தில் - தன்னிஷ் டப்படி தானே தோன்றும் தேவர் தலைவனும் நித்யசூ ரிகட்கிறைவனும் வராக உருக்கொண்டவனுமான அழ கிய பெருமான் ஆதிசேஷமலையின் உச்சியில் ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் உள்ளே மறைத்து வைத்த திருவ டியுடையவனாய்ப் பூமிதேவியுடன் கூடிப் பிறரறியாமல் சுகமாக வசிக்கிறான் என்று வராகப்பெருமாள் இருப்ப தைச் சொல்லி, உடனடியாகவே பின்பு ஸ்ரீநிவாஸனும் சேஷபருவதத்தில் ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் வசித் துக்கொண்டே கீழுலகத்திலுள்ள மக்களை இயற்கையின் பமுடையவர்களாக ஆக்க எண்ணி - என்று தொடங்கி இவ்வுலகிற்கு அப்பாற்பட்டவனும் புராண புருஷனும் நம் மைப்படைத்தவனுமான பரம புருஷன் தன்னுடைய முன்னிருப்பிடமான வைகுண்டத்தை விட்டு இப்போது இங்கு இருக்கிறான் என்பதிறுதியாக, ஸ்வாமி புஷ்கரி ணிக்கரையில் வராக பகவான் எழுந்தருளின பின்பு சில நாட்கள் கழித்து ஸ்ரீவைகுண்டத்திலிருந்து வந்து அப்புஷ்கரிணியின் கரையிலேயே வராக பகவானைக் காட்டிலும் வேறான ஸ்ரீநிவாஸ பகவான் எழுந்தருளி யிருப்பதையும் கூறியுள்ளதனால், ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் ஸ்ரீவராகன் ஸ்ரீநிவாஸனென்ற இரண்டு ரூபங்கொண்டு ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் எப்போதும் ஸேவை தரு கிறாரென்று செவ்வனே தெரிய வருகிறது.

பத்ம புராணம் 33 எண் குறித்த பத்தாம் அத்தியாயத்தில் - ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்குக் கரையில் புத்தம் புதிய உருவமுடையதும் குற்றமற்றதும் ஆனந்தமூட்டுவதுமாகிய விமானம் தோன்றியது என்று ஸ்ரீநிவாஸனது விமானமும், அதற்கு மேலே - செல்வம் மிக்க ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்குக் கரையில் தேவர் கணங்களின் வேண்டுகோளுக்கிரங்கிய லோகரக்ஷகனான பகவான் பரமபுருஷன் தோன்றினான் என்று ஸ்ரீநிவாஸனும் ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்குக் கரையில் தோன்றியதாகக் கூறப்பட்டுள்ளது. மற்றப் புராணங்களில் தெற்குக் கரையில் தோன்றியதாகக் கூறப்பட்டுள்ளதாகையால் இவ்விஷயத்தில் சிறிது வேறுபாடு தோன்றுகிறது. ஆனாலும் ஸ்ரீநிவாஸனும் அவன் விமானமும் ஸ்வாமி புஷ்கரிணியின் தென்மேற்குக் கரையிலேயே தோன்றினமையால் அவ்விடம் அப்புஷ்கரிணிக்குத் தெற்காகவும் மேற்காகவும் குறிக்கத்தகுமாகையால் முரண்பாடு சிறிதுமில்லையென்று அறியத்தக்கது.

மார்க்கண்டேய புராணத்திலும் முதல் அத்தியாயத்தில் - அத்திருமலையின் வைபவத்தைத் திரும்பவும் கூறுகிறேன். அங்கு எல்லாப் புனித தீர்த்தங்களும் உள்ளன. அவற்றுள் ஸ்வாமி என்னும் பெயர் பெற்றதோர் உயர்ந்த திருக்குளம் முக்கிய தீர்த்தமாக உள்ளது. அதன் மேற்கரையில் பூவராகப் பெருமாள் பூமிதேவியான தன் மனைவியை அணைத்தபடியே அழகுமிக்க திருமேனியுடையவராயும் எல்லார்க்கும் அருள்செய்யுமவராயும் விளங்குகிறார். அழகிய அதன் தென்கரையில் வைகுந்த நகரநாதனாகிய திருமால் திருமகளணைந்த திருமேனியுடையவராய் எல்லார்க்கும் வரமளித்துக்கொண்டே வெகுநாட்களாக வசித்து வருகிறார். இக்குளத்தின் மகிமையை என்னால் எப்படிச் சொல்ல முடியும் என்று கருடன் மார்க்கண்டேயருக்குக் கூறியதாகவும்,

பவிஷ்யோத்தர புராணம் மூன்றும் அத்தியாயத்தில் - இவ்வாறு அம்மலையில் உள்ளவற்றில் உயர்ந்தது புண்ணியமான ஸ்வாமி புஷ்கரிணியாகும். அதன் மேற்றிசைப் பகுதியில் அரசமரத்தினால் அலங்கரிக்கப்பட்ட புற்றில் வராக முகங்கொண்ட திருமால் பூமிதேவியை அணைத்துக்கொண்டு இருக்கிறார். நாம் மறைவாக எவ்விடத்தில் வசிக்கலாமென்று சிந்தித்துக் கொண்டிருக்கையில் ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் புளிய மரத்தடியில் உள்ளதாய்க் குற்றமற்ற அழகிய புற்றினை மகிழ்ச்சியுடன் கண்ட லோகநாதனாகிய திருமால் அதை மிகவுயர்ந்த உறைவிடமாகக் கருதி அதற்குள் மறைந்திருந்தார் என்று ஜநகருக்கு சதானந்தர் கூறியதாகவும் உள்ளதனால், பகவான் இரண்டு திருமேனிகளோடு இரண்டிடங்களில் உள்ளமை விளக்கமாகக் கூறப்பட்டது.

ஸகந்தபுராணம் முதற்பகுதி ஏழாம் அத்தியாயத்திலும் முற்காட்டிய மார்க்கண்டேய புராணத்திலுள்ள சொற்றொடர்கள் அப்படியே காணப்படுகின்றன. அந்த ஸ்கந்த புராணத்திலேயே முதல் அத்தியாயத்தில் உள்ள இதற்கு முன்பு இரண்டாம் ஸ்தபகத்தில் பதினான்காவது வாக்கியத்தில் மேற்கோளாகவும் காட்டப்பட்ட வசனங்களாலும், ஸ்கந்த புராணத்தின் இரண்டாம் பகுதியாகிய 37 எண் குறித்த அத்தியாயத்திலுள்ள அந்தணர் தலைவனாகிய பத்மநாபன் தீய நடத்தை கொண்ட தன் மைந்தன் கேசவனுடன் அவ்வேங்கடமலைக்குச் சென்று விதிப்படியே ஸ்வாமி புஷ்கரிணியின் நீரில் ஸ்நாநம் செய்தான். பிறகு வராகப்பெருமானை வணங்கி ஸ்ரீநிவாஸனது கோயிலுக்குச் சென்று வலம்வந்து விமானத்தை வணங்கிவிட்டு பிரமஹத்தி முதலிய தோஷத்தைப் போக்குவதான கடாஹ தீர்த்தத்தின் நீரை பருகினான் என்னும் வசனங்களாலும், திருவேங்கடமலையில் ஸ்வாமி புஷ்கரிணியின் கரையில் இரண்டுருவங்கொண்டு பகவான் தனித்தனியாக எழுந்தருளியுள்ளமை மிக விளக்கமாக அறியப்படுகிறது.

இப்படியே பிரம்மோத்தரகண்டம் ஐம்பதாம் அத்தியா யத்தில் ஸ்வாமி தீர்த்தமென்று பிரசித்தமான தீர்த்தம் உயர்ந்த தீர்த்தங்கள் எல்லாவற்றையும் விட மிக மிக உயர்ந்தது. அதன் தென்கரையில் விஷ்ணு லக்ஷ்மியு டன் கூடி இன்புறுகிருர் - என்றுள்ள வசனத்தினால் ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் ஸ்ரீநிவாஸன் ஸ்ரீதேவி யுடன் இருப்பதும், வாமநபுராணம் 37 எண்ணிட்ட பதி னெட்டாம் அத்தியாயத்தில் (ஜநக்ராஜனுக்குச் சதானந் தர் கூறியதாக) அரசே, அம்முனிவர்கள் பகவான் கூறிய அவ்வார்த்தையைக் கேட்டவுடன், உலகில் பிரசித்தமான ஸ்வாமி புஷ்கரிணித் தென்கரையில் உள்ளதும் பெரியதும் அழிவற்றதும் ஆச்சரியமூட்டுவதும் திருமால் எழுந்தரு ளியிருக்கப் பெற்றதும் சூரியனோடொத்து நிர்மலமுமான திவ்ய விமானத்தைக் கண்டனர் என்றுள்ள வசனத்தினால் அங்கு விமானத்துடன் ஸ்ரீநிவாஸன் தோன்றியிருப்பதும் ஸ்பஷ்டமாக அறியப்படுகின்றது.

இவ்வாறு ஸ்கந்த புராணப்பகுதிகள் இரண்டிலும் வாமன புராணத்திலும் மற்றுமுள்ள புராணங்களிலும் வெள்ளைவராகர் ஸ்ரீநிவாஸன் என்ற இருவரின் தோற் றங்கள் தனித்தனியே கூறப்பட்டுள்ளமை காணத்தக்கது.

இவ்விதமாக பவிஷ்யோத்தர புராணம் முதலியவற்றில் ஸ்ரீவராக பகவானும் ஸ்ரீநிவாஸபகவானும் ஒருவருக்கொ ருவர் பேசிக்கொள்வது ஸ்ரீநிவாஸன் ஆகாசராஜன்மகளை மணந்து கொள்வது அதற்காக ஸ்ரீநிவாஸன் வராகப்பெரு மாளை அழைப்பது என்றிவை முதலாக, விசித்திரமாகவும் விஸ்தாரமாகவும் அறிவிக்கப்படுகின்ற பல சரித்திரங்கள் இரண்டு ரூபங்கள் கொண்டு பகவான் திருவேங்கடம லையில் ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் தனித்தனியே வசித்தலைத் தெரிவிக்கின்றனவாகையால் ஸ்ரீநிவாஸப்பெ ருமாளை இல்லை செய்வது ஒருவராலும் இயலாத காரியமாகும்.

இங்ஙனமே முதல் ஸ்தபகத்தில் எடுத்தாளப்பட்ட "அராயி காணே" என்று தொடங்கும் வேத வாக்கியத்தில், ஸ்ரீநிவஸனைச் சொல்லும் "சிரிம்பிடஸ்ய" என்றுள்ள சப்தமும் - இம்மலையில் வராகப்பெருமாளைக் காட்டிலும் வேறுபட்டவராக ஸ்ரீநிவாஸப்பெருமாள் எழுந்தருளியிருக்கிறார் என்பதற்குப் போதுமான அத்தாட்சியாகத் தக்கது.

இனி இப்பெருமானிடம் காணப்படுகின்ற அடையாளங்களாலும் இப்பெருமான் கந்தனல்லன், விஷ்ணு பகவானே ஆவான் என்பது முதலிக்கப்படும். ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் இப்போது விளங்குகின்ற பெருமானுக்கு நான்கு புஜங்களன்றோ காணப்படுகின்றன. நான்கு தோள்களுடைமை திருமாலுக்கே பிரசித்தமானது. கந்தனுக்குள்ளதாக எங்கும் பிரசித்தியில்லை. ஆகையால் இவன் கந்தனல்லன். வாமன புராணம் 21 எண் குறித்த இரண்டாம் அத்தியாயத்திலுள்ள பிருகஸ்பதி செய்த கந்தன் துதியில் - புருஷர்களில் உயர்ந்தவனும் மலைமகளின் அன்பைப் பெருக்குமவனுமான குமரன் ஒரு முகமும் இருபுஜங்களும் கொண்டவன். தாயின் அன்பினால் ஆறுமுகமுடையவன் ஆனான் என்று கூறப்பட்டுள்ளது. இங்கு இயற்கையாக ஒருமுகமும் இருபுஜமும் உடைமையைச்சொல்லி, முலைப்பால் தரும் ஆறு தாய்மார்களின் அன்பின் ஆற்றலினால் ஆறுமுகங்கள் உண்டாயினவென்று முகங்களின் அதிக எண்ணிக்கையைச் செயற்கையாகக்கூறி, ஆறுமுகமுடைமைக்குப் பொருந்தும்படி "பன்னிருகைகளினாலும் விளங்கும் படைகளை உடையவனே" என்று செயற்கையாகவாவது தோள்களின் எண் பெருக்கம் பன்னிரண்டென்று சொல்லப்பட்டதேயன்றி நான்கென்று சொல்லப்படவில்லையல்லவா?

இதற்கு முன்பு இப்பெருமானைக் கந்தனென்று இசைந்து, தவம் செய்யும்போது ஆயுதங்களை விட்டபடியால் அவையில்லாமல் வெறுங்கையோடிருத்தல் தகுமென்று பொருந்தும் வழியொன்று (சைவர்களால்) கூறப்

பட்டது. ஒரு அதிகாரத்தில் உள்ளவனுக்குத் தவஞ்செய் யக் கானகஞ் செல்லுகின்ற நிலைமையிலும் கொடிய விலங்குகளை விரட்டல் முதலியவற்றிற்காகத் தன்னதி காரத்திற்குப் பொருந்தும் ஆயுதங்களை வைத்திருப்பது குற்றமாகாமையாலும் அவசியமாகையாலும், தேவசேனா திபதியாம் சிறந்த அதிகாரத்தைப் பெற்ற இக்கந்தன் ஆயுதங்களை விட்டிருத்தல் பொருந்தாமையால் அவர் கள் கூற்றுத் தகாததொன்றும். ஸ்ரீராமாயண பாரதாதி நூல்களில், இராமன் இலக்குமணன் பரதன் அர்ஜுனன் முதலியோர் சடைதரித்தல் முதலிய தவக்கோலம் பூண் டவராயிருக்கும் நிலையிலும் தமது அதிகாரத்திற்கேற்ப உண்டான ஆயுதங்களைத் தாங்கியிருந்தமை கூறப்படு கின்றதல்லவா?

கீழ்காட்டிய வாமன புராணம் 22 எண்ணிட்ட மூன் றும் அத்தியாயத்தில் - தவம் செய்வதற்காக வேங்கடம லைக்குப் புறப்பட்ட கந்தன் ஆயுதந்தாங்கி யிருந்தமையே கூறப்பட்டிருக்கிறது. அவற்றை விட்டொழிந்தமை எங்கும் கூறப்படவில்லை. அங்கு பொன்னொளி படைத்த கந்தன் தேவசேனையோடு கூடி வில்லையும் வேலையுந்தாங்கித் தவம் புரிவதற்காகச் சென்ற வளவில் என்றுள்ளது. இதற்கு மேற்பகுதியில் எங்கும் கந்தன் ஆயுதங்களை விட்டிட்டா னென்பது புராணத்தினால் அறிவிக்கப்படவில்லை.

இப்பெருமானோவெனின், ஆயுதந்தாங்கத் தகுந்த வகையில் மேல்நோக்கிய இரண்டு கைகளோடும், கீழ்நோக் கியதாய், வரமளிக்க ஊக்கங்கொண்டு, தன் திருவடித்தா மரை யிணையை எல்லோரும் அடையத்தக்க பயனாகவும் அதனைப்பெறுவிக்கும் நெறியாகவும் காட்டுகின்ற வலக் கையோடும், தொங்கவிட்டு இடுப்பில் வைக்கப்பட்டு, தன் னைத் தஞ்சமாகப் பற்றியவர்க்குப் பிறவிக் கடல் இடுப் பளவாக வற்றிக்கொடுக்கு மென்பதைக் குறிப்பிடுகின்ற இடக்கையோடும் கூடியவனாய் விளங்குகின்றான். இப்ப டிப்பட்ட அவயங்களின் அமைப்பானது சங்கு சக்கரம்

தாங்குமவனாய்ப் பிறவிக் கடலைக் கடந்து வீடு பேற்றினை அடைய விரும்புமவர்களால் தியானம் செய்யத் தக்க தூய திருவடித்தாமரை யிணையை உடையவனாய் உலக மக்கள் அனைவராலும் ஆராதிக்கத் தக்க ஒப்பனையழகை யுடையவனுமாகிய பகவான் நாரயணனொருவனுக்கே பொருந்துவதாம். தன்பாதகம் போக்கிக் கொள்வதற்காகத் தவமியற்றுவதிலேயே கருத்தூன்றப் பெற்றுப் பூஜை செய்யும் வேஷமொன்றுக்கே உரிய கந்தனுக்கு இவ்வுறுப்பமைப்பு எவ்வாற்றானும் பொருந்த வழியில்லை.

அதிகமாகக் கூற அவசியமேயில்லை. இப்பெருமானுடைய வலத்திருமார்பில் காணப்படுகின்ற - திருமால் ஒருவருக்கேயுரிய அடையாளமாகிய திருமகள் திருமறு என்னுமவற்றையே கொண்டு இப்பெருமான் ஸ்ரீமஹாவிஷ்ணுவென்று அறுதியிடுவது அறிவு குறைந்தவனுக்கும் எளிதாயிருக்கும் .

புராணங்களிலும் ஸ்ரீநிவாஸனது உருவத்தைத் தெரிவிக்கும் கெட்டங்களில், ஸ்ரீநிவாஸனுக்கு முற்கூறியபடியே காணப்படுகின்ற அவயவங்களின் அமைப்பு முதலியவை மிகவும் விளக்கமாகப் புலப்படுகின்றன.

வராக புராணம் முற்பகுதி 47 எண்ணிட்ட பதினைந்தாம் அத்தியாத்தில் - பலவகைத் தோள் வளைகள் அணியப்பெற்றுத் திரண்டு நீண்ட திருத்தோள்கள் நான்குடையவனும் ஜ்வாலையுடன் கூடி ஆயிரம் அரங்கள் (ஆர்) கொண்ட சக்கராயுதத்தைத் தாங்கியவனும் சரற்காலச் சந்திரன் போன்ற கங்கையேந்தியவனும் ஓயாமல் வரமளிப்பதில் உற்சாகம் கொண்ட வலத்திருக்கைத் தாமரையுடையவனும் இடையில் அழகாக வைத்த இடத் திருக்கைக்கமலமுடையவனும் உயர்ந்தவனும் மங்களந்தருமவனுமாகிய ஸ்ரீநிவாஸனைப் பிரமன் முதலியோர் கண்டனர் என்று பேசப்பட்டுள்ளது. இதில் - 'திருத்தோள்கள் நான்குடையவன்' என்று முன்னே சொல்லப்பட்ட தோள்

காட்டுவதற்காக 'ஜவாலையுடன்கூடி' என்று தொடங்கும் பிற்பகுதி எழுந்தது.

பாத்ம புராணம் 33 எண் குறித்த பத்தாம் அத்தியாயத்தில் நான்குத் திருக்கைகள் கொண்டவர், நான்கு திருக்கைகளில் சங்கு சக்கரம் வரம் தாழ்தல் இவற்றைக் கொண்டவர். திருமார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் திருமறுவும் கௌத்துபமணியும் தரித்தவர். வைஜயந்தி என்ற வனமாலையினால் விளக்கம் பெற்றவர் என்று சொல்லப்பட்டது. இங்கு, ஸ்ரீநிவாஸனுடைய உருவைத்தெரிவிக்கின்ற மற்ற புராணப்பகுதிகளோடு முரண்படாமைக்காக, 'வரம்' என்றதனால் வரந்தருவதைக் குறிக்கும் வலக்கையமைப்பும், 'தாழ்தல்' என்றதனால் தாழ்த்தி இடையில் வைத்த இடக்கையமைப்பும் கருதப்பட்டதாகக் கொள்க.

காருட புராணம் அறுபத்து மூன்றும் அத்தியாயத்தில் - பெரும் பாக்கியவதியாகிய அருந்ததி, திருமகளணைந்த திருமார்பனும் பாபந்தீர்ப்பவனுமாகிய திருவேங்கடநாதனை மகிழ்ச்சியுடன் கண்டு வணங்கினாள் - என்றுள்ள வசனத்தினாலும், மேலுள்ள அருந்ததியின் துதியில் உலகிற்கு மங்களந்தரும் திருமகள் எவனுடைய திருமார்பில் எப்போதும் விளங்குகிறாளோ, எவனுடைய திருவடியை விளக்கிய தீர்த்தத்தைப் புரமெரித்த சிவபெருமான் சிரத்தில் எப்போதும் தரிக்கிறாரோ, திருவேங்கடமலையையே எப்போதும் இருப்பிடமாகக்கொண்டவரும் தேவர் தலைவருமாகிய அத்தகைய உம்மையல்லால்; இவ்வுலகில் இம்மை மறுமைப் பயன்களை அளிக்கவல்ல தெய்வம் மற்றொன்று காணப்படவில்லை என்றுள்ள வசனத்தினாலும், திருவேங்கடவனைத் தன் கண்ணெதிரே கண்டு தொழும் அருந்ததியினால் அப்பெருமான் மலர்மகளணைந்த மார்பையுடைய வேஷத்தோடு காணப்பட்டானென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

ப்ரஹ்மாண்டபுராணம் ஒன்பதாம் அத்தியாயத்தில் சோழமன்னவன் மைந்தனான சக்ரவர்த்தி என்னும் அரசன் ஸ்ரீநிவாஸனைக் கண்ணெதிரே கண்டதாகக் கூறும் கெட்டத்தில் - நீலமேகம் போன்றவனும் திருமகளுக்கு உறைவிடமானவனும் சரணமடைந்தவரைக் காப்பவனும் மார்பில் ஸ்ரீவத்ஸமென்ற மச்சமுடையவனும் கமலம் போன்று நீண்ட கண்கள் கொண்டவனும் (மேலுள்ள) இருகரங்களினால் சங்கு சக்கரமேந்தியவனும் (கீழுள்ள) வலது கையினால் வரங்கொடுப்ப(தைக் குறிப்ப)வனும் இடது கையினால் இடையைத் தொடுமவனும் பொன்னாடையுடுத்தவனும் கிரீட நுனியில் பதித்த மணிகளால் சோபையுடையவனும் சாந்தமான (அமைதி நிலவிய) உருவமுடையவனும் அழிவில்லாதவனும் தேவர்களால் வணங்கத் தக்கவனும் வாசுதேவனுமாகிய ஸ்ரீநிவாஸனை அவ்வரசன் கண்டான் - என்றுள்ள செய்தியினால், சக்ரவர்த்தி திருமார்பின் அடையாளங்களான லக்ஷ்மி ஸ்ரீவத்ஸங்களையும் சங்கு சக்கரமணிதல் வரந்தருதல் இடையில் வைத்தலாகிய நான்கு கைகளின் லக்ஷணங்களையும் பகவானிடம் கண்டானென்றும், அப்புராணத்திலேயே வசிஷ்ட நாரத ஸம்வாதமென்கிற தனிப்பட்ட ஸ்ரீவேங்கடேச ஸஹஸ்ர நாமாத்யாயத்திலும் தியானம் செய்யத்தக்கதான ஸ்ரீநிவாஸனது உருவத்தை வருணிக்குமிடத்தில் - யாருடைய மேல் நோக்கிய இரண்டு கைகள் தேவர்களின் பகைவரை அழிக்கும் சங்கு சக்கரங்களைத் தரிக்கின்றனவோ, யாருடைய கீழுள்ள வலதுகை தன் திருவடிகளை ஸேவிக்கத்தக்கனவாகக் குறிக்கின்றதோ, துடையைத் தொட்ட இடது கை பக்தர்களுக்குப் பிறவிக் கடல் துடையளவேயென்று அறிவிக்கின்றதோ, யாருடைய திருமார்பில் ஸ்ரீவத்ஸமென்ற மச்சமும் ஸ்ரீதேவியும் விளங்குகின்றனரோ அப்படிப்பட்ட திருவேங்கடமுடையானைத் தியானம் செய்கிறேன் என்றுள்ள செய்தியினால், இங்குக் கூறப்பட்ட திருமாலுக்கே உரிய எல்லா லக்ஷணங்களுடன் கூடிய வேஷத்தோடு தான் ஸ்ரீநிவாஸன் தியானம் செய்யத் தக்கவனென்றும் விளக்கமாகக் கூறப்பட்டமை காண்க.

ஸ்ரீநிவாஸ பகவான் எப்படிப்பட்ட உருவத்துடன் சக்கரவர்த்தியினால் காணப்பட்டானோ அதே உருவத்துடன் அங்கு எல்லாராலும் ஸேவிக்கத் தக்கவனாயிருத்தல் வேண்டுமென்று அச்சக்ரவர்த்தி வேண்ட அப்படியே பகவான் இசைந்ததாக முன்பு கூறிய ஒன்பதாம் அத்தியாயத்திலேயே சொல்லப்பட்டது. யோகியர் தலைவரும் காணமுடியாத எந்த (உனது) அழகிய உருவம் என்னால் காணப்பட்டதோ, அப்படிப்பட்ட இதே உருவம் எல்லாராலும் காணத்தக்கதாக ஆக வேண்டும். எல்லா மனிதருடையவும் நன்மைக்காக நீர் எப்பொழுதும் இங்கு வாசம் செய்யக்கடவீர் என்று மன்னன் வேண்டியவளவில், பகவான் அங்ஙனமே ஆகக்கடவதென்று கூறி மேலும் அரசனைக் குறித்து, நீ என் பக்தன், உனக்கு நிகரானவன் வேறொருவன் இல்லை என்று கூறினான் - என்றுள்ளமை காண்க.

மார்க்கண்டேய புராணம் இரண்டாம் அத்தியாயத்தில் விமானத்துடன் கூடிய ஸ்ரீநிவாஸன் தோன்றியதைக் கூறும் கட்டத்தில் - அவ்விமானத்தின் நடுவில் இருப்பவனும் மிக அழகிய திருமேனி படைத்தவனும் மிகச் சிறந்தவனும் உயர்த்திய கைகளினால் சங்கு சக்கரம் தரிப்பவனும் வலது கையினால் தன் திருவடித் தாமரையிணையை ஸேவிக்கத்தக்கதாக எல்லோருக்கும் காட்டுமவனும் இடது துடையில் வைக்கப்பட்ட இடது கையினால் தன் திருவடியினைத் தஞ்சம் பற்றிய மக்களுக்குப் பிறவிக்கடல் துடையளவென்று காட்டுமவனும் பக்தர்கள் கோரிய பயன் எல்லாவற்றையும் கொடுக்கக் குதூகலங்கொண்ட ஆயுதங்களையுடையவனும் திருமகளுறையுந் திருமார்புடையவனும் சிறிதே சிரித்த திருமுகத்தவனும் ஆபரணங்கள் நிறையப்பெற்றவனுமாகிய ஸ்ரீவேங்கடேசனை எல்லோரும் கண்டனர் - என்றுள்ளதனால் முற்கூறியபடியே அவயவங்களின் அமைப்பு முறை முதலியவற்றோடு கூடிய ஸ்ரீநிவாஸனைப் பிரமன் முதலான எல்லோரும் சேவித்தனரென்று சொல்லப்பட்டது.

அதிலேயே நான்காம் அத்தியாயத்திலும் கந்தனுக்காக ஸ்ரீநிவாஸன் தோன்றியதைக் கூறுமிடத்தில் - இரு கைகளினாலும் சங்கு சக்கரம் தாங்குமவனும் துடைக்கருகில் வைக்கப்பட்டுப் பயனைக் காட்டும் இடதுகையுடையவனும் தாமரை போன்ற வலது கையினால் "இவை உங்களால் அடையத்தக்கன" என்று தன்திருவடிகளைக் காட்டுமவனுமாகிய ஸ்ரீநிவாஸனைக் கந்தன் கண்டு வணங்கித் துதித்தான் - என்று அத்தகையதோர் அவயவங்களின் அமைப்பு பகவானால் கந்தனுக்குக் காட்டப்பட்டது என்றும்,

பவிஷ்யோத்தரபுராணம் பதின்மூன்றும் அத்தியாயத்தின் முடிவில் - கமலத்தைக் கோயிலாகக் கொண்டவளும் உயர்ந்த பத்மாஸனத்தில் இருப்பவளும் உயர்ந்த திருக்கண்களையுடையவளுமான பத்மாவதியைத் திருமார்பில் வைத்துக்கொண்டு சங்கு சக்கரங்கள் இல்லாதவனாய் இடையில் வைத்த சிறந்த கையையுடையவனாய் வலது கையினால் தன் திருவடித்தாமரையை எப்போதும் ஆராதிக்கத்தக்கதாகவும் உயர்ந்த உபாயமாகவும் காட்டிக் கொண்டும் இடையில் வைத்த இடது கையினால் தன் பாதகமலங்களை யடைந்த மனிதர்களுக்குப் பிறவிக்கடல் இடுப்புவரையில் வற்றுமென்று காட்டிக்கொண்டும் திருமகள் மணவாளனான வேங்கடேச பகவான் இப்போதும் விளங்குகிறான் - என்றுள்ள இதனால் பகவானுக்கு இப்போதுள்ள உருவம் இப்படிப்பட்டதென்றும் தெளிவுபடத் தெரிவிக்கப்பட்டது.

வாமந புராணம் 40 எண்ணிட்ட இருபத்தொன்றுவது அத்தியாயத்தில் - எந்த ஸ்வாமி புஷ்கரிணியின் தென் கரையில் எந்த ஸ்ரீநிவாஸன் தோன்றிப் பிரமதேவன் முதலியோரின் கண்ணுக்கு இலக்கானானோ, அவ்விடத்திலேயே அந்த பகவான் வைகுந்தத்திலிருந்து வந்த தனது விமானம் மறைந்து போக, தான் மட்டும் தென்பட்டுக் கொண்டே மனிதர் நிருமித்த விமானத்தில் எழுந்தரு

ளியிருக்கப்போகிறுனென்று அகத்தியர் முனிவர்தலைவர்க ளிடம் கூறியதனாலும், 'தேவரீர் எல்லோர் கண்ணுக்கும் இலக்காகி இங்கேயே இருக்கவேண்டும்' என்று அகத்தி யர் முதலியோர் வேண்ட, பகவானும் 'இங்கு எப்போதும் இருக்கிறேன்' என்று இசைந்ததாக அங்கங்குப் புராணங் களில் கூறக் காண்கையாலும் இப்பெருமான் ஸ்ரீநிவா ஸனேயென்று விளக்கமாக அறியப்படுவதனால் இங்குக் கந்தன் வசிக்கிறுனென்று கற்பனை செய்து ஸ்ரீநிவா ஸனை இல்லைசெய்வது முடியாத காரியமாகும்.

முற்கூறிய வாமன புராணுத்யாயத்தில் எல்லாம்வல்ல திருமால் உலகத்தைப் பாவநமாக்கும் எந்த திவ்ய விமா னத்தைக் காட்டினாரோ அந்த பூஜிக்கப்பட்ட விமானம் இப்பெரிய திருமலையிலேயே மறைந்துள்ளது. உண் மையில் அதை யாரும் காணமுடியாது. ஒவ்வொரு யுகத்திலும் எவனொருவன் திருமாலைத் தவம் புரிந்து தியானம் செய்கிறுனோ அவன் அப்பெருமானருளால் அவ் விமானத்தைக் காண்கிறுனென்பது நிச்சயம். இனி வர விருக்கும் கலியுகம் வந்தால், புண்ணியமானதும் உயர்ந் ததும் எல்லாப் பாபங்களையும் போக்குவதும் காண்பவர் அனைவர்க்கும் களிப்பூட்டுவதும் மங்களந்தருவதும் தேவ ருஷிகள் தேவர் அசுரர் கந்தருவர் சித்தர் இவர்களால் ஸேவிக்கப்பெற்றதும் எப்போதும் திருமால் எழுந்தருளியி ருக்கப்பெற்றதுமான விமானம் ஆச்சரியமடையும்படியாக நல்ல லக்ஷணங்களுடன் கூடியதாகி விஷ்ணு பக்தர்களான மனிதர்களாலேயே நிருமிக்கப்படப் போகிறது. முனிவர் பெருமக்களே, இதில் ஐயமேதும் இல்லை. குறைவற்ற ஆற்றல் படைத்தவரும் நற்பண்புகள் நிரம்பியவரும் எங்கும் நிறைந்தவரும் உலகத்திற்குத் தலைவரும் முன்பு காணப் பட்டவருமாகிய திருமால் நான்கு தோள்கள் பொருந்திய உருவமுடையவராய் சங்கு சக்கரம் தாங்கியவராய்த் திருமகளைத் திருமார்பில் கொண்டவராய் அவ்விமானத்தி லேயே எழுந்தருளியிருக்கப்போகிறுர். அந்தணர் தலைவர் களே, பாவத்திரளைப் போக்குவதும் மூவுலகுக்கும் திலகம்

போன்றதுமான அவ்விமானம் இவ்வுலகில் பிரசித்தமாக இருக்கப் போகிறது என்று பூசைக்குரிய அகத்தியர் முனி வர்தலைவர்களிடம் சொன்னார் என்று கூறப்பட்டது. இந்த விஷயம் இன்னும் பல புராணங்களில் ஆங்காங்கு உள்ளமை காணத்தக்கது.

கந்தனோவென்றால் குமார தாரா தீர்த்தத்திலேயே நித் தியவாசம் செய்து கொண்டும் அடிக்கடி வந்து ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் விளங்குகின்ற ஸ்ரீநிவாஸ பகவானை ஆராதித்துக்கொண்டும் மலையில் இருக்கிறனென்று முற் காட்டிய வாமன புராணத்திலேயே 24 எண் குறித்த ஐந்தாம் அத்தியாயத்தில் பார்வதியிடம் சிவபெருமான் கூறியதாக உள்ளதனால், ஸ்வாமி புஷ்கரிணியின் தென் கரையில் திகழ்கின்ற தேவன் கந்தனல்லன், அவனால் ஆராதிக்கப்படுமவனான ஸ்ரீனிவாஸ பகவானே என்று தெளிவாகவே புலப்படுகிறது.

அவ்வத்தியாயத்தில் (பார்வதியைக் குறித்துச் சிவ பெருமான் சொல்லியதாக) - குற்றமற்றவளே, ஸ்ரீதேவி பூமிதேவிகளுடன் கூடிய திருமால் மலைச்சிகரத்தில் இன் பமாக உலாவிக்கொண்டே தானும் தன் கோவிலும் யார் கண்களுக்கும் தோன்றுதபடி வ்ருஷாசலத்தில் (திருவேங்கட மலையில்) இருக்கிறர். பலவகை மரங்கள் கொடிகள் நிறையப்பெற்று எல்லா ருதுக்களின் பயனோடு கூடி யதான ஸ்வாமி புஷ்கரிணியைச் சேர்ந்த இடத்தில் கோடி மன்மதர்களோடொத்த திருமேனியழகு படைத்தவ ரும் பதினாறு வயதுள்ள இளையவருமாகிய அப்பெரு மான் மலர்மகளோடும் மண்மகளோடும் கூடிக் களித்துக் கொண்டிருக்கிறர். மயில் வாகனனான கந்தன் சித்திரை மாதத்தில் நல்ல திதியில் அப்பெருமாளை ஆராதித்துக் கொண்டும், தேவ கந்தருவ கிந்நரர்களால் செய்யப்பட்ட நாட்டியங்களாலும் தேவலோகப் பெண்களின் சங்கீத வாத் திய முழக்கங்களாலும் திருமகள் நாதனை உகப்பித்துக் கொண்டும் மலையின் வடக்குக் கணவாயிலுள்ள -

குமாரதாரை என்று பிரசித்தமான மங்களமான நீர் வீழ்ச்சியின் கரையில் வசிக்கிறான். பொறுக்கமுடியாததும் கோரமான உருவம் படைத்ததுமான அவனைப் பிடித்த பிரமஹத்தி தோஷம் திருவேங்கடமலையின் சிகரத்தைக் கண்ட மாத்திரத்தால் மலைக்கு வெளியிலேயே நின்று விட்டது. தேவியே, ஆறுமுகன் சேஷகிரியில் திருமாலின் நித்ய சேவையை விரும்பியவனாய்த் திரும்பி வருதலைப் பற்றி விரும்பவேயில்லை என்று சொல்லப்பட்டுள்ளது.

இப்படிப் பெருமானைப் பூஜை செய்பவனாகத் திருமலையில் வாழவிரும்பிய இக்கந்தன், பிறரால் பூஜிக்கப்படும் நிலையில் இங்கு வசிக்கிறானென்று கூறுதல் பொருந்தாது, மேலும் அப்படி இப்புராணங்களில் எங்கும் கூறப்படவில்லை. அதற்கு நேர் முரணாக வைகுந்தத்திலிருந்து வந்த பகவானுடைய இவ்விளையாட்டு மலையில் பஞ்ச பூதங்களின் சேர்க்கையினாலுண்டான உடம்பு படைத்தவர்களுக்கு ஆராதிக்கப்படும் நிலையில் வசித்தலென்பது மறுக்கப்பட்டதாகவே அறியப்படுகின்றது. கந்தனைவிட உயர்ந்தவனான இவனுடைய தகப்பனான சிவபெருமான் இம்மலையிலேயே பகவானோடு கூடி வசிக்க எண்ணங்கொள்ள, பகவான் அதை ஒப்புக்கொள்ளாமல் இதன் தாழ்வரையில் வாசத்தை ஒப்புக்கொண்டமையினால் இது அறியப்படும்.

வராக புராணம் முதற்பகுதி 50 எண்ணிட்ட பதினெட்டாம் அத்தியாயத்தில் கபடமற்ற சிரிப்பையுடைய கமலைகேள்வன் சிவனைக் குறித்து, சங்கரனே, நீ இங்கு வந்த காரியத்தை விரைவில் சொல்லென்று கேட்க, ஸ்வாமீ வேங்கடேசப் பெருமானே, விருஷகிரிபதியே, நீர் இருக்குமிடத்திலேயே நானும் இருக்கவேண்டும் என்று சிவன் சொல்ல, நீல முகில் போன்ற திருமேனியொளியுள்ள திருவேங்கடமுடையான் - ஆற்றல்படைத்த மஹாதேவனான பார்வதிபதியே, இவ்வேங்கடமலையில் கற்பம் முடியும் வரையில் வசிக்கப்போகிறேன். ஈச்வரனே,

இம்மலைத்தாழ்வரையில் தென்கிழக்கு மூலையில் நீயும் வசிக்கக்கடவாய் என்று கூறினான் - என்பதாகக் கூறப் பட்டுள்ளது.

இவ்வாறு இவ்வேங்கட மலையில் மக்கள் வழிபடத் தக்க தன்மையில் இருத்தல் மகாதேவனுக்கே மறுக்கப் பட்டிருக்க, கந்தன் பிறரால் பூஜிக்கப்படுமவனாய் இங்கு வசிப்பதென்பது பொருந்தாதென்பதை நாம் தனிப்படச் சொல்லவும் வேண்டுமா? ஆக, ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் ஸ்ரீநிவாஸப்பெருமான் தேவர் முதலியோர் கண்ணுக்கு எவ்வாறு தோன்றினானோ அவ்வாறே அங்கு ஸேவை தரவேணுமென்று அகத்தியர் முதலியோர் வேண் டியபடி அவ்வுருவத்துடனேயே எப்போதும் இருக்கிறான். அவனே அர்ச்சை (பிம்ப) வடிவில் இன்றும் அனை வரும் காணும்படி விளங்குகின்றானாகையால், கந்தனே இவனென்று கூறுவதற்குச் சிறிதும் இடமில்லை.

இவ்விதமாகவே ப்ரஹ்ம புராமம் மூன்றும் அத்தியா யத்தில் - ஸ்ரீநிவாஸபகவானால் ஆணையிடப்பெற்ற சங்க னென்னும் அரசன் தான் கண்டபடியே ஸ்ரீநிவாஸ னுக்கு விமானம் அர்ச்சைவடிவம் முதலியவற்றை நிரு மித்தானென்றும் கூறப்படுகிறது. அங்கு - ஆண்களில் உயர்ந்த மஹாபாக்யசாலியான சங்கராஜனே, என் விமா னத்தையும் உருவத்தையும் நீ கண்டபடியே நிருமாணம் செய்யக்கடவாய். அதனால் உனக்கு நற்கதி உண்டா குமென்று கூறி எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே பகவான் மறைந்துவிட்டார். பின்பு சங்கராஜ னும் அவர் கூறியவாறே சிறந்த தூய விமானத்தையும் பகவானுடைய பவித்திரமான பிம்பவடிவத்தையும் உண் டாக்கி மனிதவுலகில் பிரசித்தமாக்கிப் பிறகு விஷ்ணுவின் அழிவற்ற மங்களகரமுமான பரம பதத்தை அடைந்தான் என்றுள்ளமை காண்க.

இந்த ஸ்ரீனிவாஸப் பெருமானுக்கு அங்கங்குக் கூறப் பட்டுள்ள சங்கு சக்கரம் வரந்தருங்குறிப்பு இடுப்பில்

வைத்தல் ஆகிய நால்வகை அடையாளங்களைத் தாங்கும் நான்கு கைகளுடைமையும் திருமகளாலும் திருமறுவாலும் அடையாளமிடப்பெற்ற திருமார்புடையமையும், இவர் வேறு தெய்வமன்று என்பதைத் திடப்படுத்துமவையாய் மறுக்க முடியாத பிரமாணங்களாகும்.

இதனாலல்லவோ பரமைகாந்திகளில் (திருமாலே பரம்பொருள், வீடு பேறென்றே நாம் அவனிடம் பெரும் பயனென்றிருக்குமவர்களில்) முதல்வராய் மிக மிக முன்னோர்களான நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் தொடக்கமான ஆழ்வார்களால், தமிழ் வேதங்களும், அவற்றின் அங்கங்களும் உபாங்கங்களுமாகிய (துணை நூல்களுமாகிய) தமது திவ்வியப்பிரபந்தங்களில் இவ்வேங்கடவன் திருமாலென்றும் இத்தலம் திருமால்திருப்பதியென்றும் கூறித் துதியும் தியானமும் செய்யப்படுகின்றமை காணப்படுகிறது.

பற்றற்றவரில் முதல்வரான இவ்வாழ்வார்கள் இப்பெருமான் வேறு தேவதையாயிருந்த போதிலும், மிகவும் சிரமப்பட்டு அவனிடம் இல்லாத திருமாலின் தன்மையை ஏறிட்டாவது உபாஸநம் செய்வதாகக் கபடவேஷம் போடமாட்டார்கள். வெளிப் பொருள்களில் தம் மனமொழி மெய்களைச் செலுத்தாமல் மெய்யான வீடு பேற்றிலேயே அவற்றைச் செலுத்துமவர்களான இவர்களுக்கு பணம், புகழ் முதலியவற்றில் ஆசை காரணமான இத்தகைய கபடமான முயற்சி எவ்வாற்றாலும் ஏலாத தொன்றாகும்.

இவர்கள் செய்த துதியும் தியானமும் வராகப்பெருமானொருவரைப் பற்றியே எழுந்தனவென்று நிலைநாட்டவும் முடியாது. மிக நீண்டு பெரிய கிரீடந்தரித்துள்ளமையும் சங்கு சக்கரந்தாங்கியுள்ளமையும் திருமகள் அணைந்த திருமார்புடைமையும் நான்கு கைகளின் அமைப்பு முதலியனவுமாகிய வராகப்பெருமானுக்கில்லாமல் ஸ்ரீனிவாஸனுக்கேயுள்ள அடையாளங்களை இவர்கள் அருளிச்செய்துள்ளமை கொண்டு இது அறியலாகும்.

த்ராவிட ப்ரஹ்ம ஸம்ஹிதையில் (தமிழ் மொழியில் அமைந்து பிரம்மமென்னும் திருமாலைக் கூறும் இரகசிய நூலான திருவாய் மொழியில்) நம்மாழ்வாரால் திருவேங்கடமலையைப் பற்றிய ஆறும் பத்தில் பத்தாம் பதிகம் மூன்றும் பத்தில் மூன்றும் பதிகம் என்னுமிரண்டனுள் பிந்திய பதிகத்தில் ஸ்ரீநிவாஸ பகவானுக்கே உரிய அடையாளங்கள் நன்ருகக் குறிக்கப்படுகின்றன.

அதில் இரண்டாம் பாட்டில், ஜ்வலிக்கின்ற சக்கராயுதத்தை மேல் வலக்கையில் தரித்துள்ளமையும், சக்கரமென்ற சொல்லால் விடாதவிலக்கணை என்னும் சொல்லாற்றல் வாயிலாகக் குறிக்கப்பட்ட மற்ற ஆயுதங்களுள்ளமையும், பத்தாம் பாட்டில் திருமகள் எப்போதும் வீற்றிருக்கும் திருமார்புடைமையும், கடைசிப் (பதினொன்றும்) பாட்டில் தன்னுடைய கமலம் போன்ற இரண்டு திருவடிகளைப் பயனாகவும் அதைப் பெறுவிக்கும் நெறியாகவும் காட்டும் கீழ் வலக்கையின் அமைப்பும் , தன்திருவடித் தாமரையைத் தஞ்சமடைந்தவர்க்குப் பிறவிக் கடல் முழந்தாளளவாகவற்றிக்கொடுத்துக் கடக்க எளிதாயிருக்குமென்பதைக் காட்டிக் கொடுப்பதன் மூலமாக வீடுபேற்றினைத் தெரிவிக்கும் கீழிடக்கையின் அமைப்பும் ஸ்ரீநிவாஸ பகவானுக்கு உள்ளதாக ஜ்ஞாந பக்திகள் நிறைந்த நம்மாழ்வார் வெளியிட்டருளினார். (அது வருமாறு)

இரண்டாம் பாட்டில் (சீறு எரியும் திருநேமி வலவா) கோபித்துக் கொண்டே கொழுந்து விட்டெரிகின்ற திருநேமியை (சக்கரத்தை)யுடைய வலப்பக்கத்தை உடையவனே என்றும் , பத்தாம் பாட்டில் (அகல கில்லேன் இறையுமென்று அலர்மேல்மங்கை உறை மார்பா) 'நான் அகன்றிருக்க வல்லேனல்லேன் கணப்பொழுதும்' என்று சொல்லிக்கொண்டு மலர்மேல் வைகும் மங்கையான திருமகள் எப்போதும் பிரியாதிருக்கும் திருமார்புடையவனே என்றும், கடைசிப்பாட்டில் (அடிக்கீழ் அமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின் என்றென்று அருள் கொடுக்கும் படிக்கேழில்

லாப் பெருமானை) என்திருவடிகளின் கீழே தக்கபடி (= வேறொரு பயனைக் கருதாமல் திருவடிகளையே பயனாகக் கருதி) சரணம் புகுந்து அடியவர்களே, வாழ்ச்சியென்ற வளர்ச்சியைப் பெறுங்கள் என்றிவ்வாறு அருளைத் தந்திடுமவனும் தனக்குவமையில்லாத தன்மையுடையவனுமான தலைவனை என்றும் கூறப்படுகின்றன. இங்குக் கடைசிப் பாசுரத்தில் திருவடிகளின் கீழ்ப்படிதலையும் அதனால் வாழ்ச்சி பெறுதலையும் காட்டியதனாலும், அதன் பிறகு பெருமானுக்குள்ளதான பிறருக்கில்லாத நிகரில்லாத தன்மையைக் கூறியதனாலும் வலக்கை இடக்கைகளின் முத்திரைகள் (அமைப்புக்கள்) இரண்டும் கூறப்பட்டமை காணத் தக்கது.

இவ்விதமாக மற்ற விஷ்ணு லக்ஷணங்களும் அந்தந்த ஆழ்வார்கள் அருளிச்செய்தவை அங்கங்குக் காணத்தக்கன. இங்கு இடைக்கும் துடைக்கும் நடுவிடத்தில் வைத்த பெருமானுடைய இடது கையின் முத்திரை (குறி), சில புராணங்களில் பிறவிக்கடல் முழந்தாளளவென்று காட்டுவதாக வருணித்துள்ளமை எப்படிப்பொருந்தும் என்றால், இடையின்கீழ் வைத்த கை தூரத்திலிருந்து கொண்டும், திக்கைக் காட்டும் வகையில் முழந்தாளைக் காட்டுதல் பொருந்துமென்று கருதுக.

ஆகையால் ஆழ்வார்கள் ஸ்ரீநிவாஸனைத் துதித்ததும் தியானம் செய்ததும், ஸ்ரீநிவாஸன் திருமாலென்பதற்கு மிகவும் வலிவு பெற்ற அத்தாட்சியேயாகும்.

இந்த ஸ்ரீநிவாஸப்பெருமான் பொறுத்தற்கரிய பகைவரை அழிக்க விரும்பிய தன் பரம பக்தன் தொண்டைமான் சக்கரவர்த்திக்குத் தன்னுடைய சங்கு சக்கரம் முதலிய ஆயுதங்களை அளித்துதவினமையைக் குறிப்பிட வேண்டுமென்று மனவுறுதி கொண்டே தன்கைகளில் அவ்வாயுதங்களில்லாமல் இருக்கிறான் என்பது புராண வசனங்களில் விளக்கமாகக் காண்கிறது.

ப்ராஹ்ம புராணம் ஏழா மத்தியாயத்தில் - பக்தர்களிடம் தனக்குள்ள பேரன்பைக் காட்ட வேண்டுமென்று கருதியே எந்த ஸ்ரீநிவாஸன் தன் கைகளிலிருந்த சுபமான சங்கு சக்கரங்களைச் சக்ரவர்த்தி என்று பிரசித்தி பெற்ற மன்னர்பிரானுக்கு அளித்துவிட்டானோ அக்காரணத்தினால் பரமாத்மாவான அப்பெருமானது சிலை வடிவான அர்ச்சைத் திருமேனியிலுள்ள திருக்கைகள் சங்கு சக்கரங்களின்றிக் காட்சியளிக்கின்றன என்று- சங்கு சக்கரங்களில்லாமையின் காரணத்தைக் கூறத் தொடங்கிப் பிறகு அவ்வத்தியாய முடிவில்-ஸ்ரீநிவாஸனுடைய ஸந்நிதியில் தொண்டை மன்னவன் இருக்கும்போது பகைவர்கள் பெரும்படையுடன் கூடி அவனது நகரினை முற்றுகையிட்டனர். கடல்போன்ற கொடும்பகைவரின் படை எதிர்த்து வருவதைச் செவியுற்ற அம்மன்னவன் அஞ்சாமல் போர்புரியச் சென்று மறுபடியும் பகைவரால் தோற்கடிக்கப்பட்டான். பின்பு மனக்கலக்கமுற்ற அவ்வரசன் குகை வழியாகச் சென்று தேவர் தலைவனான ஸ்ரீநிவாஸனுடைய திருவடிகளைப் பிடித்துக் கொண்டு என்னைக் காப்பாற்ற வேண்டுமென்று கதறியழுது அப்பிரானைச் சரணடைந்தான். அர்ச்சை வடிவமுள்ள ஸ்ரீநிவாஸப் பெருமான் - குழந்தாய், அஞ்சாதே, உனக்கு நன்மையுண்டாகும். சங்கு சக்கரங்களை உனக்கு அளிக்கிறேன். அவற்றோடு கூடி நீ உன் நகருக்குச் செல். பகைவரை அவையே அழிக்கக்கடவன என்று கூறி அவ்வாயுதங்களை அளித்தான். மன்னனும் பகவான் கூறியபடி ஆயுதங்களுடன் தனது நகருக்குச் சென்றவளவில், அவை பகைவர்களை அழித்து விட்டன. அரசாட்சி பகையற்றதாயிற்று. மன்னனுடன் அவ்வாயுதங்கள் திரும்பி பகவானிடம் வந்து சேர்ந்தன. பலவகையான துதிகளால் துதித்து வணங்கிய அம்மன்னவனை ஸ்ரீநிவாஸன் தன்னிடம் வரம்வேண்டிக்கொள்ளும்படிக் கூறினான். தேவர் தலைவனே எம்பெருமானே, அடியேனுக்கு ஆயுதங்களை அளித்தது உலகில் பிரசித்தமாவதற்காகத் தேவரீர் சிலை வடிவான இவ்வர்ச்சைத்

திருமேனியில் சங்கு சக்கரங்களை ஏந்தாமலிருக்க வேண்டுகிறேன்' என்று அரசன் வரம் வேண்ட, அதன்படியே பெருமான் மறுபடியும் அவற்றைக் கைகளில் ஏந்தவில்லை. அப்படைகளிரண்டும் சார்ங்கபாணியான அப்பிரான் பக்கத்திலேயே நம் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்திருக்கின்றன என்றிது முடிவாக, திருக்கைகளில் சங்கு சக்கரங்களில்லாமைக்குத் தக்க காரணம் விரித்துக் கூறப்பட்டது.

இங்கு, பக்தனிடம் காட்டிய தனது பெரு வள்ளல் தன்மைக்கு நினைவுச்சின்னமாக - எல்லார் கண்களுக்கும் புலப்படுமாறு திவ்யாயுதங்களைத் தரித்தல் கூடாதென்பது மட்டுமே சக்கரவர்த்தி வேண்டியபடியால் அங்ஙனம் அவற்றை ஏந்தாமலிருந்த போதிலும், தனக்கேயுரியதாய் எப்போதுமுள்ள திவ்யாயுதங்களின் சேர்த்தி எப்போதுமுண்டென்பது காட்டப்பட்டது.

இங்ஙனமே பிரம்மாண்ட புராணம் பதினோராம் மத்தியாயத்தில் - மதுசூதனனான பகவான், பேரறிவாளனே, உனக்குப் பின்பு வரப்போகும் ஸாயுஜ்யமோக்ஷத்தைக் (மோக்ஷமடைபவர்கள் விஷ்ணுவைப் போல் ஆவார்களென்பதைக்) குறிப்பிக்கின்ற சங்கு சக்கரம் கதை வில் வாள் இவற்றை உனக்குத் தருகிறேன். இவ்வைம்படைகளையும் தரித்துப் போர்க்களத்திற்குச் சென்று துஷ்டனான அசுரனை மந்திரிகளுடனும் உற்றுருறவினருடனும் கொல்லக்கடவாய் என்று கூறிப் பரிசுத்த பக்தனான சக்கரவர்த்திக்கு ஐம்படைகளையும் கொடுத்தான் என்று - சிம்மாதனென்னும் அசுரனை வதம் செய்தற்பொருட்டுச் சக்கரவர்த்திக்குப் பஞ்சாயுத மளித்ததைக் கூறிப் பின்பு அவ்வத்தியாய விறுதியில் பிறகு சிம்மாதனைக் கொன்ற ராஜகுமாரனான சக்கரவர்த்தி என்னும் அரசன் தான் பகைவனையழித்த கதையையெல்லாம் வேங்கடேச பகவானுக்கு விண்ணப்பம் செய்துவிட்டு அவ்வாயுதங்கள் ஐந்தினையும் வேங்கடேச ஹரியிடம் திரும்பவும் ஸமர்ப்

பித்தான். திருமகள் மணுளனான பெருமாள் அரசனையும் பஞ்சாயுதங்களையும் குறித்து, அரசனே, உன்னால் வெல்ல முடியாத போரில் நீ எப்போது வெற்றியை விரும்புகிருயோ அப்போது இந்த ஆயுதங்கள் உனக்குப் பெரிதளவில் உதவி புரியக்கடவன என்று மேகம் முழங்குவது போல் கம்பீரமான குரலுடன் பேசினான் - என்றிது முதலாக, சிம்மாதனென்னும் அசுரனது வதத்திற்குப் பிறகு சக்கரவர்த்தி திரும்பத் தந்த ஆயுதங்களை, அவ்வப்போது உதவி செய்வதற்காகச் சக்கரவர்த்தியிடமே இருக்குமாறு ஆணையிட்டு, தான் சிலநாட்கள் வரை பலருக்குப் புலப்படும்படி ஆயுதங்களைத் தரிக்கப்போவதில்லையென்றும், நினைத்தமாத்திரத்தில் அவை தன்னிடம் வந்து சேருமென்றும் ஒப்புக்கொண்டு, அதன்பின் சிலநாட்கள் கழித்துக் கலியுகத்தில் விமானம் முதலியவற்றைப் போல் ஆயுதங்களையும் பக்தர்கள் நிருமித்து ஸமர்ப்பித்தால் அவர்களின் உகப்புக்காக அவற்றை ஏற்றுக்கொள்வேனென்று சக்கரவர்த்தியினிடம் பகவானே அருளிச்செய்ததாகக் கூறியுள்ளதனால், இந்த ஸ்ரீநிவாஸ பகவான் இப்போது தனக்கேயுரிய திவ்யாதங்களின்றிக் காட்சியளிப்பதும் பொருந்துவதேயாகும்.

இப்படிப் புராணங்களில் எங்கும், கந்தன் தனக்குரிய ஆயுதங்களைவிட்டிருந்தற்குக் காரணமாவது, ஆயுதங்களில்லாத அவனை அர்ச்சை வடிவமாகப் பிரதிஷ்டை செய்துள்ளமையாவது கூறப்படிருக்கவில்லை ஆகையால் இப்பெருமான் - கந்தனாயிருக்கலாமோ என்று ஐயமுறுவதற்குத் தக்கவனல்லன்.

வாதம் செய்யும் சைவர்கள் - இப்பெருமான் ஸ்ரீவைஷ்ணவர்களால் பூசிக்கப்படும் இந்நிலையிலும் பழைய வழக்கத்தையொட்டி வேறு தேவதைக்கே உரிய வில்வத்தழைகளால் ஒரு மாதத்தில்அர்ச்சிக்கப்படுகின்றமை இன்னும் தொடர்ந்து காணப்படுகின்றது. இது இப்பெருமான் விஷ்ணுவன்று, வேறு தேவதையே என்று நிலைநாட்டத்தக்க

காரணம் (அநுமானவளவை) ஆகுமென்றும், விஷ்ணுவாக இருந்தால், அவருக்கேயுரியதான ஆயுதங்களில்லாமையும், வேறு தேவதைக்கேயுரிய ஜடை நாகாபரணமாகிய இவை இப்பெருமானிடம் உள்ளமையும் ஒருபோதும் பொருந்தா தென்றும் கருதுகின்றார்கள். அவர்களது கருத்து - நம் கண்களுக்குப் புலப்படும்படி ஆயுதங்களை ஏந்தாமைக்குப் புராணத்திலேயே காரணம் தெளிவாக அறிவிக்கப்பட்டி ருப்பதனால் ஏற்கத்தக்கதன்றென்று தள்ளுண்டது. பல நூற்றுக்கணக்கான இடங்களில் புராணங்களில் ஸ்ரீநிவா ஸன் ஸ்ரீவைகுண்ட நாதனான மஹாவிஷ்ணுவின் ஒரவ தாரமென்பது மிக விளக்கமாகக் கூறப்பட்டிருக்கும்போது இப்புராண வசனங்களாகிய சப்தப்பிரமாணத்தை (ஆகம ளவையை), அநுமானப்ரமாணம் (இவன் விஷ்ணுவன்றென் பதை ஊகித்தறிவதற்குக் காரணமாயுள்ள பில்வார்ச்சனை முதலிய முற்கூறப்பெற்ற கருதலளவையானது) தடுக்கவல் லதன்றாகையாலும் சைவர்களின் கருத்துத் தள்ளுண்டு போயிற்று.

முற்கூறிய அத்தாட்சி நூல்களான பல புராணங்களி லுள்ள - இப்பெருமான் விஷ்ணுவேயென்று தெரிவிக்கின்ற சுருதியை (சொற்களை) எவ்விதமான சாக்குப்போக்கும் சொல்லி வேறு பொருளுடையதாகக் கற்பித்தல் முடி யாதென்பது முன் செய்த ஆராய்ச்சியுரையினாலேயே விளக்கமாயிற்று.

சைவர் கூறும் லிங்கமும் (=அதாவது சிவபிரானுக்கே யுரிமையுடைமையென்னும் பொருளாற்றல் படைத்த வில் வார்ச்சனை முதலியவைகளும்) நம்பத்தகுந்தல்ல. அவை சிவபெருமானுக்கே உரியனவென்பது உண்மையல்லவாகை யால் துளசிதேவிக்கு இஷ்டமானதாகையால் திருத்து ழாய் எங்ஙனம் திருமாலுக்கு இஷ்டமானதோ அங்ஙனமே வில்வமரம் திருமகளுக்குப் பிரியமானதால் வில்வ பத் திரங்களும் திருமாலுக்குப் பிரியமாய் அர்ச்சனைக்கு உரியவையென்று நூல்களினால் அறிவிக்கப்படுகின்றமை

பிரசித்தமன்றோ? வில்வம் திருமகளுக்கு இஷ்டமான மரமென்பது "ஆதித்யவர்ணே தபஸோ திஜாதோவநஸ்பதிஸ்' தவ வ்ருக்ஷோத பில்வ:" (சூரியனைப்போல் செந்நிறம் பெற்ற திருமகளே, உன்னுடைய ஸங்கல்பத்தினால் மரங்களில் சிறந்த வில்வமரமானது ஸர்வமங்களங்களுக்காக உண்டாயிற்று.) என்று ஸ்ரீஸூக்தத்திலுள்ள மந்திரத்தால் அறியப்படுகின்றது. அதனால்தான் வில்வத்தழைகளினாலும் திருமாலை அர்ச்சனை செய்வதென்பது அங்கங்குச் சாத்திரங்களில் விதிக்கப்படுகின்றது.

ஹாரீதஸ்ம்ருதி யென்னும் மிகமிக உயர்ந்த தரும சாஸ்திரத்தில் ஐந்தாம் அத்தியாயத்திலுள்ள மார்கழி மாதப் பூஜையைக் கூறும் கட்டத்தில் - சூரியன் தனுஸ் என்னும் இராசியில் இருக்கும் மார்கழி மாதத்தில் அந்தணன் அருணோதய காலத்தில் தினந்தோறும் ஸ்நாநம் தருப்பணம் முதலியவற்றை முறைப்படி செய்து முடித்து மனத்தைப் பகவானிடம் லயித்திருக்கச் செய்து அப்பகவானாகிய ஜகந்நாதனாம் நாராயணனை விதிப்படிப் பூஜிக்க வேண்டும். புருஷஸூக்தத்தை அல்லது மூல மந்திரமாகிய திருவெட்டெழுத்தை உச்சரித்துக்கொண்டே தாமரை மலர் சாதிமல்லி திருத்துழாய் வில்வபத்திரம் கருநெய்தல் ஆகியவற்றால் அர்ச்சனை செய்ய வேண்டும். சந்தனம் தூபம் தீபம் இவற்றை ஸமர்ப்பிக்க வேண்டும். பாயஸம் சர்க்கரைப்பொங்கல் பொங்கல் நெய் மணக்கும் சுத்தாந்நம் ததியோதனம் ஆகியவற்றையும் தேன் கலந்த அப்பம் பிட்டு அவல் பொறி முறுக்கு கடலை முதலிய சிற்றுண்டிகளையும் பலவகைப் பழங்களையும் நிவேதனம் செய்ய வேண்டும் - என்று கூறப்பட்டுள்ளது.

மேலும் அதே அத்தியாயத்தில் அதற்கு முன்பு இடது துடையில் வீற்றிருக்கும் லக்ஷ்மியுடன் கூடிய லக்ஷ்மீ நாராயணப் பெருமானை வெள்ளிக்கிழமை இரவுகளில் முழுவில்வத்தழைகளாலும் மெல்லிய துருத்துழாய்களாலும் மந்திர ரத்தினமென்னும் த்வய மந்திரத்தைச் சொல்லி அர்ச்சனை

செய்ய வேண்டுமென்றும், (பின்பு) புருஷஸூக்தத்திலுள்ள ஒவ்வொரு மந்திரத்தையும் உச்சரித்துக்கொண்டே வில்வ தழை தாமரையிதழ் நெய் இவற்றில் ஏதாவதொன்றினால் அக்நியில் ஹோமம் செய்யவேண்டுமென்றும்,

ஆயர்பிரானாகிய க்ருஷ்ண பகவானைச் சிரத்தையுடன் பூஜிக்க வேண்டுமென்று தொடங்கி - அலரிமலர் மலையத்திமலர் வில்வபத்திரம் காட்டுமல்லி இவற்ருல், பத்தெழுத்து மந்திரத்தை உச்சரித்து அர்ச்சனை செய்ய வேண்டுமென்றும்,

நரசிங்கப்பெருமானை மந்த்ரராஜமென்னும் நரசிம்ம மந்திரத்தாலாவது ! காயத்ரீமந்திரத்தாலாவது திருவெட்டெழுத்து மந்திரத்தினாலாவது, முழுவில்வத்தழை சாதிமல்லி முல்லை காட்டுமுல்லை என்ற இவற்றைக் கொண்டு அர்ச்சிக்க வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

இதுபோலவே வராக புராணமுதற்பகுதி 45 எண்ணிடப்பெற்ற - வேங்கடாசல மாகாத்மியப் பகுதி 13-ம் அத்தியாயத்தில் ஸ்ரீநிவாஸ பகவானது தோற்றத்தைக் கருதி ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் தவம் செய்யும் மாமுநிவர்களின் நல்லொழுக்கங்களைத் தயரத மன்னவன் கண்டானென்று கூறுமிடத்தில் - யோகியர் ஜகந்நாதனாகிய திருமாலைக் கறுத்த திருத்துழாய் வெளுத்த திருத்துழாய் வில்வ பத்திரம் என்றிவற்ருல் அர்ச்சனை செய்கிருர்கள் என்று குறிக்கப்பட்டுள்ளது.

வேங்கடாசல மாகாத்மியங்கூறும் வராக புராணத்தின் இரண்டாம் பகுதி ஒன்பதாம் அத்தியாயத்தில் தேவதைகள் லக்ஷ்மியைத் துதிசெய்யும் போது 'வில்வ வனத்திலுள்ள திருமகளுக்கு வணக்கம், விஷ்ணு பத்தினிக்கு வணக்கம்' என்று துதித்ததனால் லக்ஷ்மிக்கு வில்வம் மிகவும் பிரியமானதென்றும், துதிசெய்ததனால் மகிழ்ச்சியுடைந்த அம்மகாலக்ஷ்மி அவர்களுக்குப் பதிலளிக்கும்

போது - தேவர்காள், இந்த ஸ்தோத்திரத்தைச் சொல்லி என்னை முழுவில்வத்தழைகளால் மனிதராவது தேவரா வது யாரேனும் அர்ச்சனை செய்வார்களானால் அவர்கள் அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப்பொருள்களை அடைவார்கள். இது ஸத்யம் எனறு கூறியதனால் வில்வத்தினால் தன்னை அர்சச்னை செய்யுமாறு திரு மகளே விதிக்கின்றாளென்றும் தெரிவதனால் அப்பெரு மாட்டி இறைப்பொழுதும் பிரியாமல் வீற்றிருக்கும் திரு மார்பையுடைய திருவேங்கடமுடையானை வில்வத்தினால் அர்ச்சிப்பது மிகவும் பொருந்தும். இங்ஙனமே திருமாலை வில்வத்தினால் அர்ச்சிப்பது பற்றிய அங்கங்கு நூல்களில் காணப்படுகின்ற செய்திகள் அனைத்தும் இதற்குச் சான் றாகக் காணத்தக்கன.

இதுவரையில் கூறியபடி மகாலக்ஷ்மிக்கும் மகாவிஷ் ணுவுக்கும் வில்வம் பிரியமானதென்பதும், அதனால் அவர் களை அர்ச்சிக்கவேண்டுமென்பதும் பிரமாண நூல்களிலி ருந்து ஏற்படுவதனால் - அவற்றையொட்டியே இத்தி ருமலையில் பெருமாளுக்கு வில்வத்தினால் அர்ச்சனை செய்வது ஏற்படுத்தப்பெற்று அது தொன்றுதொட்டு வழக் கமாக வந்து கொண்டிருப்பதனாலும், இங்ஙனமே மற்ற திருமால் திருப்பதிகள் சிலவற்றில் வில்வார்ச்சனை இன்றும் காணப்படுவதனாலும், இவ்வில்வார்ச்சனையைக் கொண்டு இப்பெருமானை வேறு தேவதையாக்க முடியாது.

இனி சடையுடைமையும் வேறு தேவதைக்கே உரிய தென்பதும் உரியதன்று. விஷ்ணுவின் அவதாரங்களிலும் சிற்சிலவற்றில் சடையுண்டென்பது நூல்களின் வாயிலா கத் தெரியவருதலால் இந்த ஸ்ரீநிவாஸப்பெருமானிடமும் அச்சடையிருந்தால் அது இப்பெருமான் திருமாலாதலைத் தடைசெய்யாதல்லவா?

ஸ்ரீபாகவதம் பதினோராவது ஸ்கந்தம் ஒன்பதாமத் யாயம் பகவத் பக்தியைக் கூறுமதாய் நிமியென்னுமர சனுக்கும் கரபாஜநரென்னும் யோகிக்கும் உரையாடலாய்

அமைந்துள்ளது. அதில் நிமியரசன் - அந்த விஷ்ணு பகவான் எவ்வெக்காலங்களில் எந்தெந்த நிறமுடையவரா யும் எந்தெந்த உருவமுடையவராயும் எவ்வெப்பெயர்களைக் கொண்டு எந்தெந்த முறைப்படி மனிதர்களால் பூஜிக்கப் படுகிறார்? முனிவரே அதைக் கூறியருள்க என்றுகேட்க, அதற்குக் கரபாஜன முனிவர் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் கலியுகம் என்னும் இந் நான்கு யுகங்களி லும் கேசவனாகிய திருமால் வெவ்வேறுபட்ட நிறம் உருவம் பெயர் இவற்றையுடையவராய்ப் பல்வேறு முறை களின்படிப் பூஜிக்கப்படுகிறார். கிருதயுகத்தில் அப்பெரு மான் வெண்மை நிறமுடையவராகவும், நான்கு கைகள் தலையில் சடை இடையில் மரவுரி மார்பில் மான்தோலா லாகிய பூணூல் கைகளில் ஜபமாலை தண்டம் கமண்டலம் இவற்றோடு பொருந்திய உருவமுடையவராகவும், ஹம்ஸன் ஸுபர்ணன் வைகுண்டன் தருமன் யோகீச்வரன் அமலன் ஈச்வரன் புருஷன் அவ்யக்தன் புரமாத்மா என்ற பெயர் களைக் கொண்டவராகவும், புலன்களைவென்று பகைமை யற்றுப் பொதுநோக்கமும் உடையவர்களான அக்கிருத யுகத்திய மனிதர்களால் புலன்களையும் மனத்தையும் அடக்கித் தியானம் செய்வதென்னும் முறைப்படிப் பூஜிக் கப்படுகிறார் - என்று தொடங்கிக் கூறப்பட்டிருக்கிறது.

இங்கு, அவ்வக்காலங்களில் விருப்பத்திற்கேற்ப பக வான் வெவ்வேறு வகையான நிறம் ஆயுதம் உருவம் பெயர் இவற்றோடு கூடிய வேஷம் தரிக்கிறாரென்பதை யும், அவ்வவதாரங்களில் அந்தந்த நிறம் ஆயுதம் உருவம் முதலியவற்றோடு கூடிய வேஷத்துடனேயே அவரைப் பூஜை செய்யவண்டுமென்பதையும் கூறியுள்ளதனால், இந்த ஸ்ரீநிவாஸாவதாரத்திலும் நமக்குக் காணப்படு கின்ற சடை நான்கு புஜங்கள் முதலிய குறியோடு கூடிய திவ்யரூபங்கொண்ட திருமாலை அவ்வாறுகவே பூஜை செய்யவேண்டுமென்பது தகுதியுடையதாகும்.

இங்ஙனமே பாஞ்சராத்ர ஸாத்வத ஸம்ஹிதையின் கண் பாதாளம் முதலிய எல்லாவுலகங்களிலுமுள்ள ஸகலவிபவாவதார தேவதைகளின் த்யானிக்கத்தக்க உரு வங்களைக் கூறுகின்ற பரிச்சேதத்தில் (நூற் பிரிவில்), முதன் முதலாகப் பாதாளத்திலுள்ள ஸங்கர்ஷணமூர்த்தி என்னும் பலவகையுருவம் படைத்த அனந்தனாம் பகவா னுடைய, வித்யைக்கு அதிஷ்டான தேவதையாயிருக்கத்தக்க உருவை வருணிக்குமிடத்தில் நான்கு முகமும் நான்கு புஜமும் தொங்குகின்ற மீசை தாடியும் சடையும் தண்ட மும் கமண்டலமும் செபமாலையும் பூணுலுமுடையவராய் மலர்ந்த செந்தாமரையின் நிறமுடையவராய் வெண்தாம ரையேந்திய கையராய்த் தம்முடைய நான்கு வாய்களி னாலும் இருக்கு எசுஸ் ஸாமம் அதர்வணமென்கிற நான்கு வேதங்களையும் ஓதுமவராயிருக்கும் வித்யையை அருளும் பெருமாளைத் தியானம் செய்யவேண்டும் என்றும்,

அங்கேயே சிறிது தூரம் சென்ற பின்பு, நரன், நாராய ணன் ஹறி க்ருஷ்ணன் என்னும் நான்கு அவதாரங்களில் க்ருஷ்ணனென்னும் அவதாரவுருவை வருணிக்கும் போது, கருநெய்தல்போல் கருநிறமுடையவரும் உயரத் தூக்கிய கைகளையுடையவரும் சடைதரித்தவரும் ஒருகாலால் நிற்ப வரும் காற்றை உணவாகக் கொள்பவரும் ஒன்று மூன்று ஆறு பன்னிரண்டு நாட்கள் அதிக்ருச்சிரமென்ற விரதத்தில் ஊன்றியவரும் ஒரு . பக்ஷம் (15 நாட்கள்) ஒரு மாதம் உண்ணு விரதமிருப்பவரும் (உண்ணுவிரதத்தை உபதேசிப்பவரும்) ஆகிய க்ருஷ்ணபகவானைச் சிந்தனை செய்யவேண்டும் (ஒருநாள் கைநிறையச் சோறுண்டும் அடுத்த நாள் ஒரு பிடி சோறுண்டும் மூன்றும் நாள் உண்ணுமலிருந்தும் செய்யும் விரதம் அதிக்ருச்சிரம் எனபபடும். இவ்வாறே மூன்று ஆறு பன்னிரண்டு நாட்களிலும் கண்டுகொள்க) என்றும்,

அங்கேயே மறுபடியும், பூவுலகிலுள்ள மற்றோர் அவதா ரத்தினுடைய த்யானிக்கத்தக்க உருவத்தைக்கூறும்போது

சிறந்த குதிரையில் வீற்றிருப்பவரும் கவசம் மூடிய திரு மேனியுடையவரும் வெள்ளைத் தலைப்பாகையோடு விளங் கும் நெற்றி சிறிது நீண்ட சடை உருகிய பொன் போன்ற மேனிநிறம் இரண்டு அம்பறுத்தூணிகள் வில்லும் அம்பும் ஏந்திய கைகள் வாள் ஈட்டி கோடாரி ஆகிய ஆயுதங்கள் இவற்றோடு கூடியவரும் வேள்வி செய்தல் வேதமோதுதல் தானம் செய்தல் முதலிய தருமகாரியங்களைக் காப்ப வரும் அத்தருமத்தில் நிலைபெற்ற மனத்துடன் தரும நிந்தை செய்யும்வரை அழிப்பவரும் உலகிலுள்ள எல்லாப் பொருள்கட்கும் ஆதாரமான பரம்பொருளாய் எல்லாவித ஆற்றலும் நிறைந்து எங்கும் நிறைந்தவரும் எல்லாப்பொ ருள்களையும் அறியுமவரும் எல்லாவுலகோராலும் தியானிக் கத்தக்கவரும் பூவுலகிலுள்ளவரும் ஆதிசேஷனைப் படுக்கை யாகவும் ஆபரணமாகவும் கொள்பவரும் ஊழிக்காலத்துத் தீயினொளி படைத்தவரும் ஜொலிக்கின்ற அக்நிஜ்வாலை களின் கூட்டங்களோடும் 'கூடியவரும் அக்நியை ஆடையா கச் சுற்றியவரும் புருஷ ரூபந்தரித்த சக்கரம் முதலிய ஆயுதங்களால் சூழப்பெற்றவருமாகிய அத்திருமாலைத் தியானித்தல் வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு திருமாலின் அவதாரங்கள் பலவற்றில் சடை தரித்தல் உண்டென்று அறியப்படுதலால் இந்த ஸ்ரீநிவா ஸபகவானுக்கும் சடைதரித்துள்ளமை என்பது அவனது திருமாற்றன்மையோடு முரண்பட்டதாகாமையினால், இச்ச டையுடைமை காரணமாக இப்பெருமான் வேறு தேவ தையாக இருக்கத் தகுதியில்லை.

மேலும் கீழ்க்காட்டிய ஸாத்வத ஸம்ஹிதை வசனங் களில் கடைசியாகக் குறிக்கப்பட்ட உருவத்தின் உண்மைத் தன்மையை ஆராயுமளவில் அவ்வுருவத்திற்கும் ஸ்ரீநிவா ஸபகவானது உருவத்திற்கும் அதிகமான ஒப்புமை தெரிய வருதலால் அதுவே இது என்ற நினைவை உண்டாக்கு கின்றது - புராணத்தினால் அறியப்படுகின்ற ஸ்ரீநிவாஸ பகவானது திவ்யரூபம்:

இங்கு, சிறந்த குதிரையில் வீற்றிருப்பவர் என்பது முதலாகக் கூறப்பட்ட லக்ஷணங்கள் ஸ்ரீநிவாஸனுக்கும் காணப்படுகின்றன. வராக புராணம் இரண்டாம் பகுதி நான்காம் அத்தியாயம் பத்மாவதியின் திருமணத்திற்கு முன்பு அமைந்துள்ள பகவானது வேட்டையாடற்பகுதியில் - பத்மாவதியும் அவளுடைய தோழிகளும், களங்கமற்ற சந்திரன்போல் வெளுத்துப் பொன்னணி அணியப்பெற்றதனால் மின்னுகின்ற மின்னற்கொடியுடன் கூடிய சரற்கால மேகம் போன்றதும் உயர முள்ளதுமான ஓர் உத்தமசாதிக் குதிரையைக் கண்டனர். அதன்மீது நீலமேனியுடன் மன்மதனது உருவவொளியும் பெற்றுச் செவியளவும் நீண்டு தாமரையிதழ் போன்ற திருக்கண்களையுடையவனும், மெல்லிய வெண்பட்டால் சுற்றப்பட்ட கறுத்த மயிர்க்கொண்டை (சடை)யினால் விளங்குமவனும் பத்மராக (செம்பு) மணியினால் ஒளிபெற்று அசைகின்ற குண்டலங்களினால் அலங்கரிக்கப்பெற்றவனும் பொன்னும் மணியும் நிறைத்துச் செய்யப்பட்ட சார்ங்கமென்னும் வில்லை ஒரு கையினால் ஏந்தியவனும் மற்றொரு கரத்தினால் பொன்னாலான அம்பைப் பற்றியவனுமாகிய ஒரு ஆண்மகனையும் அவர்கள் பார்த்தனர் என்று கூறப்பட்டுள்ளது.

இதில், ஸாத்வதஸம்ஹிதையில் வெள்ளைத் தலைப்பாகையோடு விளங்கும் நெற்றியும் சிறிது நீண்ட சடையும் உடையவர் என்றும், வில்லும் அம்பும் ஏந்திய கைகளையுடையவர் என்றும், சிறந்த குதிரையில் வீற்றிருப்பவர் என்றும் கூறப்பட்ட செய்திகள் - மெல்லிய வெண்பட்டால் சுற்றப்பட்ட கறுத்த மயிர்கொண்டை (சடை)யினால் விளங்குமவன் என்றும், பொன்னும் மணியும் நிறைத்துச் செய்யப்பெற்ற சார்ங்கமென்னும் வில்லையும் பொன்னாலான அம்பையும் ஏந்தியவன் என்றும், குதிரையையும் அதன்மேல் ஒரு ஆண்மகனையும் கண்டனர் என்றும் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் இரண்டு உருவங்களுக்கும் ஒப்புமை விளங்குகின்றதென்று உணரத்தக்கது.

பவிஷ்யோத்தர புராணத்திலும் ஆறுமத்தியாயம் முன்பு போலவே வேட்டையாடும் செய்தியைக் கூறும் பகுதியில் அத்திருவின் மணாளன் மனத்தினால் குதிரையை நினைத்தான். அவ்வளவிலேயே ஓர் குதிரை எதிரே தென்பட்டது. வாயுதேவன் குதிரையாக மாறினான். திருமகள் தானே இசைந்து வந்து (கடிவாளக்) கயிறானாள். பிறகு அப்பெருமான் அக்குதிரையைப் பூஜித்து எல்லா ஆபரணங்களையும் அணிந்துகொண்டு அதன்மீது ஏறி உட்கார்ந்தான் என்றும்,

கொண்டையாக (சடையாக) முடிந்த கூந்தலில் சிவந்த துணியைத் தலைப்பாகையாகச் சுற்றித் தோளிலணிந்து தொங்கும் மலர்மாலைகளினால் அலங்கரிக்கப்பெற்றுப் பொன்னில் மணியிழைத்துச் செய்யப்பட்ட பாதுகை (மிதியடி)களால் மறைந்த பாதங்களையுடையவனாய் வில்லும் அம்பும் தரித்துப் பேரழகனான மன்மதனுக்கும் மன்மதனாய் விளங்கும் திருமகள்மணவாளனான திருவேங்கடமுடையான் கண்டவர் மனத்தைக் கவர்வதான இப்படிப்பட்ட உருவந்தரித்து, இரத்தினங்களழுத்திச் செய்யப்பட்ட பரிகரங்கள் (அங்கவடி ஆஸனம் கடிவாளம் கழுத்தணி முதலிய பல அணிகள்) அணியப்பெற்றதும் பொன்மயமான திலகம் விளங்கும் முகமுடையதும் வாயுவேகமும் மனோவேகமுமுடையதும் நீலமேனியையும் வெண்மையான கால்களையும் கொண்டுள்ளதும் பதினைந்து முழவுயர்த்தியுடையதும் தேவமணி எனப்படும் பிடரிமயிர்ச்சுழி முதலிய சிறந்த லக்ஷணங்களெல்லாம் சேரப்பெற்றதுமாகிய குதிரை மீது ஏறித் திருமலையிலிருந்து இறங்கி வேட்டைக்குச் சென்றான் என்றும் உள்ளது.

இதிலும், ஸ்ரீநிவாஸனுக்குக் குதிரைமீதேறிச் செல்லுதல் தலைப்பாகை சுற்றிய சடையுடைமை கைகளில் வில்லும் அம்பும் ஏந்தியுள்ளமை ஆகியவை குறிக்கப் பெற்றுள்ளன. முற்காட்டிய வராகபுராணப்பகுதியிலும் வேட்டைக்கு உரிய வேஷத்துக்குத் தக்கவாறு வில்லும்

அம்பும் ஏந்தினமை கூறப்படுவதனால் அதற்குத் தக்க கவசம் அம்பறுத்தூணி இவற்றைத் தரித்தலும் புராணக் காரரால் கருதப்பட்டேயிருக்குமாகையால், முன் ஸாத்வ தஸம் ஹிதையில் காணப்பட்ட கவசம் மூடிய திருமேனி யும் இரண்டு அம்பறுத்தூணிகளும் கூறப்பட்டனவேயாகும். ஆதலால் ஸாத்வதஸம்ஹிதையில் கூறிய உருவத்திற்கும் இங்குக் கூறப்பட்டுள்ள ஸ்ரீநிவாஸனுடைய உருவத்திற்கும் ஒப்புமை மிகத் தெளிவாக விளங்குதல் அறியத்தக்கதாகும்.

கீழ்க்காட்டிய வராகபுராணத்திலுள்ள வேட்டைப் பகு தியில் குதிரைக்குக் களங்கமற்ற சந்திரன் போன்ற வெண் ணிறமும் பெருமாளுக்கு மெல்லிய வெண்பட்டால் சுற் றப்பட்ட சடையுடைமையும் கூறப்பட்டன. இப்பவிஷ் யோத்தர புராணத்திய வேட்டைப் பகுதியிலோவெனில் குதிரைக்கு நீலநிறமும் வெளுத்த கால்களும் பகவானுக்கு சிவப்புத் தலைப்பாகை சுற்றிய சடையுடைமையும் கூறப் படுவதனால் (சிறிது) வேறுபாடு காண்கிறது. ஆகிலும், ஒவ்வொரு கற்பத்திலும் தொடர்ந்து நடக்கும் சில சரித் திரங்களில் முக்கியமான பகுதிகளில் ஒப்புமை இருக்கச் செய்தே முக்கியமல்லாத சிறிய சில விஷயங்களில் கொஞ் சம் வேறுபாடு உண்டாவது இயற்கையேயாதலால், இங்கு அப்படிப்பட்ட சிறிய வேறுபாட்டை மட்டும் கொண்டு முக்கியமான விஷயத்தில் வேறுபாடு நினைத்தல் தகுதி யுடையதன்று.

மேலும், ஒரே கற்பத்தில் நடந்த சரித்திரத்தை நூலாக இயற்றியிருந்தாலும், சொல்லுமவர்களுடையவரும் கேட்கு மவர்களுடையவும் ஸம்பாஷணையை மூலமாகக் கொண்டு புருஷர்களால் இயற்றப்பட்ட ஸ்ம்ருதி இதிஹாஸம் புரா ணம் முதலிய சாஸ்திரங்களில் சொல்லுமவர்கள் நன்று கச் சொல்லியும் கேட்பவர்கள் ஊக்கத்தோடு கேளாமை காரணமாகச் சில விஷயங்களை வேறுபடுத்தி நூலெழுது வதனாலாவது - சொல்லுவோரும் தாங்கள் கேட்டபடியே சொல்லக் கேட்போரும் ஊக்கத்தோடு கேட்டு அப்படியே

நூலெழுதியிருந்தாலும், அதற்கு முன்பு சொல்லுவோரும் கேட்பாருமாய் வெகுநாட்களாக நடந்து வருகின்ற தொடர்ச்சியில் சொல்லுமவரோ கேட்பவரோ ஒருவர் தாங்கள் சொல்லும்போதோ கேட்கும் போதோ ஊக்கமில்லாமல் சொல்லியும் கேட்டும் வந்த செய்திகள் அப்படியே பரம் பரையாக வருவதனாலாவது முன்காட்டிய மிகச் சிறிய விஷயங்களில் வேறுபாடு உண்டாகுதல் தவிர்க்கமுடியாத தொன்றுகும்.

இதே காரணத்தினால் மனிதனால் எழுதப்பட்ட ஸ்ம் ருதி இதிஹாஸம் புராணம் முதலிய எல்லா நூல்களிலும், ஏன்? ஸ்ரீவேங்கடாசலமான்மியங்கூறும் இப்புராணப்பகுதி களிலும்கூட அவ்வச்சரித்திரங்களில் சில உட்பகுதிகள் வேறுபட்டனவாகக் காண்கின்றன. அங்கெல்லாம் இவ்வி தமாகவே மிகச் சிறிய வேறுபாடுகளில் நோக்கங்கொள் ளாமல் முக்கிய விஷயங்களிலேயே கவனம் செலுத்தல் தகும். (நிற்க).

இவ்வாறே, ஸ்காந்தபுராணமுதற்பகுதி பத்தாம் அத் தியாயம் பகவானது தோற்றத்தைக் குறிப்பிடுமிடத்தில் - அகத்தியமுனிவர் சங்கராஜன் முதலியவர் தமக்கெதிரில் ஒரு சோதி தோன்றியதைக் கண்டு, பரமபதநிலயனாய்ப் பரமானந்தந் தரும் திருமேனியுடையவனாய்ப் பேரறிவா ளராலும் பேசவோ நினைக்கவோ முடியாதவனாய்ப் பிரசித்தமான ஐசுவரியத்தினால் விளங்குமவனாயுமுள்ள நாராயணனைத் தியானம் செய்தனர். பின்பு அவர்கள் ஆயிரங்கண்களோடும் ஆயிரந்தோள்களோடும் ஆயிரந் தாள்களோடும் கூடி உருக்கிய பொன்போல் விளங்கும் காந்தியினால் மனங்கவருமவனும் கோரப் பற்களினால் கோரவுருவினனாய் நெருப்பின் ஜ்வாலைகளை உமிழ்வத னால் பார்ப்பதற்கு முடியாதவனும் திருமார்பில் திருமக ளைத் தரித்துக் கௌஸ்துபத்தினால் ஒளிபடைத்துள்ளவ னும் நினைத்தற்கரியவனும் ஆதியுமந்தமும் அற்றவனும் அச்சமுண்டாக்குவனும் எங்கும் நிறைந்து பிரம்மாண்டம்

மனைத்தையும் தன்னிடம் உள்ளதாகக் காட்டுமவனுமா கிய (விச்சுவரூபந்தாங்கிய) திருமாலைக் கண்டு மனம் மகிழ்ந்து மேன்மேலும் அந்த ஜகந்நாதனை வந்தனம் செய்தனர். அப்போது சூரியனொளி படைத்த சக்க ரம் அழகிய கதை நந்தகமென்னும் வாள் புண்டரீகம் (தாமரை மலர்) சந்திரனொளி பெற்றுக் கடூரமான ஓசை யையுடைய சங்கு என்னும் இந்த ஹரியின் ஆயுதங்கள் உலகைக் காப்பதற்காகச் சுற்றிக்கொண்டேயிருப்பவை அத் திருமாலைச் சேவிப்பதற்காகத் தம்முடைய இயற்கையான ஒளியும் ஆற்றலும் அமையப்பெற்று அங்கு வந்தன. அச் சமயம் அசுரர்கள் அனைவர்க்கும் அச்சம் விளைக்கும் பாஞ்சசன்னியத்தின் பூரணமான ஓசை பிரம்மாண்டமெங் கும் பரவியது - என்று கூறப்பட்டுள்ளது.

இதில், ஸாத்வதஸம்ஹிதையில் ஊழிக்காலத்துத் தீயி னொளி படைத்தவர் ஜொலிக்கின்ற அக்நிஜ்வாலைகளின் கூட்டங்களோடு கூடியவர் அக்நியை ஆடையாகச் சுற்றி யவர் என்று கூறப்பட்ட விஷயம், நெருப்பின் ஜ்வாலை களை உமிழ்வதனால் பார்ப்பதற்கு முடியாதவன் என்று குறிக்கப்பட்டுள்ளது. உருகிய பொன்போன்ற மேனிநி றம் படைத்தவரென்று அதில் கூறியது, இதில் உருக்கிய பொன்போல் விளங்கும் காந்தியையுடையவன் என்று குறிக்கப்பெற்றது. புருஷரூபம் தரித்த சக்கரம் முதலிய ஆயுதங்களினால் சூழப்பெற்றவரென்று அங்குக் கூறியது - இங்கு உலகைக் காப்பதற்காகச் சுற்றிக்கொண்டேயி ருக்கும் ஆயுதங்கள் பெருமாளைச் சேவிப்பதற்காக அங்கு வந்து சேர்ந்தன என்று கூறப்பட்டது.

ஆகையால் இந்த ஸ்காந்தபுராணத்திலும், முற்காட் டிய ஸாத்வத ஸம்ஹிதையில் கூறிய உருவத்தோடு ஸ்ரீநிவாஸனுடைய உருவத்திற்கு ஒப்புமையே அறியப்ப டுகின்றதென்று உணரத்தக்கது.

வராகபுராணத்தில் இரண்டாம் பகுதியிலுள்ளதாக முன்காட்டிய வேட்டைச் சந்தர்ப்பத்தில் ஸ்ரீநிவாஸன் நீலமேனியுடையவராகக் கூறப்பட்டார். இங்குப் பொன் போன்ற காந்தியுடைய'வராகக் குறிக்கப்பட்டிருப்பதனால் வேறுபாடு தோன்றுகிறது. ஆயினும் பகவானது திவ்ய ரூபமானது - பொன்னொளியுடன் சேர்ந்த நீலமணியின் ஒளிபோல் அழகிய மயிற்கழுத்துடனும் மின்னினொளி போர்த்த நீலமேகத்துடனும் ஒத்தவுருவாக விளங்குவத னாலும், 'க்ருஷ்ணபிங்களம்' என்று (கருநிறமும் பொன்னிற முமுடையதென்று) வேதத்தினால் அறியப்படுவதானாலும், கறுத்ததாகவும் பொன்னிறத்ததாகவும் குறிப்பிடத்தகுமா கையால் விரோதமில்லையென்று அறியத்தக்கது.

இதனால்தான், கீழ்க்காட்டிய ஸ்காந்தபுராணத்தி லுள்ள பகவானுடைய தோற்றத்தை வருணிக்கும் கெட் டித்திலேயே, பிரமன் முதலியோரின் வேண்டுகோளுக்கு இரங்கிய பகவான் அக்நிஜ்வாலையினால் சூழப்பெற்று அனைவர்க்கும் அச்சத்தை விளைவிக்கும் உருவத்தை அவர் கட்குக் காட்டுவதாகக் குறிப்பிடும்போது - பொன்னால் செய்த விமானத்தில் பகவான் சந்திரபிம்பம் போன்ற திரு முகத்தோடும் கருநெய்தல்போன்ற நீலநிறவொளியோடும் கூடிச் சாந்தியையுடையவனாய்க் காண்பதற்கு இனியவ னாய் இருந்தான் - என்று நீலநிறமுடைமையும் பெரு மானுக்குக் காட்டப்பட்டது.

இவ்வாறே வாமனபுராணப்பகுதியிலும் 34-ம் எண் குறித்த பதினைந்தாம் அத்தியாயத்தில் ஸ்ரீநிவாஸன் தோன்றியதைக் கூறும்போது - காண்பதற்கு அரிய உரு வத்தையுடைய அந்த ஹரியின் உருவம் எத்தகையது? கைகள் முகங்கள் எத்தனையெத்தனை? கூரிய எத்தனை ஆயுதங்களை அவர் ஏந்தியிருக்கிறார்? முனிவரே, விச்வரூ பியான அவருடைய உருவத்தின் அமைப்பைக் கூறியருள்க என்று சனகர் கேட்க, அதற்கு வாமதேவர் கூறும் விடை யில் - சுருண்டும் இருண்டும் மிக மெல்லியனவுமாகி,

காணவினிய கிரீடத்திலிருந்து வெளிக்கிளம்பித்தொங்கு கின்ற திருக்கூந்தல்களினால் மறைக்கப்பட்டுள்ளதனால் மேகம் மூடிய சந்திரபிம்பம் போன்ற திருமுகமடையவன் - என்று பகவானுக்குச் சடையுடைமையும், மிதிலைக்கு அரசே, ஜ்வலிக்கின்றவைகளுமான கூரிய ஆயுதங்கள் அக் கைகளில் சேர்ந்து விளங்கின - என்பதனாலும், பல நூறு யிரக்கணக்கானவைகளும் ஊழிக்காலத்துத் தீயையொத்த ஒளிபடைத்தவைகளும் கோரமானவைகளும் தேவர்களுக்குப் பகைவராய் மிக்க பலத்தையுடைய அசுரர்தலைவர்க ளுக்கு அச்சத்தை விளைவிப்பவைகளும் பக்தர்களுக்கு அபயமளிப்பவைகளும் எங்கும் எப்போதும் ஸஞ்சரிபவைக ளுமாய் அக்கைகளில் சேர்ந்திருந்த பலவகை ஆயுதங்கள் - பயங்கரமாய் ஜ்வலித்துக் கொண்டிருக்கிற தம் ஒளிகளால் சூரியனையும், சாந்தமாய் விளங்கிக்கொண்டிருக்கிற தம் ஒளிகளால் சந்திரனையும் ஒளியற்றவைகளாகச் செய்தன என்பதனாலும், பகவானுடைய பயங்கரமும் அபயங்கர முமான இரண்டு உருவங்களுக்குத் தகுந்தவாறு கொடி யதும் அழகியதுமான ஒளிபடைத்து இருவகையுருவந்த ரித்த பலவிதமான ஆயுதங்களினால் அலங்கரிக்கப்பட்ட பல பல தோள்களையுடைமை கூறப்படுவதால் இந்த ஸ்ரீநிவாஸ பகவானுக்கு, காத்தற்றொழிலை நடத்துவ தற்குத்தக்க அழகிய உருவத்திற்குப் பொருந்திய திவ்யா யுதங்களைத் தரித்துள்ளமைபோலே, அழித்தற்றொழிலை நடத்துவதற்குத் தக்க பயங்கரவுருவத்திற்குப் பொருந்திய வேல் கோடாரி முதலிய கோரவுருவமுடைய ஆயுதங்க ளைத் தரித்துள்ளமையும் இங்குச் சொல்லப்பட்டனவாகத் தெரிவதனால், ஸாத்வத ஸம்ஹிதையில் உள்ளதாக முன்பு காட்டப்பெற்ற வில் அம்பு ஈட்டி கோடாரியுடன் கூடிய கோரவுருவமும், புருஷ ரூபந்தரித்த சக்கரம் முதலிய வுரு வமும் காட்டப்பட்டன ஆகும்.

இதுபோலவே மூற்கூறிய ஸ்காந்த புராண வசனங்க ளினாலும், இவ்வாமன புராண கெட்டத்திலும் - விச்வ ரூபியான திருமாலுடைய பலநிறமுடையதும் வியப்பைத்

தருமதுமான திருவுருவமானது கிரீடங்களின் திரள்களி னால், தனது கிரணங்களின் திரள்களினால் பலவகைப் பட்ட காந்திகளைக் கொண்ட ஊழிக்காலத்துச் சூரியன் போல் விளங்கியது. மேலும் ஆதியான அவ்வுருவம் ஆச் சரியமான கண்களையுடையதும் விளங்குகின்ற முகமு டையதும் குற்றமற்றதும் துக்கமற்றதும் தனது பேரொ ளியினால் மிகவும் ஜ்வலிப்பதுமாய்க் கொண்டு யுகமுடி வுக்காலத்திய அக்நிபோல் நன்ருக எரிந்து கொண்டே விளங்கிற்று - என்றதனாலும், உடனடியாகக் கூறப்பட் டுள்ள வேறு வசனங்களினாலும், மெத்தென்று அழகிய கன்னங்களாலும் குண்டலங்களாலும் விளங்குமதாய் என்று தொடங்கி, அழகுள்ளதும் உயர்ந்த திருமார்பு டையதும் செவியளவும் நீண்ட திருக்கண்கள் கொண்ட தும் சிறந்த பீதாம்பர மணிந்ததும் திவ்யமான சந்தனம் பூசப்பெற்றதுமாகிய அவ்வுருவம் அழகிய கழுத்திலணிந்த வைஜயந்தி என்னும் வனமாலையினால், மின்னல்களின் வரிசைகளினால் விளக்கப்பெற்ற மேகம் போல் பிரகாசித் தது - என்றதளவாக உள்ள வசனங்களினாலும், காத் தற்ருெழிலுக்குரிய அழகிய உருவமும் அழித்தற்ருெழிலுக் குரிய குரூரமான உருவமும் பகவானுக்கு உள்ளதாகக் கூறப்படுவதனால் முன்பு காட்டிய ஸாத்வதஸம்ஹிதை வசனங்களில் - யாகஞ்செய்தல் வேதமோதுதல் தானம் புரிதல் முதலிய நல்ல காரியங்களைக் காப்பவன் என்று கூறப்பட்ட காத்தற்குரிய உருவும், அதருமத்தில் ஊன் றிய மனங்கொண்டவராய்த் தரும நிந்தை செய்பவரை அழிப்பவன் ஊழிக் காலத்துத் தீயினொளிபடைத்தவன் ஜ்வலிக்கின்ற நெருப்பின் ஜ்வாலைகளின் தொகுதிகளோடு கூடியவன் அக்நியாகிற வஸ்திரத்தினால் சுற்றப்பெற்ற வன் என்று சொல்லப்பட்ட அழித்தற்குரிய உருவும் கூறப்பட்டனவாகும்.

இவ்வாறே இவ்வாமன புராணத்தில் 35 எண் குறித்த பதினாரும் அத்தியாயத்தில் ஸப்தருஷிகள் செய்த ஸ்ரீநிவா ஸப் பெருமாளைப் பற்றிய ஸ்தோத்திரத்தில் - ஆயிரம்

சூரியரோடொத்த சக்கரத்தைக் கோயிலேந்திய உனக்கு நமஸ்காரம். சங்குக் கையனுக்கு நமஸ்காரம். விஷ்ணுவே மகாத்மாவான உனக்கு நமஸ்காரம். கிரீடமணிந்த உனக்கு நமஸ்காரம். நீலமேகத்தை நிகர்த்த தேகத்தைப் படைத்த பிரம்மமான உனக்கு நமஸ்காரம். சிறந்த கத்தி கதை வில் வேல் ஈட்டி இவற்றைக் கையிலேந்தியவனும் பளபளவென்று விளங்கும் மற்ற பல ஆயுதமுடையவனும் ஜ்வலிக்கின்ற திருமேனியுடையவனுமாகிய உனக்கு நமஸ்காரம். யாகங்களுக்குப் பலனளிக்கும் உனக்கு நமஸ்காரம். ஒளிவிடும் குண்டலங்களணிந்த உனக்கு நமஸ்காரம். உயர்ந்தவர்க்கும் தாழ்ந்தவர்க்கும் தலைவனான உனக்கு நமஸ்காரம், பயங்கரமான திருமேனி படைத்த உனக்கு வணக்கம் என்றுள்ள வசனங்களினால் ஸ்ரீநிவாஸ பகவானுக்கு, காப்பவனாகுந் தன்மைக்குத் தக்க சாந்தமான வடிவமும், அழிப்பனாகுந் தன்மைக்குத்தக்க பயங்கரமான வடிவமும் அவ்விரண்டிற்கும் பொருந்திய சாந்தமான ஆயுதங்களையும் கோரமான ஆயுதங்களையும் உடைமையும் மிகவும் தெளிவாகக் கூறப்பெற்றன. ஆதலால் இவ்வாமன புராணத்திலும் ஸ்ரீநிவாஸனுடைய வடிவிற்கு முன்பு காட்டிய ஸாத்வதஸம்ஹிதை வசனங்களிற் கூறிய வடிவத்தோடு ஒப்புமையே கூறப்படுகின்றதென்று அறிதல் வேண்டும்.

இங்ஙனம் பாத்மபுராணப்பகுதியிலும் 26 எண்ணிட்ட மூன்றுமத்தியாயத்தில் பத்மஸரோவரத்தின் (திருச்சுகனூரிலுள்ள தடாகத்தின்) கரையில் சுகமுனிவருக்காக ஸ்ரீநிவாஸன் தோன்றியதைக்கூறுமிடத்தில் அனைவர்க்கும் உயிராய்த் தாமரைக் கண்ணனாய்ப் பதினான்கு லோகங்களையும் படைத்துக் காத்து அழிப்பவனாய் உயிராயுள்ளே நின்று அனைவரையும் தூண்டுமவனாய் (அவரவர் செய்யும் நல்வினை தீவினைகட்குத் தக்கபடி) அருள் தண்டனைகளைக் கொடுப்பவனாய் எப்போதும் எங்கும் நிறைந்தவனாய்ச் சங்குசக்கரம் தண்டு தாமரைமலர் இவற்றால் விளங்கும் நான்கு கரங்கள் கொண்டவனாய்

முத்துக்குடையாக விளங்குகிற ஆதிசேஷனுடைய ஆயிரம் படங்களையுடையவனாய்ப் புதிய அணிகலன்களாகிய பாம்புகளாலும் பொன்னாடைகளாலும் புஷ்பங்களாலும் நறுமணம் மிக்க திவ்யமான சந்தனப்பூச்சாலும் அலங்கரிக்கப்பெற்ற திருமேனிப் பெருமையையுடையவனாய்ச் சிரித்த திருமுகத்தாமரையை யுடையவனான திருமால் அச்சுகமுனிவரின் தவத்தால் மகிழ்ந்து தோன்றினான் - என்றுள்ள வசனங்களில், ஆதிசேஷனுடைய ஆயிரம் படங்களை முத்துக்குடையாகப் பெற்றவன் பாம்பணிகளால் அலங்கரிக்கப்பெற்ற திருமேனி கொண்டவன் என்றுள்ளமையால், முற்காட்டிய ஸாத்வதஸம்ஹிதையில் ஆதிசேஷனைப் படுக்கையாகவுகம் ஆபரணமாகவும் கொண்டவன் என்று கூறப்பட்ட பகுதி குறிக்கப்பட்டுள்ளது.

இதுபோலவே இப்பாத்மபுராணத்திலேயே ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் அச் சுகமுனிவருக்காகவே ஸ்ரீனிவாஸப்பெருமாள் தோன்றியதை வருணிக்குமிடத்தில் 27 எண்ணிட்ட நான்காமத்தியாயத்தில் - நீலமேக வரிசைபோல் இருண்டு அழகியதாய்ச் சுருண்ட மயிர் முடியுடையவன் என்றும், பாம்புகள் விளங்கும் தோள்களையுடையவன் என்றும் உள்ளமையால், சடைதரித்தலும் நாகாபரணமணிதலும் கூறப்பட்டனவாம்.

இவ்வாறே 33 எண்ணிட்ட பத்தாம் அத்தியாயத்தில் பிரமன் முதலியோரால் துதிக்கப்பட்டு ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் ஸ்ரீனிவாஸனது ஆவிர்ப்பாவத்தைக் கூறுமிடத்தில் பாவ புண்ணியங்களுக்கு வசப்படாத பரமபுருடன் இத்துதியினால் மகிழ்ந்தவனாய் இவ்விமானத்தில் ஆயிரமிரவிகளோடொத்த பிரகாசமும் ஆயிரஞ் சந்திரர்களொடொத்த குளிர்ந்த காந்தியும் ஆயிரம் அக்நிகளின் ஜ்வாலைகளும் பொருந்தப்பெற்றுப் பிரசித்தமான பெருமை தோன்றப்பெற்றவனாய் வெளிப்பட்டான் - என்று ஸ்ரீநிவாஸ பகவானுக்குச் சாந்தமும் கோரமுமான இரண்டு வடிவமுள்ளமை குறிக்கப்படுவதனால் இங்கும் ஸாத்வ

தஸம்ஹிதையிற் கூறிய உருவத்தோடு ஒப்புமையையே அறியப்படுகிறது.

இங்ஙனமே பவிஷ்யோத்தர புராணம் பதினோராமத் தியாயம் ஸ்ரீநிவாஸனுக்கும் பத்மாவதிக்கும் நடக்கும் விவாஹ கெட்டத்தில் ஸ்ரீனிவாஸ பகவானுக்கு ஆபர ணம் கொடுக்கும் சந்தர்ப்பத்தில் இரண்டு நாகாபரணங்க ளையும் தோள்வளை முதலியவற்றையும் தந்தான் என்று - சேஷாசலவாஸியும் சேஷசயனனும் சேஷாபரணனு மாகிய இப்பெருமானுக்குச் சேஷன் (பாம்பு) மிகவும் பிரி யமானவனென்று நினைத்த ஆகாசராஜனால் இரண்டு நாகாபரணங்கள் அளிக்கப்பட்டதாகக் கூறப்பபடுகின்றது.

பவிஷ்யோத்தர புராணம் 80 எண் குறித்த ஸ்ரீவேங் கடேச ரஹஸ்யாத்யாயத்தில், பார்வதிக்குப் பரமரஹஸ்ய மான விமானத்திலுள்ள ஸ்ரீநிவாஸப் பெருமாளின் தியா னிக்கத்தக்க வடிவை உபதேசிக்கும் சிவபெருமானால் - இந்திர நீலமணிபோல் கறுத்து அழகிய நாகாபர ணங்கள் அணிந்தவைகளும் சங்கு சக்கரந்தரித்தல் அபய ஆநாம முத்திரைகள் இவற்ருல் அலங்கரிக்கப்பெற்றவைக ளுமான உயர்ந்த திருக்கைகளோடு கூடியவன் என்றும், எவனுடைய பெயர் சிறந்த வேதமாகிற பெருங்கடலில் விளங்குகின்ற கௌஸ்துபமணியோ, தன்னைப் பற்றிய அறிவின்மையாம் இருளென்னும் துயரைப்போக்குமவனும் என் (நம்) புத்திரனாம் கந்தனுக்கு நல்வாழ்வளிப்பவனும் விரும்பும் வரங்களை அனைவர்க்கும் தருபவனும் உயர்ந்த நாகாபரணம் அணிந்துள்ளவனும் எல்லாச் செல்வங் களுக்கும் மூலகாரணமானவனும் தன்னையே வரமாக வழங்குமவனுமாகிய அப்படிப்பட்ட ஸ்ரீவேங்கடேச பகவா னைத் தியானிக்கின்றேன் என்றும் ஸ்ரீநிவாஸ பகவானது திவ்யரூபம் நாகாபரணம் பூண்ட திருக்கைகளையுடையதா கக் கூறப்படுகிறது. (இங்கு அபய முத்திரையென்பது தன் திருவடிவங்களைக் காட்டுவதன் வாயிலாக அஞ்சவேண்டா மையை அறிவிக்கும் வலது திருக்கையின் அமைப்பு

ஆநாம முத்திரையாவது - தொங்கவிட்டு இடையில் வைக்கப்பெற்ற இடது கையின் அமைப்பு).

இவ்விதமாகவே பிரம்மாண்ட புராணப்பகுதி இரண்டாமத்தியாயத்தில் பகவான் மகிழ்ச்சியினால் மலர்ந்த கண்களையுடையவனாய், தன் முன் நிற்கும் ஆதிசேஷனை அழைத்து மேகமுழக்கம் போன்ற கம்பீரமான குரலோடு குற்றமற்ற அனந்தனே, உலகில் எனக்குப் பிரியமானவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை. ஆகையால் எனக்குப் பிரியமானதோர் காரியம் உன்னால் செய்யப்படவேண்டும். நாரதர் கூறிய வார்த்தையெல்லாம் நீ கேட்டாயல்லவா? விளையாட்டுக்கு உரிய இடத்தில் வசிக்க வேண்டுமென்று என் எண்ணம். பூவுலகில் நீ உயர்ந்ததோர் மலையாக உருவமெடுத்து வசிக்கக்கடவாய். உன்னுடைய படத்திரள்களின் கீழிடத்தில் நான் திருமகளுடன் வசிக்கவேண்டும் என்று கூற தேவர் பெருமானே, அனந்தனான அடியேன் மலையினுருவம் தரிக்கிறேன். தேவரீர் திருமகளுடன் கூடி அடியேனுடைய தாழ்வரைகளில் மகிழ்ந்திருக்கக் கடவீர் என்று சேஷன் பதிலளித்தான் என்றிது முதலிய வசனங்களினாலும் பகவானுக்கு மிகப் பிரியனான ஆதிசேஷன் அவனது ஆணையின்படி பூவுலகில் அப்பிரானுடைய போகத்துக்கு உதவுவதாய்ச் சுகமாக உறங்குமிடமான விளையாட்டு மலையாக மாறினமை கூறப்படுவதனால் இப்புராணத்தினாலும் எல்லாவுலகோராலும் தியானம் செய்யத் தக்கவர் பூலோகத்திலுள்ளவர் ஆதிசேஷனைச் சயனமாகவும் ஆபரணமாகவும் கொண்டவர் என்று ஸாத்வத ஸம்ஹிதையிற் கூறிய பகுதியே குறிக்கப்பட்டதாகிறது.

இங்கு சயனமென்றது (உறங்குமிடமாகிய படுக்கையைக் குறிக்குமதாயினும்) போகத்துக்கு உதவுவதாய்ச் சுகமாக உறங்குவதற்கு இடமாகிய விளையாட்டு மலையையும் உளப்படுத்த வல்லதாகையாலும், பகவானுக்கு அடைமொழியான பூலோகத்திலுள்ளவர் என்றது (அனந்

தனைச் சயனமாகக் கொண்டவர் என்ற அடைமொழியோடு சேர்த்து வைத்து ஆராயப்பட்டால்) பகவானுடைய விளையாட்டுக்காக ஆதிசேஷன் பூவுலகில் மலையாக மாறியதை ஞாபகமூட்டவல்லதாகையாலும், பாத்ம புராணப்பகுதி 34 எண்ணிட்ட பதினோராமத்தியாயத்தில் திருவின் மணவாளன் கருடன் மீதூர்ந்து ஆதிசேஷ மலையை அடைந்து அங்குள்ள அழகிய சுவாமி புஷ்கரிணியின் கரையில் ஏகாந்தமானதோர் இடத்தில் திருமகளுடன் ரமித்துக் கொண்டிருக்கிறான் என்று மலையாக மாறிய ஆதிசேஷன் படுக்கைபோல் போகத்துக்கு உரிய சுகமாகத் தூங்குமிடமாகவே கூறப்படுகின்றமையாலும் இப்படிக் கொள்ளுதலே பொருந்தும்.

இங்ஙனமே பிரம்மாண்ட புராணத்தைச் சேர்ந்த ஸ்ரீவேங்கடேச ஸஹஸ்ர நாமாத்தியாயத்தில் ('கபர்தீ காமஹாரீ') சடையுடையவர் வெளி விஷயங்களில் காமத்தைக் (=ஆசையை)களையுமவர் என்றதனாலும், சங்கையேந்தியவர் கமலமலர் போன்ற கைகளையுடையவர் அல்லது கமலமலரைக் கையில் தரித்தவர்... என்றதனாலும், குங்குமக் குழம்பு பூசிய திருமேனியையுடையவர் வெற்றி தரும் அங்குசம் பிடித்தவர் பாம்புகளை வளையாக அணிந்தவர் என்றதனாலும், வேல் தாங்கியவர் முத்துமாலை தரித்தவர் என்றதனாலும் சடைதரித்து நாகாபரணமணிந்து சங்கு அங்குசம் வேல் ஆகிய ஆயுதங்கள் தாங்கியமை கூறப்பட்டன. கோரசாந்தங்களான இரண்டு ஆகாரங்களுக்குத் தக்க வேஷம் ஆபரணம் ஆயுதம் இவற்றைத் தரித்துள்ளமையைக் கூறுகின்ற இத்திருநாமங்களாலும் முற்கூறிய ஸாத்வதஸம்ஹிதைச் செய்தியே சொல்லப்படுகின்றது.

கபர்தீ காமஹாரீ என்ற சொற்கள் (காரணவிடுகுறிப் பெயர்களாகி) சடையுடையவன் காமனை (மன்மதனை) அழித்தவன் என்று பொருள்படுவதால் சிவனைக் குறிப்பிட்டுப் பின்பு, சரீரத்தைச் சொல்லும் சொற்கள் அதற்குள்ளே இருக்கும் ஆத்மாவைக் குறிக்கும் வகையில், அச்சிவபிரா

னைச் சரீரமாகக் கொண்ட பரமாத்வாகிய திருமாலைக் குறிக்கின்றன என்றும் கொள்ளலாம். ஆனாலும் இந்த ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தில் இத்திருவேங்கடவனையே நேராகக் கூறுகின்ற 'பல நாமங்கள் படிக்கப்படுவதனால் அவற்றையொட்டி, கபர்தீ காமஹாரீ என்ற பெயர்களும் (முற்கூறியவாறு முதலில் சிவபிரானைக் குறிப்பிட்டுப் பின்பு அவனுக்கு ஆத்மாவான திருமாலைக் குறிக்கின்றனவாகக் கொள்ளுதலன்றிக்கே) நேராக அவனையே குறிப்பதாகக் கொள்ளுதலையே புராணகாரர் கருதியிருக்கத் தகுதியுள்ளதனாலும், மற்ற புராண வசனங்களோடு முரண்படாமல் ஒன்றுபட வேண்டியிருப்பதனாலும், கபர்தீ காம ஹாரீ என்னும் சொற்களுக்குச் சடையுடையவர் வெளி விஷயங்களில் ஆசையை அகற்றுமவர் என்று முறையே பொருள் கொள்ளத் தடையேதும் இல்லாததனாலும் இச் சொற்கள் காரணப் பெயராய் மட்டும் நின்று நேரா கத் திருவேங்கடவனையே கூறுகின்றன என்று கருதுவது தகுதியுடைத்தென்று கொள்க.

இதுகாறும் கூறியவாற்றால் திருமாலிடம் நாகாபரணமும் உண்டென்பது புராண வாக்கியங்களிலிருந்து தேறியபடியால், இந்நாகாபரணமிருப்பது கொண்டு வேங்கடவனை வேறு தேவதையாக்குதல் பொருந்தாது.

ஆக, பில்லபத்திரார்ச்சனை சங்கு சக்கரங்கள் தரியாமை சடைதரித்துள்ளமை நாகாபரணம் பூண்டுள்ளமை என்னுமிவையாகிய - வேறு தேவதையென்று அறிவிக்கத் தக்கவையாகச் சைவர்கள் கருதிய லிங்கங்கள் (அனுமான வளவைகள்) பழுதுபட்டவென்று தேறிற்று.

மேலும் சடையும் நாகாபரணமும் சிவபிரானிடம் உள்ளதாக அதிகப்பிரசித்தியிருந்தபோதிலும், அவை திருவேங்கடவனைக் கந்தனென்று காட்டித் தருவதற்குப் போதுமான ஏதுக்களென்று கூறுதல் ஒருகாலும் இயலாது.

இங்ஙனம் சைவர்கள் கூறிய லிங்கங்கள் (ஏதுக்கள்-அனுமானவளவைகள்) பழுதுபட்டதனாலும், நாம் கூறிய - திருமார்வில் திருமகள் உள்ளமை ஸ்ரீவத்ஸமென்னும் திருமறுவுடைமை நான்கு திருக்கைகளின் அமைப்பு முதலிய பல பல லிங்கங்களும் திருவேங்கடவனை நாராயணனென்றே வெளிப்படையாகக் கூறும் புராண வசனங்களும் பழுதுபடாமையாலும், இந்த ஸ்ரீவேங்கடேசன் முற்காட்டிய ஸாத்வதஸம்ஹிதா வசனங்களில் கூறிய லக்ஷணங்களையுடையதாய் வேறெங்கும் முன்பு கண்டறியாததுமான திவ்யமான ரூபத்தையுடையவனாய் ஸ்ரீநிவாஸனென்னும் திருப்பேரையுடையவனான பகவான் நாராயணனேயாவான், ஒருகாலும் கந்தனாகான் என்பது முடிவு பெற்றதாயிற்று.

இதை இங்குக் கூறிக்கொள்ளுதல் இன்றியமையாததாகும். "ஏகோ ஹவை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந:" = ஸ்ருஷ்டிக்கு முன்பு நாராயணனொருவனேயன்றோ இருந்தான், பிரமன் இல்லை சிவன் இல்லை (மஹோபநிஷத்து) என்றிது முதலிய எல்லையில்லாத உபநிஷத்துக்கள் ஸ்ரீமந் நாராயணனையே எல்லாவுலகுகளின் பிறப்பு இருப்பு இறப்புக்களுக்குக் காரணமாகவும், அவனிடமிருந்தே பிரமன் முதலியோரை வெவ்வேறு உருவமும் தன்மையும் தொழில்களில் அதிகாரமுடையவர்களாய் உண்டாகுமவர்களாகவும் அறிவிக்கின்றன.

காரணங்களில் இல்லாத குணங்கள் காரியங்களில் வந்து சேருவதென்பது இதுகாறும் எங்கும் கண்டறியாத தொன்றுகும். காரணங்களில் உள்ள குணங்களே காரியப் பொருள்களில் வந்து சேருகின்றன. ஆதலால் காரியங்களில் உள்ள குணங்கள் நுண்ணிய சக்தி ரூபமாகவாவது காரணங்களில் நிச்சயமாக இருந்தே தீரவேண்டும்.

ஆக எல்லாவுலகங்களினுடையவும் விதை (முதற்காரணம்)யாய், 'நான் பல பொருள்களாக ஆகப்போகிறேன்' என்ற சங்கற்பமுடையவனுமான நாராயண பகவானுக்கே

எல்லாவுலகின் பிறப்பு இருப்பு இறப்புக்களைச் செய்யும் ஆற்றலாகிற தன்மை நிறைந்திருப்பதனால், அவனிடமிருந்து உண்டாகி, படைத்தல் அழித்தல் முதலிய அவ்வத் தொழில்களில் அதிகாரம் பெற்ற பிரமன் சிவன் முதலியோரிடத்தில் அவனிடமிருந்தே அவ்வாற்றல் தொற்றிக் கொண்டதென்று சொல்ல வேண்டியிருப்பதனால் பிரமன் முதலிய அவ்வவரிடமுள்ள படைத்தல் அழித்தல் முதலிய தொழில்களுக்குத் தக்க சாந்த க்ரூர வடிவுகளென்ன ஆயுதங்களென்ன இவைகளாகிய வேஷங்களுக்கு மூல காரணமான அப்படிப்பட்ட வேஷம், மூலகாரணமான நாராயணனுடைய ஒருருவில் மறுக்க முடியாதபடி அவசியமாக ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதனால், படைத்தல், காத்தல்களுக்குத் தக்க சாந்த வடிவம் அதற்குரிய ஆயுதம் இவையாகிய வேஷம் போல், அழித்தலுக்குத் தக்க கோரவடிவம் அதற்குரிய பயங்கரமான சடை நாகாபரணம் வேல் கோடரி முதலிய ஆயுதம் ஆகிய வேஷமும் நாராயணனிடம் மிகவும் பொருந்தியதேயாகும்.

இரண்டு வகைப்பட்ட வேஷமும் ஸ்ரீநிவாஸ பகவானுக்கு உள்ளதென்பதும் முற்காட்டிய புராண வசனங்களில் வெளிப்பட்டுள்ளது. உலகனைத்தின் பிறப்பு, இருப்பு, இறப்புக்களுக்குக் காரணமான ஆற்றலனைத்தும் தனக்கே முக்கியமாக உள்ளது, பிரமன் சிவன் முதலிய பிறரிடமோ வெனில், தன்னிடமிருந்தே அவ்வாற்றல் சிறிது தொற்றிக் கொண்டுள்ளதென்பதை வெளிப்படுத்துவதற்காகவே பகவான் அப்படிப்பட்ட உருவமுடையவனாகத் தன்னைக் காட்டுகிறான்.

ஆகையால்தான் கீழ்க்காட்டிய ஸாத்வத ஸம்ஹிதா வசனங்களில் எல்லாவுலகப் பொருள்களுக்கும் ஆதாரமமான பரம்பொருள், எல்லாவித ஆற்றலும் நிறைந்தவர், எங்கும் நிறைந்தவர் என்று கூறப்பட்டது.

அதனால்தான் பாத்புராணம் 26 எண்ணிட்ட மூன்றுமத்தியாயத்தில் ஸர்வாத்மாவாய்த் தாமரைக் கண்ண

னாய்ப் பதினான்கு உலகங்களையும் படைத்துக் காத்து அழிப்பவனுமாகிய பெருமான் அச் சுகமுனிவருடைய தவத்திற்கு மகிழ்ந்து என்று தொடங்கி, முப்பத்திரண்டு கோடி வகைப்பட்ட வைஷ்ணவ சக்தி (ஆற்றல்) களாலே நான் முன்னே நான் முன்னே என்று போட்டியிட்டுக்கொண்டு ஸேவிக்கப்பெற்ற தேவனாய் ஸ்ரீதேவி பூதேவி நீலாதேவிகளுடன் கூடியவனாய்ப் பரம புருஷனான திருமால் பத்ம ஸரோவரத்தின் (திருச்சுகனூரிலுள்ள குளத்தில்) கரையில் தோன்றினான் - என்றிது முடிவாக, பகவான் படைப்புக் காப்பு அழிப்பு முதலியவற்றைச் செய்பவனென்று கூறி, அதற்கு மூலமான எல்லையில்லாத வைஷ்ணவ சக்திகளால் ஸேவிக்கப்படும் தன்மை அவனுக்குக் கூறப்பட்டது.

'தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளில் எந்த எந்த பிராணி தன்கீழ் அடங்கிய பல பிராணிகளை உடையதாகவும் அவற்றைக் காத்தற்குரிய தன தானியங்கள் நிறையப்பெற்றதாகவும் மேன்மேலும் தன தானியங்களை ஸம்பாதிக்க முயற்சியிலே ஊன்றியதாகவும் இருக்கிறதோ அந்தந்த பிராணி எல்லாம், அர்ச்சுனா, என்னுடையதான பிறரை அடக்கியாளும் ஆற்றலில் ஒரு சிறு பகுதியினால் உண்டானதென்று உணர்வாய்" என்று கீதையென்னும் கலையில் கண்ணன் கூறிய கட்டளையின் படி உலகில் அவ்வக்காரியங்களுக்கு மூலமாக அங்கங்கு இருக்கும் சக்தி விஷ்ணுவின் சக்தியேயல்லவா?

இங்ஙனமே பாத்ம புராணம் 27 எண் குறித்த நான்காமத்தியாயத்திலும் ஒருகால் விஷ்ணு பகவான் கருணையினாலுண்டானதும் அளவிடற்கரியதுமான புண்ணிய எண்ணத்துடன் எல்லோருக்கும் காட்சியளிக்க நினைந்து, ஆனந்தமயமாய் உயர்ந்த ஆகாரத்தையுடைய கருடன் ஆதிசேடன் சேனைமுதலியார் ஆகியோராலும் பஞ்சாயுதங்களாகிய பரிகரங்களாலும் குடைகொடி முதலியவற்றையும் ஆபரணங்களையும் மான் தோலையும் வஸ்திரங்களையும் ஆயுதங்களையும் ஏந்திய குமுதன் முத

லான நகரபாலகர்களாலும் பிரமதேவனது சக்திகளாலும் சிவபெருமானது சக்திகளாலும் ஸேவிக்கப்படுமவனாய் மகிழ்ந்து, தனக்குப் பேரானந்தமூட்டுமவர்களும் ஆச்சரியமான ஆபரண ஐச்வர்யங்களையுடையவர்களுமாகிய ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி முதலிய பிராட்டிமார்களுடன் கூடி, ஸர்வாத்மாவாய் விளையாட்டென்னும் ஆடம்பரம் மிகப்பெற்று எல்லோருடைய கண்களுக்கும் நேராகப் புலப்பட்டு ஆனந்தமடைந்தான் - என்று ஸ்ரீநிவாஸன் ஸர்வாத்மா (ஸர்வகாரணம்) வாகையால் ஸர்வவித பரிஜந ஆயுத பரிகர சக்திகளாலே ஸேவிக்கப்படும் தன்மை அவனுக்குக் கூறப்பட்டது. இவ்வாறு பொருள்படும் பிற வசனங்களும் அவ்வப் புராணங்களில் உள்ளவை காணத் தகும்.

ஆக ஸம்ஹாரம் செய்யும் தன்மையைத் தோற்றுவிக்கின்ற க்ரூரவடிவமும் அதற்குப்பொருந்திய பயங்கர ஜடை பாம்பணி வேல் கோடரி முதலியனவற்றை தரித்தலுமாகிய வேஷத்தையுடையவனும், ஸம்ஹாரம் செய்வதென்னும் காரணத்தினாலேயே வேறொருவனிடம் (சிவெருமானிடம்) அப்படிப்பட்ட தனது அதிகாரத்தின் ஒரு சிறுபகுதி தனது ஸங்கல்பத்தினாலேயே சென்று சேருகின்றதென்பதைக் குறிப்பாகக் காட்டுமவனுமாகிய ஸ்ரீநிவாஸபகவானை அவ்வேஷமாத்திரத்தைக் கொண்டு வேறு தேவதையாச் (சிவபெருமானாகச்) சொல்லுவது சிறிதும் பொருந்தாது.

கீழ்க்காட்டிய பாத்மபுராண வசனங்களில் - பிரமனின் சக்திகளாலும் சங்கரனின் சக்திகளாலும் ஸேவிக்கப்படுமவனென்றும், முப்பத்திரண்டு கோடிவகைப்பட்ட விஷ்ணு சக்திகளாலே ஸேவிக்கப் பெறுமவனென்றும், ஸர்வாத்மா விளையாட்டென்னும் ஆடம்பர காரியத்தை அதிகமாகப் பெற்றவனென்றும் குறிக்கப்பட்டுள்ளதனால் நான்முகன் சங்கரன் முதலியோருக்கு அந்தந்த அதிகாரங்களை உண்

யாய் நான்முகன் சங்கரன் முதலிய அந்தந்த தேவதைக ளிடமுள்ள அம்சங்கள் அத்தகைய அதிகாரமாகிய ஐச்வர் யத்தை உண்டாக்கும் பண்புகளேயாகையால் சக்திகள் என்று சொல்லப்படுமவை யாவை உளவோ அவையெல் லாம் எல்லாவுலகத்தொகுதிகளுக்கும் விதையாகிய (கார ணமாகிய) நாராயண பகவானிடம் உள்ளவைகளேயாகும். அவற்றில் ஒரு சிறுபகுதி அந்தந்த தேவர்களிடம் சென்று சேருகிறது. அப்படிப்பட்ட பகுதிகள் அனைத்தும் விஷ்ணு வினுடைய சக்திகளேயாகும். அவையோவெனில் முப்பத்தி ரண்டு கோடியென்று கணக்கிடப்பெற்றுள்ளன. அச்சக்திக ளனைத்துக்கும் முதற்கிழங்காகிய - நாராயண பகவானு டைய முதலதான உயர்ந்த உருவமே இந்த ஸ்ரீனிவாஸனு டைய உருவம். அப்படிப்பட்ட முதலுருவமே, விளையாடி மகிழுமவனும் தன்னைத் தஞ்சமாகப் பற்றியவர்க்குத் தன் முழு மகிமையைக் காட்டுவதில் மனங்களிப்பவனு மான பகவானால் கருணையோடு காட்டப்பட்டதென்று நன்றாகவே அறிவிக்கப்படுகிறது.

"ஸர்வாத்மா" என்று முற்கூறிய இடத்தில் ஆத்மா என்ற சொல்லுக்குப் பண்பென்ற பொருளைக்கொண்டு அவ்வக் காரியப் பொருள்களில் (பிரமன் உருத்திரன் முத லியவர்களிடத்தில்) உள்ள பண்புகள் எல்லாம் நிறைந்தவன் என்றுவது, ம்ருதாத்மகோ கட:' மண்ணைக் காரணமாகக் கொண்டது பானை என்றிது முதலிய இடங்களிற் போல ஆத்மா என்பதற்குக் காரணமென்ற பொருளைக் கொண்டு, எல்லோர்க்கும் காரணமானவன் என்றுவது கருத்துக்கூறுதல் புராணகாரரால் கருதப்பட்டபடியினால், இருவகைப் பொருளிலும், காரியப்பொருள்களிலுள்ள பண் புகளெல்லாவற்றிற்கும் முதற் கிழங்காய்ப் பிறப்பிடமாயி ருக்குந் தன்மை ஸ்ரீனிவாஸ பகவானுக்குள்ளதாகக் கூறப் படுகிறது.

வாமன புராணப்பகுதியிலுள்ள முப்பத்துநாலாமத்தி யாயத்தின் முடிவிலும் - திருமாலின் முதலுருவம்

ஊழிக்காலத்திய தீயைப் போல் மிகவும் ஒளியையுடைய தாகவும் காண்போர்க்கு வியப்பையுண்டாக்குமவதாகவும் விளங்கிற்று என்று கூறப்பட்டுள்ளதனால், ஸ்ரீநிவாஸனது உருவம் நாராயணபகவானுடைய முதலுருவம் என்றல்லவா விளக்கப்பட்டது. இவையனைத்தும் நினைத்தே, பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் என்று பெயர் பெற்ற முதலாழ்வார்கள் மூவரில் மூன்றுமவரும் பரமைகாந்திகளில் (திருமாலையே பரம்பொருளாகவும் அவனுக்குத் தொண்டு செய்தலையே பயனாகவும் கருதும் பெரியோர்களில்) உயர்ந்தவருமான பேயாழ்வாரால், தமது தமிழ் வேதமாகிய மூன்றுந் திருவந்தாதியில், ('தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும், சூழரவும் பொன்னாணும் தோன்றுமால், சூழுந்-திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு, இரண்டுருவு மொன்றுயிசைந்து.) தொங்குகின்ற சடையும் நீண்ட கிரீடமும் அழகிய மழுவும் சக்கரமும் சுற்றிய நாகமும் பொன்னால் செய்த அரை நாணுமாய்க் கொண்டு, நாற்புறமும் பாய்கின்ற திரண்ட அருவிகளையுடைய திருவேங்கடமலையில் வாழும் என்னப்பனுக்கு இருவகையுருவமும் ஒன்றுபட்டு அமைந்து விளங்குகின்றது. இது ஆச்சரியம் என்று திருமாலின் முதலுருவத்தைக் கூறும் அறுபத்து மூன்றுவது பாசுரத்தின் வாயிலாக, பிரமன் சிவன் முதலிய எல்லோர்க்கும் முதற்காரணம் ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே என்பது ஸ்பஷ்டமாக அருளிச்செய்யப்பட்டது. இதில் மழு என்ற சொல் அழிக்கு முருவத்துக்குத்தக்க வேல் ஈட்டி முதலிய மற்ற ஆயுதங்களையும் சக்கரமென்ற சொல் காக்கு முருவத்துக்குச் சேர்ந்த சங்கு வாள் கதை வில் முதலிய மற்ற ஆயுதங்களையும் இலக்கணையால் குறிப்பனவாகுமென்று கொள்க.

இங்கு - அழிக்கு முருவத்துக்குப் பொருந்திய வேல் ஈட்டி முதலியவற்றோடு கூடிய பயங்கர வேஷம் பகவானிடம் இப்போது தென்படவில்லையே. காக்கு முருவத்துக்குத் தக்க அழகிய வேஷமே காணப்படுகின்றதே,

இரண்டுருவுமொன்ருயிசைந்து தோன்றுமென்று ஆழ்வார் அருளியது பொருந்துமாறு எங்ஙனம் என்று கேள்வி எழுவது இயற்கையே. ஆனாலும், பிரமன் முதலியவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிய பகவான் கோரவுருவத்தைக் மறைத்து அழகிய உருவத்தைக் காட்டியதனாலும் அதுவே காத்தற்ருெழிலுக்கு ஒத்தவுருவமாகையாலும் அழகிய வேஷத்துடன் மட்டும் இப்போது எல்லோர் கண்களுக்கும் இலக்காகி விளங்குகின்ருன். பேயாழ்வாரோவெனில், பகவானுடைய இன்னருளால் பெற்ற திவ்யமான கண்களினால் அவளது திவ்ய ரூபத்தை உள்ளபடியே கண்டு அங்ஙனம் அருளிச் செய்தாராகையால் முரண்பாடு இல்லையென்று விடை காணத்தக்கது. பயங்கரமான உருவத்தை மறைத்த இறைவனால் ஜடை நாகம் இவற்றை - பயங்கரத் தன்மையைப் போக்கி அழகிய உருவமுடையவனாக ஆக்கித் தனது அழகிய உருவத்தில் அவை தரிக்கப்பட்டன. தன்னை ஒருபோதும் பிரியாமலிருந்து பிருகு முனிவர் தனது அகன்ற திருமார்பில் காலாலுதைத்த போது வெளியேறிக் கரவீரபுரத்தைச் சேர்ந்த தனது திருமகள் பத்மஸரோவரத்தில் (திருச்சுகனூர்த் தாமரைத் தடாகத்தில்) மறுபடியும் தோன்றுதற் பொருட்டுத் தான் செய்யும் தவத்துக்குரிய வேஷத்துக்குப் பொருந்தும்படியாகவும், திருவேங்கடமலையில் ஸ்ரீராம தாரக மந்திரத்தை ஜபித்துக் கொண்டு தன்னைக் குறித்துத் தவம் செய்யும் வாயுவுக்கும் கந்தனுக்கும், அவர்கள் தியானம் செய்து காண விரும்பியதற்கேற்பத் தான் காட்ட வேண்டிய தனது இராம வேஷத்துக்குச் சேரும்படியாகவும் கிருதயுகத்திய தன்னுடையதோர் தோற்றத்திற்கு இணங்கும்படியாகவும் தரித்த சடையையும், எப்போதும் மெத்தை குடை குடை முதலான உருவங்களெடுத்தும் இப்போது பூவுலகின்கண் விளையாட்டு மலையினுருவங்கொண்டும் தனக்குப் பணிவிடை செய்வதொன்றிலேயே கருத்தூன்றியவனும், மலையுருவமாக மாறிய தனது உடம்பில் எப்போதும் தான் (எம்பெருமான்) வசிக்க வேணுமென்ப

தற்காக மாபெருந்தவமியற்றியவனும் தன் மனத்திற்கு இசைந்த பிரியாத பணியாளனுமாகிய பணிராஜனை (அரவரசனை) அணிகலனாகவும் அணிதலென்பது அவனது அறப்பெரிய அன்புக்கு உறுப்பாகுமாகையால் அங்ஙனம் அணிந்த நாகாபரணத்தையும் கோரவுருவு நீக்கிச் சாந்த ரூபமுடையதாக மாற்றி எப்போதும் அவற்றைத் தனது அழகிய உருவத்தில் பகவான் தரிக்கிறுனென்பது அறியப்படுகின்றது.

பிருகு முனிவர் காலாலுதைத்த சமயத்தில் பிரிந்த பிராட்டி பத்ம ஸரோவரத்தில் அவதரித்தது முதலிய சரிதங்கள் பவிஷ்யோத்தர புராணப்பகுதியின் இரண்டாமத்தியாயத்திலும், பாத்ம புராணத்தைச் சேர்ந்த 34 எண்ணிட்ட பதினோராமத்தியாயத்திலும் காணத்தக்கன.

வாமன புராணப்பகுதி 21 எண்ணிட்ட இரண்டாமத்தியாயத்தில் - புண்ணியவானே, இப்போது வாயுதேவன் ஜபமாலையினால் எண்ணிக்கொண்டே ஸ்ரீராமதாரக மந்திரத்தை ஜபித்துக்கொண்டும் உயர்ந்தவர்களுக்கும் உயர்ந்தவனான இராமபிரானை விதிப்படிப் பூஜித்துக் கொண்டும் தவம் புரிந்து கொண்டிருக்கிறுன். உயர்ந்த கிரீடமணிந்து நான்கு கரங்களிலும் சங்கு சக்கரம் வில் அம்பு இவற்றை ஏந்திக்கொண்டு கருங்குவளை மலரையொத்த கறுத்த காந்தி பொருந்திய தேவதேவனான ஜகந்நாதனைத் திருமகள் மண்மகளுடன் கண்களால் கண்டு வணங்குவதற்காக எல்லோர்க்கும் பிராணனாக உள்ள வாயுதேவன் கோரமா தவம் செய்கிறுன். ஆச்சரியம் - என்று வான்மீகி முனிவருக்கு நாரதமுனிவர் கூறிய செய்தியினால் வாயுதேவன் இராமதாரக மந்திரம் கொண்டு இராமபிரானை உபாஸநம் செய்வதும், வருத்தமின்றி நற்காரியங்களைச் செய்யும் ஆற்றலமைந்த மைந்தனான கந்தனால் வேண்டிக்கொள்ளப்பட்ட சிவபெருமான் உடனே அவனுக்கு இராமதாரக மந்திரத்தை உபதேசித்தார். கந்தனும் தந்தையான மகாதேவனிடம் மந்திரோபதேசம் பெற்று மகிழ்ந்தான்

என்றுள்ள வசனத்தினால் கந்தன் இராமதாரக மந்திரஞ் சொல்லி இராமபிரானை உபாஸிப்பதும் பிரசித்தமாக அறியப்படுகிறது.

ஆதிசேடன் விளையாட்டு மலையாக மாறியதும் பக வான் தன்னுடலில் எப்போதும் வசிக்க வேண்டுமென்று அவன் தவமியற்றியதும் முதலிய சரிதங்கள் பிரம்மாண்ட புராணப்பகுதியின் இரண்டாமத்தியாயத்திலும் பிராம்ம புராணப்பகுதியின் இரண்டாவது அத்தியாயத்திலும் தெளிவாக உள்ளன.

ஸ்ரீநிவாஸ பகவான் முதல் கிருத யுகத்தில் அவத ரித்தாரென்னும் செய்தி வராக புராணத்தைச் சேர்ந்த இராண்டாம் பகுதியின் மூன்றுமத்தியாயத்திலும் பாத்ம புராணத்திற்குட்பட்டதாய் 33 எண் குறித்த பத்தாமத்தி யாயத்திலும் மிக வெளிப்படையாகக் காண்கிறது.

ஆகையால் முற்கூறியபடி சடைதரித்தல் நாகாபரண மணிதல் வில்வத் தழைகளால் அரச்சிக்கப்படுதல் ஆகி யவற்றை அடையாளமாக உடையவனாய் ஸ்வாமி புஷ்க ரிணியின் தென்கரையில் விளங்கும் பெருமாள் ஸ்ரீநிவா ஸனென்ற பெயரையுடையவனாய்த் திருமகள் மண வாளனாய் வைகுந்தநாதனாய் திருவைகுந்தத்திலிருந்து திருவேங்கடமலைக்கு உலகைக் காப்பதற்காக எழுந்தருளி யவனாய், கந்தன் மகாதேவன் முதலான மற்றெல்லாத் தேவர்களாலும் வணங்கப்பெற்ற உயர்ந்த திருவடித் தாம ரையிணையுடைய ஸ்ரீமந் நாராயணனே யாவான், கந்தனா அவன் தந்தையா என்றிப்படியெல்லாம் ஐயப்படுதற்குச் சிறிதும் தக்கவனல்லனென்பது முற்கூறிய மறுக்கமுடி யாத பிரமாண நூல்களாலும் யுக்திகளாலும் உறுதிபெறு கிறது.

என்று இவ்வகையான யதிராஜருடைய - காலத்துக் கேற்பத் தோன்றும் அறிவின் பெருமையாலுண்டான சொற்பொழிவினாலும், திருவேங்கடவனைப்பற்றி இவன்

கந்தனேயென்று கூறிய சைவர்களின் மாறுபட்ட வாதம் மறுக்கப்பட்டொழிந்தபின்பு யாதவ மன்னன் சைவர்களைக் குறித்து - ஓ சைவர்களே, நீங்கள் எல்லோரும் ஒன்றுகூடிப் பல நாள் மிக வருத்தப்பட்டுத் திருவேங்கடமுடையான் மேல் ஏற்றிய - கந்தனென்னும் கட்டுக்கதையாகிய பஞ்சு இப்போது ஒரு நொடியில் யதிராஜருடைய பேச்சென்னும் புயற்காற்றின் வேகத்தால் அசைக்கப்பட்டு எங்கேயோ கொண்டு தள்ளப்பட்டது. மேலெழ நோக்கினால் நல்லதாகத் தோன்றி ஆழ ஆராய்ந்தால் தள்ளுண்டு போகும் யுக்திகள் இனி வேண்டாம். தக்கதாய் நல்ல விடை இருந்தால் இன்றோ நாளையோ சபையில் வந்து சொல்லுங்கள் என்று கூற, சைவர்கள் வீடு சென்று ஆலோசனை செய்து மறுநாள் விடையளிப்பதாக இசைந்தனர். பின்பு யாதவராஜன் யதிராஜருடைய திறமை வாய்ந்த வார்த்தைகளைக் கேட்டு மிக வியந்த சிந்தையுடையவனாய் ஸ்வாமீ இராமாநுஜ முனிவரே, இவ் வாதத்தின் சேஷம் (எஞ்சிய பகுதி) மறுபடியும் மற்றொரு நாள் நடைபெறும். அப்போது தேவரீரும் வருகைபுரிய வேண்டுகிறேன் என்று கூறி அன்றைய சபையை முடிவுறச் செய்ய, சைவர் புலியால் உண்டான அச்சம் போன்று இராமாநுஜ முனிவரால் நேர்ந்த அச்சம் தீரப் பெற்றுத் தத்தம் இருப்பிடம் சென்றூர்கள். பின்பு பூஜிக்கத் தகுந்த இராமாநுஜ முனிவர்பெருமானும் அரசனிசைவு பெற்றுத் தமது விடுதிக்குப் பரிவாரத்துடன் சென்றனர்.

இவ்வாறு சபையோர் அனைவரும் சென்ற வளவில் யாதவ மன்னவன் இராமாநுஜ முனிவரின் மகிமையையும் வாதம் செய்வதில் அவர்க்குள்ள திறமையையும் பற்றித் தன்னுடைய அமைச்சர்களோடு அளவளாவி அவற்றிலேயே மனம் ஈடுபடப்பெற்றவனாய் அவரது வாதத்தை மிகவும் நேர்மையுடையதாகவும் சைவரது வாதத்தை அதற்கு நேர்முரணுனதாகவும் நினைத்து, நாளைக்குத்தான் சைவர்கள் என்ன சொல்லப்போகிறூர்கள் பார்க்கலாம் என்று எண்ணிக்கொண்டிருந்தான்.

அதன் மறுநாள் சைவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து தமது கொள்கைக்குள்ள வலிமையனைத்தையும் நன்கு ஆராய்ந்து பார்த்து, அரசவையில் தமது கோட்பாடு வெற்றிபெறுமென்ற ஆசை தீரப்பெற்று அதனால் அஞ்சுகின்ற நெஞ்சம் கொண்டவராய், ஆயினும் நோயாளிக்கு உயிர போகும் வரையில் வைத்தியம் செய்ய வேண்டியிருக்கும் முறையில், ஆற்றலுள்ள வரையில் எதிர்வாதம் செய்ய வேண்டுமென்று எண்ணங்கொண்டு சபைக்கு வரலாயினர். அதன் பின்பு இராமாநுஜ முனிவரும் சிஷ்யர்களுடன் சபைக்கு வந்து, தமது அடிபணிந்த அரசனுக்கு வாழ்த்துக்கூறினார்.

பின்பு அரசனும் சபையோரும் சபையில் உட்கார்ந்தவுடன் மனவமைதி பெற்ற சைவர்கள், அரசே ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் திகழும் இத்தேவன் கந்தனாகவோ மகாதேவனேயாகவோ அல்லது முடிவில் ஹரிஹராவதாரரூபமுடையவனாகவோ இருக்கத் தகுதி பெற்றவனே தவிர வெறுந்திருமாலினுருவம் மாத்திரம் அமையப் பெற்றவனல்லனென்று நாங்கள் உறுதியாகக் கூறுகிறோம்.

அவர்களில், ஸ்வாமி புஷ்கரிணித் தென்கரையில் தோன்றிய இத்தேவன் கந்தனென்று கொண்ட போதிலும், இவனிடம் விஷ்ணுவின் லக்ஷணங்கள் காண்பதாகச் சொல்லுவதில் முரண்பாடு சிறிதுமில்லை. கந்தன் திருமாலின் ஒரு சிறு அம்சத்துடன் கலந்த உருவமுடையவனாகவும் வாமன புராணப்பகுதியிலிருந்து தெரியவருதலால், அதையொட்டி அவன் தோன்றும்போது திருமாலின் லக்ஷணமான சக்கரம் முதலிய ஆயுதங்களைக் காட்டிக் கொண்டு தோன்றினானென்பதில் தடையேதும் இல்லையல்லவா?

வாமன புராணப்பகுதியில் 21 எண் குறித்த இரண்டாமத்தியாயத்தில் கந்தனது தோற்றத்தைப் பற்றி பிருகஸ்பதி அவனிடமே கூறும் கெட்டத்தில் நீண்ட தோள்கள் கொண்ட உயர்ந்த தேவஸேநாதிபதியே வருந்தாதே,

நீ விநாசமற்ற விஷ்ணுவின் சக்தி என்பதை மறந்து விட்டனை போலும் என்று கூறிய வார்த்தையினாலும், யோகத்தினாலும் உயிர்நீத்த அந்த ஸதீதேவி மலையரச னான இமவானுக்குப் பெண்ணாய்ப் பிறந்து தாயான மேனகையால் சீராட்டப்பெற்று நன்றாக வளர்ந்து வரு கிறாள். மிக உயர்ந்த பெருமை பெற்ற சிவபெருமானை அவளுடன் சேர்த்துத் தாரகாசுரனை வதம் செய்யும் தேவனொருவனைப் பெற்றுத் தரும்படி அப்பெருமானிடம் வேண்டிக்கொள். விஷ்ணுவின் ஓர் சிறு அம்சம் பெற் றவனும் நமக்கு நன்மை தருமவனுமான கந்தபகவான் உண்டாவான் - என்று பிரமன் இந்திரனிடம் கூறிய வார்த்தையினாலும், பிருகஸ்பதி கந்தனைத் துதிசெய்யும் போது, பொன்னின் ஒளிபடைத்தவனும், எங்களுக்கு நன்மையைத் தருபவனுமான சங்கர குமாரனே உன் னைச் சரணமடைகின்றேன். நீ விஷ்ணுவும் பிரமனும் காலனுருக்கொண்ட ருத்திரனும் ஆவாய் என்றுள்ள வார்த் தையினாலும் கந்தனிடத்தில் திருமாலின் ஒரு அம்சம் கலந்துள்ளமையன்றோ அறியப்படுகின்றது.

இங்ஙனமே, ஒருமுகமுடையவன் இருகைகளுடைய வன்'' என்று ஒருமுகமுடைய நிலையில் இருகைக ளுடைமைபோல், 'பன்னிருகைக்ளிலும் விளங்கும் படைக் கலங்கள் கொண்டவனே, துன்பம் மேலிட்ட தேவர்களின் பகைவரான அசுரர்களை அழிக்கும் ஈசனே' - என்பதனால் ஆறுமுகமுடைய நிலைமைக்குச் சேரப் பன்னிருகைகளு டைமை போல் நான்கு கைகளையுடைய நிலைமையும் இஷ்டப்படி உருவமெடுக்கவல்ல இக்கந்தனுக்கு ஏற்படத் தகுதியுள்ளமையால் திருமலையில் திகழும் தேவனிடம் நான்கு கைகள் தென்படுவது முரண்பட்டதன்று.

அல்லது, இவன் மகாதேவ(சிவ)னாகவே இருக்கத் தகும். சிவபிரானுக்கே ஜடைதரித்தலும் நாகாபரணமணி வதும் மிகவும் பிரசித்தமாயிருப்பதனாலும், வைஷ்ணவர்க ளால் எல்லாவுலகிற்கும் மூலகாரணமாக இசையப்பெற்ற

திருமாலிடத்தில் எல்லாக் காரியப் பொருள்களின் லக்ஷணங்களும் உள்ளனவாகக் கூறப்படுவதுபோல், அங்ஙனமே எங்களால் இசையப்பெற்ற மகாதேவனிடத்திலேயே எல்லாக் காரியபொருள்களின் லக்ஷணங்களும் உள்ளனவாகக் கூறப்படுவதும் பொருந்துமல்லவா? மேலும் திருமாலினுடையவும் சிவபெருமானுடையவும் லக்ஷணங்கள் இவனிடம் உள்ளனவென்றுஅறியப்படும்போது இப்பெருமானை லக்ஷணங்களைக் கொண்டு விஷ்ணுவேயென்று தங்களிஷ்டப்படியே கூறிக்கொள்ளும்போது சிவனுடைய லக்ஷணங்களைக்கொண்டு இவனைச் சிவபெருமானேயென்று கூறுகின்ற எங்களைத் தடை செய்யவல்லவர் யார்?

இல்லையேல், இருவகை லக்ஷணங்களும் தென்படுவதையொட்டியும், ப்ரதிவாதம் செய்யும் வைஷ்ணவர் கூறிய - அவர்களுடைய மதத்திற்கு மூலபுருஷரான பேயாழ்வாரின் பாட்டு நம்பத்தக்கதாயிருப்பது கொண்டும் இப்பெருமான் ஹறிஹராவதாரரூபனேயாவான். இப்படிக் கொண்டால்தான் ஸ்கந்தபுராண முதற்பகுதியில் எட்டாமத்தியாயத்தில் மோக்ஷத்தையளிக்கும் மகாதேவனான ஸ்ரீநிவாஸனை எந்த அந்தணர் நினைக்கிறுர்களோ அல்லது புகழ்கிறுர்களோ அவர்கள் பாவமாகிற கூட்டிலிருந்து விடுபட்டவராவார். என்றவிடத்திலும், ஸ்ரீநிவாஸனாகிற மகாதேவனை எந்த மனிதர்கள் ஒருதடவை பூஜை செய்கிறுர்களோ அவர்கள் தவம் தானம் யாகம் விரதம் இவற்றில் எதையும் செய்ய வேண்டியதில்லை. (எல்லாவற்றின் பயனையும் ஸ்ரீநிவாஸ பூஜையினாலேயே அடைகிறுர்கள்) என்றவிடத்திலும் இங்ஙனமே வேறு சில இடங்களிலும், ஸ்ரீநிவாஸன் மகாதேவன் என்னும் இரண்டு சொற்களாலும் இப்பெருமானைக் குறித்துள்ளமை பொருந்தும்.

இப்படியே பாத்மபுராணப்பகுதியில் 27 எண்ணிட்ட நான்காமத்தியாயத்தில் அப்பெருமானது தோற்றத்தைக் கூறுமிடத்தில், 'அஷ்டமிநாளைய சந்திரகலையைத் தாங்கியவன், திருமுகத்தில் திருமண்காப்பையணிந்தவன்' என்று

இப்பெருமானுக்கு இட்ட அடைமொழிகளும் இப்பெருமான் ஹரிஹராவதாரரூபமென்பதை நிலைநாட்டுவன ஆகும். சங்கரனுக்குச் சந்திரகலை தரித்தலும், திருமாலுக்குத் திருமண்காப்பு அணிதலும் லக்ஷணமன்றோ?

ஆகையால் இக்கொள்கைகள் மூன்றையும் மீறி, இப்பெருமான் வெறுந்திருமாலே என்று கூறி எதிர்வாதம் புரியும் வைணவரது கொள்கை கொள்ளத்தக்கதல்ல என்றிவ்வாறு தமது வல்லமை முழுவதும் காட்டிச் சைவர்களால் கூறப்பெற்ற யாதவமன்னன், தோல்விக்கு அஞ்சிய மனத்தையுடைய அச்சைவர்களைக் குறித்துக் கூறினான்:

ஓ சைவர்களே, ஏன் நீங்கள் மிக மிக வருந்துகிறீர்கள்? இராமாநுச முனிவரின் முன்னைய சொற்பொழிவினாலேயே இவ்வாதங்களுக்கும் பதிலளிக்கப்பட்டதாக நான் எண்ணுகிறேன். மிக ஆழ்ந்த கருத்துக்கொண்டதாய் முன்பு இராமாநுசர் கூறிய வாதத்தைக் கேட்ட எவன்தான் உங்களது இவ்வாதத்திற்கு விடையளிக்கத் திறமையற்றவனாவான். உங்கள் வாதம் கடுகின் ஆடம்பரமுடையது. மேகமுழக்கம் போன்ற அவருடைய வாதமோவெனில் மேருமலையோடொத்து உயர்ந்து வெற்றி பெறுமது. (மேருவின் முன்னிலையில் கடுகு இருக்குமிடம் தெரியாமல் மாய்ந்து போகுமென்றபடி) எனக்கே உங்கள் வாதத்திற்கு விடையிருக்கத் திறமை உண்டு. ஆயினும் ஹரிஹராவாதாரமென்னும் வாதத்தைப் பற்றிச் சிறிது கேட்க வேண்டியிருப்பதனால் இராமாநுச முனிவரையே இதற்கு விடையளிக்குமாறு வேண்டுகிறேன். அழகிய கம்பீர நடையில் அவர் கூறும் வார்த்தையைக் கேட்கிறேன் (என்று)

இங்ஙனம் மொழிந்த அம்மன்னன், வாரீர் இராமாநுச முனிவரே, உமது திருமுகத்திலிருந்தே இவ்வாதத்தின் விடையையும் அறிய விரும்புகிறேன். ஆதலால் தக்க விடை அளிக்கவேண்டுமென்று அம்முனிவர் பெருமானையே வேண்டாலாயினன்.

பின்பு இராமாநுச முனிவர் விடையளித்தார். அரசே, தத்துவநெறிக்குப் புறம்பாய் உன் மனத்திலிருந்த ஐயங்களெல்லாம் உனது பாக்கியத்தினால் நீங்கிக் கொண்டு வருகையில், இப்போது இருக்கிற இச்சிறுபகுதியை, பொழுது விடிந்தாலும் சூரியோதயத்துக்கு முன்பு சிறிது எஞ்சி நிற்கும் இருளாக நினைக்கிறேன்.

மன்னவனே, இச்சைவர் - கந்தனிடம் விஷ்ணுவின் அம்சமுள்ளதாகக் (வாமன புராணத்தில்) கூறப்படுவதனால் விஷ்ணுவின் லக்ஷணங்கள் தென்படுவதில் முரண்பாடு இல்லையென்றும், இஷ்டப்படி உருவமெடுப்பவனாகையால் பன்னிரண்டு கைகளுள்ளமைபோல் நான்கு கைகளுள்ளமையும் பொருந்துமாகையால் அங்ஙனம் குறித்தலில் விரோதமில்லையென்றும் நினைக்கின்றனர். அது மிகவும் தவறானது.

அருச்சுனா, எந்தெந்த பிராணி தன் கீழடங்கிய பல பிராணிகளையுடையதோ, அவற்றைக் காத்தற்குரிய தனதானியங்கள் நிறையப்பெற்றதோ, மேன்மேலும் அவற்றை ஸம்பாதிக்கும் முயற்சியையுடையதோ அந்தந்த பிராணிகள் எல்லாம் என்னுடையதான - பிறரையடக்கியாளும் ஆற்றலில் ஒரு சிறுபகுதியினால் உண்டானவையென்று அறியக்கடவாய் - என்று கீதையில் பத்தாமத்தியாயத்தில் கூறியுள்ளதனால் தனதானியச் செல்வங்கள் நிறைந்து மேலும் மேலும் அச்செல்வங்களையீட்டுவதில் முயன்றுகொண்டிருக்கும் எல்லாப் பிராணிகளிடத்திலும் விஷ்ணுவின் அம்சமுள்ளதனால்தான் அத்தன்மை பொருந்துமென்று கூறியபடியினால், அவற்றினிடத்திற்போல் இக்கந்தனிடத்திலும் தேவசேனாதிபதியாந் தன்மையென்னும் செல்வமுள்ளமை பொருந்துவதற்காக விஷ்ணுவின் அம்சமுள்ளமை வாமனபுராணத்தில் சொல்லப்பட்டுள்ளதென்பதை மட்டும் கொண்டு திருமாலுக்கேயுரிய லக்ஷணங்கள் இவனிடம் காணப்படுவதாகச் சொல்லுதல் பொருந்தாதாகையாலும், நான்கு தோள்களுடன் கூடிய இப்பெருமான்

நான்கு தோள்களையுடையவனாகப் பிரசித்தி பெற்றவிஷ்ணுவேயென்று கூறுகின்ற வேறு புராண வசனங்களைப் புறக்கணித்து விட்டு, விஷ்ணுவின் அம்சமுடையவன் கந்தனென்று கூறும் முற்காட்டிய வாமன புராணவசனம் மூன்றும் கந்தனிடம் அப்பிரசித்தமாய்த் தாமே ஊஹித்துக் கற்பனை செய்யப்பட்ட நான்கு கைகளுடைமையைக் குறிப்பதில் நோக்குடையனவென்று கற்பனை செய்வதை நியாயமறிந்தவர் இசையமாட்டாராகையாலும் சைவர்கள் நினைப்பது மிகத்தவறென்பதில் ஐயமில்லை.

எப்படியானால் கீதையின், பத்தாமத்தியாயத்தில், 'சேனாபதிகளில் நான் கந்தனாகிறேன்' என்று கந்தனுக்கு விஷ்ணுவின் அம்சமுடைமை கூறப்பட்டதோ அப்படியே இவ்வாமன புராணத்திலும், கந்தன் விஷ்ணுவின் ஒரு சிறு பகுதியையுடையவன் என்று கூறப்பட்டுள்ளபடியால், அதைவிட இதில் விசேடம் ஏதுமில்லை. விஷ்ணுவின் அம்சமுடைமை மட்டும் கொண்டு திருமாலுக்கேயுரிய நான்கு தோள்கள் சக்கரம் சங்கு முதலிய அடையாளங்கள் கந்தனிடம் தென்படவேண்டியிருந்தால், 'எல்லா மரங்களுள்ளும் நான் அரசமரமாகிறேன்' என்று கூறப்பட்டுள்ள அரசமரத்திலும் திருமாலின் அடையாளங்கள் தென்படவேண்டியிருக்குமல்லவா?

பல சொல்லிப் பயனென்? 'விஷ்ணுவல்லாதவன் (-விஷ்ணுவின் அம்சம் பெறுதவன்) அரசனாகமாட்டான்' என்றுள்ள வசனத்தின்படி அரசரனைவரிடத்திலும் விஷ்ணுவின் அம்சம் கலந்துள்ளமை இன்றியமையாததொன்றாகையால், விஷ்ணுவுக்கேயுரிய அவ்வடையாளங்கள் எல்லாவரசர்களிடமும் ஏன் காணப்படவில்லை என்று கேள்விகேட்டால் என்ன விடையிறுப்பதென்பதைச் சைவர்கள் சிந்தித்து முடிவுகட்டுவார்களாக.

மேலும் வாமன புராணப்பகுதியில் 21 எண் குறித்த இரண்டாமத்தியாயத்தின் முடிவில் - குமாரன் ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி அதன் கரையில் உட்கார்ந்தான்.

அங்கு வாயுதேவனும் தவம் செய்து கொண்டிருக்கக் கண்ட அவ்வாறுமுகன் அவனருகிலேயே காலை பகல் மாலை என்னும் முச்சந்திகளிலும் தேவதேவர் தலைவனாய்ச் சங்கு சக்கரங்களை யேந்தியவனாய்ப் பரதேவதையான ஸ்ரீமந்நாராயணனை நினைத்துத் தியானம் செய்து சமாதிநிலையை அடைந்து கடுந்தவம் புரிந்தான் - என்று திருவேங்கடமலைக்கு வந்து தாரகாசுரனைக் கொன்றதனால் தனக்கு ஏற்பட்ட பாதகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகத் தவம் செய்யும் குமரன் சங்கு சக்கரம் தரித்த திருமாலைக் குறித்தே தவம் செய்கின்றமை கூறப் படுவதனாலும், 24 எண் குறித்த ஐந்தாமத்தியாயத்தில் - இதற்கு முன்னமே பிடித்துத் தவத்தில் ஊன்றியிருந்த வாயுதேவனுக்கு அவன் தவத்தின் பயனாக ஸ்ரீனிவாஸனென்னும் நாராயண பகவானுடைய தோற்றத்தைக் கூறி, அதுபோல் கந்தனுக்கும் அவனது தவத்தின் பயனாக அந்நாராயணனுடைய தோற்றமும், பிறகு கற்பம் முடியும் வரை அப்பெருமானைப் பூஜை செய்வதாகிற வரத்தைக் கந்தன் அவனிடமிருந்து பெறுதலும் வெளிப்படையாகக் கூறப்படுவதனாலும், பூஜை செய்பவன் கந்தனென்றும், அவனால் பூஜிக்கப்படும் தேவன் ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் தோன்றிய ஸ்ரீநிவாஸனென்னும் பெயர் பெற்ற ஸ்ரீமந்நாராயணனென்றும் தெளிவாகத்தெரிவதனால் பூஜிக்கப்படுபவனைப் பூஜை செய்யும் கந்தனென்று பித்தனன்றிப் பிறனொருத்தனும் பேசமாட்டான்.

கந்தன் ஸ்ரீநிவாஸனைப் பூஜித்தானென்னும் செய்தி ஸ்ரீவேங்கடாசல மகாத்மியம் கூறும் புராணப்பகுதிகளில் பெரும்பாலும் எல்லாவிடத்திலும் பிரசித்தமாக உள்ளது. ஆகையால்தான், வராகபுராணமுதற்பகுதி 61 எண் குறித்த இருபத்தொன்பதாமத்தியாயத்தில் ஸ்ரீநிவாஸனது நூற்றெட்டுப் பெயர்த் தொகுதியில் 'குமரனால் கற்பம் முடியும் வரையில் ஸேவிக்கப்படுமவன்', 'குமாரதாரா தீர்த்தத்தில் வசிக்கும் கந்தனது இஷ்டத்தைத் தருமவன்' என்று இரண்டு பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன.

மேலும் இச்சைவர்களைக் குறித்து இக்கேள்விகள் கேட்கப்பட வேண்டும். 1. ஸ்வாமி புஷ்கரிணியின் தென் கரையில் இப்போது எல்லோர் கண்களுக்கும் இலக்காகிய அர்ச்சைவடிவத்தோடு ஒரு தேவன் விளங்குகிருன். 2. தாரகாசுரவதத்தினால் தனக்கு உண்டாகிய கொலைப்பாதகத்தைப் போக்கிக் கொள்வதற்காகக் திருவேங்கடமலைக்கு வந்தவனும் ஸ்கந்தனென்ற பேருடையவனுமாகிய ஒரு தேவன் புராணத்தினால் அறியப்படுகிருன். 3. ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் பிரமன் முதலிய தேவர்கள் தேவரிஷிகள் ப்ரஹ்மரிஷிகள் ராஜரிஷிகள் தொடக்கமான எல்லோராலும் இயற்றப்பட்ட தவங்களின் பயனாக அவ்வனைவர் கண்களுக்கும் புலனாய், ஸ்ரீவைகுண்டத்திலுள்ள உயர்ந்த விமானத்துடன் தோன்றிய ஸ்ரீநிவாஸனென்னும் பெயர் பெற்ற ஒரு தேவன் புராணத்தில் புலப்படுகிருன். இவர்களில் முதலில் குறிக்கப்பெற்ற அரச்சை வடிவமுள்ள தேவனை, இச்சைவர்கள் இரண்டாமவனாகக் குறிக்கப்பட்ட ஸ்கந்தனென்று கூறுகின்ருர்களா? அல்லது மூன்ரும் தேவனாகக் குறிக்கப்பட்ட ஸ்ரீநிவாஸனென்று சொல்லுகின்ருர்களா என்பனவே அக்கேள்விகள்.

அவ்விரண்டு கேள்விகளுக்குள் அர்ச்சாமூர்த்தியைக் கந்தனென்று கருதும் முதற்கொள்கை - தனது பாதகத்தைப் போக்கிக் கொள்வதன் பொருட்டுத் தவமியற்றுவதற்காகத் திருமலைக்கு வந்த கந்தன், இம்மலையில் ஸ்ரீநிவாஸ பகவான் தோன்றுவதற்காகவும் அவனை நேரே காண்பதற்காகவும் தவமியற்றவந்த பிரமன் சிவன் இந்திரன் ஆகிய தேவர்களையும் மகரிஷிகளையும் போலவே எம்பெருமானைப் பூஜிப்பதற்கு மட்டும் இங்கு இருக்கிருனென்பதே தகுதியுடையதாகையால் இவன் ஒருவன் மட்டும் ஆராதிக்கப்படும் அர்ச்சாமூர்த்தியாக இருக்கிருனென்பதில் காரணமேதும் இல்லாமையாலும், குமாரதாரா தீர்த்தத்திலேயே இவனெப்போதும் வசிக்கிருனென்று கூறப்படுவதனால் ஸ்வாமிபுஷ்கரிணியின் தென்கரையில் இவனுக்கு நித்தியவாசம் நிறைவேற வழியில்லையாகையாலும், அக்

கரையில் கந்தன் அர்ச்சைவடிவில் ஒருவனால் பிரதிஷ்டை செய்விக்கப்பட்டானென்று வேங்கடாசல மகாத்மியங்கூறும் புராணப்பகுதிகளில் எங்கும் கூறப்பட்டதாகக் காணப்படா மையாலும், இதற்கு நேர்மாருக மூன்ருமவனான தேவ னாகக் குறிக்கப்பட்ட ஸ்ரீநிவாஸனே தேவர் மகிரிஷிகள் முதலியோரின் வேண்டுகோளினால் நித்தியவாசம் செய் கிருனென்றும், சங்கராஜன் தொண்டைமான்சக்கரவர்த்தி முதலியோர் அர்ச்சை வடிவமுண்டாக்கி ஆலயம் எடுப் பித்துப் பூஜை முதலியவற்றை அவனுக்கு நடத்திவைத் தார்களென்றும் புராணத்திலிருந்து தெரிய வருவதாலும் - பொருத்தமுடையன்று.

அர்ச்சை வடிவமுள்ள முதல்தேவன், மூன்ருந்தேவ னான ஸ்ரீனிவாஸனென்று கருதும் இரண்டாம் கொள்கை யின்படி, முதல்தேவன் கந்தனல்லன், ஸ்ரீநிவாஸனென்ற பேர்பெற்ற வேருெரு தேவன்தான் என்பது உறுதியா யிற்று.

ஸ்ரீநிவாஸனென்னும் பெயர் படைத்தவன் கந்தனே, அவன் வேருேர் தேவனல்லன் என்பதும் பொருந்தாது. கந்தனுடையவும் பிரமன் சிவன் இந்திரன் முதலிய எல் லாதேவர் மகரிஷிகள் முதலியோருடையவும் தவங்களின் பயனாய்த் தோன்றி அவர்களால் ஆராதிக்கப்பட்டுள் ளதனால் அவர்களைக் காட்டிலும் வேறுபட்டவனாகவே ஸ்ரீநிவாஸன் அங்குத் தோன்றியதனாலும் ஸ்ரீநிவாஸனது தோற்றத்தைக் கூறும் புராணப்பகுதிகளில் ஸ்ரீமந்நாராய ணனே ஸ்ரீவைகுண்டத்திலிருந்து விளையாடுவதற்காகவும் உலகத்தைக் காப்பதற்காகவும் திருமலையில் தோன்றி னானென்று, விஷ்ணுவையே குறிக்கும் நாராயணன் என் னும் சொல்லாலேயே வெளிப்படையாக அறியப்பட்ட இந்தஸ்ரீநிவாஸனைக் கந்தனென்று கருதுவதற்குச் சிறிது மிடமில்லாமையாலும் அங்ஙனம் கூறுதலில் பொருந்தாமை காண்க.

ஆதலால், கந்தனென்கிற இவ்வாதம் - முன்னும் பின்னும் இருக்கும் புராண வசனங்களின் அமைப்பைச் சிறிதும் ஆராயாமல் மந்தமதிகளால் (சிற்றறிவாளரால்) கிளப்பப்பட்டதாகையால் பேரறிவாளர்களால் கொள்ளத்தக் கதல்ல.

இனி இப்பெருமான் மகாதேவனும் (சிவபெருமானும்) அல்லன். முற்கூறியபடி மூன்றுவனாகக் குறிக்கப்பெற்ற ஸ்ரீநிவாஸன் மகாதேவனாயிருந்தால்தான் அவனுடைய அர்ச்சாரூபனான முதல்தேவன் மகாதேவனென்று கூறமு டியும். மூன்றுமவன் நாராயணனென்பது அவனது தோற்றத்தைக் குறிக்கும் பகுதிகளிலுள்ள நாராயணபதம் முதலியவற்றுலேயே வெளிப்படையாக அறியப்பட்டபடி யால் இவன் மகாதேவனென்ற கதை, இவன் கந்தனென்ற கதையோடு சேர்த்து மறுக்கப்பட்டொழிந்தது.

கந்தன் வந்ததற்குப்பின்பு ஸ்ரீனிவாஸ பகவான் பிரசித் தமாகப் பெரியதோர் தோற்றம் செய்தருளுவதற்குச் சிறிது முன்பு பிரமன் இந்திரன் முதலிய தேவர் முனிவர்களின் கூட்டம் போல் இம்மகாதேவனும் திருவேங்கடமலைக்கு வந்து அவனுடைய தோற்றம் அவனை நேரே காண்கை முதலானவை ஸித்திப்பதற்காக மலைத்தாழ்வரையில் தவ வொழுக்கத்தில் ஊன்றியிருந்து அப்பெருமான் தோன்றும் போதுண்டான பெரிய ஒலியைக் கேட்டு, பரமபதத்தி லிருந்து வந்த திவ்விய விமானத்துடன் தோன்றியதும் உலகனைத்தின் படைப்பு அழிப்புகளுக்குக் காரணமான தும் அவனால் காட்டப்பெற்றதுமாகிய அவனது முத லுருவத்தைக் கண்டு தொழுது தனது கோரிக்கையை விண்ணப்பித்தல் முதலான சல்லாபத்தைச் செய்துவிட்டுத் திரும்பவும் தன் பரிவாரத்துடன் கைலாசம் சென்றுனென் றும், ஸ்ரீநிவாஸ பகவான் மட்டும் திருமலையிலேயே நித்தியவாசம் செய்து வந்தானென்றும் வாமன புராணப் பகுதியில் விளக்கமாகவே கூறப்பட்டுள்ளதனால் எவ்வாறு இந்த ஸ்ரீநிவாஸன் மகாதேவனாயிருக்கமுடியும்?

தில் - [illegible] கொண்ட கந்தன் [illegible] வேலுமேந்திக்கொண்டு தேவசேனைகளுடன் தவஞ்செய்யச் சென்றபின்பு மகனிடம் உண்டான பாசத்தால் தூண்டப்பெற்ற பார்வதியானவள், பிறையைச் சிரஸ்ஸில் சூடியவரும் நன்மைக்கிடமாயிருப்பவரும் ஊழியில் அனைவரையும் அழிப்பவருமாகிய தன் கணவனாரைப் பக்தியோடு வணங்கி, 'முக்கண்ணனே, சிறுவனாகிய என் மகன் அம்மலையில் என்ன செய்யப்போகிறான்? பிரமதேவனாலும் மனத்தினால் சிந்திக்கவும் முடியாத அந்த விஷ்ணுதேவனை அவன் எங்ஙனம் தன் கண்ணால் காணப் போகிறான்' என்று கேட்க, அதற்குப் பரமேச்வரன் "மலையரசன் மகளாகிய தேவியே, நடக்கப்போகிற பெரிய இரகசியச் செய்தியொன்றை உனக்குக் கூறுகின்றேன் கேள், பரப்பிரம்மமாகிய விஷ்ணுவைக் காணவிரும்பிய முனிவர் அனைவரும் மிக உயர்ந்த தவத்தைச் செய்யும் பொருட்டு அம்மலைக்கு வரப்போகின்றனர். தேவர் மனிதர் பித்ருக்கள் கந்தருவர் இயக்கர் இராக்கதர் சித்தர் சாத்யர் கருடர் பன்னகர் முனிவர் ஆகியவர்களும் நித்தியனான பரமாத்மாவை நேராகக் காண விருப்பங்கொண்டு அம்மலையில் தவமியற்றப் போகின்றனர். காதலியே, நாம் இருவரும் வெகுகாலங் கழித்து புண்ணியமான வேங்கடமலையில் தோன்றப்போகிற நாராயணனென்றும் பரப்பிரம்மமென்றும் சொல்லபப்டும் பரம்பொருளைக் காண்பதற்காகச் செல்வோம். அதன் தோற்றத்தின் பொருட்டுப் பெருந்தவம் புரிவதற்காக நாமும் பிற தேவரும் முனிவரும் அங்குச் செல்ல வேண்டும்" என்று கூறினார் என்றும்,

24 எண் குறித்த ஐந்தாமத்தியாயத்தில் - சங்கராஜனுடைய கோரிக்கையை நிறைவேற்றுவதற்காகத் திருமால் உலகில் மிகவும் பிரசித்தமாம்படிப் பெரியதோர் தோற்றத்தைச் செய்யப்போகிறார். எல்லாவுலகின் நன்மைக்காகவே சங்கராஜனை வியாஜமாகக் கொண்டு புனிதமான வேங்கடமலையில் தோன்றப் போகிறார். அதற்காக முன்பாகவே

நாமும் மிகப் பெரிய தவமொன்றைச் செய்வதற்காக வெகு காலங்கழித்து அங்குச் செல்வோம். தேவர்களனைவரும் எல்லா முனிவர்களும் அங்குச் செல்லப் போகின்றனர். அப்போது விஷ்ணு பக்தியில் கருத்து ஊன்றப் பெற்ற குமரனைக் காண்போம் - என்று சிவபெருமான் கூறப் பார்வதி கவலை நீங்கப் பெற்றாள். அதன் பின்பு வெகு நாட்கள் கழித்துத் திருமலைக்குச் செல்ல விரும்பிய சங்கரன், மகனான கந்தனைக் காண்பதில் மிக்க ஆசை கொண்ட பார்வதிதேவியைக் குறித்து நான் உன்னிடம் முன்பு கூறியபடி திருவேங்கடமென்னும் பெரும்புண்ணியந்தரும் உயர்ந்த மலைக்குச் செல்ல வேண்டிய காலம் இப்போது வந்து விட்டது என்று கூறினான் என்றும், அதே அத்தியாயத்தின் மேற்பகுதியில் - மலைமகளே, நாம் இருவரும் நமது பரிவாரங்களுடன் அம்மலைக்குச் சென்று, தேவசேனையுடனும் வேடர்களுடனும் உலாவிக்கொண்டிருக்கும் குறையற்ற குகனைக் கண்டு கொண்டு அங்கேயே எப்போதும் வசிப்போம் - என்று பார்வதியிடம் கூறிய சங்கரன் அவளுடன் விருஷபவாகனமேறிக் காண்பதற்காக வேங்கடமலைக்குச் சென்றான் என்றும் சொல்லப்பட்டது.

இப்படியே 28 எண் குறித்த ஒன்பதாமத்தியாயத்தில் - முனிவர் கணங்களுடன் கூடிய அகத்திய முனிவர் ஸ்ரீநிவாஸ பகவான் தோன்றுவதை எதிர்பார்த்தபடியே திருமலையை வலம்வந்து கொண்டிருக்கையில், அவர் தெற்குத் திசையிலுள்ள தாழ்வரையில் கபில தீர்த்தத்தின் அருகில் கணங்களுடன் கூடி ஸ்ரீநிவாஸ பகவானுடைய தோற்றத்திற்காகக் கடுந்தவம் புரிந்து கொண்டு சமாதி நிலையில் இருக்கும் மகாதேவனை அணுகி மகிழ்ச்சியோடு வார்த்தையாடினர் என்று கூறப்பட்டது.

35 எண் குறித்த பதினாறுமத்தியாயத்தில் - ஒப்பற்ற அவ்வொலியைக் கேட்ட லோக பிதாமகனாகிய பிரம தேவன் வாசுதேவனாகிய ஹரி தோன்றிவிட்டானென்று அறிந்து உடனே தேவர் முனிவர் கந்தருவர்களின் கூட்டத்

தோடு சேர்ந்து, வருத்தம் சிறிதுமின்றிப் பயன்பெறும் காரியம் செய்யும் அந்த க்ருஷ்ணபகவானுடைய ஸமீ பத்திற்கு வந்தான். சடைமுடியோடு விளங்குமவனும் ஜொலிக்கின்ற சூரியனோடொத்தவனும் திரிபுரமெரித்த வனும் முக்கண்ணனுமான சங்கரபகவானும் அவ்வொலி யைக்கேட்டு, புண்ணியமான எண்ணங்கொண்ட ஹரிபக வான் தோன்றினான் என்றறிந்து உடனே அவனைக் காண்பதற்காக அவனருகில் வந்து சேர்ந்தான் - என்றிது முதலாக, மிக்கதோர் பேரொலியுடன் ஸ்ரீநிவாஸ பகவான் தோன்றியவுடன், அவ்வொலியைச் செவியேற்றுப் பிரமன் சிவன் இந்திரன் முதலான ஸகல தேவர்களும் எல்லா முனிவர்களும் வந்து பகவானை வணங்கியது துதி செய்தது தத்தம் கோரிக்கைகளை விண்ணப்பம் செய்தது முதலியன கூறப்பட்டன.

38 எண் குறித்த பத்தொன்பதாமத்தியாயத்தில் - சந்திரகலையைத் தரித்தவனும் சம்புவென்றும் சிவனென் றும் அழைக்கப்படுகின்ற சங்கரபகவான் திருவேங்க டமலையிலிருந்து கைலாசத்திற்கு எவ்வாறு சென்றான் எனத்தொடங்கி, சிவன் கைலாசம் சென்றமை கூறப்பட் டுள்ளதேயன்றி ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் அவன் வசித்தமை கூறப்படவில்லை. ஸ்ரீநிவாஸனுக்குத் தான் ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் கற்பம் முடி யும் வரை வாசமென்பது - 'உலகத்தைக் காப்பதற்காகக் கற்பம் முடியும் வரையில் இங்கு வசிக்கப்போகிறேன்' என்று கூறிய பகவானுடைய வாக்கியமானது வாமன புராணப்பகுதி 24 எண் குறித்த ஐந்தாமத்தியாயத்தில் மகாதேவனாலேயே அனுவாதம் செய்யப்பட்டிருப்பதனால் வெளிப்படையாகப் புலப்படுகிறது.

49 எண் குறித்த - வராகபுராண முற்பகுதியிலுள்ள பதினேழாமத்தியாயத்தில் ஸ்ரீனிவாஸ பகவானது தோற் றத்தைக் கூறுமிடத்தில் மகாதேவன் திருவேங்கடமலை யின்மேல் தான் வசித்தலை ஸ்ரீநிவாஸனிடம் வேண்டிக்

கொண்டபோதும், பரம பதத்திலிருந்து வந்த மலையில் கீழுலகங்களில் உள்ளவர்கள் பூஜிக்கப்படுமவர்களாக இருத்தல் தகுதியற்றதென்று ஆராய்ந்த அப்பெருமான் அம்மகாதேவனுக்கு அம்மலையின் தாழ்வரையிலேயே வாசத்தை இசைந்தானென்பதும் முன்பே கூறப்பட்டது. அங்கும், 'கற்பகால விறுதி வரையில், இவ்வேங்கடமென்னும் மலையிலே வசிக்கப்போகிறேன்' என்று மகாதேவனிடம் ஸ்ரீநிவாஸபகவானாலேயே தன்னுடைய நித்யவாசம் திருமலைமேல் என்பது உறுதியாகக் கூறப்பட்டமை அறியப்படுகிறது.

ஆக, மகாதேவன் ஸ்ரீநிவாஸன் தோன்றும் சமயத்தில் பிரமன் முதலியோரைப் போல் அப்பெருமானைக் காணுதல் வணங்குதல் முதலியவற்றிற்காக ஸ்வாமி புஷ்கரிணிக் கரைக்கு வந்து திரும்பிச் சென்றது மட்டுந்தான் அறியப்படுவதனாலும், அங்குத் தோன்றிய பெருமானுக்கே அதன் கண் நித்யவாசம் அறியப்படுவதனாலும், அவன் பிரமன் சிவன் முதலிய தேவராலும் முனிவராலும் மற்ற எல்லோராலும் வணங்கத்தக்க பதவியிலுள்ளவனென்றும், அவனது தோற்றத்தை வருணிக்கும் புராணப்பகுதிகளில் உள்ள நாராயணனென்னும் சொல் முதலிய ஆகமளவையினாலேயே அப்பெருமான் நாராயணன் என்றும் அறியப்படுவதனாலும் அவனது அர்ச்சைவடிவத்திலுள்ள இந்தப்பெருமான் மகாதேவனாக இருத்தல் தகுதியுடையதன்றென்று சொல்லப்பட்டதாயிற்று.

மேலும் மகாதேவன் லிங்க வடிவத்திலேயே வழிபடப்பெறுதல் உலகத்திலும் சாத்திரங்களிலும் பிரசித்தமாயிருப்பதனாலும், எல்லாவுறுப்புக்களுடனும் கூடியதோர் பிம்பவடிவில் மகாதேவனை வழிபடுவது எங்கும் பிரசித்தமாயிராததோடு சாத்திரநூல்களில் மறுக்கப்பட்டுமிருப்பதனாலும் பிம்பவடிவிலுள்ள இப்பெருமான் மகாதேவனல்லன். லிங்கவடிவிலேயே மகாதேவனை வழிபடவேண்டுமென்றும் பூர்ணமான பிம்பவடிவில் அவனை வழிப

டக் கூடாதென்றும் ஸ்ரீவேங்கடாசலமாகாத்மியம் கூறும் பவிஷ்யோத்தரபுராணப்பகுதியின் இரண்டாமத்தியாயத்தி லும் விளங்கப்பட்டிருக்கிறது.

முழு வடிவங்கொண்ட இந்த ஸ்ரீநிவாஸப் பெருமான் மகாதேவனைக் காட்டிலும் வேறுபட்டவனாய் அவனது மிகப்பெரிய பக்திக்கு இலக்காகிய நாராயணனேயாகை யால், வராக புராண முதற்பகுதியின் 61 எண் குறித்த இரு பத்தொன்பதாமத்தியாயத்தில் உள்ள நூற்றெட்டுத் திருநா மத்தொகுதியில் உள்ள நூற்றெட்டுத்திருநாமத்தொகுதியில் ‘தாழ்வரையிடத்திலுள்ள சங்கரனால் தியானக்கப்பெற்ற திருமேனியுடையவன்’ என்றும், பிரம்மாண்டபுராணத்தின் அநுபந்தமான வேங்கடேச ஸஹஸ்ர நாமாத்தியாயத்தில் ‘நீலகண்டனால் வணங்கித் துதிக்கத்தக்கவன்’ என்றும், ‘ஸுவர்ணமுகரி நதியின் கரையில் வசிக்கும் சிவபெருமா னால் தியானம் செய்யப்பட்ட திருவடித் தாமரைகளை யுடையவன்’ என்றும் ஸ்ரீநிவாஸனுடைய திருநாமங்கள் படிக்கப்படுகின்றன. ஆகையால் தான், பவிஷ்யோத்தர புராணத்தின் உத்தரகண்டத்திலுள்ள எண்பதாமத்தியாயத் தில் ஸ்ரீனிவாஸனென்று பெயர் படைத்த ஸ்ரீவேங்க டேசன், தான் தினந்தோறும் செய்யுமதாய் மனத்துக்குப் பிடித்ததாய்ப் பரமரகசியமான தியானத்திற்கு இலக்கான வனும் தனது பரமபக்திக்கு இலக்கானவனுமான நாரா யணனேயாவான் - என்று பார்வதியினிடம் மகாதேவனே கூறியதாக வெளிப்படையாகக் காண்கிறது.

சடையும் நாகாபரணமும் தரித்துள்ளமை மகாதேவ னிடத்திலேயே மிகவும் பிரசித்தமாயிருப்பதனால் அவை யிரண்டையும் தரித்த இப்பெருமான் மகாதேவனாவா னென்று சொல்லுவது, விஷ்ணுவுக்கே உரிய நாராயணப தம் முதலிய ஆகமவளவையால் இவன் நாராயணனென் பது உறுதிப்படும்போது சடையும் நாகாபரணமுமாகிற அனுமானவளவையால் இவனை மகாதேவனாக ஊகித்த றிதல் பொருந்தாமையாலும் விஷ்ணுவின் அவதாரங்களி

லும் சடைநாகாபரணங்களுள்ளமை பிரமாண நூல்களில் பிரசித்தமாயுள்ளதென்பது முன்பே அறிவிக்கப்பட்டமையி னாலும் தகுதியுடையதன்று.

மேலும் சைவர்கள் - உருத்திரனுக்கு அவதாரங்களி ருப்பதாகப் பேச்சே இல்லாமையால் ஒரே விதமான அவ னுடைய உருவத்தில் சடையும் நாகாபரணமும் எப்போது முள்ளதனால் அவை அவனிடம் பிரசித்தமானவை என் றும், பல அவதாரங்கள் செய்த விஷ்ணுவுக்கோவென்றால் அவை சிலவற்றில் இருந்து சிலவற்றில் இல்லாமையினால் அவனிடம் அவ்விரண்டும் பிரசித்தமானவையல்லவென்றும் கொண்டு அவை எவனிடத்தில் பிரசித்தியைப்பெற்றுள்ள னவோ அத்தேவனாகவே ஸ்ரீநிவாஸனைக் கொள்ளவே ணுமென்று கருதுகின்றனர்.

அக்கருத்து - ஒவ்வோர் கற்பங்களிலும் உண்டாகிற விஷ்ணுவின் பல அவதாரங்களில், எந்தெந்த அவதாரத்தில் எவ்வெவ்வடையாளம் அறியப்பட்டுள்ளதோ, அந்தந்த அவ தாரத்தில் அவ்வவ்வடையாளம் ஒவ்வொரு கற்பத்திலும் தவறுமல் காணப்படுகின்றமையால் விஷ்ணுவினிடத்தில் சடை முதலிய அடையாளங்களுக்குள்ள அதிகப் பிரசித்திக் குக் குறையொன்றுமில்லாமையினாலும், இதற்கு நேர்மா றாக உருத்திரனுடைய ஒரேயுருவத்தில் சடை முதலியவை ஒவ்வொரு கற்பத்திலும் இருப்பதனாலும், விஷ்ணுவுக் குப் பல உருவங்களில் அவையிருப்பதனாலும், உருத்தி ரடனிடம் அவற்றிற்கு உள்ள பிரசித்தியைக் காட்டிலும் விஷ்ணுவினிடம் உள்ள பிரசித்தியே அதிகமாகையாலும் - தவறுகும்.

சடை தரித்தலென்பது விஷ்ணுவின் பல அவதா ரங்களில் பல பிரமாணங்களால் பிரசித்தமாயுள்ளது. ஸ்ரீராமாவதாரத்தில் சடையுடைமை ஸ்ரீராமாயணாதிகளில் பிரசித்தமென்பது முன்பே அறிவிக்கப்பட்டிருக்கிறது. அச் செய்தி ஸ்ரீவேங்கடாசல மாகாத்மியங் கூறும் பிரம் மாண்ட புராணத்தின் அநுபந்தமாகிய ஸ்ரீவேங்கடேச

ஸஹஸ்ரநாமாத்தியாயத்திலும் 'சடையுடையவன், பர்ண சாலையிலிருப்பவன், மாரீசனது பலத்தை அழித்தவன்' என்று காட்டப்பட்டுள்ளது.

நாகத்தை ஆபரணமாகப் பூணுதலென்பது - பகவானுடைய பல அவதாரங்களுக்குள் ஸ்ரீவேங்கடேசாவதாரத்தின் உருவத்தை அறிவிக்குமதாயும் பிறவற்றினிடமிருந்து வேறுபடுத்துவதாயுமுள்ள மிகப் பிரசித்தமான தன்மையென்பதும் முற்காட்டிய ஸஹஸ்ரநாமாத்தியாயத்தில்-வேட்டையாடுவதில் தளராத முயற்சியுடையவன், சங்கராஜனுக்கு மகிழ்ச்சியைத் தருமவன், சிவனிடத்திலுள்ளவன், கருடனது உடலினால் வஹிக்கப்பட்டவன், சரீரமில்லாதவன், அரவரசனது உடலினால் சுற்றப்பெற்றிருத்தலைத் தனக்கு அடையாளமாகவுடையவன், பிரமன் முதலியவர்களின் கூட்டத்தினால் ஸேவிக்கப்பெற்றவன், ஆயிரம் சூரியரின் ஒளியைக் கொண்டு விளங்கும் விமானத்தின் உள்ளே நிற்பவன், நற்குணம் நிரம்பியவன் - என்றிது முதலாக ஸ்ரீவேங்கடேசாவதாரத்தின் லக்ஷணத்தைக் கூறும் பகுதியில், 'அரவரசனது உடலினால் சுற்றப்பெற்றிருத்தலைத் தனக்கு அடையாளமாகக் கொண்டவன்' என்று காட்டப்பட்டது. இப்பொருளைக் கூறும் தொடர் - போகீந்த்ரபோக ஸம்ஸ்தாந: என்பதே, போகீந்த்ர போக: - அரவரசனது உடல், எவனுக்கு, ஸம்ஸ்தாநம் - வஸ்துஸம்ஸ்தானமென்ற சொல்லால் குறிக்கப்பட்டுத் தன்னுருவத்தை நினைவூட்டுகின்ற தனக்கே உரிய இயற்கைத் தன்மையாக உள்ளதோ, அவன் போகீந்த்ர போகஸம்ஸ்தாநன் என்று அன்மொழித் தொகையாகக் கொண்ட இத்தொடரால் நாகாபரணமணிவதையே கூறியுள்ளமை தெரியலாகும். இவ்வேங்கடேசாவதாரத்திற்கே உரிய வேட்டையில் தளராத முயற்சியையுடைமை சங்கராஜனுக்கு மகிழ்ச்சியைத் தருகை முதலிய தன்மைகளோடு கூட நாகாபரண மணிவதைக் கூறியுள்ளதனால் இது இப்பெருமானுடைய தனிப்பட்ட தன்மை என்பது ஸித்திக்கின்றது.

இங்கு, சிவனிடத்தில் இருப்பவன் என்பது, பவிஷ்யோத்தர புராணத்தின் உத்தர கண்டத்திலுள்ள ஸ்ரீவேங்கடேச்வர ரகஸ்யாநுபவமென்னும் பெயருடைய எண்பதாமத்தியாயத்தில் - ஸ்ரீவேங்கடேசாவதாரமானது எப்போதும் மகாதேவனது மனத்திலிருக்கிற மிகவும் ரகசியமான தியானமென்னும் அநுபவத்திற்கு இலக்காகிய (தியானிக்கத்தக்க) பொருளாயிருப்பது என்று கூறியுள்ளதனோடு ஒத்த கருத்தை உடையதாகும். சரீரமில்லாதவன் என்பதும் விமானத்துடனும் சங்கு சக்கரம் முதலிய அடையாளங்களுடனும் கூடிய ஸ்ரீவேங்கடேச திவ்ய மங்கள வடிவினுடைய எல்லார் கண்களுக்கும் இலக்காகுந்தன்மை இலக்காகாத தன்மைகளுக்கு முறையே காரணமான. தோற்றநிலை மறைவுநிலை என்ற இரண்டு நிலைகளும் எல்லாப் புராணங்களிலும் அறியப்படுவதனாலும், அவ்விரண்டு நிலைகளையும் கருத்திற்கொண்டு, முற்காட்டிய பவிஷ்யோத்தர புராணத்தின் உத்தரகண்டத்தில் எண்பதாமத்தியாயத்தில், ஆகாரமுடையவனென்றும் ஆகாரமில்லாதவனென்றும் குறிப்பிடப்பட்டிருத்தலாலும், அவ்விருநிலைகளுள்ளே மறைந்த நிலையிலுள்ள வடிவமுள்ளமையைக் கூறியதனோடு ஒத்த கருத்துடையதாய்க் கொண்டு எல்லாருடைய கண்களுக்கும் புலப்படும் சரீரமில்லாமையைக் குறிக்கின்றதென்று கொள்க.

திருமாலைத் தவிர்த்த மற்றையோர்களுக்குள்ளும் நாகபூஷணமென்பது மகாதேவனிடமே பிரசித்தமாகவுள்ளதென்பதும், கருடனிடத்தில் நாகபூஷணம் மிகமிகப் பிரசித்தமாக உள்ளதனால் தவறேயாகும். பாத்ம புராணப்பகுதி 26 எண் குறித்த மூன்றுமத்தியாயத்தில் சுகமுனிவருக்காகப் பத்மஸரோவரத்தின் கரையில் ஸ்ரீனிவாஸ பகவானது தோற்றத்தைக் கூறும் கெட்டத்தில் (ஸத்யன் ஸுபர்ணன் கருடன் தார்க்ஷ்யன் விஹகேச்வரன் என்று பெயர் பெற்ற) ஐந்து வியூஹ மூர்த்திகளை உடையவனும் பஞ்சோபநிஷத்தினால் ஆகிய (= இந்தப் பிரகிருதி மண்டலத்தின் மேலுள்ள உயர்ந்த பஞ்சபூதங்களினால் ஆகிய) திருமே

னியைப் பெற்றவனும் பராக்கிரமத்தில் அனுமானைப் போன்றவனும் அதர்வவேதத்தின் உட்பிரிவுகள் ஐந்தினையும் தனது ஐந்து அவயவங்களாக உடையவனும் ருக்கு யஜுஸ்ஸு ஸாமம் என்னும் வேதங்களைத் தனது திருவுடம்பாகக் கொண்டவனும் நாகாபரணமணிந்தவனும் அளவிடற்கரிய பெருமையை உடையவனுமான கருடனுடைய திருத்தோளாகிய பீடத்தில் அமர்ந்தவன் - என்றுள்ள இவ்விடத்தில் ஸ்ரீநிவாஸனது வாகனமாகிய வினதை சிறுவனுக்கு நாகாபரணமுள்ளமை மிகப் பிரசித்தமாகக் காட்டப்பட்டது.

ஸ்ரீபாஞ்சராத்திர சாத்திரத்தில், திருமாலின் திவ்யாயுதங்கள் வாகனங்கள் முதலிய உருவங்களைக் கொண்ட நித்ய சூரிகளுக்கு, திருமாலின் தேஜஸ் எனப்படுகின்ற - பிறரை அடக்கியாளுமாற்றலால் அபிவிருத்தியடைந்த உருவமுடைமையினாலேயே அவ்வப்பொருளாகுந்தன்மை சித்திப்பதனால், முன்காட்டிய கருடனுடைய சக்தியும் விஷ்ணுவின் ஒரு சக்தியேயாகுமென்பது நிலைபெற்றது.

இங்ஙனம் சடை தரித்தல் முதலான லக்ஷணங்கள் திருமாலின் ஓர் அவதாரத்தின் லக்ஷணங்களென்றும் அறியப்படுதலால், அவற்றை வேறு தெய்வத்தின் லக்ஷணங்களாக மட்டும் அறுதியிட்டிருக்கும் சைவர்கள் - சக்கரம் முதலிய லக்ஷணங்களைக் கொண்டு இப்பெருமானை வைஷ்ணவர்கள் விஷ்ணுவென்று கூறினால் சடை தரித்தல் முதலான சிவ லக்ஷணங்களைக் கொண்டு இவனைச் சிவனென்று சொல்லும் எங்களைத் தடுப்பார் யார் என்று வாதிக்கும் வாதம் மறுக்கப்பட்டதாயிற்று.

சக்கரம் முதலிய லக்ஷணங்களோவெனில் திருமாலுக்கே உரியனவென்று கீழ்க்காட்டிய வாமனபுராணத்திலேயே, தனக்கும் திருமாலுக்கும் நடந்த சம்பாஷணையை அப்படியே அநுவாதம் செய்கின்ற சிவபெருமானாலேயே பார்வதியிடம் கூறப்பட்டுள்ளது. 22 எண்ணிட்ட வாமன புராணத்திய மூன்றுமத்தியாயத்தில் உலகிற்கு நன்மை

யைச் செய்யும் சங்கரன் இது கேட்டுப் பார்வதியைக் குறித்துக் கூறினான். மலைமகளே, ஆதியந்தமற்றதும் மிக உயர்ந்ததும் அளவிடலரிய ஆற்றல் பெற்றதும் கோடி சூரியரோடு ஒத்த வொளி படைத்ததும் சுதர்சனமென்னும் பெயர் கொண்டதுமான அச்சக்கரம் விஷ்ணுவுக்கே உரியதாகும். புருஷோத்தமனான அவனாலன்றி வேறொருவராலும் அதைத் தாங்க முடியாது. அத்திவ்யமான சக்கரத்தினால் வாராணஸி (காசி) என்ற எனது இராஜதானி (காசி மன்னன் ஏவிய) பேயின் காரணமாக எரிக்கப்பட்டு அழிந்தது. பின்பு ஒருகால் என்னிடம் அன்பு கொண்ட ஜனார்த்தனன் (திருமால்) எனக்கு வரங்கொடுக்க விரும்பி, உனக்கு என்ன வேண்டுமென்று என்னை வினவினார். இங்ஙனம் அவர் வினவ, ஹரியே என்னிடம் அன்பு கொண்ட நீர் எந்தச் சக்கரத்தினால் எனது நகரம் தஹிக்கப்பட்டொழிந்ததோ அந்தச் சக்கரம் எனக்கு வசப்பட்டு ஏவல் புரியும்படி செய்ய வேண்டுமென்றும் வேறு வரம் நான் வேண்டேனென்றும் கூறினேன். இவ் விண்ணப்பத்தைக்கேட்ட மதுசூதனன் முறுவல் செய்து தமது கரத்தினால் எனது கையைப் பற்றிக் கொண்டு, பிரமதகணங்கட்குத் தலைவனான சங்கரனே, சூரியனது ஒளி அவனைவிட்டு வேறொரிடத்தில் எங்ஙனம் இருக்கும். அதுபோலவே ஸ்ரீமஹாலக்ஷ்மி கௌத்துபமணி சக்கரம் சார்ங்கவில் கருடன் என்று இவை முதலிய பொருள்கள் எப்போதும் எனக்கே உரியவை. இவற்றுக்கும் பிறப்பிறப்புக்கள் இல்லை. வேறொருவரிடமும் இவை இருக்கமாட்டா. ஆகையால் நீ கேட்ட இவ்வரம் கொடுக்கமுடியாது என்று கூறினார். என்றிது முதலாக சக்கரம் முதலிய லக்ஷணங்கள் திருமாலொருவனுக்கே உரியவை யென்று வெளிப்படையாகக் காட்டப்பட்டது. சக்கரம் முதலியவை விஷ்ணுவுக்கே உரியவையாதலாலும் சடை முதலியன விஷ்ணுவின் ஓர் அவதாரத்திற்கும் பொதுவானவையாதலாலும், இத்தேவனைச் சிவபெருமானாகக் கட்டுங்கதை பொருந்தாததேயாகும்.

வைஷ்ணவர்களால் எல்லாவற்றுக்கும் காரணமாக இசையப்பெற்ற விஷ்ணுவினிடத்தில் எல்லா லக்ஷணங்களும் பொருந்துமென்று கூறப்படும் முறைப்படியே எங்களால் அங்ஙனமே இசையப் பெற்ற மகாதேவனிடத்திலேயே எல்லா லக்ஷணங்களும் பொருந்துமென்று சைவர்கள் கூறுவதும் பொருந்தாது. நாராயணனைத் தவிர மற்றொருவருக்கும் எல்லாவற்றுக்கும் காரணமாக இருத்தலென்பது பொருந்தாமை வேதங்களில் மிகவும் பிரசித்தமாயிருப்பதனாலும், திருமாலுக்கே உரிய நாராயணன் முதலிய சொற்களாகிய ஆகம வளவையால் எல்லாவற்றுக்கும் காரணன் நாரணனேயென்று நிச்சயிக்க முடியுமாகையால் சிவபெருமானிடம் எல்லாவற்றுக்கும் காரணமாகுந்தன்மை பொருந்துமா பொருந்தாதா என்னும் விவகாரத்தைத்தீர்ப்பது இப்போது அவசியமின்மையாலும் அவர்களின் கூற்று பொருந்தாமை அறியத்தகும். ஆகையால் ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையிலுள்ள அர்ச்சாமூர்த்தி மகாதேவனன்றென்பது திடமாயிற்று.

இனி இப்பிரான் ஹரிஹராவதார ரூபனுமல்லன்.சங்கு சக்கரம் முதலிய திருமாலுக்கே உரிய அடையாளங்களை வேறொரு தெய்வத்துக்கு ஏற்றிச்சொல்ல முடியாமையாலும் , சடை நாகாபரணம் தொடக்கமானவை திருமாலுக்கும் உண்டென்பதைக் கீழ்க் காட்டினமையாலும், இப்பிரானுடைய தோற்றத்தைக் கூறுமிடங்களில் ஸ்ரீவைகுண்டம் முதலிய இடங்களிலிருந்து திருமாலே நேராக இங்கு வந்து தோன்றினானென்று குறிக்கும்போது நாராயணன் விஷ்ணு என்று இத்தகைய திருமாலுக்கே உரிய பெயர்களாகிய ஆகம வளவையினாலாயே இப்பிரான் நாராயணனே என்று நிச்சயிக்கப்படுவதனாலும் இவனுக்கு ஹரிஹராவதார வடிவமில்லாமை அறுதியிடலாகும்.

பேயாழ்வார் அருளிய 'தாழ்சடையும்' என்று தொடங்கும் பாசுரத்திலும், இரு தேவர்களின் உருவமானவன் இவன் என்னாமல் தம் தலைவனான ஸ்ரீமந் நாராயண

னுக்கே இரண்டு உருவங்களும் லக்ஷணங்களாக விளங்கு கின்றன என்றே குறிக்கப்பட்டுள்ளதனால் அப்பாசுரத்தை அத்தாட்சியாக்கி இப்பெருமானுக்கு ஹரிஹராவதாரரூப னாந் தன்மையைச் சாதிப்பது பொருந்தாதென்று குறிக் கொள்க. இங்ஙனமே இப்பெருமான் தோன்றும்போது பிர மன் சிவன் முதலிய தேவர்கள் அனைவரும் தத்தம் இருப் பிடங்களிலிருந்து வந்து இவனை ஸேவித்தனர் என்று வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளபடியினால், இவன் சிவபிரானாயிருந்தால், தந்தையான பிரமன் தனயனான இவனை வணங்கியதாகக் குறித்துள்ளமையும், சிவபிரா னான தானே தன்னை வணங்கியதாக வருணித்துள்ள மையும் பொருத்தமற்றதாகிவிடும். மேலும் சிவபிரானான இவன் இம்மலையிலேயே இருப்பது நிச்சயிக்கப்படுமள வில், கைலாஸமென்று பெயருள்ள வேறோரிடத்திலிருந்து இவனை வணங்குவதற்காகச் சிவபெருமான் வருவதும் திரும்பிச் செல்வதும் வருணிக்கப்பட்டுள்ளமை பொருந்த வழியில்லையாய் விடும்.

மேலும் இவன் ஹரிஹராவதார ரூபனென்று சொல் லும் சைவர்கள் ஒருபாதி பார்வதியும் மற்றொரு பாதி பரமசிவனுமாகிய அர்த்த நாரீச்வரர் போல் ஒரே உடலில் இரு தேவர்களின் உண்மையைக் கருதுகின்றார்களென்று கொள்ள வேணும். அது திருமாலுடைய அப்ராக்ருதமான (பரமபதத்திய) இத்திருமலையிலேயே வேறு தெய்வங்கள் பூஜிக்கத் தக்கனவாக இருக்கக்கூடாதென்பது முன்பு காட் டிய புராண வசனங்களிலிருந்து பெறப்பட்டதனால், திருமாலின் உடலிலே வேறொரு தேவதை இருக்கக்கூ டாதென்பதைத் தனியே சொல்ல வேண்டாமையாலும், இப்பெருமானுடைய திருமேனியில் ஒரு புறத்தில் ஒரு தேவதையின் அடையாளங்களும் மற்றொரு புறத்தில் மற்றொரு தேவதையின் லக்ஷணங்களுமாகத் தனித்தனி யாகத் தென்படாமையால் இவர் அர்த்த நாரீச்வரர் போன்றவர் என்று கூறுவதற்கு இடமில்லாமையாலும், வாமன புராணப்பகுதியில் - திருமாலின் அப்ராக்ருத

மான திருமேனியில் நேராகப் பொருந்தும் தகுதி தனக்கு இன்மையும், அதனால் மற்றொருவர் மூலமாக அதைத் தான் பெறமுயன்றமையும் சிவபிரானாலேயே விளக்கமாகக் கூறப்பட்டுள்ளமையாலும் பொருந்தாததொன்றாகும்.

வாமன புராணப்பகுதி 24 எண் குறித்த ஐந்தாமத் தியாயத்தில் ஸுதர்சந சக்ரத்தின் அம்சமாய்க் கால சக்கரத்தின் அபிமானியான புருஷன் தன்னைக் குறித்துத் தவம் செய்ய அவனைக் குறித்துச் சிவபெருமானால் - ஸுதர்சநனே, தமோ குணத்திற்கு இருப்பிடமான நான் ரஜோகுண தமோ குணங்கள் கலசாத சுத்த ஸத்த்வ குண மயமாய் ஸர்வ யஜ்ஞங்களினாலும் ஆராதிக்கத் தக்கதுமான விஷ்ணுவின் திருமேனியை நேரே தொடு வதற்கு அஞ்சுகிறேன். அத்திருமேனியில் (எவ்விதத் திலாவது) நான் வசித்தே தீரவேண்டும். ஆகையால் விஷ்ணுவை விட்டு ஒருபோதும் பிரியாதிருக்கும் நித் யனான உனக்குள்ளே புகுந்து கொண்டு உன்மூலமாக அவன்திருமேனியில் நான் வசிக்கக் கடவேன் - என்று கூறப்பட்டுள்ளது. வைகுந்தத்திலுள்ள உயர்ந்த விமானம் அத்தகைய திருமேனி அணிகலன்கள் படைக்கலங்கள் இவற்றோடு பகவானான திருமகள்மணவாளன் தோன்றி னானென்பதும் புராணப்பகுதிகளில் வெளிப்படையாக நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் ஹரிஹ ராவதாரகமென்னும் கதையாகிய கந்தை இங்குச் சிறிதும் இடம் பெறத் தக்கதன்று.

ஸ்காந்த புராண முதற்பகுதியைச் சேர்ந்த எட்டாமத் தியாயத்தில் சில ச்லோகங்களில் ஸ்ரீநிவாஸன் மகா தேவன் என்ற இரண்டு சொற்களாலும் இப்பெருமானைக் குறித்திருப்பதும் இவன் ஹரிஹராவதாரக ரூபனென்று நிச்சயிக்க உதவுகின்றதென்று சைவர் கூறும் கூற்று யாதொன்றுண்டோ, அதுவும் - அங்குள்ள மகாதேவ னென்ற சொல் சிவபிரானுக்கேயுரிய மகாதேவனென்னும் சொல்லைப்போல் இடுகுறிப் பெயராகாமல் காரணப்பெ

யராய் மட்டும் நின்று எல்லாத் தேவரையும் விட உயர்ந்த தேவன் என்னும் பொருளை மட்டும் காட்டி நிற்பதனாலும், அதனால்தான் அதே சந்தர்ப்பத்தில் அதேயிடத்தில் சில ச்லோகங்களில் எல்லாத் தேவரைக் காட்டிலும் உயர்ந்த தேவனென்ற பொருளைக் கொண்ட வேறு சொல்லை உபயோகித்திருப்பதனாலும் - பொருந்துவதன்று.

முற்கூறிய அத்தியாயத்தில் அச்சந்தர்ப்பத்திலேயே - எந்த அந்தணர் முக்தியளிக்கும் மகாதேவனான (எல் லாத் தேவரையும்விட உயர்ந்த தேவனான) ஸ்ரீநிவாஸனை நினைக்கிறார்களோ அல்லது துதிக்கிறார்களோ, அல்லது பரதேவனான (எல்லாத் தேவரைக் காட்டிலும் உயர்ந்த தேவனான) வேங்கடேசனென்னும் நாராயணனைச் சென் றடைகிறார்களோ அவர்கள் பாவங்களாகிற கூட்டிலிருந்து விடுபடுகிறார்களென்றும், எவன் பரதேவனாகிய வேங்கடே சனை ஒரு கணப்போதாகிலும் சிந்திக்க மாட்டானோ அவன் அறிவற்றுப் பாவியாகி ஊமையாகவும் செவிடனாக வும் ஆகக் கடவனென்றும், பரதேவனாம் வேங்கடேசனை யாவர் சிலர்சேவிக்கிறார்களோ அல்லது அர்ச்சனை செய் கிறார்களோ அவர்களுடைய பிறப்பன்றோ பயனுடையது. அவர்கள்தான் செய்ய வேண்டியவற்றையெல்லாம் செய் தவர்களாகிறார்கள். மற்றவர் அப்படியாக மாட்டார்கள. பரதேவனாகிய வேங்கடேசன் ஸேவிக்கப்பட்டாலும் பூசிக் கப்பட்டாலும் அதுவே போதும். பிரமன் சிவன் இந்திரன் பிறதேவர்கள் என்ற இவர்களால் என்ன பய னென்றும், 'எல்லாப் பாவங்களை அழித்துப் பெரும் புண்ணியத்தை அளிக்கவல்ல வேங்கடமென்னும் திரு மலையிலுள்ள ஸ்ரீநிவாஸனை யாவனொருவன் பக்தியு டன் தரிசனம் செய்கின்றானோ, இப்பூதலத்தில் நான்கு வேதங்களை அறிந்தவனும் அவனை ஒவ்வானென்றும் கூறப்பட்டிருக்கின்றது. இவ்விடத்தில் (மகாதேவனென்று முதலில் குறிப்பிட்டுப் பின்பு) அச்சொல்லுக்குப்பிரதிநிதி யாகப் (பதிலாக) பரதேவனென்று பலவிடங்களில் குறிக் கப்பட்டிருப்பதனால், மகாதேவனென்ற சொல் எல்லாத்

தேவரையும்விட உயர்ந்த தேவனென்னும் பொருளைக் கொண்ட பரதேவனென்ற சொல்லோடு ஒத்த பொருளை யுடையதேயாகுமென்பது வெளிப்படை.

மேலும் அதே சந்தர்ப்பத்தில் - நாராயணப் பெருமானைத் தரிசித்தால் பல்லாயிரக்கணக்கான பிரமஹத்யைகளால் உண்டாகும் பாவங்களும் பல பதினாயிரக் கணக்குள்ள மதுபானங்களால் உண்டாகும் பாவங்களும் சிறிதும் எஞ்சாமல் நாசமடைகின்றன என்றும், வேங்கடமலையிலுள்ள தேவதேவனைப் பாடுமவனும் பூசிப்பவனும் விஷ்ணு ஸாயுஜ்யத்தை (விஷ்ணுவின் ஆனந்தத்தோடு ஒத்த ஆனந்தத்தை) அடைகிறானென்பதில் ஐயமில்லையென்றும், வேங்கடேச்வரனென்னும் தேவர்தலைவனை எவன் பக்தியுடன் வழிபடுகின்றானோ அவன் தன்னைச் சேர்ந்த கோடிக்கணக்கான குடும்பங்களுடன் வைகுந்தத்தை அடைகின்றானென்றும், வேங்கடேசப்பெருமானை நாராயணனாகவும் அவனை வழிபடுமவனுக்கு விஷ்ணு ஸாயுஜ்யத்தையே பயனாகவும் கூறியுள்ளதனால் இப்பெருமான் ஹரிஹராவதாரரூபனல்லன், அப்படியிருந்தால் விஷ்ணு ஸாயுஜ்யமொன்றையே பயனாகக் கூறுதல் பொருந்தாது. இவன் சிவபிரானாயிருந்தால், (வேங்கடேசனை ஸேவித்தாலும் பூசித்தாலும் அதுவே போதும்) சிவனாலும் பிரமனாலும் என்ன பயனென்று கூறுதல் பொருத்தமற்றதாய்விடும்.

'அஷ்டமீந்து கலாதார லலாடஸ்தோர்த்வபுண்ட்ரக:' (அஷ்டமியன்றைய சந்திரகலையைத் தாங்கியவராய்த் திருமுகத்தில் திருமண்காப்பை அணிந்திருப்பவர்) என்று பாத்ம புராணத்திய 27 எண் குறித்த நான்காமத்தியாயத்திலுள்ள வசனத்தினால் இப்பெருமான் ஹரிஹராவதாரரூபனென்பது நிலைநாட்டப்பட்டதாகச் சைவர் சொல்லுவது யாதொன்றுண்டோ, அதுவும் = அஷ்டமிநாளைய சந்திரகலை (யின் வடிவம்) போன்ற ஆதாரத்தை (= அடிப்பகுதியை)யுடையதாய் நெற்றியிலுள்ள திருமண்

காப்பையுடையவனென்று பிரித்துப் பொருள் கூறத்தக்க முற்கூறிய வசனத்தினால் பூர்ண சந்திரனுடைய சரியான அரைப்பகுதி வடிவமானது (மூக்கில்) மூலமாகவும், (=அடிப்பகுதியாகவும்) அதன்மேல் (நெற்றியில்) மேல்நோக்கிப்புறப்பட்ட இரண்டு கோடுகளாகவும், அவற்றுக்கிடையே இடைவெளியாகவும், அமைந்த திருமண் காப்பு மட்டுமே கூறப்படுவதனால் இவ்வசனத்திற்கு பிறையைச் சூடுதலும் திருமண்காப்பை யணிதலுமாகிய ஹரிஹரர்களின் அடையாளங்களைக் குறிப்பதில் கருத்தின்மையால் - பொருந்தாததொன்றும்.

அப்பாத்ம புராணத்திய 29 எண் குறித்த ஆறுமத்தியாயத்தில் 'லலாடபட்ட கடித வேணு பத்ரோர்த்வ புண்ட்ரக:' (பலகை போன்ற திருநெற்றியில் பொருந்திய மூங்கிலிலை வடிவமான திருமண் காப்பையுடையவன்) என்றுள்ள வசனத்தில் ஸ்ரீச்வேதவராக பகவானுடைய திருமண்காப்பின் அமைப்பைக் குறித்திருப்பது போல் இவ்வசனமும் ஸ்ரீனிவாஸபகவானுடைய திருமண்காப்பின் அமைப்பைக் குறிக்கின்றதென்று கொள்ளுதலே சுவையுடையதாகையாலும் சைவரது கூற்று இசையாததேயாம்.

திருமண்காப்புக்கு மூல(அடிப்பாக)த்தோடு கூடியதும் நடுவில் இடைவெளியைக் கொண்டதுமான இரண்டு கோடிகளின் வடிவமுடைமை சாஸ்திரங்களினால் அறியப்பட்டுள்ளது. காத்யாயநீய ச்வேதம்ருதூர்த்வ புண்ட்ரோபநிஷத்தில் - நெற்றியின கீழே (மூக்கில்) திருமண்காப்பின் மேற்பகுதிக்கு ஓரங்குல வளவான மூலமும், அதிலிருந்து உண்டாகிய இரண்டு கிளைகளும் (நெற்றியில் இரண்டு கோடுகளும்) அவற்றிற்கு நடுவில் ஓரங்குலத்திற்குக் குறையாத இடைவெளியுமாகத் திருமண்காப்பு அமைய வேண்டும். அவ்விடைவெளி ஸ்ரீயின் ப்ரிதிஷ்டைக்காக ஆகும். ஸ்ரீ என்பது மஞ்சள் (ஸ்ரீசூர்ணம்). இதை இடுவதினால் மனிதன் ஸ்ரீமானாக (செல்வமுடையவனாக) ஆகிறான் - என்று கூறப்பட்டது.

பாத்மோத்தர கண்டத்தில் 31 எண்ணிட்ட மூன்று மத்தியாயத்தில் - மூக்கின் அடிப்பகுதியில் ஆரம்பித்து நெற்றியின் இறுதிப்பகுதிவரையில் (வெள்ளை) மண்ணி னால் திருநாமம் இடவேண்டும். புருவங்களின் நடுவு தொடங்கி இடைவெளி அமைக்க வேண்டும். இடைவெளி இரண்டங்குல வளவிலும் பக்கங்களிலுள்ள கோடுகள் ஒவ் வோரங்குல வளவிலுமாக அமைந்திருக்க வேண்டும் என்று குறிக்கப்பட்டது.

பாரத்வாஜ ஸம்ஹிதையிலும் - ஆசமனம் செய்து வெள்ளை நிறமுள்ள மண்ணைக் கொண்டு திருமண் காப்பை அணிந்து கொள்ள வேண்டும். முக்கின் மூலம் தொடங்கித் தலைமயிர் வரை அணியவேண்டும். மூக்கின் மூலமாவது மூக்கின் மூன்றுவது பகுதியென்று கருதப் படுகின்றது. (அதாவது மூக்கின் நுனிமுதல் புருவத்தின் நடுப்பகுதி வரையிலுள்ள மூக்கினை மூன்று பாகங்களா கப் பிரித்தால் மேலுள்ள மூன்றும் பாகத்திற்கு மூக்கின் மூலமென்று பெயர்.) நெற்றியில் திருமண் காப்புக்கு நடுவில் மஞ்சட் பொடியினால் (அல்லது) நறுமணமுள்ள குங்குமப்பூப் பொடியினால் லக்ஷ்மியின் ஸ்தான(மான ஸ்ரீசூர்ண)த்தை இடவேணும் - என்று சொல்லப்பட்டுள்ளது.

வைகாநஸாகமத்திலும் - ஹரியின் மங்களமான திரு நெற்றியில், திருமூக்கின் அடிப்பகுதியில் தொடங்கி

இரண்டு கோடுகளோடு கூடியதாகத் திருமண் காப் பைச் சாத்த வேண்டும் - என்று காணப்படுகின்றது.

இங்ஙனமே திருமண் காப்பின் அமைப்பைத் தெரிவிக் கின்ற பல ப்ரமாணங்கள் அங்கங்குள்ளவை காணத்தக்கன.

மூக்கின் மூலத்திலுள்ள, இருகோடுகளின் வடிவமான திருமண் காப்பின் அடிப்பகுதியானது பூர்ண சந்திர மண் டலத்தின் சரி பாதியோடு ஒத்த உருவமுடையதாயிருப்பத னால், பகவானுடைய திருமண் காப்பு 'அஷ்டமியன்றைய

சந்திரகலை போன்ற ஆதாரத்தையுடையதாய் நெற்றியிலுள்ள திருமண்காப்பையுடையவன் ஸ்ரீநிவாஸன்) என்பதனால் (பாத்ம புராணத்தில்) குறிக்கப்பட்டுள்ளதென்று கொள்க.

அல்லது, 'அஷ்டமியன்றைய சந்திரன் போல் வடிவமுடையதும் கண்ணாடி போல் பளபளப்புடையதுமான தன்து திருநெற்றியில் நல்லோர்க்குத் தஞ்சமான ஸ்ரீநிவாஸன் மூலத்தோடு (மூக்கில் அடிப்பகுதியோடு) கூடிய இரு கோடுகளின் வடிவாக வெண்ணிற மண்ணினால் திருநாமத்தைத் தானே அணிந்து கொண்டான்' என்று பவிஷ்யோத்தர புராணத்தின் பதினோராமத்தியாயத்திலுள்ள வசனத்தோடு பொருந்தவேண்டியிருப்பதனால், இங்கு அஷ்டமீந்து கலாகார லலாடஸ்தோர்த்வபுண்ட்ரக' என்றே பாடம் கொள்க. இப்போது 'அஷ்டமீந்து கலாகார என்பது (அஷ்டமியன்றைய சந்திரன் போன்ற வடிவமுடைமை என்று பொருள்பட்டு) நெற்றிக்கு அடைமொழி என்றுணரத்தகும். இதைவிட 'அஷ்மீந்து கலாதார லலாடஸ்தோர்த்வ புண்ட்ரக:' என்ற பாடமே ப்ராமாணிகமாகில் (நம்பத்தக்கதாகில்) முற்கூறப்பட்ட பொருளே மிகப் பொருந்துவதாகுமென்று அறியத்தகும்.

இங்ஙனமே சங்கரனது சிரஸ்ஸில் சந்திர கலை இருந்தாலும் நெற்றியில் அது இல்லாமையால், 'அஷ்டமீந்து கலாதார லலாடஸ்தோர்த்வ புண்ட்ரக:' என்ற வசனம் நெற்றியைச் சந்திர கலைக்கு ஆதாரமாகக் கூறுகின்றதென்று சைவர் வருணிப்பதும் சேராததொன்றாகும். ஆகையால் இப்பெருமான் ஹரிஹராவதாரவுருவமுடையவன் என்று கட்டுங்கதை எவ்வளவு சிரமப்பட்டாலும் ஒட்டுவதன்று.

இங்கு இதனை மட்டும் கருத்தில் கொள்க. பகவானான நாராயணனுக்கு மீன் ஆமை கேழல் முதலாகப் பலவகைப்பட்ட நிறமும் வடிவமுடைய அவதாரங்கள் பல்லாயிரக்கணக்கில் உள்ளன. அவற்றில், 'விஷ்ணு

முதலிய சொற்களாகிய சுருதியினாலேயே திருமாலின் தன்மை அறுதியிடத்தக்கது. வெறும் அடையாளங்களி னால் அன்று, அடையாளங்களை ஆராயப் புகுந்தால், அவதாரங்களில் மீன் ஆமை வராகம் முதலிய சாதியி னால் உலகில் தென்படும் சாதாரணமான மீனாமைவராக மாந்தன்மையொன்றேயன்றித் திருமாலாந்தன்மை திடப்ப டாது. வெறுமடையாளங்களைவிட நாராயணன் முதலிய சொற்களாகிய சுருதியென்னும் அத்தாட்சி வலிமை பெற்ற படியினால், நீதியறிந்த ஆராய்ச்சியாளர்கள் அவ்வதாரங்க ளில் எப்படி உலகிலுள்ள மீனாமை வராகமாந்தன்மையை அகற்றித் திருமாலாந்தன்மையை நிச்சயிக்கின்றூர்களோ, அப்படியே ஸ்ரீவைகுண்டத்திலிருந்து ஸ்ரீமந்நாராயண னேயன்றோ இத்தகைய வேஷத்துடன் கூடி ஸ்ரீநிவாஸ னென்று பேர்பெற்ற திருவேங்கடமுடையானாக அவதரித் தவன் என்று ஸ்பஷ்டமாகக் கேட்கப்படுகிற நாராயணன் முதலிய சொற்களாகிய மிக வலிய சுருதிப் பிரமாணத்தி னாலேயே, அதன் முன்னே தன் வலிமையிழக்கப் பெற்ற சடை நாகாபாரணம் முதலிய லிங்கங்(அடையாளங்)களி னால் உண்டாகின்ற - இவன் வேறு தேவதையென்னும் நினைவையகற்றி, நாராயணனாந்தன்மையையே இப்பெரு மானிடத்தில் ஆராய்ச்சியாளரால் அறுதியிட முடியும். இன்னவிடத்திலிருந்து இன்னான் இத்தகைய வேஷமு டையவனாய் இங்கு வந்தானென்று வெட்ட வெளிச்சமாக அறிவிக்கப்படுமளவில், வேஷ மாத்திரத்தையே கொண்டு அவனுக்கு அவனிற்காட்டிலும் வேறுந்தன்மை நிச்சயிக்க முடியாதன்றோ?

உலகிலும், இராமன் கண்ணன் சீதை சத்தியபாமை முதலியோரின் வேஷங்களைத் தரித்து நாடகவரங்கில் தோன்றிய ஒரு நடிகன், இன்னான் இங்கு இவ்வேஷம ணிந்து வந்திருக்கிறுனென்று தெளிவாக அறியப்படும் போது, வெறும் வேஷத்தையே கொண்டு இவன் இரா மனே இவன் கண்ணனே என்றிவ்வாருகப் பித்தனன்றி மற்றொருவனும் நம்பமாட்டானல்லவா?

நாகாபரணம் முதலியன விஷ்ணுவின் மற்ற அவதாரங்களில் ஒன்றிலும் காணப்படவில்லையே என்று கேட்பார்க்கு, மீனாமைவராகமாகுந் தன்மைகளும் அவ்வவதாரங்களில் தவிர மற்ற அவதாரங்களில் எங்கும் பிரசித்தமாக இல்லையே என்ற எதிர்கேள்வி ஸமானமாகும். மேலும் க்ருஷ்ணுவதாரத்தில் எவ்வவதாரத்திலுமில்லாத மயிற்பீலியணியைக் கண்டதனால் மட்டும் இவன் மயில் வாகனனான முருகனேயென்று இவ்வாதியரும் பிணங்குகிறார்களில்லையே. இனிவிவாதமென்னும் (சண்டையென்னும்) கந்தைக்குச் சிறிது மிடமில்லாத அத்திகிரி நாதனான (ஸ்ரீகாஞ்சி) வரதராஜப் பெருமாளிடத்திலும் நாகாபரணம் காணப்படுவதனால், இத்திருவேங்கடவனிடம் காணப்படும் நாகாபரணம் விஷ்ணுவின் வேறவதாரங்களில் இல்லையென்பதும் தகவுறும். அவ்வரதராஜன் நாகாபரணமணிவதற்குக் காரணம் அவன் ஆதிசேஷனால் பூஜிக்கப்பட்டமையே எனின், அதைவிட அதிகமான காரணங்கள் இப்பெருமான் நாகாபரணமணிவதற்கும் உள்ளனவென்பது முன்பு கூறப்பட்டேயுள்ளது. ஆதலால் இவ்வேங்கடவன் வேறு தேவதையல்லன்.

லிங்கமென்னும் (அடையாளமென்னும்) பிரமாணத்தைவிட ஸ்பஷ்டமான சொல்லாகிய சுருதியென்னும் பிரமாணம் வலிமையுள்ளதென்னும் விஷயம் - பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்தில் 1. சுருதி 2. லிங்கம் 3. வாக்கியம் 4. பிரகரணம் 5. ஸ்தானம் 6. ஸமாக்யை (1. தெளிவான சொல் 2. அடையாளம் 3. சொற்றொடர் 4. முன்பின் அமைப்பு 5. இடம் 6. காரணப்பெயர்) ஆகிய ஒருபொருளை அறுதியிடுவதற்காகத் தோன்றிய ஆறு பிரமாணங்களுக்குள்ளே பின்பின்னான பிரமாணங்களைவிட முன் முன்னான பிரமாணம் உயர்ந்தது. அதற்குக் காரணம் பின்னுள்ளவற்றைவிட முன்னுள்ள பிரமாணங்கள் சிறிதும் தாமதமின்றி மிகவிரைவிலேயே ஒருபொருளை இன்னதென்று நிச்சயித்துவிடுகின்றமையே என்று கூறப்பட்டிருப்பதிலிருந்து தெரிந்துகொள்ளத்தக்கது.

இங்குக் குறிப்பிடப் பெற்ற பிரமாணங்கள் ஆறும் புராணங்களில் திருவேங்கடவனை ஸ்ரீமந்நாராயணனாகவே தெரிவிக்கின்றன. அவை வருமாறு:

சுருதியென்பது (வேறொன்றையும் எதிர்பாராமல் தானொன்றே நின்று பொருளை இன்னதென்று நிச்சயிக்கும்) தெளிவான சொல்லேயாமென்பது மிகப் பிரிசித்தமானது. இப்பெருமானுடைய தோற்றத்தை வருணிக்கும் புராணக்கெட்டங்களில் திருமாலைக் குறிக்கும் முகத்தால் அவருக்கே சிறப்பான நாராயணன் விஷ்ணு முதலிய தெளிவான சொற்கள் பல தடவை பிரயோகிக்கப்பட்டவை காணத்தக்கன.

லிங்கமென்பது ஒரு பொருளை இன்னதென்று அறிவிக்கும் அடையாளமாகும். சங்கு சக்கரம் முதலான திவ்யாயுதந் தரித்தமை திருமகள் புணர்ந்த திருமார்புடைமை கருடன் பொருந்தப்பெற்ற விமானத்தில் உறைந்துள்ளமை பிரமன் சிவன் தொடக்கமான மற்றெல்லாராலும் வணங்கப்படும் திருவடித்தாமரையுடைமை முதலிய பிற தெய்வங்கட்கில்லாமல் திருமாலொருவர்க்கே உரிய அடையாளங்கள் அங்கங்குக் கூறப்பட்டுள்ளன காண்க.

வாக்கியமென்பது ஒன்றுக்கு மேற்பட்ட சில சொற்களின் தொடராகும். திருவின் மணாளனாயிருத்தல் முதலான திருமாலுக்கேயுரித்தான தன்மைகளைக் குறிக்கும் ச்ரிய; பதி (=திருமகளின் மணவாளன்) என்றித்தகைய சொற்றொடர்கள் நோக்கத்தக்கன.

பிரகரணமானது முன்னும் பின்னுமாக அமைந்த அமைப்பாகும். அவ்வப் புராணங்களின் ஆரம்பத்தில் விஷ்ணு க்ஷேத்திரத்தைப் பற்றிப் பிரஸ்தாவம் செய்வதும், கடைசியில் இது விஷ்ணு க்ஷேத்திரமென்று முடிப்பதுமாகிய முன்னும் பின்னும் அமைந்த அமைப்பு காணத்தக்கது.

ஸ்தானம் என்பது இடம். ஒருவரைச் சொல்ல வேண்டிய இடத்தில் மற்றொருவரைக் கூறி அதனால் அவ்விருவரும் ஒருவரே என்று கொள்ளவைத்தலென்றபடி. அது வருமாறு. பவிஷ்யோத்தர புராணத்திலும் ஸ்ரீவராக புராணத்தின் இரண்டாம் பகுதியிலும் ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய திருக்கலியாண மங்கலச்சடங்கைக் கண்டு களிக்க எண்ணிய யசோதை அவ்வவதாரத்தில் அது கிடைக்கப் பெறுமையால், மற்றோர் அவதாரத்தில் அவ்வானந்தத்தை உனக்குத் தருகிறேனென்று கண்ணபிரானால் வரமருளப் பெற்று மறுபடியும் கலியுகத்தில் வகுளமாலிகையாகத் திரு வேங்கடமலையில் அவதரித்த அவளுக்கு முன்பு வாக் களித்த படி ஆனந்தத்தைத் தருவதற்காகத் திருவவதாரம் செய்ய வேண்டிய க்ருஷ்ண பகவானுடைய ஸ்தானத்தில் (இடத்தில்) ஸ்ரீநிவாஸனென்னும் பெயருடையவனாகத் திருவேங்கடவன் திருவவதரித்து அவ்வகுள மாலிகையின் மூலமாகவே ஆகாச ராஜனுடைய பெண்ணைத் திருமணம் புணர்ந்துகொண்டு அவளுக்கு அவ்வானந்தத்தை அளித் தானென்று கூறப்பட்டுள்ளதனாலும், முன்பு இராமாவதா ரத்தில் தனக்குப் பிரதிநிதியாக (பதிலாக) இலங்கையில் இராவணனது பவனத்தில் இருந்து கொடிய துன் பத்தை அனுபவித்த வேதவதி என்னும் பெயருள்ள தன் தோழியைத் திருக்கல்யாணம் செய்து கொண்டேயாக வேண்டுமென்று இராவண வதமான பின்பு அக்கினிப் பிரவேசத்தின் போது வேண்டிக் கொண்ட ஸீதா தேவியின் வேண்டுகோளின்படிக் கலியுகத்தில் அவளைக் கலியாணம் செய்து கொள்ளுகிறேனென்று இராமபிரான் வாக்குறு தியளித்ததனால், கலியுகத்தில் ஆகாசராஜனது மகளாகப் பிறந்த பத்மாவதியைக் கலியாணம் செய்துகொள்வதற்காக அவதாரம் செய்யவேண்டிய இராமபிரானுடைய ஸ்தானத் தில், ஸ்ரீநிவாஸனென்ற திருநாமமுடைய திருவேங்கடவன் திருவவதாரம் செய்து பத்மாவதியைப் பத்தினியாக ஏற்றுக்கொண்டானென்று கூறப்பட்டுள்ளதனாலும், திரு வேங்கடவன் மஹாவிஷ்ணுவேயென்ற இவ்விஷயத்தில்,

ஒருவரைக் கூற வேண்டிய இடத்தில் மற்றொருவரைக் கூறுதலாகிய ஸ்தானப் பிரமாணமும் உண்டென்று அறியப்படுகின்றது. ஒரு காரியத்தைத் தாம் செய்வதாக வாக்களித்தவரும் அக்காரியம் செய்தவரும் ஒருவராக இருக்கவேண்டிய நியதியுள்ளமையால் இராமபிரானும் கண்ணபிரானுமே ஸ்ரீநிவாஸனென்றபடியாயிற்று. அவ்விருவரும் திருமாலின் அவதாரங்களென்பதில் விவாதமேதுமில்லையன்றோ. ஆகையால் ஸ்ரீநிவாஸன் திருமாலேயென்பது திடப்பட்டது.

ஸமாக்யை என்பது காரணப்பெயராகும். திருமகளால் (திருமார்பில்) உறையப் பெற்றவன் என்ற காரணத்தினால் உண்டான ஸ்ரீநிவாஸன் என்னும் ஸமாக்யையினால் இவன் திருமாலென்பது திடப்படுமாதலால் ஸமாக்யையென்னும் பிரமாணமும் காட்டப்பட்டதாயிற்று. ப்ராஹ்ம புராணம் ஏழாமத்தியாயத்தில் - பூசிக்கத் தக்கவரும் அனைவரிடமும் உட்புகுந்து அடக்கியாளுமவருமான ஹரியானவர் திருவேங்கடமலையில் எப்பெயரால் பிரசித்தி பெற்றவராயிருக்கிறார். தபோதனரே அதை எனக்குக் கூறுவீராக என்று தீலீபவரசன் கேட்க, எங்கும் பரந்து சங்கு சக்கரம் தாங்கிய பெருமான் ஸ்ரீநிவாஸனென்ற பெயரோடு அங்கு பிரசித்தி பெற்றிருக்கிறாரென்று இது தொடங்கித் துருவாச முனிவர் விடையாகக் கூறிய பகுதியினால் இப்பெருமானுக்குத் திருமாலின் தன்மையை நிலைநாட்டும் ஸ்ரீநிவாஸனென்ற ஸமாக்யைப் பிரமாணமும் கூறப்பட்டதாகக் காணத்தக்கது.

ஆகையால் இங்ஙனம் ஆறு பிரமாணங்களினால் அறிவிக்கப்பட்டு மறுக்கமுடியாத திருமாலின் தன்மையையுடையவனும் ஏறிட்டுக்கூறமுடியாத வேறு தேவதையின் தன்மையையுடையவனும் ஸ்ரீநிவாஸனென்னும் திருநாமமுடையவனுமான திருவேங்கடமலைநாயகனிடத்தில் சில போலியடையாளங்களைக் கொண்டு வேறு தேவதையாந் தன்மையை வேண்டுமென்றே ஏற்றிக் கூறும் சைவருடைய

விருப்பம் வருந்தியும் நிறைவேறுதென்று திண்ணமாக எண்ணுக. நாகாபரணம் முதலிய வேறு தேவதையின் குறிகள் தென்படுவதனால் வேறு தேவதையென்று தோன்றுதற்குத் தகுதியுள்ளமை மட்டுமே கொண்டு மயங்கியவர்கள் ஆட்சேபிக்கிறார்களே தவிர மயக்கமற்ற அறிவாளிகளுக்கு இத்தேவனிடத்தில் தேவதாந்தரமென்று ஆட்சேபிக்கச் சிறிதும் இடமில்லை. இவையனைத்தும் 'போகீச கங்கண: சங்க்ய: நிச்சங்க: சங்கிதாகில:' 1. பாம்புகளை வளையாக அணிந்தவர் 2. அதனால் சிவபிரானோ என்று ஐயுறத் தக்கவர் 3. உண்மையில் ஐயத்திற்கு இடமே இல்லாதவர் 4. ஆயினும் அனைவரையும் ஐயுறச் செய்பவர்) என்ற பிரம்மாண்ட புராணத்திய ஸ்ரீவேங்கடேச ஸஹஸ்ரநாம பாடத்திலுள்ள இந்நான்கு திருநாமங்களை ஆராய்ந்தமாத்திரத்தில் எளிதாக அறிய முடியுமாகையால் இங்கு அதிகமாக ஆராயவேண்டிய தேவையில்லை. ஆகையால் அரசே, சைவரின் வாதத்தின்படி இப்பெருமானிடம் வேறு தேவதையின் ஸம்பந்தம் இருக்கலாமோ என்று சிறிதும் சந்தேகம் கொள்ளாதே என்று யதிராசர் யாதவ மன்னனுக்குப் போதித்தருளினார்.

புலவர் திரள் ஆமாம் ஆமாமென்று தலையசைத்து இசைந்து கொண்டாடுமாறு யதிராச முனிவர் ஆற்றிய ஆராய்ச்சியுரையைக் கேட்ட அம்மன்னன் மிக ஆச்சரியமடைநதான். அவரது திருவாக்கினால் உயரத்தூக்கி வெகுதூரத்தில் கொண்டு தள்ளப்பட்ட சைவரின் எளிய வாதத்தை, ஊழிக்காலத்திய சூறுவளியின் வேகத்தினால் உயரவெழுந்த பஞ்சுபடும் பாட்டைப் படுவதாக நினைத்தான். இங்ஙனம் யுக்தியோடு எதிராசர் பேசிய பேச்சால் தனக்குத் தோன்றய ஐயமனைத்தும் அழியப் பெற்ற அவ்வரசன் பல்லைக் களைந்த பாம்பு போல் இருந்த சைவரிடம் இங்ஙனம் பேசலானான்.

வாரீர் சைவர்களே, உங்களது வாதம் முழுவதும் இராமானுச முனிவரால் பல்லாயிரந்துண்டுகளாகத் தகர்க்கப்

பட்டொழிந்தது. இம்முனிவரின் வாக்குவல்லமை பிருகஸ்பதியையும் விஞ்சியிருக்கிறது. ஆச்சரியம் ஆச்சரியம். இதற்குமேல் நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள் என்று அரசன் கேட்க, அச்சைவர் செய்வதறியாமல் திகைத்துப் பின்பு அக்காலத்துக்கு ஏற்றபடி மன்னவனிடம் பேசினர்.

வாராய் அரசே, இந்த ராமாநுஜ முனிவர் சபையில் வாதம் செய்பவரை வாயெழாமல் ஸ்தம்பிக்கச் செய்யும் வித்தையில் தேர்ந்தவர் போலும். ஏதோ மந்திரத்தைச் செபித்து எங்களை ஊமைகளாக ஆக்குகிறார். நாங்கள் இப்போது அவரது வாதத்திற்குத் தக்க விடையளிக்க வல்லமையற்றிருந்தபோதிலும், பழைய பெரியோர்கள் பரம்பரையாகச் சொல்லிவரும் (எங்கள்) வாதத்தில் நம்பிக்கை கொண்ட எங்கள் மனம், தேவதையின் இசைவைக் காட்டினாலல்லது. இம்முனிவரின் வாதத்தில் நம்பிக்கையை அடையமாட்டாது. இவர் தமது வாதத்தில் தேவதையின் அங்கீகாரத்தைக் காட்டினாராகில் அப்போதுதான் நாங்கள் இவரது வாதத்தை நம்பத்தக்கதாக இசைவோம். இல்லையேல் இசையமாட்டோம். இந்நாட்டிற்கு அதிபதியாய் வலிமைமிக்க அரசனான நீ எதையும் செய்யவில்லை. நீ ராமாநுஜ முனிவரின் விருப்பப்படி வலுக்கட்டாயமாக நிறைவேற்றும் போது, பாக்கியமற்று வலிமையும் இல்லாத நாங்கள் 'ராஜா ஹரதி ஸர்வஸ்வம் கா தத்ர பரிதேவநா' (அரசன் செல்வம் அனைத்தும் அபஹரித்தானாகில் அதில் வருந்திப் பயனென்?) என்னும் உலக நீதியை எண்ணி ஓய்ந்து வெறுமனேயிருக்கப் போகிறோம் - என்று சைவர் கூறவும், யாதவ ராஜன் அவர்களைத் தங்கள் குரங்குப்பிடியைவிட விரும்பாத மூர்க்கர்களென்று நினைத்து அவர்களைக் குறித்து இங்ஙனம கூறலாயினன்.

ஓ, சைவர்களே, இதுகாறும் இயன்றவரையில் விடையளித்துக் கொண்டு வந்த நீங்கள் வேறுவழியின்றி, இராமாநுசர் மந்திரம் போட்டுவிட்டதாகக் கட்டிய கதையென்னும் சொக்குப்பொடி தூவி என்னை மயக்க

முயல்கிறீர்கள் என்று நினைக்கிறேன். இதற்கு முன்பு பிரமாணமொன்றையும் தொடாமலே வெறும் போலியடையாளங்களையே கொண்டு, வேங்கடேசன் வேறுதேவதையென்று புதிதாகக் கற்பிக்கப் பட்டதொரு வாதத்தைச் செய்து என்னை மயக்கி, இப்போது அவ்வாதத்திற்குச் சிறிதுமிடமில்லாமற் போனதனால் வேறு வழியில் என்னை ஏமாற்றமுயலும் நீங்கள் தக்க தண்டனையை அனுபவிக்கப் போகிறீர்கள். ஆகவே ஜாக்கிரதையாக இருங்கள் - என்று சைவர்களை மிரட்டிய அவ்வரசன், மனிதரால் செய்யமுடியாத காரியங்களைச் செய்யவல்லவரும் யோகியர் தலைவருமான இவ்விராமநுச முனிவரென்னும் மஹாபுருஷர் சைவர் கூறியபடியே தமது வாதத்தில் தேவதையின் இசைவுள்ளமையையும் காட்டவல்லவரேயாவர். ஆகையால் இடைப்பெண்கள் முதலாகப் புலவர் வரையிலுமுள்ள மக்களெல்லோரும் நம்பும் வகையில் தேவதாங்கீரத்தைக் காட்டுமாறு இம்முனிவரை வேண்டுவோம் என்று நினைத்து அவரிடம் விநயத்துடன் பேசலானான்.

வாரீர் இராமாநுசமுனிவரே, உம்மால் பிறர் மதத்தை மறுத்து உமது மதம் நன்கு உறுதிப்படுத்தப் பட்டது. இப்பெருமான் திருமாலல்ல, வேறு தேவதையே என்று சைவர் ஏற்றியதனால் எனக்கு ஏற்பட்ட ஐயமென்றும் பேய் என் மனத்தைவிட்டு, இனிப்புகாதபடி உம்மால் வெகு தூரத்திற்கப்பால் ஓட்டப்பட்டது. வேங்கடேசன் வேறு தேவதையென்னும் வாதம் அத்தாட்சிகட்கு அப்பாற்பட்டதென்றும், திருமாலே அவர் என்னும் வாதமே பிரமாணங்கட்கு உட்பட்டதென்றும், சாத்திரங்களையும் யுக்திகளையும் கொண்டு நீர் சாதித்ததனால் நான் பலமான நம்பிக்கையை அடைவிக்கப்பட்டேன். அதனால் நீர் கருதியபடியே எல்லாக் காரியங்களையும் நிறைவேற்றி வைக்கிறேன். ஆனால் மஹாபுருஷரும் மனிதர் செயற்கரியவற்றையும் செய்யவல்லவருமாகிய நீர் பண்டிதரும் பாமரரும் வாசியில்லாமல் இசையும்படி, தேவதையின் இசைவைக் காட்டுவதும் திருப்தியை உண்டுபண்ணுவது

மான ஸமாதானோபாயம் ஒன்றை நீர் செய்யவல்லீராகில் அவ்விதமாகவும் செய்யும்படி வேண்டுகிறேன். இதனால் உமது விருப்பப்படி நிறைவேற்றிவைக்கமாட்டேனென்று நினைக்க வேண்டாம். அப்படியானால் வாதம் புரியும் சைவர்கள் தாங்கள் மறுக்கப்பட்டதனை மனமார இசைவர்களென்றுதான் உம்மிடம் இங்ஙனம் வேண்டுகிறேன் என்றான் (அரசன்.)

இவ்வாறு வேண்டிக்கொள்ளப்பட்ட அவ்விராமாநுச முனிவர் - இவ்வளவு விரித்துரைத்தும் திருப்தியடையாதவன்போல் தென்படுகிறான் அரசன். இது விந்தையே. ஆகையால் இப்போது இதுதான் செய்யத்தக்கது. பிரம்மாண்ட புராணத்தின் பதினோராமத்தியாயத்தில் - கலியுகத்தில் விமானம் முதலியவற்றைப்போல் சங்கு சக்கரம் தொடக்கமான திவ்வாயுதங்களையும் பக்தர்கள் நிருமித்து ஸமர்ப்பித்தால் ஏற்றுக்கொள்வதாக முன்பே பகவான் பிரதிக்ஞை செய்திருப்பதாகக் காண்பதனாலும் நாம் செய்து ஸமர்ப்பித்தவற்றை ஏற்றுக்கொள்ளமாட்டானென்கிற நியதி ஏதுமில்லாமையாலும், இவன் வேறு தேவதையென்று இப்போது ஏற்பட்டுள்ள பெருங்குழப்பம் நீங்குவதற்காக, நீர்ப்பந்தம் செய்தாவது பகவானைப பிரார்த்தித்துச் சங்கு சக்கரங்களைத் தாங்கும்படிச்செய்வோம். பக்தர்களிடம் கடல் போன்ற பாசம் வைத்துள்ளவனும் அதனால் அவர்களுக்கு வசப்பட்டவனுமான பகவான் நமது வேண்டுகோளுக்கிணங்கி நாம் ஸமப்பித்த சங்கு சக்கரங்களை நிச்சயமாக ஏற்றுக் கொள்வான். ஆகையால் அவற்றை இயற்றி அணிவிப்போம். அவன் அவற்றை அணிந்து கொண்டானானால் அதையே தேவதையின் இசைவைக் குறிப்பதாகவும் அனைவரும் நம்பத்தக்க அத்தாட்சியாகவும் காட்டுவோம் - என்று தமக்குள்ளே நினைத்துக் கொண்டு, வாராய் அரசே, மிகவும் நம்பிக்கையை உண்டுபண்ணுவதான எனது இவ்வார்த்தையை ஊக்கமாகக் கேள். நான் இப்பெருமானை விஷ்ணுவென்று கூறுகிறேன். இச்சைவர்களோவெனில் வேறு தேவதையென்று சொல்லுகிறார்கள்

அல்லவா? நான் விஷ்ணுவுக்கே உரிய அடையாளமாகிய சங்கு சக்கரங்கள் முதலியவற்றைச் செய்வித்துப் பெருமானருகில் வைக்கிறேன். அவர்களும் வேறு தேவதைக்கு அடையாளமாகிய பாசம் அங்குசம் தொடக்கமானவற்றை நிருமாணம் செய்வித்து அப்படியே வைப்பார்களாக. எந்த ஆயுதங்களை அப்பெருமான் எடுத்துத்தாங்குகின்றானோ அவ்வாயுதங்களை அடையாளமாகவுடைய தேவனாகவே அவனை அறுதியிடவேண்டும் என்று யாதவ மன்னனிடம் கூறினார். பின்பு அம்மன்னவனும் அதுகேட்டு மகிழ்ச்சியுற்று, அவ்வாறு செய்தால் யாருக்கும் எவ்விதமான ஆட்சேபமும் இராது. ஆகையால் அப்படியே செய்தருள்க தாங்களும் அவர்களும் என்று கூறினான். பின்பு வாதியர் இருவரும் தந்தம் தேவதையின் முக்கிய அடையாளமாகிய ஆயுதங்களைச் செய்வித்து ஒருநாள் அரசனுடன் திருமலையேறிச் சென்று இரவில் திருக்கோயிலின் கருவறையில் பெருமானுக்கருகில் அவற்றை வைத்துக் கதவைச் சாத்தித் தாளிட்டு அரசமுத்திரையும் இடுவித்து, விடியும் வரையில் விழித்துக்கொண்டே ஊக்கமாகக் கோவிலைச் சுற்றித் திரிந்துகொண்டும் தந்தம் கொள்கை வெற்றி பெறுவதற்காகத் தந்தம் தேவதையைத் தியானித்துக்கொண்டும் இருந்தனர்.

பகவான் இராமாநுசமுனிவர் தமது யோக மகிமையினால் ஸ்ரீநிவாஸபகவானை அணுகி நன்றாகத் தரிசித்து, பகவானே, நீ முன்பு செய்தருளிய பிரதிஜ்ஞையின்படி உன்னுடைய முக்கிய அடையாளமாகிய சங்கு சக்கரங்களைத் தரித்துக்கொண்டு எங்களைக் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டு அங்ஙனமே அவன் தரிக்கும்படிச் செய்தார். பிறகு காலையில் யாதவமன்னன் அவ்வாதியர் இருவரோடும் கோவிலுக்குச் சென்று கதவைத் திறந்து உள்ளே சென்று, ஸ்ரீராமாநுஜ முனிவரின் பக்தியாகிற வலைக்கு வசப்பட்டுப் பாசாங்குசங்களைத் தூரத்திலயே இருத்திச் சங்கு சக்கரங்களையே தரித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீவேங்கடேச பகவானைச் சேவித்து வியப்பென்னும்

பெருங்கடலில் மூழ்கிய மனம் படைத்தவனாய ஸ்ரீராமா நுஜ முனிவர் திறத்தில் மிகவும் கௌரவ புத்தியடையப் பெற்று அவருடைய நியமனத்தைக் கொண்டு, தன்ன டையே கருவந்தொலையப் பெற்று பொய் கூறிய சைவர்களை தவறுக்குத் தக்கவாறு தண்டித்துத் தனது நாட்டிலிருந்து வெளியேற்றிவிட்டு, தான் அம்முனிவர் ஸந் நிதியிலே பகவத் ஸமாச்ரயணம் (ஸ்ரீவைஷ்ணவ தீக்ஷை) செய்து கொண்டு தனது பிறவிப் பயனைப் பெற்று அம் முனிவருடைய திவ்யபாதாரவிந்தங்களையே தஞ்சமாக நினைத்துக்கொண்டு மனவமைதியோடு இருந்தான்.

அதன்பிறகு திருமாலே பரம்பொருளென்பதை நிலை நாட்டும் ஆசார்யராய்த் தேசமெங்கும் பரவிய புகழ்பெற் றவருமான அந்த பகவத்ராமாநுஜ முனிவர் 'திருவேங்கட மலையில் ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணியின் தெற்குக் கரையில் திகழும் தேவன் திருமகளின் மணவாளனும் திருவைகுந் தநாதனுமான ஸ்ரீமஹாவிஷ்ணுவேயன்றி வேறு தேவதை யல்ல, இடையில் சிலநாட்கள் பணம் புகழ் மற்றும் விரும்பப்படும் பொருள்கள் இவற்றில் பேராசை கொண்ட சைவர்களால் பிறரை ஏமாற்றும் தமது ஆற்றலைக்காட்டி அரசனை மயக்கி இப்பெருமான் வேறு தேவதை என்று ஐயப்படுதலாகிய களங்கம் உண்டாக்கப்பட்டான்' என்னும் இவ்வுண்மையை எல்லா நாட்டினரும் அறியுமாறு பிரசித் தமாக்கி விட்டு ஸ்ரீநிவாஸப் பெருமானுக்கு ஸ்ரீவைகாந ஸமகம் கூறிய கட்டளையிலே மஹாஸம்ப்ரோக்ஷணம் செய் வித்து முன்பு போலவே நித்திய பூஜை நடக்கும்படிச் செய்தார்.

மேலும் தொன்றுதொட்டு உள்ளதும் மிகவும் சிதைந் ததுமான ஸ்ரீநிவாஸனுடைய அழகிய ஆனந்தநிலயமென் னும் விமானத்தை மறுபடியும் புதுப்பித்து, ஸ்ரீவைகாநஸ சாஸ்திரம் கூறியபடியே அதன் நான்குமூலைகளிலும் வராக நரஸிம்ம ஸ்ரீவைகுண்டநாத விமான தேவதைகளைப் பிரதிஷ்டை செய்வித்து, விஷ்ணுவின் பரிவாரங்களான

ஆதிசேஷன் சேனைமுதல்வர்களுடன் த்வாரபாலகர் முத லியோரை அவ்வவர்களுக்குத் தக்க இடங்களில் ஸ்தா பித்து, ஸ்ரீநிவாஸ பகவானுடைய அளவிறந்த அழிவற்ற செல்வத்தின் செழிப்பிற்காக அவனது திருமார்பில், 'பத் மாஸனத்தில் இருக்கையை விரும்பியவளும் இரு கைகளு டையவளும் ஸ்ரீநிவாஸனுடைய திருமார்பிலிருப்பவளுமான வியூஹலக்ஷ்மியானவள் கேசவனுக்கு மிகவும் பிரயமா னவள்' என்று வராகபுராணத்தின் ஏழாமத்தியாயத்தில் சொல்லப்பட்ட வ்யூஹலக்ஷ்மி எனப்படும் இரண்டு கைக ளையுடைய ஸ்ரீதேவியை, 'தாமரைமலரை இருப்பிடமாகக் கொண்டவளும் இரண்டு திருவடிகளையும் கட்டிக்கொண்டு நன்ருகப் பூமியில் அமர்த்திக்கொண்டு வீற்றிருத்தலாகிய பத்மாஸனத்தில் அமர்ந்திருப்பவளும் அகன்ற திருக்கண் களையுடையவளுமான திருமகளைத் தனது திருமார்பில் தரித்துக்கொண்டு விளங்குகிருர்' என்று பவிஷ்யோத்தர புராணத்தின் 13 எண் குறித்த ஏழாமத்தியத்திலுள்ள வசனத்தினால் முன்பும் இப்படி தரித்ததாக அறிவிக்கப்பட் டவளை, வெள்ளிக்கிழமையும் உத்தர நக்ஷத்திரமும் சேர்ந்த சுக்லபக்ஷ த்வாதசியன்று ரத்னமாலிகையென்னும் சிறந்த யோகத்தில் பொன்மயமான கண்டிகையில் (கழுத்தணியில்) பிரதிஷ்டை செய்வித்தருளினார்.

இங்ஙனம் அந்த பகவத் ராமானுஜ முனிவர் பூமி முழுவதுமுள்ள திருமால் திருப்பதிகளுக்கெல்லாம் நடுநா யகமணியாக அமைந்த திருவேங்கடத்தலமானது நடுவில் அரசனை வஞ்சிப்பதில் ஊக்கங்கொண்ட சைவ ஜனங்க ளால் கபடமாக ஆக்ரமிக்கப்பட்டுக் குழப்பமடைவிக்கப் பட்டிருக்க, வெகு சிரமப்பட்டு அப்பேராபத்தில் நின்றும் விடுவித்து அதை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உரியதாக ஆக்கி, தமது திருவடித்தாமரையிணையையே தஞ்சமாகக் கொண்ட தேசாதிபதியாகிய யாதவ மன்னனை நன்ருகத் தத்துவத்தை உபதேசித்துத் திருத்தி, அவனைக் கொண்டு ஸ்ரீநிவாஸ பகவானுக்கு அவ்வக் காலங்களுக்கேற்றபடி நடக்கவேண்டிய பூஜை வகைகளை முறைவழுவாமல் நடத்

திவைத்துக் கொண்டே திருவேங்கடமலையடிவாரமாகிய (கீழ்த்) திருப்பதியில் சிலநாட்கள் வசிக்கலானார்.

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலையில் திருவேங்கடமுடையான் வேறு. தேவதையென்னும் வாதத்திற்கு மறுப்பாகிய மூன்றும் கொத்து முற்றும்.

* * * *

# நான்காம் ஸ்தபகம்

## மூலவர் திருமஞ்சனம்

அங்ஙனம் திருப்பதியில் வசித்துக் கொண்டிருந்த ராமாநுஜ முனிவர் அக்காலத்தில் திருவேங்கடநாதனுக்குத் தினந்தோறும் செய்யப்பட்டுவரும் திருமஞ்சனத்தைப் பற்றி நன்கு சிந்தித்து, இவ்வாறு நாள்தோறும் நடைபெற்றால் பகவானுடைய திவ்யமங்களத் திருமேனிக்கு நடப்பிக்கத்தக்க உபசாரங்கள் அனைத்தும் முறைப்படி பூர்ணமாக நடைபெறமாட்டா. ஆகையால் அவ்வப்போது ஒவ்வொரு தடவையாகவே சிறப்பான திருமஞ்சனம் நடப்பித்தல் தக்கது. அப்படி நடப்பிக்கும்போது, 'திருமாலின் அர்ச்சைத் திருமேனிக்குத் திருமகளுடன் வெள்ளிக்கிழமையில் திருமஞ்சனம் செய்தால் அது அதில் எப்போதும் அவனை ஸந்நிதிபண்ணியிருக்கும்படி செய்யவல்லதும் எல்லாச் செல்வங்களையும் அதிகமாகத் தரவல்லதும் ஆகும்' என்றுள்ள ஸ்ரீவைகாநஸாகமத்தைச் சேர்ந்த ஆனந்த ஸம்ஹிதையின் வசனத்தினால், வெள்ளிக்கிழமைதோறும் நடத்தப்படும் அபிஷேகத்தினால் சிறந்த செல்வம் முதலியவற்றின் அபிவிருத்தி உண்டாகுமென்று அறியப்படுவதனாலும், பவிஷ்யோத்தர புராணத்தின் பதினான்காமத்தியாயத்தில் கூர்மனென்னும் பிராமணனது சரிதையில் 'நேற்று வெள்ளிக்கிழமையாகையால் திருவேங்கடவனுக்குத் திருமஞ்சனம் ஏற்பட்டுள்ளது. அந்தணனே, அதை தரிசிக்க, என் பெண்கள் எல்லோரும் சென்றார்கள். அவர்களோடு உன் மனைவியும் பெருமாளைச் சேவிப்பதற்காகத் தன்னுடைய ஆண்-பெண் மக்களை அழைத்துக்கொண்டு திருவேங்கடமலைக்குச் சென்றிருக்கிறாள்'

என்று தொண்டைமான் சக்கரவர்த்தி கூர்மனைக் குறித்துக் கூறியதாகக் காண்பதனால் முன்பும் ஸ்ரீநிவாஸனுக்கு வெள்ளிக்கிழமைத் திருமஞ்சனம் தவறாமல் நடைபெற்றதாக அறியப்படுவதனாலும், இனிமேல் ஒவ்வொரு வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே ஸ்ரீநிவாஸனுக்கு ஸ்ரீமகாலக்ஷ்மியுடன் திருமஞ்சனம் சிறந்தமுறையில் தவறாமல் நடப்பிக்க வேண்டுமென்று வரையறை செய்தருளினார்.

## மூலவர் திருநாமம்

பூஜிக்கத்தக்க அவ்விராமானுச முனிவர் மேலும் சில ஒழுங்குமுறைகளை இவ்வாறு ஏற்படுத்தினார். '(மூக்கினடியில்) அஷ்டமி நாளைய சந்திரகலை போன்ற ஆதாரத்தையுடையதாய், நெற்றியில் அணிந்துள்ள திருநாமத்தையுடையவன்' என்று பாத்மபுராணப் பகுதியிலுள்ள 27 எண் குறித்த நான்காமத்தியாயத்தைச் சேர்ந்த வசனத்தினாலும், பவிஷ்யோத்தரபுராணத்தின் ஆறாமத்தியாயத்தில் - கண்ணாடியில் காணப்பட்ட தனது திருநெற்றியில் ஸ்ரீநிவாஸன் வெண்ணிற மண்ணினால் திருநாமத்தையும் அதன் நடுவில் குங்குமத்தினால் திலகத்தையும் தரித்து - என்றுள்ள வசனத்தினாலும், கண்ணாடி வெள்ளைத் திருமண் குங்குமமிட்ட பேழை இவற்றை ஸ்ரீநிவாஸன் தனது இடைநடுவில் பொன்னாடையில் முடிந்துகொண்டு வேட்டைக்குச் சென்றான். என்று - செல்லுமிடத்திற்கும் திருநாமமணிவதற்கு வேண்டிய பொருள்களை எடுத்துச் சென்றதாகக் கூறும் வசனத்தினாலும், இவ்வாறே அப்புராணத்திலேயே பதினோராமத்தியாயத்தில், 'அஷ்டமி நாளைய சந்திரன் போன்ற வடிவமுடையதும் கண்ணாடிபோல் பளபளப்புள்ளதுமான தனது நெற்றியில் நல்லோர்க்குத் தஞ்சமான ஸ்ரீநிவாஸன் (மூக்கில்) மூலத்தோடு கூடிய இருகோடுகளின் வடிவமுடைய திருநாமத்தை வெண்ணிறமண்ணினால் நெற்றியில் தானே அணிந்து கொண்டான். அப்போது பகவானது தாயான வகுளமாலிகை லோகமாதாவான திருமகளைக் குறித்து,

மங்களமானவனே குங்குமத்தினால் உன் மணவாளனது நெற்றியில் திலகத்தை இடக்கடவாய் என்று கூற, திருமகள் பெருமானது நெற்றியில் மூலத்தோடு கூடிய திருநாமத் தின் இரண்டு கோடுகளின் நடுவே குங்குமத்திலகத்தை இட்டாள்' என்றுள்ள வசனங்களினாலும் ஸ்ரீநிவாஸபக வான் திருநாமமணிவது அறியப்படுவதனாலும், அதை அணிவித்தால் சைவர்களுக்குத் தமது இஷ்டதேவதை சிவனென்னும் எண்ணம் ஒழியப்பெறுமாதலாலும், இத் தனை நாட்கள் வேறு தேவதையென்ற ஐயமாகிய மறு வுண்டாக்கப் பெற்ற ஸ்ரீநிவாஸனுக்குக் காணும்போதே திருமாலாந்தன்மையை நினைவூட்டுமதான திருநாமம் சாத் தப்படவேண்டும். அத்திருநாமம் மூக்கின் அடிப்பகுதியில் பரவிய பூர்ணசந்திரனது அரைப்பகுதி வடிவமுடைய மூலத்தோடு கூடியதாகவும், அதற்குமேல் திருக்குழல் (கூந் தல்) வரை மேல் நோக்கிப் புறப்பட்ட இரண்டு அம்ருததாரை போன்று நடுவில் இடைவெளியோடு கூடிய அகன்ற இரண்டு வெண்கோடுகளுடன் கூடியதாகவும், மிக்க வெண்ணிறமும் நறுமணமும் பொருந்திய பச்சைக் கருப் பூரப்பொடிச் சேற்றினால் இடப்படவேண்டும். 'அஷ்ட மீந்து கலாதார லலாடஸ்தோர்த்வபுண்ட்ரக:' என்று முன்பு காட்டிய பாத்மபுராணவசனத்தில், 'ஆதார' என்று கூறப்படும் - திருநாமத்தின் அடிப்பகுதிக்கு அஷ்டமியன் றைய சந்திரகலையுடன் ஒப்புமை கூறப்படுவதனாலும், அச்சந்திரகலையானது முழுச்சந்திரபிம்பத்தின் அரைப்ப குதியோடொத்த வடிவமுடையதாகையாலும் புருவத்தின் நடுப்பகுதிக்குக் கீழே மூக்கினடிப்பகுதியில் அரைச்சந்திர வடிவமுடையதாகவும், நடுவில் இடைவெளியற்றதாகவும் திருநாமத்தின் அடிப்பகுதி (பாதம்) அமைக்கப்பட வேண் டும். அதற்குமேலே திருக்குழல் வரையில் அணிவிக்கத்தக்க திருநாமத்திற்கு - நடுவில் இடைவெளியையுடைய இரு கோடுகளின் வடிவமுடைமை கூறப்படுவதனால், புருவ நடுப்பகுதி தொடங்கி நடுவில் இடைவெளியோடு கூடிய தாய், மூக்கினடிப் பகுதியில் இடப்பெற்ற திருநாம

வடிப்பகுதியிலிருந்து மேல்நோக்கிப் புறப்படுகின்ற இரண்டு கோடுகள் அமைக்கப்படவேண்டும்.

'நெற்றியின் அடியில் ஓரங்குலவளவுள்ள மூலமும் (=பாதமும்) அதிலிருந்து தோன்றி மேல்நோக்கிய இரு கிளைகளாகிய கோடுகளும், அவற்றினிடையில் ஓரங்கு லத்திற்குக்குறையாத இடைவெளியுமாகத் திருநாமம் இட வேண்டும்' என்று முற்காட்டிய காத்யாயனீய ச்வேதம் ருதூர்த்வ புண்ட்ரோபநிஷத்திலும் - மூலத்திற்கு இருகோ டுகளின் வடிவமுடைமை கூறப்படாததனாலும், அதன்மே லுள்ள திருநாமப்பகுதிக்கே இருகோட்டுவடிவமுடைமை யும் நடுவில் ஓரங்குலத்திற்குக் குறையாத இடைவெ ளியுடைமையும் விதிக்கப்பட்டுள்ளதனாலும், மூக்கிலுள்ள மூலம் இடைவெளியில்லாததென்றும் அதன் மேற்பகு தியே இடைவெளியுடையதென்றும் முற்கூறிய செய்தியே விளக்குகின்றது.

இங்ஙனமே 'மூக்கின் மூலம் தொடங்கி நெற்றியின் கடைப்பகுதி வரை திருமண்ணினால் திருநாமம் இட வேண்டும். புருவ நடுப்பகுதி ஆரம்பித்துத் திருநாமத் திற்கு இடைவெளி அமைக்கவேண்டும். அவ்விடைவெளி 'இரண்டங்குலவகலமும் பக்கத்திலுள்ள கோடுகள் ஓரங் குலவகலமுமாக அமைக்கவேண்டும்' என்று முற்காட்டிய பாத்மோத்தர கண்டத்தின் 31 எண்ணிட்ட மூன்றுமத்தி யாய வசனத்தினாலும், மூக்கின் அடிப்பகுதி தொடங்கி நெற்றியின் கோடிவரையில் திருநாமம் தரிக்கவேண்டுமென் பதும் அதில் புருவத்தின் நடுவிலிருந்தே இடைவெளிய மைக்க வேண்டுமென்பதும் கூறப்பட்டுள்ளதனால், மூக்கின் அடிப்பகுதியிலிருந்து புருவத்தின் நடுப்பகுதி வரையில் இடப்படும் திருநாம மூலம் இடைவெளியற்றதென்றும் அதன் மேலுள்ள திருநாமமே இடைவெளியுடையதென் றும் முற்கூறிய பொருளே மிக விளக்கமாக அறியப் படுகின்றது.

முற்காட்டிய காத்யாயனீய உபநிஷத்தில் 'ஏகாங்குலம் பாலதலே ஊர்த்வஸ்ய மூலம்' என்றவிடத்தில் பாலதலம் என்ற சொல் நெற்றியின் கீழ்ப்பகுதியான மூக்குமூலத்தைக் குறிக்கின்றது. தலம் என்ற சொல் கீழ்பகுதியைக் கூறுமாகையாலும் வேறு (புராணாதி) வசனங்கோடு பொருந்தவேண்டியிருப்பதனாலும் இங்ஙனமே கொள்ளத்தகும்.

எல்லா நூல்களிலும், மூக்கின் அடிப்பகுதி தொடங்கித் திருநாமமணியவேண்டுமென்பதும், அது இடைவெளியுள்ள இருகோடுகளின் வடிவமுடையதென்பதும் பிரசித்தமாயிருக்கின்றது.

ஆகையால்தான் பாரத்வாஜஸம்ஹிதையில் 'ஆசமனம் செய்து வெள்ளை மண்ணால் திருநாமமிட்டுக் கொள்ள வேண்டும். மூக்கின் மூலத்தில் ஆரம்பித்துத் தலைமயிர் வரை இடவேண்டும். மூக்கின் மூலமாவது மூக்கின் மூன்றாவது பகுதியாகும். நெற்றியில் திருநாமத்தின் நடுவில் (இடைவெளியில்) மஞ்சட் பொடியினால் (அல்லது) நறுமணமுள்ள குங்குமப்பூப் பொடியினால் லக்ஷ்மியின் ஸ்தானமாகிய ஸ்ரீசூர்ணத்தை இடவேணும்' என்று கூறப்பட்டது.

வைகாநஸாகமத்திலும், 'ஹரியின் மங்களமான திருநெற்றியில், மூக்கின் மூலம் தொடங்கி - இரண்டுகோடுவடிவமுள்ள திருநாமத்தைச் சாத்தவேண்டும்' என்று சொல்லப்பட்டது.

பராசர ஸம்ஹிதையிலும் திருநாமமிடுவதை விதிக்குமிடத்தில் - மூக்கின் மூலத்தில் இரண்டங்குலமுள்ள பாதமும் நெற்றியின் நடுவில் ஒன்றரையங்குலமுள்ள இடைவெளியும் அதன் இருபக்கங்களிலும் ஓரங்குலவளவுள்ள கோடுகளுமாக அந்தணன் மிகவும் விளக்கமாகத் தெரியும்படியாகத் திருநாமம் தரிக்க வேண்டும் என்று பகரப்பட்டது.

இவைபோலவே அங்கங்குள்ள மற்ற பிரமாண வசனங்களும் இங்கு மேற்கோளாகக் காட்டத்தக்கன. அவற்றிலும், முற்காட்டிய காத்யாயனீய - உபநிஷத்து பராசரஸம்ஹிதை பாத்மோத்தர கண்டம் ஆகியவற்றிலுள்ள வசனங்களோடு முரண்பாடில்லாமல் பொருந்தவேண்டியிருப்பதனால், மூக்கின் அடிப்பகுதியில் தரிக்கப்பட்ட திருநாமத்தின் கீழ்பகுதி இடைவெளியில்லாததென்றும் அதன் மேலுள்ள பகுதியே இடைவெளியோடு கூடிய இருகோடுகளின் வடிவமுடையதென்றுமே கருதப்பட்டதாகக் கொள்க. அக்காரணத்தினால் தான் திருநாமத்தின் கீழ்ப்பகுதி (பாதம்) ஓரங்குலத்திற்குக் குறையாமலும் இரண்டங்குலத்திற்கு மேற்படாமலும் மூக்கின் மூலத்தில் பரவியும் இருக்கவேண்டுமென்றும் கொள்க. எல்லாப்பொருள்களுக்கும் அடி நடு நுனி என்ற பிரிவைக் கருதிக் கீழ்க்காட்டிய பாரத்வாஜஸம்ஹிதையில் 'மூக்கின் மூன்றும் பகுதி மூக்கின் மூலமென்று கருதப்படுகிறது' என்று கூறும் பரத்வாஜரால் - மூக்கை மூன்று பகுதிகளாகப் பிரித்து அவற்றின் கீழுள்ள இரு பகுதிகளை விட்டுவிட்டு அவற்றின் மேலுள்ள பகுதி தொடங்கியே திருநாமமிட வேண்டுமென்று கூறப்பட்டதாகும். 'த்ரிபாக:' என்ற சொல் த்ரிஷு பாக: என்று பிரிக்கப்பட்டு மூன்றில் ஒரு பகுதியைக் கூறுகின்றது. ஆக, திருநாமத்திற்கு நீளமும் அகலமும் போல் அதன் மூலத்திற்கு (பாதத்திற்கு) உள்ள நீளமும் அவ்வவ்வுறுப்புக்களின் அமைப்பையொட்டியும் பார்ப்பதற்கு அழகாக இருக்கவேண்டியதையொட்டியும் அவ்வவ்விடங்கட்குத் தக்கபடி மூக்கின் மூலத்தைக் கடவாமல் அமைக்கப்படவேண்டுமென்று கருதப்பட்டது. ஓரங்குலம் இரண்டங்குலம் முதலிய அளவுவகையும் மூக்கின் மூலப்பகுதியில் முழுவதும் பரவியுள்ளமையும் கூறப்பட்டிருத்தலை அநுசரித்தும், திருநாமத்தை விதிக்கும் சாஸ்திரங்களில் 'திருநாமத்தை நேராகவும் அழகாகவும் அழகிய இருபக்கக்கோடுகளையுடையதாகவும் பார்ப்பவர்களின் மனத்தைக் கவர்வதாகவும் இடவேண்டும்' என்று நேர்மை

முழுங்கப்பட்டிருத்தலையொட்டியும் மூக்கின் மேற்பகுதியில் இடப்படும் திருநாமத்தின் கீழ்ப்பகுதிக்கு, அடிமரம் மலர்ந்த தாமரை இவற்றின் வடிவம் போல அரைச்சந்திரனின் வடிவமும் பொருந்துமென்று கருதியே 'அஷ்டமிநாளைய சந்திரகலை போன்ற வடிவத்தை ஆதாரமாகயுடையதாய் நெற்றியிலணிந்த திருநாமத்தையுடையவன்' என்று கூறப் பட்டது.

'அஷ்டமீந்து கலாகார' என்னும் பாடத்திலோவென் றால், அது நெற்றிக்கேயன்றி நாமத்திற்கு அடைமொழி யல்ல. இடைவெளியோடு கூடிய திருநாமத்திற்கு முழுமதி யின் அரைப்பகுதியோடு ஒத்தவடிவமுடையதும் இடை வெளியற்றதுமான அஷ்டமி நாளைய சந்திரகலையோடு சமானமான வடிவமுடைமை பொருந்தாமையாலும், நெற் றியையே அவ்வடிவமுடையதாக வருணித்தல் பிரசித்தமர கையாலும், முற்காட்டிய பவிஷ்யோத்தர புராணத்தின் பதினோராமத்தியாயத்தில் திருநாமமணிவதைச் சொல்லு மிடத்தில் 'அஷ்டமிச்சந்திர கலையின் வடிவமுடையதும் கண்ணாடிபோல் பளபளப்புடையதுமான தனது நெற்றி யில் நல்லவர்க்கு அடைக்கலமான ஸ்ரீநிவாஸன் திருநா மத்தை அணிந்துகொண்டான்' என்றுள்ள வசனத்தோடு பொருந்த வேண்டுகையாலும் 'அஷ்மீந்துகலாகார' என் பது நெற்றிக்கே அடைமொழியென்று கொள்ளவேணும்.

வராக புராணத்தின் இரண்டாம் பகுதி நான்காமத் தியாயத்தில் பத்மாவதியின் அவயவ லக்ஷணங்களைக் கூறுவருகின்ற நாரதர் 'பத்மாவதீ உனது இந்நெற்றி மறு வற்ற அஷ்டமிச்சந்திரனது வடிவம் போன்ற வடிவமு டையதாய்க் கறுத்த முன்னுச்சி மயிரால் விளங்குமதாய் மனத்தை மிகக் கவர்வதுமாகக் காணப்படுகிறது' என்று நெற்றியை அஷ்டமி நாளைய சந்திரனோடொத்த வடி வம் பெற்றதாகக் கூறியுள்ளமை காணத்தக்கது.

இப்பாடத்தின்படியும், முற்காட்டிய பவிஷ்யோத்தர புராணத்தின் பதினோரர்மத்தியாய வசனமும் காத்யாயநீ

யோபநிஷத்து முதலியவற்றின் வசனங்களும் அத்தாட்சி யாக ஏற்றுக்கொள்ள வேண்டுகையாலே, கீழ்க்கூறியபடியே (மூக்கில்) மூலத்தோடு கூடி (நெற்றியில்) இடைவெளியுள்ள இரண்டு கோடுகளின் வடிவமுடையதாகவே ஸ்ரீநிவாஸ னுக்குத் திருநாமம் அணிவிக்க வேண்டும்.

நடுவில் மஞ்சள் திலக ரேகையோடு கூடி மூன்று கோடுகளையுடைய மூலத்தைக் கொண்ட திருநாமந் தான் முற்காட்டிய அத்தாட்சிகளால் அறியப்பட்டதாகிறது. ஸ்ரீநிவாஸனும் அத்தகைய நாமத்தையே அணிந்துகொண் டதாகத்தான் கீழ்குறித்த பவிஷ்யோத்தர புராணத்தினால் தெரிகிறது. ஆகிலும் (ஸ்ரீசூர்ணதிலக ரேகையில்லாமல்) இரண்டு கோடுகளையுடைய திருநாமமும் பல பிரமாண நூல்களால் அறிவிக்கப்பட்டிருப்பதனாலும், சைவரின் ஆக் ரமிப்புக்கு முன்பு வரையில் ஸ்ரீநிவாஸன் இவ்விருகோட் டுத் திருந்ாமத்தையே தரித்துவந்ததாகப் பெரியோர்கள் கூறுவதனாலும் இதைத் தரிக்கச் செய்தாலும் குற்றமே துமில்லையென்று கொள்க.

இங்ஙனம் பலவித வடிவங்கள் பெற்றுப் பூஜைக்கு அங்கமாகிய அலங்கார ரூபங்களான திருநாமங்களும், கஸ் தூரி பச்சைக் கருப்பூரம் வெள்ளைமண் கோபீசந்தனம் முத்து பொன், வெள்ளி முதலிய திருநாமமிடுதற்கு உப யோகிக்கும் பொருள்களும் சாஸ்திரங்கள் வாயிலாக அறியப்படுவதனால், அவ்வக் கால தேசங்களுக்குத் தக்க படியும் அழகாயிருப்பதற்கு ஏற்றபடியும் அவ்வப்போது அவ்வப்பொருள்களைக் கொண்டு ஸ்ரீநிவாஸனுக்குத் திரு நாமம் சாத்துவது தகுமென்றும் அறிக.

ஆகையால் இப்போது, இவன் வேறு தேவதையோ என்னும் ஐயப்பாடாகிய குற்றத்திற்கு இடமாகிய ஸ்ரீநிவா ஸனுக்கு அக்குற்றந்தீர்வதற்காக, இத்தலத்தினைச் சைவர் ஆக்ரமிப்பதற்கு முற்காலம் வரையிலிருந்த நிலைமையை அநுசரித்து, (மூக்கில்) மூலத்தோடு கூடி (நெற்றியில்) இடை வெளியையுடைய இருகோடுகளின் வடிவமுடையதான

திருநாமம் கனமான பச்சைக் கருபூரப் பொடியினால் அணி விக்கப்படவேண்டும் என்று ராமாநுஜர் ஒழுங்குமுறை செய்தருளினார்.

அதன் பிறகு பகவத்ராமாநுஜ முனிவர் - அடுத்த வெள்ளிக்கிழமையிலேயே திருமஞ்சனகாலத்தில் முதலில் திருமுடியில் சேர்க்கப்படுகின்ற ஆகாசகங்கா தீர்த்தத்தி னால் ஸ்ரீநிவாஸ பகவானுடைய திருநெற்றியில் ஸமர்ப் பிக்கப்பட்டிருந்த திருநாமத்தின் இருகோடுகள் அழிந்து மறைந்த போதிலும், அதற்குக் கீழ்ப்பகுதியாகத் திரு மூக்கினடியில் அரைச்சந்திரவடிவமாக ஸமர்ப்பிக்கப்பட்டி ருந்த திருநாமப்பகுதி மட்டும் அழியாதிருக்க அதைக்கண்டு, முன்பு (கடல் கடைந்தபோது) மோஹிநீவேஷந் தாங்கிய இப்பெருமானுக்கு, 'பெண்கள் அரைச் சந்திரவடிவமுள்ள திருநாமத்தை இருபுருவங்களுக்குக் கீழே (மூக்கினடியில்) தரிக்கவேண்டும்' என்ற வஸிஷ்டஸம்ஹிதாவசனத்தின்படி அப்போதைய பெண்ணின் நிலைமைக்குத் தக்க இப்படிப் பட்ட திருநாமம் அங்கிருந்த தேவர்க்கும் அசுரர்களுக்கும் எங்ஙனம் மையலையூட்டியதோ, அங்ஙனமே உலகோர் அனைவரையும் மையலேற்றி மயக்கும் திவ்யமங்களத்தி ருமேனியையுடைய இந்த ஸ்ரீநிவாஸனுக்கும் மேற்கோடு கள் அழியப்பெற்று மூக்கின் அடியில் மட்டும் அழியாது விளங்குகின்ற அரைச் சந்திரவடிவமுள்ள திருநாமமூ லப்பகுதியானது பேரழகை ஊட்டுவதாகவும் பக்தர்களின் கண்களையும் மனங்களையும் கவர்வதாகவும் காணப்படு கிறது. ஆகையால் இவ்வளவேயான திருநாமமும் சிலநாட்களில் பெருமாளுக்குச் சாத்துவிக்கவேண்டுமென்று கருதிக்கொண்டிருக்கும் போது, அங்ஙனமே அர்ச்சகர் மூல மாக (பகவானால்) நியமிக்கப்பட்டவராய், திருமஞ்சனம் முடிந்தபிறகு முன்பிருந்தபடியே பச்சைக் கருப்பூரப்பொடி

யினால் பாதத்தோடு கூடிய இருகோடுகளின் வடிவமுள்ள திருநாமத்தை மூக்கினடிப்பகுதியிலிருந்து கேசம் வரையில் நெற்றியில் சாத்தச் செய்து, இனிமேல் எப்போதும் வெள்ளிக்கிழமை முதல் மூன்று நாட்கள் இப்படியே திருநாமம் அணிவிக்கவேண்டுமென்றும்,

அதற்குப்பிறகு முதலாம் கிருதயுகத்தில் ஜம்பூத்வீபத்தில் பாரத நாட்டில் கங்கைக்குத் தெற்கே இருநூறு யோஜனை தூரத்திலும் கிழக்குக் கடலுக்கு மேற்கே ஐந்துயோஜனை தூரத்திலும் உள்ள நாராயணகிரியில் (திருவேங்கடமலையில்) செல்வத்தினால் உயர்ந்த ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்குக் கரையில், தேவர் கணங்களினால் பிரார்த்திக்கப்பட்ட லோகரக்ஷகனான புருஷோத்தமன் புரட்டாசி மாதம் ச்ரவணத்துடன் கூடிய துவாதசியில் திங்கட்கிழமை ஸித்தயோகத்தில ஸ்ரீநிவாஸபகவானாகத் தோன்றினான்" என்று 33 எண் குறித்த பாத்மபுராணத்தின் பத்தாமத்தியாயத்திலுள்ள ஸ்ரீநிவாஸனது தோற்றத்தை வருணிக்கும் வசனங்களில் திருவேங்கடநாதனுடைய திருவவதார நன்னாளாக அறியப்படுகிற திங்கட்கிழமை முதலாக மூன்று நாட்கள் மேலிரண்டு கோடுகளில்லாமல் அரைச்சந்திரவடிவமாக மூக்கினடியில் தரிக்கப்படும் திருநாமப் பாதத்தை மட்டும் சாத்தி, அதன்மேல் நெற்றியில் மஞ்சட்பொடியாலான செந்நிறமுடைய ஸ்ரீசூர்ணரேகையை, நெற்றியின் கோடியில் (கீரீடத்தின் கீழ்) குறுக்காகச் சாத்தப்பட்டிருக்கும் நவரத்தினங்களிழைத்த திருநெற்றிப்பட்டமென்னும் திருவாபரணத்தைத் தொடும்படியாகவும், அப்பட்டத்திலிருந்து மூக்கின் மூலம் வரையில் தொங்குகின்ற பெரிய வெண்முத்துவடங்களாகிய இரண்டு கோடுகளாலே அழகு செய்யப்பட்ட இரண்டு பக்கங்களையுடையதாகவும், மேலெழப் பார்த்தால் பாதத்தோடு

கூடிய மூன்று கோடுகளாலான திருநாமமிருந்தாலொத்த அழகையுண்டாக்கும்படியாக நேராகச் சாத்தி, முற்கூறிய மோகினியின் நிலைக்குத் தக்கபடி குளிர்ந்த பொருள் களாலே திருக்கண்களில் அஞ்சனம் (மை) அணிவிக்க வேணுமென்றும்,

அதன்பின்பு வியாழக்கிழமையில், மறுநாள் நடைபெறவிருக்கும் திருமஞ்சனத்திற்குப் பூர்வாங்கமாக ஸகலாபரணங்களையும் களைந்து, பெருமாளது திருநெற்றியில் திருநாமத்தை - தங்கத்தில் வைரமணிகளிழைத்துச் செய்யப்பட்ட பாதமும் இருகோடுகளும் அங்ஙனமே பத்மராக ரத்தினங்கள் (கெம்பு) அழுத்தியமைக்கப்பெற்ற ஸ்ரீசூர்ண ரேகையும் கொண்ட திருவாபரண ரூபமாகவே அணிவித்து, திருமுக மண்டலம் தவிர மற்ற திவ்யாலயவங்கள் அவற்றிலுள்ள திருவாபரணங்கள் இவற்றின் ஸ்தானத்தில் புஷ்பகவசம் (பூலங்கி) திருமேனி முழுவதும் மறையும்படியாக ஸமர்ப்பிக்கவேணுமென்றும்,

அதன்மறுநாள் வெள்ளிக்கிழமை காலையில் திருவாபரணரூபமான திருநாமத்தையும் புஷ்பகவசத்தையும் களைந்து வெண்ணிறத் திருமண் ஸ்ரீசூர்ணம் இவற்றால் திருநாமம் சாத்தி, திருவரையிலும் திருத்தோள்களிலும் வேஷ்டியும் உத்தரீயமுமாக மெல்லிய இரண்டு வஸ்திரங்களை அணிவித்து முதல் திருவாராதநத்தைச் செய்து, பின்பு பகலில் திருமஞ்சனம் செய்வித்து, மறுபடியும் முற்கூறியபடியே பச்சைக் கருப்பூரப் பொடியினால் பாதத்தோடு கூடிய இருகோடுகளின் வடிவம் பொருந்திய திருநாமமே அணிவிக்க வேண்டும். முற்கூறிய திருவாபரண ரூபமான திருநாமம் திருநெற்றிக்குத் திவ்யமான காந்தியையூட்டுவதனால் அதை அவ்வப்போது விசேஷோத்ஸவ காலங்களிலும் அணிவிக்க வேண்டும். உத்ஸவமூர்த்தி முதலியவர்களுக்கு தீபசிகையின் (விளக்குச் சுடரின்) வடிவமுடைய கஸ்தூரியிலான திருநாமத்தைச் சாத்தவேண்டுமென்றும் வரையறை செய்தருளினார்.

மேலும் அந்த பகவத்ராமாநுஜ முனிவர், சூரர்கள் தமது சௌரியத்திற்கு உறுப்பான தம்முடைய ஆயுதங்களைச் சந்தனம் புஷ்பம் முதலியவற்றால் அலங்காரம் செய்துவிட்டு அதற்குப் பின்பே அவற்றால் தம்மை அலங்கரித்துக்கொள்ளும் வழக்கத்தின்படி ஸ்ரீநிவாஸ பகவானுக்கு முச்சந்தியிலும் சந்தனம் புஷ்பமாலை முதலியவற்றால் அலங்காரம் செய்யும் போது முதன்முதலில் அவனது வெற்றிப் பரம்பரைகட்கு முக்கியக் கருவியான திருவாழி திருச்சங்கு அழகிய திருவடித் தாமரைகள் முதலியவற்றுக்கு அலங்காரம் செய்து அதன்பின்பு திருமார்பின்கண் பொற்கண்டியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீதேவிக்கும் பின்பு கிரீடத்திற்கும் பிறகு திருத்தோள்கள் முதலிய திவ்யாவயவங்களுக்கும் சந்தனம் புஷ்பமாலை முதலியவற்றால் அலங்காரம் செய்யவேணுமென்றும் நியமனம் செய்தார்.

## திருமார்பு நாச்சியார் திருமஞ்சனமும் நாச்சியார் திருமொழி ஸேவித்தலும்

இப்படியே வெள்ளிக்கிழமைதோறும் பெருமாளுக்குத் திருமஞ்சனம் முடிவுபெற்ற பின்பு, திருமார்பில் கனகமயமான கண்டியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீதேவிக்குத் திருமஞ்சனம் செய்வதற்காக அவளைத் திருமார்பிலிருந்து இறக்கி எழுந்தருளியிருக்கச்செய்யும் போது, எப்போதும் பிரியாத அவள் பெருமாள்திருமார்பை விட்டுப் பிரிவதைக் கணமும் பொறுக்கப்பெறாத தன்மையையுடையவளாயிருப்பதை நினைத்த அந்த பகவத் ராமாநுஜமுனிவர் தற்காலத்திய அவளது பிரிவுத் துன்பத்தை ஆற்றுவதற்கு உபாயமாக, அத்திருமகளின் வேறோர் அவதாரமாய், பூமிதேவியின் அம்சத்தோடு கூடி அவதரித்த ஆண்டாளால் அருளிச்செய்யப்பட்டதாய்ப் பெருமாளைப் பிரிந்த காலத்தை வருத்தமின்றிக் கழிக்கும் உபாயவகைகளை அறிவிப்பதில் நோக்கமுடையதாய் நூற்றுநாற்பத்து மூன்று பாசுரங்களைக் கொண்டதான நாச்சியார் திருமொழி என்னும்

திவ்வியப் பிரபந்தத்தை அனுஸந்திக்க (ஓத) வேண்டுமென்றும் நியமித்தார்.

## திருவீதிகளை அமைத்தல்

பின்பு அவ்விராமாநுச முனிவர் பெருமான், 'திருவேங்கடமலையாகிய திவ்யதேசம் வெட்டவும் உடைக்கவும் முடியாத காடும் மலையுமாயிருந்தது காரணமாகப் பெரிய அழகிய பட்டணமொன்றினை அதில் ஏற்படுத்தத் தகுதியில்லாமலிருந்ததனால், சில நாட்களுக்கு முன்பு த்ருமகுடாரனென்ற ஒரு பக்தன் பெருமாள் திருக்கோயிலின் மதிளுக்கு நாற்புறங்களிலும் கற்களாலும் மரங்களாலும் மேடுபள்ளமாக இருந்த இடங்களை வெகு சிரமப்பட்டுச் சமவெளியாக்கிச் சிறியதோர் தெருவை அமைத்து அதில் பகவத் கைங்கரியம் (தொண்டு) செய்பவர்களுக்கு வசிக்க இடம் (வீடுகள்) மட்டும் கட்டுவித்தான். அது தவிர, பெருமாளுடைய திருவிழாக்களில் பகவான் பவனிவரத் தக்க நகரமோ அதன்கணுள்ள நாற்புறத்தும் வீதிகளோ எதையும் இங்கு அவன் அமைக்கவில்லை. ஆகையால் உத்ஸவங்கள் செய்ய இங்கு இடமில்லாமற் போய்விட்டது. அதனால் இங்கு முந்தியிருந்த அரசர்கள் 'கோவிலுக்கு நாற்புறங்களிலும் வீதி அமைக்க முடியாதிருந்தால் அண்மையில் ஓர் நகரத்தையுண்டாக்கி அதில் பெருமாளுக்குத் திருவிழாவினைச் செய்ய வேண்டும்' என்றிது முதலாக வைஷ்ணவாகமத்திற் கூறியபடி, திருவேங்கடவனது பிரம்மோத்ஸவாரம்பத்தில் திருமுளை முன்பாகச் செய்யும் கொடியேற்று விழா நடந்த பின்பு திருவேங்கடமலைத் தாழ்வரையிலுள்ள திருச்சுகனூர் (திருச்சானூர்) என்னும் பெயர்பெற்ற இராஜதானியில் உத்ஸவ மூர்த்தியை இறக்கியெழுந்தருளப்பண்ணி அங்கு எட்டு நாட்கள் மாலை காலைகளில் திருவீதிகளில் எல்லா வாகனப்புறப்பாடுகளுட்படவும் பிரமமோத்ஸவத்தைக் குறைவற நடத்தி முடித்து, ஒன்பதாம் நாள் காலை மங்களமான தீர்த்தவாரிமுடியச் செய்யத் தக்க உத்ஸவசேஷத்தையும் விதிப்படி நிறைவேற்றி அன்று

மாலையில் பரிவாரங்களோடு கூடப் பெருமாளைத் திரு வேங்கடமலைக்குத் திரும்ப எழுந்தருளப்பண்ணிக்கொண்டு சென்று கொடியிறக்கவிழா புஷ்பயாகம் முதலியவற்றை அங்கேயே செய்வித்தனர். அதுமுதற்கொண்டு பெருமா ளுடைய உத்ஸவம் திருமலைக்குக் கீழேயே நடத்தப்பட்டு வருகிறது' என்று திருமலையிலுள்ள பெரியோர் கூறிய கதையைக் கேட்டு மனக்கலக்கமுற்று, முன்பு பிரமதேவன் தொண்டைமான் சக்கரவர்த்தி முதலியோர் எங்ஙனம் திரு மலையிலேயே தீர்த்தவாரியோடு கூடிய உத்ஸவாதிகளை நடத்தினார்களோ அங்ஙனமே இக்காலத்தவர்களும் அதை இங்கேயே நடத்தவேண்டுமென்று நிச்சயித்துத் திருவேங் கடவன் கோவிலுக்கு நாற்புறங்களிலும் மேடுபள்ளமான இடங்களைச் சமமாகச் செய்வித்து அங்கு அழகியதொரு நகரத்தை நிருமித்து அதில் மாளிகைத் திரள்களால் அலங் கரிக்கப்பட்ட இரண்டு வரிசைகளைக் கொண்டவைகளும் மகோத்ஸவ தினங்களில் பகவான் வாகனங்களில் புறப் பாடு கண்டருளுவதற்குத் தக்கவைகளுமான நான்கு பெரிய வீதிகளை நாற்புறங்களிலும் ஏற்படுத்தி, ஸ்வாமி புஷ்கரிணியின் கிழக்குக் கரையில் தெற்கு வடக்காகக் குரோசவளவுடைய (கூப்பிடுதூரவளவுடைய) பெரியதோர் வீதிகளையும், அதற்குக் கிழக்கே பாரிவேட்டையுத்ஸ வத்தின் போது புறப்பாட்டிற்குரியதாய் நாற்கோணமுள்ள வோரேர் வீதியையும் உண்டாக்கித் திருமலையிலேயே உத்ஸவம் அனைத்தையும் நடத்திவைத்தருளினார்.

## உத்ஸவ கௌதுக மூர்த்திகளை மாற்றி எழுந்தருளப்பண்ணுதல்

இங்ஙனமே, அப்போது, உத்ஸவ மூர்த்தியாகப் பூஜிக் கப்பட்டுவந்த வேங்கடத்துறைவாரென்னும் திருப்பெ யர்கொண்ட திவ்யமங்களத்திருவுருவின் அவதாரதினப்பெ ருமை, திவ்யநகரத்தின் வளர்ச்சிக்கும், கநகதாராயோகத்தில் அவத்ரித்த ஸ்ரீனிவாஸப்பெருமாளுடைய (மூலமூர்த்தியினு டைய) திவ்யமான ஐச்வர்யத்தின் மேன்மேல் வளர்ச்சிக்கும்

தடையாக உள்ளதென்று பிரசித்தமான ஐதிஹ்யத்தைப் (பழையதாகச் சொல்லிவரும் கதையைப்) பெரியோர் வாயிலாகக்கேட்டு அப்போது கௌதுகமூர்த்தியாக (=நித்யார்ச்சாமூர்த்தியாக) ஆராதிக்கப்பட்டுவருகின்ற மலையப்பனென்னும் பெயர்கொண்ட திவ்யமங்கள விக்ரஹத்தை உத்ஸவமூர்த்தியின் ஸ்தானத்திலும், முற்கூறிய வேங்கடத்துறைவாரைக் கௌதுகமூர்த்தியின் ஸ்தானத்திலுமாக மாற்றி எழுந்தருளப்பண்ணி, பிராணதாரணம் முதலாக ப்ரதிஷ்டையை விதிப்படியே செய்வித்து, சாஸ்திரமுறைப்படி அவர்களுக்குத் திருவாராதனத்தையும் ஸ்ரீராமாநுஜமுனிவர் நடைபெறச் செய்தார்.

## அர்ச்சகரை நியமித்தல்

இதுபோலவே, தம்மிடம் பஞ்ச ஸம்ஸ்காரம் (1. தோள்களில் திருவாழி திருச்சங்குகளை ஒற்றிக்கொள்ளுதல், 2. பன்னிரு திருமண்காப்பணிதல், 3. அடிமைக்குரிய பெயரைப்பெறுதல், 4. மந்திரோபதேசம் பெறுதல், 5. பெருமாளுக்குத் திருவாராதனம் செய்தல்) பெற்றுத் தம்வாயிலாக பகவானைச் சரணமாகப் பற்றியதனால் பரமைகாந்தியானவரும் (= ஸ்ரீமந்நாராயணனொருவனையே தாம் அடையும் பயனாகவும் அதனை அடைதற்குரிய உபாயமாகவும் அறுதியிட்டவரும்) ஸ்ரீவைகாநஸாகமமென்னும் கடலைக் கரைகண்டவரும் பிம்பாதரர் (செங்கனி வாயர்) என்று பெயர் பெற்ற பாகவதோத்தமருமாகிய அர்ச்சக (பூசை செய்பவ)ருடைய குலத்தில் பிறந்தவர்களைக்கொண்டே திருவேங்கடமுடையானுக்கு நித்யதிருவாராதனம் நடத்திவைக்க வேணுமென்றும் யோகியர் தலைவரான இராமாநுசர் வரையறை செய்தருளினார்.

## ஸ்ரீராமானுஜமுனிவரை அனைவரும் துதிசெய்தல்

இங்ஙனம் இட்ட கட்டளைகளை அப்படியே நிறைவேற்றிவைக்க வேண்டுமென்ற மனவுறுதி கொண்டவனும் தமது மனம் போல் நம்பத்தக்க அடியவனுமான யாதவ

ராஜன் வாயிலாகத் தம் விருப்பப்படியே எல்லாவிதமான கைங்கரியங்களையும் நடத்தி வைக்கும் பொறுப்பையேற்ற இராமாநுச முனிவரை அவர் செய்தருளிய சீர்திருத்தங் காரணமாக எல்லையில்லாத மகிழ்ச்சியுண்டாகப் பெற்ற பாகவதப்பெரியோர்கள் அனைவரும் - இவர் ஆதிசேஷனோ சேனைமுதல்வரோ அல்லது திருமகள் நாதனோ என்று ஊகிக்கப்படுகின்ற யதிராஜருக்கு மங்களம் உண்டாகுக. தூய்மையுள்ள பாகவதர்களாகிய சிஷ்யர்களாலும் மனத்துக்கினிய பரிஜனங்களாலும் நன்கு அறியப்பட்ட தமது அவதாரவுண்மையையுடைய யதிராஜருக்கு மங்களம். திருவேங்கடமென்னும் திருத்தலத்தைச் சைவரால் வந்த ஆபத்திலிருந்து நீக்கிய விஷ்ணு பக்தர்தலைவராகிய யதிராஜருக்கு மங்களம். திருவேங்கடமலையரசனுக்குத் திருவாழி திருச்சங்குகளை அளித்த நல்லாசிரியரான யதிராசருக்கு மங்களம். ஸ்ரீமத் வைஷ்ணவமதத்தை உலகில் எல்லாவிதத்திலும் காப்பாறுறுவதில் விரதங்கொண்ட குருவாகிய யதிராஜருக்கு மங்களம். குத்ருஷ்டிகளின் (வேதத்திற்குப் பொருள் கூறுவதில் கெட்ட நோக்கமுடையவர்களின்) வஞ்சனையினாலுண்டான உபநிஷத்துக்களின் ஆபத்தினைக் களைந்த இராமாநுசரென்னும் யதிராஜருக்கு மங்களம். (வேதவியாசர் அருளிய) தூய்மையான பிரம்மஸூத்திரத்திற்கு குத்ருஷ்டிகளால் ஏற்பட்ட இடரை வேரோடு களைந்தெறிந்த யதிராஜருக்கு மங்களம். ஆழ்வார்கள் அனைவரின் திரண்ட ஒரே மூர்த்தியானவரும் கலியுகத்தின் தோஷங்களை அழிப்பதில் முயலுமவரும் பெரிய தயைவெள்ளமுடையவருமான யதிராஜருக்கு மங்களம். பல அவதாரம் செய்தும் ஈடேறுத திருமாலின் எண்ணத்தைக் (=உலகில் எல்லோரும் தன்னையே அடைந்து வாழ்ச்சி பெற வேணுமென்ற கோரிக்கையைக்) கண்பொழுதில் நிறைவேற்றிய யதிராஜருக்கு மங்களம். உலகிலுள்ளோர் அனைவராலும் வணங்கத்தக்க குருவானவரும் ஆதிசேஷனின் அவதாரமானவருமான ஸ்ரீராமாநுஜரென்னும் யதிராஜருக்கு மங்களம் உண்டாகுக.

என்று எப்போதும் மகிழ்ச்சியுடன் வாழ்த்துக் கூறலாயினர்.

மேலும் அவ்விராமநுச முனிவர் - "பாஷண்டர்கள் (வேதநெறியின்படி நடவாதவர்கள்) என்னும் மரங்களின் தொகுதிக்குக் காட்டுத்தீப்போன்றவரும் சாருவாகர் (உலகாயதமதத்தினர்) என்னும் மலைகளுக்கு வஜ்ராயுதம் போன்றவரும் பௌத்தரென்னும் இருளைப்போக்குவதில் சூரியன் போன்றவரும் சைனர்களென்னும் யானைகளுக்குச் சிங்கம் போன்றவரும் மாயாவாதிகள் (சங்கர மதத்தவர்) என்னும் பாம்புகளைப் பங்கப்படுத்துவதில் கருடன் போன்றவரும் ரிக் வேதம் யஜுர் வேதம் ஸாம வேதம் என்னும் மூன்று வேதங்களை அறிந்தவர்களுக்குச் சிரோபூஷணம் (தலையிலணியும் ஆபரணம்) போன்றவரும் ஸ்ரீரங்கநாதனுடைய வெற்றிக் கொடிபோன்றவருமான இந்த இராமாநுசமுனிவர் எல்லாப் பெருமையுடைனும் விளங்குகிறுர். பாஷண்டர் திரள்களாகிய மலைகளை உடைப்பதில் வஜ்ராயுதம் போன்றவையும் வைதிக வேஷத்தால் தமது பௌத்த மதத்தை மறைத்துக்கொண்டவர்களாகிய (சங்கராத்வைதிகளாகிய) கடலைக் கலக்கும் மத்துத் தடிகள் போன்றவையும் வேதாந்தத்தின் ஸாரப்பொருள்களை வருத்தமறக்காட்டுவதில் விளக்குத் பிழம்புகள் போன்றவையுமாக இராமாநுசருடைய திரிதண்டங்கள் (முக்கோல்கள்) திகழ்கின்றன. நல்லொழுக்கங்களை (உபதேசத்தின் மூலம்) உயர நிறுத்துதற்கு (ஆசிரியர்கள் உபயோகப்படுத்தும்) பிரம்புத்தடி போன்றதும் ஆற்றல்பெற்ற சாத்திரச்சட்டமாகிய வழிகளை அழகுபடுத்தும் கொடிக்கம்பம் போன்றதும் ஸத்வித்யை எனப்படும் ஒருவகைப் பக்திமார்க்கத்திற்கு விளக்குப்பிழம்பு போன்றதும் கலியுகத்திலுண்டான ஸகலவிதமான பொருளற்ற வாதங்களை அழிப்பதில் யமதண்டம் போன்றதும் (எதிர்வாதங்களால் தளர்ந்த) வேதாந்தங்(உபநிஷதங்)களுக்குக் கைப்பிடியான தடி போன்றதும் மூவுலங்களையும் வென்று தனது நிழற் கீழே வைத்துக் காப்பாற்றும் (தமது) குடைக்குத் தங்கத் காம்பு

போன்றதும் பிரதிவாதம் செய்யுமவர்களின் சிரங்களுக்கு வஜ்ரதண்டம் போன்றதுமான திரிதண்டத்தை ராமாநுஜா சார்யர் தரிக்கின்றார். வேதமென்கிற மாதுக்கு மங்கல நாணுகவும் பன்னிரண்டு வழிகளில் (வைகுண்டத்திற்குச் செல்லும் வழிகளாக அமைந்த அர்ச்சிஸ் முதலான உல கங்கள் பன்னிரண்டில்) ஏறிச் செல்வதற்கு உரியகைப்பிடி கயிருகவும் ஸத்வித்யையென்கிற பக்திசெய்யும் முறையாகிய யந்திரத்தை இயங்குவிக்கும் ஸூத்ரமாகவும் (நாடா வாகவும்) பரப்பிரம்மத்தைப் பற்பல பண்புகளோடு கூடிய தாகக் கூறும் வியாஸ ஸூத்திரங்களை அறிந்தவர்களின் (அறிவுச்) செல்வங்களுக்கு அறிகுறியான முத்துஹாரவட மாகவும் புலவர்களுக்கு அறிவையூட்டும் வேதாந்தஸூத் ரமாகவும் சாந்தியையே (புலனடக்கத்தையே) செல்வமாகக் கொண்டுள்ள யோகிகளின் உள்ளமென்கிற தாமரையோ டைக்கு (அழகூட்டும்) தாமரைத் தண்டாகவும் முனிவர் களைக் காப்பாற்றும் (காப்பு) நாணுகவும் - யதிராஜரின் திருமார்பில் யஜ்ஞோபவீதம் (=பூணூல்) மிகப்பெருமையு டன் விளங்குகிறது. பாஷண்டர்களாகிய கடலை வற்று விக்கும் - படபையென்னும் பெண் குதிரையின் முகத்தி லுள்ள நெருப்பாகவும் ஸ்ரீரங்கராஜருடைய திருவடித் தாம ரைகளின் கீழ்ப்புகும் அடியவராகவும் ஸ்ரீவிஷ்ணுலோகத்தி லுள்ள திருமா மணிமண்டபத்துக்குச் செல்லும்வழியைத் தருமவராகவும், துறவியரசர்கட்கெல்லாம் அரசரான இரா மானுசர் எல்லோரினும் மேம்பட்டு விளங்குகிருர்” என்று இவ்வாருக நாற்புறத்திலும் பரமபாகவதர்களால் விருதுகள் முழங்கப்பெற்று வைதிகர்க்குப் பேரரசராய்ப் பிரகாசித்தார்.

## திருவேங்கடமலையடிவாரத்தில் ஆழ்வார்களின் பிரதிஷ்டை

இவ்விதமாக வைஷ்ணவப் பெரியோர்களால் முழங்கப் பெற்ற வாழ்த்துக்களையும் பிருதுகளையும் பெற்ற வைதி கர்க்குச் சக்ரவர்த்தியாகிய ராமாநுஜ முனிவர், சுகாதி முனிவர்களும் ப்ருகு முதலிய தவச்செல்வர்களும் ப்ரஹ்ற

லாதன் தொடக்கமான புண்ணியவான்களும் அம்பரீஷன் முதலான அரசர்களும் திருவேங்கடமென்னும் அவ்வுயர்ந்த மலையைத் திருமாலின் மற்றொரு திருமேனியாகவே கருதித் தம் காலால் மிதித்தேற அஞ்சி அதன் பக்கங்களிலேயே வசித்துக்கொண்டும் அதிலிருந்து உண்டான அருவியாறுகளிலேயே ஸ்நாந தர்ப்பணாதிகளைச் செய்துகொண்டும், ஜநார்த்தனனைக் கண்ணால் காணவிரும்பித் தவமியற்றுகின்றனர் - என்று வாமன புராணப்பகுதி 21 எண்ணிட்ட இரண்டாமத்தியாயத்திலுள்ள வசனங்களினால் - பரம்பொருள் இன்னதென்றும் அவரப்பொருள் (தாழ்ந்தபொருள்) இன்னதென்றும் பகுத்தறியுமவர்களில் தலைவர்களான சுகாதி பரமயோகிகளும் ப்ரஹ்லாதாதி பரம பாகவதர்களும் அம்பரீஷாதி மகாபாகவத ராஜரிஷிகளும் திருவேங்கட மலையின் கண்ணும் அதில் விளங்கும் திருவேங்கடத்தான் கண்ணும் ஒருபடிப்பட்ட மதிப்புக்கொண்டவர்களாய்த் தம்முடைய ஊனவுடலாலும் காலாலும் அம்மலையைத் தொடுவதற்குப் பொறாமல் அதன் அருகிலேயே தவம் புரிந்து கொண்டிருந்தார்களென்று கூறப்பட்டுள்ளதனாலும், பகவானுடைய இயற்கையான இன்னருளென்னும் கடல் நிரம்பி வழிந்ததனால் திவ்யமான ஜ்ஞானம் பெற்று அறியாமை அறவே ஒழியப்பெற்ற ஆழ்வார்களுக்குள் நம்மாழ்வாரால் திருவாய்மொழியாம் தமிழ்மறைப்பாசுரத்தொகுதியில் மூன்றாம்பத்து மூன்றாம் பதிகம் ஏழாம் பாசுரத்தில் திருவேங்கடமென்னும் பெரிய திருமலை நமக்கு பகவானோடு ஒத்த தன்மையாகிய வீடுபேற்றினை அளிக்கவல்லது என்றும், எட்டாம் பாசுரத்தில் - திருவேங்கடமாமலையை மட்டும் தொழுதாலே நம் வினைகள் ஒயும் என்றும், ஒன்பதாம்பத்து மூன்றாம் பதிகம் எட்டாம் பாசுரத்தில் - உய்விக்கும் திருமால் நிலைபெற்ற திருவேங்கடமலை உயர்ந்த பூவுலகின்கண் உள்ளது. தேவர்கள் அதனைக் கிட்டிக் கைதொழுகிறார்கள் என்றும் அருளப்பட்டிருத்தலாலும், திருமழிசையாழ்வாரால் நான்முகன் திருவந்தாதியென்னும் தமது தமிழ்

வேதத்தில் நாற்பத்திரண்டாம் பாசுரத்தில் - மிகவும் ஓங்கிய வேங்கடமலையைச் சென்று வணங்குமின், அது தன்னியல்பினால் நம் பாவங்களை நிச்சயமாக நீக்கவல்லது என்றும், நாற்பத்தைந்தாம் பாசுரத்தில் - குளிர்ந்த அருவிகளையுடைய திருவேங்கடமலையே வைகுந்தவாசிகளுக்கும் பூலோகவாசிகளுக்கும் அடையத்தக்க மிக மிக உயர்ந்த இடமாகும் என்றும், நாற்பத்தெட்டாம் பாசுரத்தில் - வேங்கடமலையொன்றே பரமபதவாஸிகள் அடையத்தக்க இடம், அதுவே - அனுபவித்தே தீர்க்க வேண்டிய பாவங்களையும் நோய்களையும் தீர்க்கவல்லது என்றும் அருளப்பட்டுள்ளதனாலும், திருமங்கையாழ்வாரால் பெரிய திருமொழியெனப்படும் தமது திராவிட வேதத்தில் முதற் பத்து எட்டாம் பதிகம் ஒன்பது பாசுரங்களில் - நெஞ்சமே நீ திருவேங்கடமலையை அடையக்கடவாய் என்று அருளிச் செய்யப்பட்டிருப்பதனாலும், இவ்வாறே பலவிடங்களில் மற்றையாழ்வார்கள் அனைவராலும் திருவேங்கடமலையே அடையத்தகுந்ததென்று பணிக்கப்பட்டிருத்தலானும், அவ்வாழ்வார்களும் திருமலையையும் அங்கு உறையும் திருமாலையும் ஒருபடிப்பட ப்ராப்யமமாகவும் ப்ராபகமாகவும் (அடையத்தக்க பயனாகவும் அதனை அடைவிக்கும் வழியாகவும்) எண்ணித் தமது தேகத்தாலும் பாதத்தாலும் திருமலை தீண்டற்கு உரியதன்றென்று நினைத்தே அதன் மீது ஏறுமல் ( அடிவாரத்திலிருந்தே, மங்களாசாஸனம் செய்தருளினரென்று தெரியவருதலானும், திருமலையின் மேல் நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்களைப் பிரதிஷ்டை செய்வித்தால் அது அவர்களின் திருவுள்ளக் கருத்துக்கு ஒவ்வாதென்று அறுதியிட்டு அம்மலையின் அடிவாரத்திலேயே திருப்பதியில், திருமலையைப் பார்த்தவாறே தனித் தனியாகக் கோவில்களில், மங்களாசாஸனமொன்றையே பயனாக எண்ணிய அந்த ஆழ்வார்களையும் சாஸ்திரமுறைப்படி அர்ச்சாமூர்த்திகளாக (பிம்பவடிவமாக) பிரதிஷ்டை செய்வித்தருளினார்.

## திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜனின் பிரதிஷ்டை

இவ்வாறே, அதற்குச் சிலநாட்களுக்கு முன்பு, பல பிறவிகள் பிறந்தீட்டிய தீவினைத் தொடர்ச்சியின் வசமாகத் தனது சைவ மதத்தில் கொண்ட பெரும்பற்றென்கிற கொடுங்கோன்மையினால் தனது நாடான சோழதேசத்தில் பல இடங்களிலுள்ள விஷ்ணுகோவில்களுக்கு விநாசம் விளைத்து அப்பாவத்தின் விளைவாகக் கழுத்தில் பெரிய பிளவை உண்டாகி புழுத்து அதன் கடுமையினால் மரணமடைந்து அதனாலேயே க்ரிமிகண்டன் (புழுத்த கழுத்தினன்) என்று பிரசித்தியடைந்து தனது இயற்பெயர்கொண்டு சொல்லத்தகாத சோழவரசன் ஒருவனால் விஷ்ணு ஸ்தலங்களுக்கு அவனிழைத்த தீங்கென்ற மகாப் பிரளயம் நடந்த சந்தர்ப்பத்தில், காவேரிக் கரையிலுள்ளதும் கண்ணுவ முனிவரின் தவவொழுக்கத்தின் பயனாகக் கண்ணெதிரில் தோன்றிய ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாள் எழுந்தருளியுள்ளதுமான திருச்சித்திரகூடமென்று பெயர்பெற்ற திவ்ய தேசத்துக்கும் பேராபத்து நிகழ, அங்கிருந்து அஞ்சியோடிய சில ஸ்ரீவைஷ்ணவர்கள் தேவாதிதேவனென்று பெயர்படைத்த - கோவிந்தராஜனுடைய உத்ஸவ மூர்த்தியை மட்டும் காப்பாற்றிக் கொணர்ந்து திருவேங்கடமலைத் தாழ்வரையில் உள்ள திருப்பதியில் பூஜித்துவருகிறார்களென்றும், அவருடைய மூலமூர்த்தியாய்ப் பாற்கடலில் பள்ளிகொண்ட திருக்கோலம் கொண்ட - சித்திரகூடநாதனான - ஸ்ரீகோவிந்தராஜனென்ற பெருமாள் கடலின்கண் எறியப்பட்டாரென்றும் கேள்விப்பட்ட பகவத்ராமாநுஜமுனிவர், புராணப் பிரசித்தியோடு ஸ்ரீகுலசேகராழ்வார் திருமங்கையாழ்வார்களின் மங்களாசாஸனமும் பெற்ற திருச்சித்திரகூடமென்ற திவ்யதேசம் இப்படி அடியோடு பாழாய்ப்போவது நியாயமுடையதன்றே ஐயோ என்று திருவுள்ளம் கலங்கி, கண்ணுவமகரிஷியின் தவமும் ஆழ்வார்களின் மங்களாசாஸனமும் ஒரு திவ்யதேசத்தின் நிர்மூலநாசத்தைப்

பொறுக்கமாட்டாவாகையால், அதே திவ்யதேசத்தின்கண் மறுபடியும் பகவானது தோற்றம் உண்டாகியே தீரும். இப் போது சித்திரகூடநாதனாகிய கோவிந்தராஜப்பெருமானை இங்கேயே பிரதிஷ்டை செய்விப்போமென்று கூறி, தமக்கு மிகப்பிரிய தொண்டனான யாதவமன்னவனை அழைத் துத் தமது கருத்தை அனைத்தையும் அறிவித்து, கடலில் எறியப்பட்டவரும் பாற்கடலில் பள்ளிகொண்ட திருவுருக் கொண்டவரும் ஸ்ரீகோவிந்தராஜனென்னும் பெயர்பெற்றவ ரும் தேவாதிதேவனெனப்படும் உத்ஸவருக்கு மூலமூர்த் தியானவரும் திருச்சித்திரக்கூடநாதருமாகிய பெருமாளை ரகஸ்யமாக ஆவாஹனம் செய்து வந்து, ஸ்ரீகோவிந்த ராஜ தேவாதிதேவர்கள் இருவரையும் திருவேங்கடமுடை யானோடு ஒப்ப ஸ்ரீவைகாநஸாமகம் கூறிய விதிப்ப டியே திருப்பதியில் தென்புறத்திலுள்ள பெரிய ஏரியின் பக்கத்தில் பிரதிஷ்டை செய்வித்தருளினார்.

அந்த கோவிந்தராஜப் பெருமான் - திருப்பாற்கடல்நா தனாய்த் திருமகளும் மண்மகளும் வருடாநின்ற திருவடித் தாமரையிணையனாய்த் திருநாபிக்கமலத்தில் தோன்றிய நான்முகனையுடையவனாய் மதுகைடபர் என்னும் அசுர ரிருவர் நிற்கும் திருவடியருகையுடையவனாய் அவ்வசு ரரைத் துரத்துவதற்காக விஷாக்நிஜ்வாலைத் திரட்சியை உமிழ்ந்துகொண்டும் பெருமூச்சுவிட்டுக் கொண்டுமிருக்கிற - ஆவென்று அங்காந்த (திறந்த) வாயோடு கூடி உயரவெ டுத்த பணமண்டலங்களை (படத்தொகுதிகளை)க் கொண்ட பாம்பாம் ஆதிசேஷனென்ற அணையில் சாய்ந்தவனாய் அகன்று நீண்ட கிரீடம் தொடக்கமான திவ்யாபரணங்கள் அணிவிக்கப்பட்டவனாய் நான்கு தோளனாய்த் தென்ப குதியில் வைத்தருளிய திருமுடியும் வடபகுதியில் நீட்டிய திருவடித்தாமரையிணையுமாக விளங்குமாறு பிரதிஷ்டை செய்விக்கப்பட்டான்.

இப்படி ஸ்ரீராமாநுஜமுநிவரால் உத்தரவிடப்பெற்ற - நாராயணபுரவாஸியான அந்நாட்டரசன் யாதவமன்னன்

தன் குருவின் ஆணையின்படித் திருப்பதியில் தென்பு றத்தில் பெரிய ஏரியினருகில் பெரியதோர் கோவிலில் முற்கூறிய திருவுருவமைப்புடன் கூடிய கோவிந்தராஜப் பெருமாளைப் பிரதிஷ்டை செய்வித்து, அக்கோவிலுக்கு நான்கு பக்கங்களிலும் தன் குருவின் பெயரால் ராமாநு ஜபுரமென்று பிரசித்தமான - அவாந்தர (இடையிலுள்ள) நகரத்தையும் உண்டாக்கி, ஏற்கனவே ஸ்ரீ ஸ்ரீ நிவாஸனு டைய போகத்துக்குரிய படுக்கையாகவுமுள்ள ஆதிசேஷ னுக்குப்பக்கத்தில் அமையப்பெற்று அவனது கோபத்தி னால் மிகவும் தாபமடைவிக்கப்பெற்ற திருப்பதியில், மது கைடபர்களை விரட்டுவதற்காக விஷாக்நி ஜ்வாலைகளை உமிழ்கின்ற - ஸ்ரீ கோவிந்தராஜனுடைய திருப்படுக்கை யான திருவனந்தாழ்வானுடைய சீற்றத்தினால் மேலும் பெருங்கேடு விளையக்கூடுமென்று அஞ்சி, அவ்விராமாநுஜ முனிவரின் ஆணையைக் கொண்டு, அத்திருப்பதியின் சில அமைப்புக்களை மாற்றியும், திருவேங்கடமலையடிவாரத் தில் ஆழ்வார்களுக்கு ஏற்பட்டிருந்த அவ்வக்கோவில்களை - முன்பிருந்த அமைப்பின்படியே இவ்விடைநகரான ராமாநு ஜபுரத்தின் நடுவில் கட்டுவித்தும், அத்திருப்பதி நகரத்தை ஆதிசேஷனுடைய கோபத்தைத் தணிவிக்கும் கருடபக்ஷி யின் (தலையும் இறகுகளும் காலும் வாலுமாய்ப் பிரிந்த) உறுப்புக்களின் அமைப்புப்பெற்றதாக, திருமலைக்குச் சிறிது தூரத்தில் நிருமாணம் செய்வித்தான்.

இவ்விதமாகத் தாம் சொல்லியபடியே செய்யுமவனும் தம் மனத்துக்கு இனிய சிஷ்யனும் திருவேங்கடநாட்ட ரசனும் நாராயணபுரவாஸியுமான யாதவராஜன் தமக்கு அனுகூலமாக இருப்பதனாலும், தமது வேண்டுகோளின் படியே சைவஜனங்களைத் தூரத்துவதற்காகத் திருவாழி திருச்சங்கு முதலிய தனக்கே உரிய ஆயுதங்களையேந்திய திருவேங்கடமுடையான், தம்மால் பிரதிஷ்டை செய்விக்கப் பட்ட ஸ்ரீ கோவிந்தராஜப்பெருமான் ஆகிய இருவரிடத்தி லுமுள்ள உயர்ந்த அபிமானத்தினாலும், பகவத் ராமாநு ஜமுனிவர் தமக்கு ஸ்ரீ ரங்கநகரத்தில் வாஸம் செய்வதில்

அதிகமான ஆசையிருந்த போதிலும், ஸ்ரீரங்கத்திற்குச் சென்றுகொண்டும் திருப்பதிக்கு வந்துகொண்டும் செய்த ருளிய மூன்று நான்கு திருவேங்கடயாத்திரைகளில் திரு வேங்கடத்தைச் சேர்ந்த திவ்யதேசத்தில் அவ்வப்போது அவ்வக் கால தேசங்களுக்கும் பழைய ஐதிஹ்யங்களுக்கும் ஏற்றவாறு பல அதிசயகாரியங்களை ஏற்படுத்தியருளி னார்.

அந்த யாதவராஜனும் பகவத் பாஷ்யகார (ராமாநுஜ) சிஷ்யனாய்த் தன்னாசாரியரின் கட்டளையைப் பின்செல் லுவதொன்றையே தனது பயனாகக் கொண்டவனாய், அவரால் பிரதிஷ்டை செய்விக்கப்பட்ட ஸ்ரீகோவிந்தராஜ னிடத்திலும் அவரது பெயரால் குறிக்கப்பட்ட கோவிந்த ராஜன் எழுந்தருளியுள்ள ராமாநுஜபுரத்திலும் தான் வைத்த விசேஷாபிமானத்திற்கு வசப்பட்டு, மண்டபம் கோபுரம் மதிள் முதலிய கோவிலுக்கு அங்கமானவற்றையும நக ரத்திற்கு அங்கமான திருவீதி தொடக்கமானவற்றையும் உண்டாக்கி, பெருமாளுக்கு நடத்தும் உத்ஸவவிசேஷங்க ளையும் நடப்பித்துக்கொண்டிருந்தான்.

## ஸ்ரீகோவிந்தராஜனுடைய உருவ அமைப்பு முதலியன

ஸ்ரீஹரிவம்சம் பவிஷ்யபர்வம் இருநூற்று மூன்றும் அத்தியாயம் பௌஷ்கரனது (பிரமனது) தோற்றமுரைக்கும் கெட்டத்தில் - பெருங்கடலில் பள்ளிகொள்ளும் நாராயண பகவானுக்கு, இடையூறுக மதுவென்னும் பெரிய அசுரன் தமோ குணத்தோடு உண்டானான். அவனுக்கே உதவி செய்யுமவனாகக் கைடபனென்னும் வேறோர் அசுரன் ரஜோ குணத்தோடு உண்டானான் - என்றிது முதலாக மது கைடபரால் வணங்கப்படும் தன்மையும், அதற்குப் பின்பு உத்தமவசுரரான அவ்விருவரும் கொழுத்தவர்களாய்ப் போர் செய்ய விரும்பிக் கோபித்துக் கண்கள் சிவக்கப் பெற் றுக் கொடியவர்களாய் அங்குப் பிரம்மதேவனைக் கண்டு, வெள்ளைத் தலைப்பாகையணிந்து நான்கு முகங்களுடன்

கூடித் தாமரைமலரின் நடுவில் இருக்கும் நீ யார்?' என்று வினவியது காண்கின்றபடியினால் நான்முகன் வீற்றிருக்குமிடமான திருநாபிக்கமலமுடைமையும் அறியப் படுவதனாலும், பாற்கடல் நாதனான திருமாலுக்கும் பூமி தேவிக்கும் நடந்த ஸம்பாஷணையாக அமைந்த ஸ்ரீவிஷ்ணு ஸ்ம்ருதியின் முதலாமத்தியாயத்தில் = ஆதிசேஷனாகிய பாம்பின் படங்களிலுள்ள மணிகளின் பேரொளியினால் இது இன்னதென்று ஊகித்து அறிய முடியாத திருமுகக் கமலமுடையவனும் நூறு சந்திரரோடு ஸமானமானவனும் பதினாயிரம் சூரியரோடு ஒத்த காந்தியையுடையவனும் பொன்னாடை அணிந்தவனும்; நவரத்தினங்களினாலும் அலங்கரிக்கப்பெற்றவனும் கண்கள் கூசுவதனால் பார்க்க முடியாதவனும் சூரியன் போன்ற கிரீடத்தினாலும் குண்ட லங்களிரண்டினாலும் அணிசெய்யப்பெற்றவனும் மெல்லிய கரங்கள் கொண்டு மலர் மகளால் பிடிக்கப்பெற்ற திருவ டியிணையுடையவனும் தேகமெடுத்து வந்த (சங்கு சக்க ரம்) ஆயுதங்களினால் சுற்றும் ஸேவிக்கப்பெற்றவனுமாய்க் கொண்டு சேஷசயனத்தில் சாய்ந்துள்ள மதுசூதநனைப் பூமிதேவி கண்டாள். அத்தாமரைக் கண்ணனை அவள் கண்டு வணங்கினாள் என்று - திருப்பாற்கடல்நாதனு டைய திருவுருவமைப்பு வருணிக்கப்பட்டுள்ளமையாலும், அதிலேயே தொண்ணூற்றெட்டாமத்தியாயத்தில் - இவ் வாறு கூறப்பட்ட பூமிதேவி முடியும் முழந்தாள்களும் பூமியில் படுமாறு நமஸ்காரம் செய்து, பகவானே உமது பக்கத்தில் எப்போதும் நான்கு மகாபூதாலயங்கள் உள் ளன. (அதாவது) சங்கு, சக்கரம், கதை (தண்டு) தாமரை மலர் இவற்றை முறையே உருவமாகக்கொண்ட ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம் இவைகள் உள்ளன. பூமியான நானும் இந்த (பெண்ணின்) உருவங்கொண்டு உம்முடைய திருவடிகளின் நடுவில் இருக்கவிரும்புகிறேன் என்று கூறி னாள். பகவானும் அங்ஙனமே இரு என்றார். பூமிதேவி தன் கோரிக்கை நிறைவேறப் பெற்று அவ்வாறே செய் தாள் என்று சொல்லப்பட்டுள்ளதாலும், ப்ரஹ்மாண்ட

புராணம் வேங்கடாசல மாகாத்ம்யம் முதலாமத்தியாயம் க்ஷீராப்தி நாதனை வருணிக்கும் கெட்டத்தில் - ஸ்ரீதேவி பூமிதேவிகளால் ப்ரீதியுடன் வருடப்பெற்ற திருவடிகளை யுடையவன் என்று கூறப்பட்டதன்னாலும் இங்ஙனம் கூறப்பட்ட உருவமைப்புக்களுடன் கூடியவராக கோவிந் தராஜன் பிரதிஷ்டை செய்விக்கப்பட்டார். இங்ஙனமே - ஆதிசேஷனுடைய விஷஜ்வாலைகளினால் மதுகைடபர் கள் எரிக்கப்பட்டார்கள் என்றுள்ள வசனத்தினால், நகர மும் அதுவே காரணமாக எரிக்கப்படக்கூடுமென்று அஞ்சி (யாதவராஜனால்) அந்நகரமும் கருடனது உறுப்புக்களின் அமைப்புடையதாக நிருமிக்கப்பட்டது.

## ஸ்ரீகோவிந்தராஜனும் ஸ்ரீவேங்கடேசனும் ஒருவரே என்கை

இவ்விதமாகச் செய்வித்து பகவத்ராமாநுஜ முனி வர் மேலும் கூறுவாராயினர். வாராய் யாதவராஜனே, கோவிந்தராஜனும் திருவேங்கடநாதனும் க்ஷீராப்தி (திருப் பாற்கடல்) நாதனுடைய அவதாரமாகையாலே இருவரும் ஒருவரேயென்று அறியக்கடவாய். திருவேங்கடவன் க்ஷீராப் திநாதனது அவதாரமென்பது பிரம்மாண்டபுராணம் முத லிலுள்ள இரண்டு அத்தியாயங்களில் தெளிவாக உள்ளது. ஆதிசேஷனுடைய அவதாரமான திருவேங்கடமலை எப்படி பகவானுடைய திருமேனியாகவும் இருக்கிறதோ, அப்படியே திருவேங்கடநாதன் ஸ்ரீவைகுண்டநாதனுடைய அவதாரமா யிருந்த போதிலும் அவனிடம் க்ஷீராப்திநாதனுடைய அம்சமும் கலந்திருப்பதனால் க்ஷீராப்திநாதனாகவும் அப் பெருமான் ஆகத் தகுதி பெற்றுள்ளான். பிரம்மாண்ட புராணம் இரண்டாமத்தியாயத்தில் - அகத்தியாதி முனி வர்கள் இம்மலை விஷ்ணுவின் வேறொரு திருமேனியாக உள்ளமையினால் இதனைத் தம் கால்களால் மிதிக் கவில்லை. அரவரசின் உருவமான திருமலை நாராய ணனுடைய அம்ச (தேக)மாகவும் உண்டாயிற்று என்று கூறப்பட்டுள்ளமை காண்க. ஆகையால் கோவிந்தராஜனுக்

கும் திருவேங்கடநாதனுக்கும் உத்ஸவம் முதலியவற்றை ஒரேவிதமாகவும் ஒன்ருல் ஒன்றுக்குத் தடையில்லாமல் வெவ்வேறு காலங்களிலும் நடத்திவைக்கக்கடவாய்.

மேலும் ஸ்ரீவைகுண்டநாத க்ஷீராப்திநாதர்களின் அவதாரங்களான திருவேங்கடநாத கோவிந்தராஜர்கள் இருவரும் முறையே தூரத்திலும் ஸமீபத்திலும் உள்ளவர்களாய்க் கொண்டு தம்முடைய மூலமான பெருமாள்களின் லீலையையே காட்டித் தாமிருவரும் ஒருவரேயென்பதை அறிவிக்கின்றனர். எங்ஙனம் மிகத் தொலைவிலுள்ள ஸ்ரீவைகுண்டநாதன் துன்பமுற்ற பிரமன் முதலியவர்கள் தாம் படும் துன்பத்தை முறையிடமுடியாதவாறு அரியவனானபடியினால், கூக்குரல் கேட்டு அவர்களைக் காப்பதற்காகவும் அவர்கள் தன்னைத் தஞ்சமடைவதற்காகவும் தானே திருப்பாற்கடலை அடைந்து அண்மையில் இருந்து அடைய எளியவனாய் விளங்குகின்ருனோ, அங்ஙனமே திருவேங்கடநாதனும், மிகவுயர்ந்த திருமலைச் சிக்ரத்தில் வெகு தூரத்திலிருந்து கொண்டு, நோய் முதலியவற்ருல் சக்தியற்றவர்கள் தன்னையடையமுடியாதவாறு அரியவனாயிருந்தவன், அவர்கள் வருத்தமில்லாமல் தன்னையடைவதற்காகத் திருப்பதியில் தானே வேருெருக்கொண்டு அண்மையில் இருந்து அனைவர்கரும் எளியவனாய் விளங்குகின்ருன்.

பல சொல்லி என்? ஸ்ரீவைகுண்டநாதனும் க்ஷீராப்திநாதனும் ஒருவரானால் அவர்களின் அவதாரமான திருவேங்கடநாதனும் கோவிந்தராஜனும் ஒருவரேயன்பது அறியவெளியதாகும். மேலும் - இப்படிக் கலியுகத்தில் சில நாட்களுக்குப் பின்பு க்ஷீராப்திநாதனது அவதாரமான திருச்சித்திரக்கூடத்திருப்பதியெம்பெருமானான ஸ்ரீகோவிந்தராஜன் ஏதோவொரு காரணத்தினால் திருவேங்கடமலையடிவாரமான திருப்பதிக்கு எழுந்தருளப்போகிருன். அப்போது ஸ்ரீவைகுண்டநாத க்ஷீராப்திநாதர்களின் அவதாரங்களாகிய திருவேங்கடநாத ஸ்ரீகோவிந்தராஜர்கள் முறையே திருமலை

யின் மேற்பகுதியிலும் அடிவாரத்திலுமாக எழுந்தருளியி ருந்து, திருமலையேறும் ஆற்றலில்லாமல் நோய் முதலிய வற்ருல் துன்பமுற்றவர்களுக்கு அருமையாகவும் எளிமையா கவும் இருந்துகொண்டு, தமக்கு மூலமானவர்களாய் பிரம் மாதி தேவர்களுக்கு தூரம் ஸமீபம் காரணமாகப் பரமபதத் திலும் பாற்கடலிலும் இருந்துகொண்டு அரியவனாகவும் எளியவனாகவும் அமைந்துள்ள ஸ்ரீவைகுண்டநாதனுடைய வும் க்ஷீராப்திநாதனுடையவும் லீலையையே வெளிக்காட் டுகின்றவர்ளாய் அவ்விருவரைப்போல் ஒருமைப்பாட்டைய டைந்து எழுந்தருளியிருக்கப்போகிருர்கள் என்று வரப்போ கிற செய்தியை அறிந்தே, ஸ்ரீவேதவியாஸபகவானுடைய சிஷ்யரும் முக்காலத்திலுள்ள தருமசரித்திரமனைத்தையும் நன்கறிந்தவருமான ஸ்ரீஸூதமகாமுனிவர் ஸ்ரீவேங்கடாச லமாகாத்மியங் கூறும் ஸ்ரீவராகபுராண முதற்பகுதி 61 எண்ணிட்ட இருபத்தொன்பதாமத்தியாயத்தில் ஸ்ரீவேங் கடேசாஷ்டோத்தர சதநாமாவளியில் - கோவிந்தனாகிய உனக்கு எப்போதும் வணக்கம் ஸ்ரீநிவாஸனாகிய உனக்கு வணக்கம் என்று படித்து அதன் மூலமாக ஸ்ரீனிவா ஸனுக்கும் கோவிந்தராஜனுக்கும் ஒற்றுமையையே அறி வித்தனர். ஆகையால் திருப்பாற்கடல்தான் திருவின் பிறப்பிடமாதலால் திருப்பதி (திருவின் இடம்) என்ற பெய ரால் குறிக்கப்பட்ட நகரின் உருவத்தைப் பெற்றுள் ளது. ஸ்ரீவைகுண்டமே சிறிது எழுத்துவேறுபாட்டினை அடைந்து ஸ்ரீவேங்கடம் என்னும் பெயரால் குறிக்கப்பட்ட மலையின் உருவத்தைப் பெற்றிருக்கிறது. அவ்விரண்டி டங்களிலும் எழுந்தருளியுள்ள கோவிந்தராஜனும் திருவேங் கடநாதனும் முறையே க்ஷீராப்திநாதனும் ஸ்ரீவைகுண்ட நாதனுமே ஆவர். அவர்கள் இருவரும் ஒருவரேயென்று திண்ணமாக எண்ணிப் பூரண மதிப்புக் கொண்டு நீ அவர்களுக்கு ஸமானமாகவே உத்ஸவம் முதலான வற்றைத் தடையின்றி வெவ்வேறு காலங்களில் நன்ருக நடத்திவைக்கக் கடவாய் - என்று யாதவராஜனுக்குக் கட்டளையிட்டருளினார்.

## இருவரும் ஒருவரே என்பதற்குச் சான்றாக ஒரு கதையும் இராமானுசரின் ஏற்பாடும்

அதன்பின்பு யாதவராஜன் இராமாநுசரின் கட்டளையின்படி ஸ்ரீகோவிந்தராஜனுடைய திருவாராதனம் திருவிழா முதலியவற்றை நடத்திவருங் காலத்தில், ஸ்ரீகோவிந்தராஜனும் வேண்டுவார் வேண்டும் இம்மை மறுமைப்பயன்கள் அனைத்தும் அளித்துக் கொண்டு பிரசித்தியுடன் விளங்கி வருமளவில், மகப்பேற்றை விரும்பிய காசி மன்னவன் திருவேங்கடமுடையானைச் சேவிக்கக் குடும்பத்தோடு புறப்பட்டு வர, அப்பெருமான் 'தேஹிமே ததாமிதே' (= எனக்கு ஒன்று தா, உனக்கு ஒன்று தருகிறேன்) என்று வேதத்தில் பிரசித்தமானதும் பெரும்பாலும் வேறு தேவதைகளின் மூலமாகவே தன்னால் நிறைவேற்றப்பட்டு வருவதுமான லீலையைத் தன்னுடையதே என்றும் தனது சங்கற்பத்தினாலேயே வேறு தேவதைகளிடம் உள்ளதென்றும் உலகோர்க்குத் தெரிவிக்கவெண்ணித் தானும் வேறு தேவதைகளின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு, காசி மன்னனது பட்டத்தரசியின் கனவில் தோன்றி, 'உனக்கு மகப்பேறு அளிக்கிறேன் உனது மூக்கின்கண் உள்ள மணியை எனக்குத்தா' என்று யாசிக்க, 'ஐயனே நான் கணவனுக்கு வசப்பட்டவளாயிருக்கிறேன், அவன் இசைந்தால் தருகிறேன்' என்று அவ்வரசி விடையளிக்க, 'அப்படியானால் எங்கள் அண்ணராகிய கோவிந்தராஜப்பெருமாளுக்கு நானும் வசப்பட்டிருக்கிறேன். அவர் இசைந்தால்தான் உனக்கு நான் மகப்பேறு அளிக்கவல்லேனாவேன், இல்லையேல் இல்லை' என்று எதிர்விடையளித்து அதன் வாயிலாகத் திருவேங்கடவன் - இப்போது இராமாநுசமுனிவரால் நிச்சயிக்கப்பட்டிருக்கிற - கோவிந்தராஜனுக்கும் தனக்கும், ஒரே பொருளை மூலமாகக்கொண்டுள்ளதனால் ஏற்பட்டுள்ள ஒரே பொருளில் அடங்கியுள்ளமையென்னும் ஒரேபொருளாந்தன்மையையே முன்பு வெளியிட்டருளினான் என்று இக்கதையைக் கேட்ட பகவத் ராமாநுஜ முனிவர், எப்படி ஒரு கோவிலில் பஞ்சபேரங்க (ஐந்து மூர்த்திக)ளுக்கு

ஒன்றையே மூலமாகக் கொண்டிருப்பதனால் ஒற்றுமை உள்ளதோ அப்படியே நம்மால் இசையப்பெற்ற ஸ்ரீகோவிந்த ராஜனோடு தனக்குள்ள ஒற்றுமை ஸ்ரீநிவாஸபகவானால் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆகையால் இனி, திருவேங்கடநாதன் ஸ்ரீகோவிந்தராஜன் ஆகிய இவ்விருவருக்கும் திருவாராதனகாலத்தில் வேதம் ஸ்ம்ருதி இதிஹாஸம் புராணம் முதலியவற்றை ஓதும் போது ஸ்ரீவேங்கடாசல மாகாத்மியப்பகுதி ஸ்ரீசித்திரகூடமாகாத்மியப்பகுதி ஆகிய இரண்டும் இரண்டிடங்களிலும் ஓதப்படவேண்டும். நித்யாநுஸந்தேய (தினமும் ஓதத்தக்க) திவ்யப் பிரபந்தங்களை ஓதும் போதும் திருவேங்கடமுடையான் ஸ்ரீகோவிநதராஜன் ஆகிய இருவரைப் பற்றிய திவ்யப் பிரபந்தப் பகுதிகளும் இரண்டிடங்களிலும் ஓதப்படவேண்டும். திருமலை திருப்பதி என்னும் இரண்டு ஸ்தலங்களில் வசிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்த இரண்டு திவ்ய தேசங்களையும் ஒன்ருகவே மதித்துத் தம் திருமாளிகைகளில் விவாகம் முதலான உத்ஸவாதிகள் நடத்தும் போது, தத்தம் தாயார்களோடு கூடிய திருவேங்கடமுடையான் கோவிந்தராஜன் என்னும் இருவருக்கும் ஸம்பாவனை செய்யக்கடவர்கள். கத்யம் (வசனநடையிலுள்ள துதி) பிருது முதலியவற்றை ஓதும்போதும் இவ்விருபெருமாள்களின் நாமதேயங்களைச் சொல்லியே இருவருக்கும் கத்யம் பிருது முதலியனவற்றை ஓதவேண்டுமென்ற நியதியையும் செய்தருளினார்.

## ஸ்ரீகோவிந்தராஜன் கோவிலில் ஆண்டாள் பிரதிஷ்டை

இவ்வாறு, ஸ்ரீராமாநுச முனிவர் ஸ்ரீநிவாஸ பகவானுடைய எல்லையற்று இடையருத செல்வத்தின் வளர்ச்சிக்காக அவரது திருமார்பிலுள்ள பொற்கண்டியில் வ்யூஹலக்ஷ்மியைத் தாம் பிரதிஷ்டை செய்வித்தபடியே, ஸ்ரீகோவிந்தராஜனுடைய செல்வமும் இடையருமல் மேன்மேலும் வளர்ச்சியடைவதற்காக ஒரு பிராட்டியைப் பிரதிஷ்டை செய்விக்கவேணுமென்று ஆராய்ந்து, பட்டர்பிரானான பெரியாழ்வாருடைய கன்னிகையானவளும் கர்ப்ப

வாஸம் பண்ணுமல் திருத்துழாய் வனத்தில் பிறந்தவளும் பூதேவியின் அம்சங்கொண்டவளுமான ஸ்ரீகோதாதேவியாகிய ஆண்டாளை, குறைவின்றி லக்ஷணங்கள் அனைத்தும் அமையப்பெற்றவளாகவும் ஸ்ரீகோவிந்தராஜனுக்கு எதிராக ஒளிவீசிக்கொண்டு அழகுடன்கூடிய செங்கழுநீர் மலரால் அலங்கரிக்கப்பட்ட இடத்திருக்கையையுடையவளாகவும், அப்பெருமானுடைய பெருஞ்செல்வத்தை வளர்க்கும் வ்யூஹலக்ஷ்மியின் யந்திர மந்திரங்களை முறைப்படி எழுதி அலங்கரிக்கப்பட்ட திவ்ய ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளியிருப்பவளாகவும், ஸ்ரீகோவிந்தராஜனது வலப்பக்கத்தில் வேறொரு கோவிலில், தனிக்கோவிலுள்ள பிரதானமான தாயார் போலவே பிரதிஷ்டை செய்வித்தருளினார்.

## திருவிழா முதலியன

பின்பு இராமானுசருடைய உத்தரவு கொண்டு, யாதவராஜன் கோவிந்தராஜருக்குப் புராணப்பிரசித்தமான ஆனி மாதப்பிரம்மோத்ஸவத்தையும் ஆண்டாளுக்கு ஆடிமாதத் திருநக்ஷத்திரோத்ஸவத்தையும் மார்கழிமாத நீராட்டவுத்ஸவத்தையும் மிக உத்ஸாஹத்துடன் நடத்தி வைத்தான். மேலும் அவன் ஆண்டாளோடு கூடிய கோவிந்தராஜனுக்கு எப்போதும் மகாபாகவதவர்களின் மங்களாசாஸனத்தினால் தடையற்ற செல்வத்தின் செழிப்பை உண்டாக்கக் கருதி உடையவரின் உத்தரவு கொண்டு கோவிந்தராஜன் எழுந்தருளியுள்ள ராமானுஜபுரத்தில் நான்கு பக்கங்களிலுமுள்ள பலிஸாதிக்கும் திருவீதிகளில் பல மாளிகைகளை உண்டாக்கி, திருமலைநம்பிகள் திருமலையனந்தாழ்வான் முதலான மஹாபாகவதர்களுக்கு அவற்றை ஸமர்ப்பித்து அவர்களை அங்கு வசிக்கச் செய்தான்.

அங்ஙனமே, 'நகரத்தின் வடமேற்குத் திசையில் ஸமமான இடத்தில், நகரமக்களின் அபிவிருத்திக்காகக் கடைத்தெருவை நிருமிக்க வேண்டும்' என்ற சாஸ்திரத்தின்படி, ஸ்ரீராமானுஜபுரத்தின் வடமேற்குத் திசைப்பகுதியில் நகரமக்களுக்கு உதவுமாறு கடைத்தெருவையும், "பெருமாளுக்குக் கிழக்குத் திக்கில் தானியக் களஞ்சியத்தை ஏற்படுத்தவேண்டும்' என்னும் சாஸ்திரவிதிப்படிப் பெருமாள் கோவிலுக்கு முன்பக்கத்தில் பெருமாளுக்குத் தானியக்களஞ்சியத்தையும் நிருமாணம் செய்வித்தான்.

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸ மாலையில் நான்காம் கொத்து முற்றும்.

# ஐந்தாம் ஸ்தபகம்

## பூங்கிணறு (பூலபாவி)

இனி, திருவேங்கடமலையில் பெருமாள் திருக்கோவிலில் இருக்கும் பூங்கிணறு முதலியவற்றின் வரலாறு கூறப்படும்.

முன்பு - ஒருகால் அரசர்பெருமானாகிய தொண்டைமான் சக்கரவர்த்தி தினமும் குகை வழியாக வந்து பெருமாளைச் சேவித்து உயர்ந்த உலக போகங்களை அனுபவித்துக்கொண்டு தருமமாக ராஜ்யத்தை ஆண்டு வந்தான் - என்று பூகோள உபாக்யானமென்று கூறப்பட்ட வராக புராணமிரண்டாம் பகுதியில் பத்தாம் அத்தியாயத்தில் கூறியபடியே, தொண்டைமான் சக்கரவர்த்தி கலியுகத்தின் தொடக்கத்தில் திருவேங்கடநாதன் திருவடித்தாமரையின் கண் பரிபூரண பக்தி உண்டாகப் பெற்று அப்பெருமானருளினால் அறநெறியோடு அரசாட்சி செய்து கொண்டும், போகங்கள் அனைத்தும் அனுபவித்துக்கொண்டும், பகவான் காட்டித் தந்த ஸ்ரீநரஸிம்ஹ குகையின் வழியாகச் சென்று தினந்தோறும் ஸ்ரீநிவாஸ பகவானைச் சேவித்துக் கொண்டிருந்தான்.

"அப்போது ஒருநாள் அம்மன்னவன் ஸ்ரீநிவாஸ பகவானுடைய ஸந்நிதியில் இருக்குங்காலத்தில் வலிமைமிக்க பகைவர்கள் அவனது நகரினை முற்றுகையிட்டனர்" என்று பிரம்ம புராணம் ஏழாமத்தியாயத்தில் கூறியபடிச் சிற்றரசர் கூட்டங்கள் தொண்டை மன்னவனை வெற்றி கொள்

வதற்காக அவனது பட்டணத்தைச் சூழ்ந்து கொள்ள, அம்மன்னவன் அவர்களை எதிர்த்துச் சென்று, தமது நாட்டைக் குறித்து ஓடுகின்ற அவர்களைப் பின்னே துரத்திக் கொண்டு ஓடிக் கடும்போர் செய்து வலிமை குன்றப் பெற்று, ஒன்றுகத் திரண்டெழுந்த அவ்வரசர் கூட்டங்கள் அனைத்தினாலும் தோல்வியடைவிக்கப் பெற்றவனாய் அச்சமுற்றுத் தனது நாட்டிற்குத் திரும்பி ஸ்ரீநரஸிம்ஹ குகையை அணுகி அப்பெருமானை வணங்கித் துதித்து அக்குகையின் வழியே சென்று, (திருமலையில்) மனைவிமார்களுடன் கூடி விளையாடி மகிழ்ந்துக் கொண்டிருக்கும் ஸ்ரீநிவாஸனை அவேளையில் அணுகினான்.

பின்பு, பகவானோடு விளையாடிக்கொண்டிருந்து அகாலத்தில் அந்தப்புரத்திற்கு வந்த புருஷனைக் கண்டு வெட்கப்பட்டு உடனே அவ்விடம் விட்டு ஓடுதலையே குறிக்கோளாகக் கொண்ட மனைவிமார்கள் இருவரில் ஒருத்தியான ஸ்ரீதேவி ஸ்ரீனிவாஸனுடைய திருமார்பில் ஏறி ஸ்ரீவைஜயந்தியென்னும் வனமாலையில் மறைந்தாள். மற்றொருத்தியான பூதேவியோவெனில், முன்பொரு காலத்தில் ரங்கதாஸனால் நந்தவனத்திற்காகத் தோண்டப்பெற்று அருகிலிருந்த கிணற்றிலே குதித்து மறைந்தாள் என்று பண்டிதர் பாமரர் என்னும் வாசியில்லாமல் அனைவருமறிந்த இக்கதையைப் பெரியோர்கள் கூறக்கேட்ட ஸ்ரீராமானுஜமுனிவர்,

முன்கற்பத்திலும், அகாலத்தில் வந்த தொண்டை மன்னவனால் வெட்கமடைந்த ஸ்ரீநிவாஸன்தேவிகள் ஓடிப்போனார்களென்ற இச்செய்தி புராணத்தில் தெரிய வருகிறது. ஆனால், கங்கை நீராடப்புறப்படுகின்ற வீரசர்மா என்ற தென்னாட்டு அந்தணனுடைய சரிதத்தைக் கூறும் சந்தர்ப்பத்தில் இச்செய்தி காணப்படுகிறது. இப்போதோவெனில் அது அத்தொண்டைமன்னவனுக்குப் பகைவரால் நேர்ந்த பரிபவத்தைச் சொல்லும் தருணத்தில் கூறப்படுகின்றது. வராகபுராணம் இரண்டாம் பகுதி பத்தாமத்தி

யாயத்தில் வீரசர்மாவென்னும் அந்தணனது சரிதத்தில் (வீரசருமனென்னும் வேதியன் கங்கையாடச் செல்லுமவன், திரும்பிவந்த பிறகு அழைத்துப் போவதாகச் சொல்லித் தன் மனைவி கருவுற்றிருந்தவளைக் காப்பாற்றும்படித் தொண்டைமன்னவனிடம் அடைக்கலமாக்கிச் சென்று கங்கையாடித் திரும்பி வந்து தன் மனைவியின் க்ஷேமத்தைப் பற்றி அரசனிடம் விசாரிக்க, அம்மன்னவன் அவனை இங்கேயே இரு என்று கூறி அந்தப்புரம் சென்று அங்கு அவள் இறந்து கிடப்பதைக் கண்டு) - அவ்வந்தணனோடு சொல்லாமல் குகையருகில் வந்து ஸ்ரீ நரஸிம்ஹனை நமஸ்கரித்துவிட்டு அக்குகை வாயிலாகத் திருமலைக்குச் சென்று ஸ்ரீதேவி பூதேவிகளுடன் கூடிய ஸ்ரீனிவாஸபகவானைச் சேவித்தான். திடீரென்று வந்த அவனைக் கண்டு தேவிகள் இருவரும் ஒளிந்து கொண்டனர். வந்து வணங்கிய மன்னவனை ஏன் அவேளையில் வந்தாய் என்று பகவான் கேட்க, அரசன் அப்பிரானை வணங்கி அச்சத்துடன் பிராமணப் பெண்மணி மாண்டதாகக் கூறினான் - என்று கூறப்பட்டுள்ளது. ஆக இங்ஙனம் இக்கதை சிறிது வேறுபட்டிருப்பது வெவ்வேறு கற்பங்களில் வெவ்வேறு விதமாக நடந்தமை காரணமாகப் பொருந்தும்.

மேலும் பூதேவியின் தீர்த்தமாகப் புராணத்தினால் அறியப்படுகின்ற இக்கிணற்றில் பூதேவி புகுந்தமையும் பொருத்தமானதுதான். ஆகையால் விளையாட்டுத் தடையாக அரசனது வருகையைக் கண்டு அஞ்சியோடி வந்து இதனிற் புகுந்த இப்பூமிதேவிக்குத் தடையொன்றுமின்றிப் பெருமாளோடு கூடி விளையாட்டு நிகழ்வதற்காக அவனோடு இவளைப் பிரதிஷ்டை செய்வித்தல் தக்கதென்று நினைத்து, அப்பழைய கதையைப் பரிபாலனம் செய்வதற்காக அந்த ரங்கதாஸனது கிணற்றில், பூமிதேவியையும் அத்தீர்த்தத்திற்குத் தலைவனாந் தன்மையயடைந்த பெருமாளையும் அர்ச்சை வடிவமாகத் தோற்றுவித்துப் பிரதிஷ்டை செய்வித்து உள்ளே எழுந்தருளுவித்துத் தினந்தோறும் அக்கிணற்றில் அவ்விருவர்க்கும் திருவாரா

தனம் செய்ய வேண்டும். ஸ்ரீனிவாஸன் சாத்திக் களைந்த திருத்துழாய் பூமாலை முதலியவைகளையும் பூதேவிக்காக அவ்வாவியில் சேர்க்க வேண்டும் என்று கட்டளையிட்டு அப்படியே நடத்திவைத்தருளினார். அவ்வாவி பெருமாளுடைய பூமாலைகள் சேரப் பெறுவதனால் பூங்கிணறு (பூலபாவி) என்ற பெயரால் இன்று பிரசித்தமாக உள்ளது.

## பொற்கிணறு (பங்காரு பாவி)

இவ்விதமாகவே, ஜ்ஞான பக்தி வைராக்யங்கள் நிறைந்த யாமுன முனிவர் (ஆளவந்தார்) முன்பொருகால் திருவேங்கடமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடமுடையானுக்கு மங்களாசாஸனம் செய்து கொண்டிருக்கையில், ஒரு நாள் காலையில் போக ஸ்ரீநிவாஸப் பெருமாளுடைய திருமஞ்சனத்திற்காக ஸ்ரீபாபவிநாசனமென்னும் உயர்ந்த தீர்த்தத்திலிருந்து மிகப் பரிசுத்தமானதும் மிக்க ஆரோக்கியத்தைத் தருவதும் வயிரமணியின் ஒளித்தொகுதி போன்று மிகத் தெளிந்ததுமான நன்னீரைக் கொண்டு வரத் திருமலை நம்பிக்கு மழைத் தொந்தரவினால் இயலாமற்போக, வேறு தீர்த்தங்கள் பெருமாள் திருமேனிக்கு ஆரோக்கியந்தராமையை நன்கு ஆலோசித்த ஆளவந்தார் பூஜிக்கத்தக்க ஸ்ரீதேவியைச் சரணமடைந்து, கருணை முதலிய நற்குணங்கள் நிறைந்த ஸ்ரீதேவீ, உன்னுடைய தீர்த்தமாகிய இக்கிணற்றின் நீர் திருவேங்கடவன் திருமேனிக்கு ஆரோக்கியமளிப்பதாகவும், இனிப் பாபவிநாசந தீர்த்தம் போல் இதுவும் அப்பெருமானுடைய திருமஞ்சனத்திற்குத் தக்கதாகவும் இருக்குமாறு நீ அருள் புரிய வேண்டுமென்று பிரார்த்தித்துவிட்டு'தேவியின் தீர்த்தமாகப் புராணத்தினால் அறியப்பட்டதும் முன்பு ரங்கதாஸனால் தோண்டப்பட்டதும் (பிரசாத) திருமடைப்பள்ளியின் அருகிலுள்ளதும் பொற்கிணறென்று அழைக்கப்படுவதுமான சிறந்த கிணற்றிலிருந்து தாமே தீர்த்தத்தை எடுத்து வந்து பெருமாள் திருமஞ்சனத்தை நடத்தி வைத்து, இனிமேல் அழகனும் எம்பிரானுமாகிய இந்த ஸ்ரீனிவாஸன் பகவா

னுக்கே உரியதாய்க் கொண்டு இக்கிணறு அழகப்பிரானார் கிணறென்று அவனது பெயரால் அழைக்கப்படவேண் டும். இதன் தீர்த்தத்தினாலேயே பெருமாளுடைய எல்லாக் கைங்கர்யங்களும் நடத்தப்படவேண்டும். ஸ்ரீபாபவிநாச னம் முதலியவற்றிலிருந்து தீர்த்தம் வராமற்போனால் திருமஞ்சனம் திருவாராதனம் முதலியற்றிற்குத் தாமதம் செய்யக்கூடாது என்று கட்டளை செய்தருளினார் என்று பெரியோர் கூறிய கதையைக் கேட்டருளிய ஸ்ரீராமானுஜ முனிவர் தமது பரமாசார்யருடைய கட்டளையைத் தாம் தலையினாலேற்று, தம்மைச் சேர்ந்த அனைவர்க்கும் ஆள வந்தாருடைய உத்தரவை அப்படியே நிறைவேற்றுமாறு கட்டளை செய்து, ஸ்ரீபாபவிநாசன தீர்த்தம் அதற்குப் பிரதிநிதியாகத் (=ஈடாக, பதிலாகத்) திருமலை நம்பிக்குப் பகவானாலேயே நியமிக்கப்பட்ட ஆகாச கங்கா தீர்த் தம் பரமாசார்யரான ஆளவந்தாரால் நியமிக்கப்பட்ட அழகப்பிரானார் கிணற்றின் தீர்த்தம் ஆகிய இம்மூன்றி னுள் ஒரு தீர்த்தத்தினாலேயே ஸ்ரீனிவாஸ பகவானுக்குக் கைங்கரியம் அனைத்தும் நிறைவேற்றியருளினார்.

பெருமாள்திருக்கோயிலுக்குள் பிரசாதத் திருமடைப்பள் ளிக்கு அருகிலுள்ளதும் முன்பு ஸ்ரீதேவியால் பெருமாள் தளிகைக்கு உதவும்படி நிருமிக்கப்பட்டதும் இப்போது அழகப்பிரானார்கிணறென்னும் பெயரால் வழங்கப்படுவ தும் பொற்கிணறென்ற மறுபெயரைக் கொண்டதுமான தோர் கிணறும், செண்பகத்திருச்சுற்றில் (பிரதக்ஷிணத்தில்) வடகிழக்குத் திசைப் பகுதியில் புஷ்பமண்டபத்தினருகில் திருப்பணியார மடைப்பள்ளியின் பக்கத்தில் முன்பு பெருமாள் தளிகைக்காகப் பூதேவியால் நிருமிக்கப்பட்ட தும் இப்போது பூங்கிணறென்னும் பெயர் பெற்றது மானதோர் கிணறும் ஆகிய ஸ்ரீதேவி பூதேவிகளின் தீர்த்தங்களான இவ்விரண்டும் முன்பு ஒருகால் தூர்ந்து போய்த் தென்படாமலிருந்து பின்பு ரங்கதாஸனால் பூந் தோட்டத்தைக் காப்பதற்காகக் கிணறுகளாகத் தோண்டி உண்டாக்கப்பெற்று, அதற்குப் பிறகு தொண்டைமான் சக்

கரவர்த்தியாகத் தோன்றிய அந்த ரங்கதாஸனாலேயே நன்றாகக் (கல் முதலியவற்றால் உள்ளும் புறமும்) கட்டப்பட்ட உறுப்புக்களையுடையவனாக விளங்குகின்றன.

வராஹ புராணம் இரண்டாம் பகுதி ஒன்பதாமத்தியாயத்தில் - இங்ஙனம் ரங்கதாஸன் ஸ்ரீனிவாஸனைச் சேவித்து வியப்படைந்து, இப்பெருமானுக்குப் பூந்தோட்டம் சமைப்போமென்று நினைத்தான் என்பது தொடங்கி, மல்லிகை அலரி தாமரை முல்லை மந்தாரம் குடமல்லிகை துளசி செண்பகங்களின் வனத்தையுமே உண்டாக்கினான். அங்கு இரண்டு கிணறுகளைத் தோண்டி அவற்றின் நீரால் தோட்டத்தை வளர்த்து அதிலிருந்து மலர்களைப் பறித்துப் பின்பு தானே அவற்றை மாலையாக தொடுத்தான் என்பதிறுதியாக, ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் இப்போது பெருமாள் திருக்கோவிலுள்ள இடத்தில் பூந்தோட்டம் சமைத்து ரங்கதாஸனால் இருகிணறுகள் ஏற்படுத்தப்பட்டன என்று சொல்லப்பட்டது.

பவிஷ்யோத்தர புராணத்திலும் பதின்மூன்றாமத்தியாயத்தில் - தொண்டைமானரசே, திருமடைப்பள்ளிகளின் முற்பகுதியில், முற்பிறவியில் (ரங்கதாஸனாகப் பிறந்திருந்த) உன்னால் நிருமிக்கப்பட்ட ஸ்ரீதேவி தீர்த்தத்தையும் பூதேவி தீர்த்தத்தையும் இப்போது கருங்கற்கட்டடமாகக் கட்டிச் செப்புத்தகட்டினால் கவசமிட்டுப் பொற்பூச்சினால் அலங்கரித்துச் சோபையுடையவனாகச் செய்யக்கடவாய் என்றும், முற்பிறவியில் பூந்தோட்டத்திற்கு உதவும்படி இக்கிணறுகள் இரண்டும் உன்னால் தோண்டப்பெற்றன என்றிவ்வாறு, ஊழ்வினையினாலுண்டாகிய உன் முற்பிறவி என்னால் கூறப்பட்டதென்று கோவிந்தன் கூறிய வசனம் கேட்ட அரசர் பெருமானாகிய தொண்டைமன்னவன் முன் ஜன்மத்தில் தான் தோண்டிய கிணறுகளிரண்டையும் (முற்கூறியவாறு) செப்பனிட்டான் என்றும் சொல்லப்பட்டது.

பிரம்மபுராணம் ஏழாமத்தியாயத்தி ல் - புளியமரத்தினடியில் இருக்கும் புற்றினுள்ளே முழந்தாளளவாகப் புதைந்

துள்ளதோர் அழகிய விஷ்ணுவின் அர்ச்சைவடிவம் உள்ள தன்றோ. அதற்கு இரண்டு விற்கிடைத் தூரத்தில் முன்பு பூதேவியினால் தேவதேவனது தளிகைக்காக நிருமிக்கப் பட்ட பூமி தீர்த்தமென்றொரு அழகிய புண்ணிய தீர்த்தம் உள்ளது. அப்புளிய மரத்தின் வடமேற்குத் திசையில் பூமி தீர்த்தத்தில் வசித்து வரும் மிகச் சிறந்த இளங்கன்றுடை யதோர் பசு தனது பாலினால் புற்றிலுள்ள பகவானைத் திருமஞ்சனம் செய்துகொண்டு வருகிறது என்றும், பூமி தீர்த்தத்திற்கும் ஸ்வாமி புஷ்கரிணிக்கும் இடையில் நான் காம் வருணத்தில் உதித்த அந்தப் பாகவததோத்தமன் (ரங்கதாஸன்) ஹரியின் விஹாரத்திற்கிடமாகிய பூந்தோட் டத்தைச் சமைத்தான் - என்றும் கூறப்பட்டுள்ளது.

## உறங்காப் புளி - செண்பக மரங்கள்:

இனி உறங்காப் புளியமரம் செண்பகமரம் இவற்றின் சரிதம் கூறப்பெறும். வராஹ புராணம் இரண்டாம்ப குதி ஒன்பதாமத்தியாயத்தில் - காட்டினிடையில் ஸ்வாமி புஷ்கரிணியின் கரையில் (புளிய) மரத்தினடியில் வானை யளாவி நிற்பவரும் தாமரை போன்ற கண்களையுடைய வரும் பொன்னிறங்கலந்து கறுத்த வடிவமுடையவருமான அழகிய ஹரியை ரங்கதாஸன் கண்டான், என்ற வச னத்தினாலும்.

வேடர்தலைவன் தொண்டைமான்சக்கரவர்த்தியுடன் ஸ்வாமி புஷ்கரிணியில் விதிப்படி நீராடி, அதன் கரை யில் புளிய மரத்தின்கீழே இருக்கும் தேவர் தலைவனான ஸ்ரீநிவாஸனை மகாத்மாவான அம்மன்னனுக்குக் காட்டி னான் என்றுள்ள வசனத்தினாலும்,

பாத்ம புராணம் ஏழாமத்தியாயத்தில் பூந்தோட்டம் நிருமிக்கும் நான்காம் வருணத்தவனான ரங்கதாஸனும் பூஜை செய்யும் அந்தணர் தலைவனான கோபீநாதனுமா கிய இருவரும் ஒன்று சேர்ந்து வேங்கடமலையில் புகுந்து மெல்ல மெல்லப் புனிதமான ஸ்வாமி புஷ்கரிணியை

அணுகி அதில் விதிப்படி நீராடிப் பெருமாள் எங்குள்ளா ரென்று தேடினர். அங்ஙனம் தேடிக்கொண்டே சென்று கொண்டிருந்த அவர்களுக்கு அதன் கரையில் புளிய மரத் தடியில் ஜனார்த்தனன் தோற்றமளித்தான். புளியமரத்தின டியில் உள்ள புற்றில் எழுந்தருளியிருக்கிற பரம்பொருளான ஹரியை அதிலிருந்து வெளியே எடுத்து அவ்விருவ ரும் அதன் மேற்குப் பகுதியில் நிறுத்தி வைத்தனர் என்ற வசனத்தினாலும்,

பவிஷ்யோத்தர புராணம் மூன்றுமத்தியாயத்தில் - லோகநாதனான ஹரிபகவான் தான் ஒளிந்திருக்கத் தக்க இடம் ஒன்றினை ஆராய்ந்து கொண்டிருக்கையில் ஸ்வாமி புஷ்கரிணியின் தெற்குக் கரையில் புளியமரத் தடியில் அபாய மற்றதோர் சிறந்தபுற்றினை மகிழ்ச்சி யோடு பார்த்தார். அதனைத் தான் வசிக்கத் தகுந்ததோர் சிறந்த இடமாகக் கருதி அதனுள்ளே மறைந்திருந்தார் - என்றுள்ள வசனத்தினாலும், கூறப்பட்டபடி புளியமரத்தின் கீழே ஸ்ரீநிவாஸ பகவான் தோன்றி விளங்கிக்கொண்டிருக் கும்போது, ரங்கதாஸனென்னும் பகவத்பக்தனொருத்தன் தென்னாட்டிலிருந்து வந்து வைகானஸர் தலைவனாய்க் கோபீநாதனென்னும் பெயர் கொண்ட அர்ச்சகன் ஒருவன் வழியில் சந்தித்துத் தான் கனாக்கண்ட கதையைச் சொல் லக் கேட்டு அவனுடன் திருவேங்கடமலைக்கு வந்து ஸ்வாமி புஷ்கரிணியின் தென்கரையில் புளியமரத்தின் கீழே எழுந்தருளியுள்ள பகவானைச் சேவித்துவிட்டு, இப் பெருமானுக்கு ஒருகோவில் நிருமிக்க வேண்டும் ஒரு நந்த வனமும் உண்டாக்க வேண்டுமென்று எண்ணிக்கொண்டே, அங்குப் பெருமாள் பக்கத்திலிருப்பதும் மேலே நாற்புறங் களிலும் பரவி மிகவுயர்ந்து அகன்ற பெரிய பல கிளைகளையுடையதுமான புளியமரம் ஒன்று தளிர்த்த சில கிளைகளோடும் பூத்த சில கிளைகளோடும் காய் கள் நிரம்பிய சில கிளைகளோடும் கூடி, எப்போதும் எக்கிளையிலும் உலகிற்கு உதவும் முயற்சியிலிருந்து ஓய்தலாகிய உறக்கமின்றி, பெரிய குடைபோல் பெரு

மாளைச் சுற்றிலும் மறைத்துக்கொண்டு நிற்கிறபடியைக் கண்டு மனதில் வியப்படைந்து, உறங்காத இப்புளியம ரம் நிச்சயமாக உறக்கமற்ற நித்யஸூரிகளில் ஒருவருடைய அம்சமாகவே இருக்கத்தகும். அதிலும் எப்போதும் பரந் துள்ள தன் படத்தொகுதிகளாகிய விசாலமான வெண் குடை கொண்டு பெருமானுக்குப் பனி வெயில் முதலிய படாதபடித் தடுக்குமியல்வினனாய் அப்பெருமானுக்கு அந் தரங்கத்தொண்டனான ஆதிசேஷனாகவே இருக்கத்தகும். இப்புளிய மரத்தினருகே தென்மேற்குத் திசையில் அதே லக்ஷணங்களையுடையதோர் செண்பக மரத்தையும் கண்டு அதனையும் ஒரு தேவதையின் அம்சமாகவே நினைத்து, இங்குச் சுற்றுப் புறங்களிலுள்ள மரங்களை வெட்டாமல் எங்ஙனம் கோவிலோ தோட்டமோ உண்டாக்கமுடியும்? என்றெண்ணிக்கொண்டேயிருக்கையில், பகவானால் இப்பு ளிய மரம் எனது இருப்பிடம், இச்செண்பக மரம் திரும களின் இருப்பிடம் ஆகையால் இவ்விரண்டையும் விட்டு மற்ற மரம் செடி கொடி முதலியவற்றை வெட்டிக் கோவி லும் தோட்டமும் நிருமித்தல் வேண்டுமென்று கட்டளை யிடப் பெற்றவனாய் அங்ஙனமே செய்தான். (ரங்கதாஸன்)

வராஹ புராணம் இரண்டாம் பகுதி ஒன்பதாமத்தி யாயத்தில் ரங்கதாஸனைப் பற்றிய சந்தர்ப்பத்திலும் தேவதைகளாலே வணங்கப்பட்டுப் பகவானுடைய ஆஸ்தா னமான புளியமரமும் மகாலக்ஷ்மியின் ஆஸ்தானமாகிய செண்பகமரமும் என்ற இவ்விரண்டினையும் பகவானது உத்தரவின்படி விட்டுவிட்டு ரங்கதாஸன் பெருமாளைச் சுற்றிக் கீழிலிருந்து கற்சுவரெழுப்பினான். அழகிய மரத் துண்டு பலகைகளினால் பெருமாளுக்கு வாஸஸ்தானத்தை (கருவறையை) விரைவில் கட்டுவித்தான். கற்சுவருக்கு வெளியில் சுற்றும் பூந்தோட்டமுண்டாக்கினான் என்று கூறப்பட்டது.

அதிலேயே பத்தாமத்தியாயத்தில் தொண்டைமான் சக்கரவர்த்தியைப் பற்றிய கதைப்பகுதியிலும் - தேவ

தேவனான பகவான் கூறியபடிப் பால் திருமஞ்சனம் முதலானவற்றைச் செய்து மதிளையெழுப்ப முயன்றான் தொண்டைமன்னவன். அப்போது அவனுக்குப் பகவான் தேவதேவன், புளி செண்பகமென்னும் மிகச் சிறந்த இம் மரங்களிரண்டினையும் காப்பாற்றக்கடவாய். எனது ஆஸ் தானமாகிய புளியமரம் லக்ஷ்மியின் ஆஸ்தானமாகிய செண்பக மரம் ஆகிய இவ்விரண்டும் மன்னர்களாலும் முனிவர் தேவர் மனிதர்களாலும் ஸதாவணங்கத் தக்க வையன்றோ, அரசர் தலைவா, ஆகையால் இவ்விரண் டையும் நிறுத்திவிட்டு மற்ற மரங்களை வெட்டக்கடவாய் என்று கட்டளை செய்தான் - என்று சொல்லப்பட்டது.

இங்குத் திருமாலுக்கும் திருமகளுக்கும் முறையே இருப் பிடமான புளியமரமும் செண்பகமரமும், 'அவ்விரண்டும் தேவர்களால் வணங்கத்தக்கவையன்றோ' என்று, தேவர் முதலியோரால் வந்தனை செய்யத் தக்கனவாகவும் வெட் டத் தகாதனவாகவும் பகவானாலேயே கூறப்படுவதனா லும் அவ்வப்போது அப்பெருமானுடைய தொண்டிற்குத் தடை நேருங்காலத்தில் பக்தர்களுடைய வேண்டுகோளின் படி ஒதுங்கிக் கொடுக்குமியல்புடையவனாகவும் சூரிய னது அசைவை ஒட்டி அசையுந்தன்மையின்றி எப்போதும் ஒருபடிப்பட்ட(அசையாத)தமது நிழலையுடையனவாகவும் உலகில் பிரசித்திபெற்ற இந்தப் புளி செண்பக மரங்களைத் துவஜ ஸ்தம்பத்திற்குச் சிறிது தூரத்தில் வடக்கிலும் தெற்கிலுமாக முறைப்படிப் பிரதிஷ்டை செய்வித்து, இவற் றிற்குத் தினந்தோறும் அவசியம் பூஜை செய்ய வேண்டு மென்று கட்டளையிட்டுத் திருவாராதனத்தை நிறைவேற் றியருளினர் ஸ்ரீராமாநுஜ முனிவர்.

## நாகாபரணம் (பாம்பணி)

இனிப் பொன்னாலான நாகாபரணத்தைப் பற்றிய தொரு சரித்திரம் சொல்லப்படும். முன்பொருகால் வீர நரஸிம்ஹதேவனென்னும் ஒரு கஜபதி (கஜபதி என்பது விஜய நகர மன்னர்களுக்கு வழங்கப்படும் பட்டப்பெயர்

என்பர்.) தீர்த்த யாத்திரை செல்லுமவன் ஸேது தரிச னம் செய்ய விரும்பிப்புறப்பட்டு நடுவழியில் திருவேங்கட மலையின் வைபவம் கேட்டு அம்மலையேறி ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி ஸ்ரீஜ்ஞாநவராகப் பெருமானையும் திருவேங்கடமுடையானையும் தொழுது துதித்து க்ஷேத்தி ரத்தில் உபவாஸமிருத்தல் முதலான விதிமுறைகளையும் அனுஷ்டித்து, கலியுகத்தில் திருவேங்கடநாதனது அதிச யித்த பெருமையையும் கேட்டு அப்பெருமானுடைய திவ்ய பாதாரவிந்தங்களில் உண்டான அளவற்ற பக்திக்குப் பரவசனாய் அவனது திருக்கோவிலில் ஏதாவது திருப் பணி செய்ய வேண்டுமென்று ஆசைப்பட்டு எவ்வகையான தொண்டு செய்தல் தகுமென்று அங்குள்ள வித்வான் களை வினவினான். அவர்கள் அணிகலன்களில் கிரீடமும் வாகனங்களில் தேரும் கோபுரங்களில் விமானமும் இரத் தினங்களில் வயிரமும் சாதிகளில் பிராம்மண சாதியும் ஆச்சிரமங்களில் ஸந்யாஸாச்சிரமமும் (துறவிநிலை) உயர்ந் தனவென்று ஆகம சாத்திரம் கூறியுள்ளவற்றுள் எது உன் மனத்திற்குப் பிடித்ததோ அதைச் செய்யக்கடவாய் என்று மன்னனிடம் கூறினர்.

பிறகு அக்கஜபதி இந்தத் திவ்வியத்தலத்தில் திருவேங் கடவன் பெருமைக்குத் தக்கபடி ஒரு கோபுரம் அமையவில் லையாகையால் இங்கு மிகப்பெரிய கோபுரம் ஒன்றினைக் கட்டுவோமென்று நினைத்து, அதற்காகப் பெருமளவில் பொருளைக் கொடுத்து வேலையாட்களையும் ஏற்படுத் திக் கோபுரங்கட்ட ஆரம்பம் செய்வித்து, நான் மறுபடி யும் இங்கு வருகிறேன், இக்காரியத்தைத் தடங்கலின்றிச் செய்து முடியுங்களென்று கட்டளையிட்டு, ஸ்ரீகாஞ்சீபுரம் ஸ்ரீரங்கம் முதலிய திவ்ய தேசங்களில் எம்பெருமான்க ளைச் சேவித்துக் கொண்டே சென்று சேதுவையும் தரிசித்துத் திரும்பி மறுபடியும் திருவேங்கடமலைக்கு ஏறி வந்து, பாதியளவில் கட்டப்பட்ட கோபுரத்தைக் கண்டு மகிழ்ந்து, தானம் முதலிய தருமங்களால், அங்கு வசித் துவரும் மக்களைப் பலவகையில் மகிழ்வித்துக் கொண்டு அங்குச் சிலநாள் தங்கியிருந்தான்.

அப்போது ஒருநாளிரவு அந்தக் கஜபதியின் கனவில் உயர்ந்த ஸர்ப்பம் (பாம்பு) ஒன்று எதிரே வந்து 'ஓ கஜபதியே, இத்திருமலை என்னுடைய உடம்பாகும். இதில் மிகப்பெரிய கோபுரங்கட்டுதல் எனக்குப் பெரும்பாரத்தை உண்டாக்குகின்றது. அது காரணமாக எனக்குப் பெருந் துன்பம் உண்டாயிற்று. அப்படி உன்னால் உண்டான இப்பெருந்துன்பத்தை என்னுடைய ஸ்வாமியினிடம் சென் றாலல்லது போக்கிக்கொள்ள முடியாது' என்று கூறிவிட் டுக் கோவிலுக்குச் சென்று பகவானுடைய வைகுண்ட ஹஸ்தத்தில் (= வைகுண்டம் செல்ல இதுவே வழி என்று திருவடிகளைக் காட்டும் பெருமாளின் வலது திருக்கை யில்) சுற்றிக்கொண்டது. இங்ஙனம் கனவு கண்டு மிகவும் அஞ்சிய வீர நரஸிம்ம தேவனென்றும் கஜபதி புலவர் பெருமக்களையழைத்துக் கனவில் கண்ட அனைத்தையும் விண்ணப்பித்து, இக்கனவிற்கு என்ன கருத்தென்று அவர் களை வினவினான்.

பின்பு அப்புலவர்கள், அரசே இத்திருமலை ஆதிசேஷ னுடைய அவதாரமென்பது ஸ்ரீவேங்கடாசல மாகாத்மியம் கூறும் புராணப் பகுதிகளில் பலபடியாக விளங்கக்கூறப் பட்டுள்ளது. உனது கனவை ஆராய்ந்தால் நீ கட்டும் கோபுரம் ஆதிசேஷனுக்குப் பாரத்தையுண்டாக்கித் துன் புறுத்துவதனால் அதை அவன் இசையவில்லையென்றே தோன்றுகிறது. ஆகையால் மிகப்பெரும் பாரமாய் மிக வுயர்ந்த கோபுரத்தை இங்குக் கட்டக்கூடாதென்பதுதான் கனவின் கருத்தாகுமென்று கஜபதிக்கு விடையளித்தனர்.

அதன்பிறகு அவ்வரசனும் மிகவுமஞ்சிக் கோபுரங்கட் டுவதை அவ்வளவோடு நிறுத்தி, இந்தவளவு கோபுரத்தி ருப்பணியே திருவேங்கடவன் இசைந்ததென்று நினைத்து ஆதிசேஷனிடம் நேர்ந்த அபசாரத்திற்குப் (குற்றத்திற்குப்) பரிஹாரம் செய்வதற்காகச் சேஷனுடைய வடிவமுடை யதோர் உயர்ந்த ஆபரணத்தைச் செய்வித்து, இதைப் பெருமாளுக்கு அணிவிக்க வேணுமென்று பிரார்த்தனை செய்து அதைப் பெருமாளுடைய அருகில் வைத்தான்.

பின்பு, பகவானுக்குத் தொண்டு செய்யும் பரிஜனங்கள் அரசன் ஸமர்ப்பித்த நாகவடிவமான ஆபரணத்தைக் கண்டு, இதைப்பெருமாளுக்கு எங்கு ஸமர்ப்பிக்க வேண்டும்? மேலும் பாம்பினுருவமுடைய இவ்வணி வேறு தேவதைக்கு உரியதாயிற்றே, இதை இப்பெருமாளுக்குச் சாத்துவது தகுமா தகாதா என்று ஸந்தேகப்பட்டுக் கொண்டிருக்கையில், பெருமாள் ஒருவன் மேல் ஆவேசித்து 'ஓ பரிஜனங்களே முன்பு ஆதிசேஷனுக்கும் வாயுதேவனுக்கும் நடந்த விவாதத்தில் ஆதிசேஷமலையை இங்குக் கொணர்வதற்காக தான் வாயுவினிடம் சிறிது பட்சபாதம் (ஒருதலையில் அன்பு) கொண்டவளவில் மனவருத்தமடைந்த சேஷன் செருக்கழியப்பெற்று தனது அவதாரமான இத்திருமலையில் தேவர்களின் அளவின்படி ஆயிர வருஷகாலம் கடுந்தவமியற்றித் தானே இங்கு என்னை வரவழைத்து (நான் தோன்றும்படியாகச் செய்து) படுக்கையுருக்கொண்டு என்னைத் தாங்குவது போல, மலையினுருக்கொண்டும் என்னைத் தாங்குமவனாய் எனது எல்லையற்ற அன்புக்கு இலக்காக இருந்து வருகிறான். என்னாலேயே முன்பு சிறிது வருத்தமடைந்த புத்திரனைப் போல என்கைகளினாலேயே தாங்கிக்கொண்டாடுகிறேன். எல்லாவிடங்களிலும் எல்லாக்காலங்களிலும் எல்லா நிலைமைகளிலும் செய்யத் தக்க எல்லாவகைத் தொண்டுகளில் ஒப்பற்ற ஊற்றமுள்ளவனும் சிறப்பாக இத்தலத்தில் எல்லா விதமாகவும் பணிபுரிவதில் ஊக்கமுடையவனுமாய் எனது அந்தரங்கத் தொண்டனாயிருந்து எனது அன்புக்கு மிக மிக இலக்கானவனன்றோ அந்த ஆதிசேஷன். ஆதலால் அவனுருவமுடைய இந்நாகாபரணத்தைக் கையிலே சாத்துங்கள்' என்று கட்டளையிட, அதைப் பரிஜனங்கள் பெருமாளுடைய வைகுண்டஹஸ்தத்தில் அணிவித்தனர்.

சேஷவாயு விவாதத்தில் சேஷ பருவதத்தைக் கொண்டுவரும் குதூஹலங்கொண்ட பெருமாள் வாயுதேவனிடம் ஓரங்காட்டியதும் அதனால் சிறிதளவு வருந்திய சேஷன் பெருமாளைக் குறித்துக் கடுந்தவமியற்றியதும் சேஷ பரு

வதத்தில் பகவான் தோன்றுவதற்கு அவன் காரணமாயி ருந்ததும் பகவானுடைய எல்லை கடந்த பிரீதிக்கு அவன் பாத்திரமானதும் புராணங்களினால் அறியப்படுகின்றன.

ப்ராஹ்ம புராணம் சேஷ வாயு விவாதம் முதலத் தியாயத்தில், விவாதம் இவ்விதமாக நடைபெற்றபோது ஸர்வேச்வரனாகிய ஹரி அங்கு வந்தார். உங்களுக்கு இச்சச்சரவு ஏன் என்று கேட்டார். நடந்தவையெல்லாம் விவரமாகச் சேஷன் சொன்னான். அது கேட்டுச் சேஷனை வரம்புமீறியவனாக நினைத்து மேல் நடக்க வேண்டிய காரியத்தையும் ஆராய்ந்த பகவான் எல்லோருக்குள்ளும் உயிராயிருப்பவனும் பலத்துக்குரிய தேவதையுமான ப்ரா ணனாம் இந்த வாயுவையே உங்களில் உயர்ந்தவனாக நானும் கருதுகிறேன். உலகத்தை நாமன்றோ சுமக்கி ரோமென்ற பெருங்கருவம் கொண்டிருக்கிறாய் நீ, சேஷா, உன்னையும் கூர்மமே (ஆமையே)யன்றோ சுமக்கின்றது - என்று கூறிய பகவானுக்கு வாயுவினிடம் ஒரு தலை யான அன்புள்ளமை காட்டப்பட்டது.

அதிலேயே இரண்டாமத்தியாயத்தில் - ஆணவம் அழி யப்பெற்ற ஆதிசேஷன் பிறகு அம்மலையிலேயே ஸ்வாமி புஷ்கரிணிக்கு வடமேற்கேயுள்ளதும் பல தாழ்வரைகள் சூழப்பெற்றதும் பலவகை மரங்களினால் அழகு செய்யப் பட்டதும் புண்ணியமுமானதோர் மலைச்சிகரத்தில் மன திற்கு இன்பமான நாகதீர்த்தத்தில், லோக நாதனான பக வான் (ஸ்ரீநிவாஸனாகத்) தோன்றுவதற்காகத் தேவதைக ளின் கணக்குப்படி ஆயிரமாண்டுகள் கடுமையான தவம் புரிந்தான். அத்தவத்திற்கு மகிழ்ந்த பெருமாள் நேரில் தோன்றி, நல்லவனே வரம் கேள் என்று கூற, சேஷன் அடியேன் திறத்தில் தேவரீர் தயையுடையீராகில், ஐயனே இந்த வரம் தந்தருள்வீர். அதாவது வைகுந்தமாகிய உயர்ந்த உலகில் எங்ஙனம் என்னுடம்பின்கண் திருக்கண் வளர்ந்தருளுகிறீரோ அங்ஙனமே இம்மலையுருவம் பெற்ற எனது உடம்பிலும் எப்போதும் வாசம் செய்தருள வேண்

டும் என்பதேயாகும் என்று வேண்டிக்கொண்டான். அது கேட்ட பகவான் நான் விளையாடிக்களித்தற்குரிய நல்ல இடம் பூலோகத்தில் எங்குள்ளதென்று ஆராய்ந்து பார்த்தேன் என்று தொடங்கி, இதற்குள் வாயுவுக்கும் உனக்கும் உண்டான விவாதம் காரணமாகப் புண்ணியமான இம் மலை இங்கு வந்து சேர்ந்தது. நீயும் தவம் செய்து, என்னை இதில் வசிக்கும்படி வேண்டுகிறாய். இது எனக்கு இஷ்டமாய் முன்பு என்னால் கோரப்பட்டதே. ஆகையால் அப்படியே ஆகுக என்று வரம் தந்தார். அதனால் விஷ்ணுபகவான் உயர்ந்த வைகுந்தத்தைவிட்டு இம்மலைக்கு வந்து புஷ்கரிணிக் கரையில் ஸ்ரீமகாலக்ஷ்மியுடன் கூடிக் களிக்கிறார் - என்பதிறுதியாக, சேஷன் பகவானுடைய வாயுபட்சபாதங் காரணமாகத் துன்பமுற்றதும் அதனால் கடுந்தவம் செய்ததும் அதனால் பகவான் தோன்றுவதற்குக் காரணமாயிருந்ததும் கூறப்பட்டன. இவ்விதமாகவே பவிஷ்யோத்தர புராணம் முதலத்தியாயத்திலும் சேஷ வாயுவிவாதச் செய்தி காணத்தக்கது.

பிரஹ்மாண்ட புராணத்தில் இரண்டாமத்தியாயத்திலும் - பகவான் தன் முன்னே நிற்கும் சேஷனையழைத்து மகிழ்ச்சியினால் கண்கள் மலரப்பெற்றவனாய் மேகம் முழங்கினாலொத்த கம்பீரமானகுரலோடு அனந்தனே உலகில் எனக்குப் பிரியமானவன் நீ தவிர வேறொருவருமில்லை. குற்றமற்றவனே எனக்குப் பிரியமானதொரு காரியத்தை நீ செய்யவேண்டும். நாரதர் கூறிய வார்த்தையனைத்தும் நீ கேட்டாயல்லவா? விளையாடுவதற்கு உரியதோர் இடத்தில் வசிக்க வேண்டுமென்பது எனது விருப்பம். நீ பூலோகம் சென்று ஓர் மலையுருவெடுத்து வாசம் செய். உன் படத்தொகுதியின்கீழ் ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் நான் வசிக்க வேண்டும் -என்று தொடங்கி, ஆதிசேஷன் பகவானுடைய அன்புக்கு இலக்கானமையும் அதனால் அவன் மலையாக அவதரித்தமையும் சொல்லப்பட்டது.

இங்ஙனம் வீரநரஸிம்ஹதேவனென்ற பெயருடைய கஜபதி மகாராஜனது காலம் முதலாக ஸ்ரீராமாநுஜ முனிவருடைய காலம் வரையில், முற்கூறிய காரணத்தினால் ஒரு திருக்கையில் மட்டும் நாகாபரணமணிந்து விளங்கும் ஸ்ரீநிவாஸ பகவானைச் சேவித்துவரும் இராமாநுசமுனிவர் நாகாபரண மணிந்துள்ளதற்குக் காரணமாகப் பெரியோர் கூறிய வீரநரஸிம்ஹதேவ கஜபதியின் கதையைக் கேட்டு, திருவேங்கடநாதனான ஸ்ரீநிவாஸ பகவானுக்குச் சேஷனிடத்தில் அதிகப் பிரீதியுள்ளமை புராணம் வாயிலாக அறியப்பட்டதனாலும் அதையொட்டிய பிற்காலச் செய்திகளும் அதை உறுதிப்படுத்தியதனாலும் பகவானது இரு திருக்கைகளிலும் சேஷன்வடிவில் அமைந்த திவ்யாபரணம் சாத்துவது உசிதம். ஒரு திருக்கையில் இருந்து மற்றொரு திருக்கையில் இல்லாமலிருந்தால் அது தகாதது மட்டுமன்றிப் பெருமாளுடைய சோபையைக் குறைப்பதாகவும் அமையும். பகவானுக்குச் சேஷன் திறத்தில் அன்புள்ளமையை அறிந்து ஆகாசராஜன் முன்பு பத்மாவதியின் திருமணத்தின்போது ஆபரணங்களைத் தருமவன் பெருமாளுக்கு இரு திருக்கைகளிலும் சாத்தத்தக்க இரண்டு நாகாபரணங்களை ஸமர்ப்பித்ததும் அதனாலன்றோ.

பவிஷ்யோத்தர புராணம் பதினோராமத்தியாயத்தில் இரண்டு நாகாபரணங்களையும் தோள்வளை முதலியவற்றையும் ஆகாச மன்னவன் பகவானுக்குத் தந்தான் என்று கூறப்பட்டுள்ளது. இந்த பகவானுக்குச் சேஷனிடம் அன்புள்ளமை 'அனந்தனே நீ தவிர எனக்குப் பிரியமானவன் வேறொருவருமில்லை' என்று பிரம்மாண்ட புராணப்பகுதி இரண்டாமத்தியாயத்திலுள்ள பகவான் வார்த்தையினாலும், பவிஷ்யோத்தர புராணப்பகுதி பதினான்காமத்தியாயத்தில் ஆதிசேஷன் மீது கண் வளருமியல்புடையவரும் சேஷாசலத்தில் வசிப்பவரும் எப்போதும் சேஷனிடம் அன்பு கொண்டவருமான சார்ங்கமேந்தும் ஸ்ரீநிவாஸனுக்கு பிரம்மோத்ஸவத்தில் முதல்நாளிரவில் மட்டுமேயன்றி இரண்டாம் நாள் காலையிலும் சேஷவாகனத்தில்

புறப்பாடு ஆயிற்று என்றுள்ள வசனத்தினாலும், மற்றும் புராணங்களால் அறியப்படும் வேறு சரித்திரங்களாலும் விளக்கமாகத் தோன்றுகின்றது.

முற்காலத்தில் சேஷப்பிரியனான பகவானுடைய கருத்தையறிந்து ஆகாசராஜன் ஸமர்ப்பித்த நாகாபரணங்கள் இரண்டும் காலப்போக்கில் பறியுண்டு போயினவே என்றெண்ணிய பகவான் வேறொரு காரணத்தையிட்டுத் தாமே ஒரு நாகாபரணத்தை இப்போது ஸம்பாதித்துக்கொண்டு விட்டார். மற்றொன்று இல்லாததால் குறையாக இருக்கிறது. ஆகையால் மற்றொரு திருக்கைக்கும் இன்னொரு நாகாபரணம் ஸமர்ப்பித்தேயாக வேண்டுமென்று கூறி அப்படியே செய்வித்து, அவ்விரண்டு நாகாபரணங்களையும் அதிக சோபையை உண்டாக்குவதற்காகத் தோள்வளைகளுடன் சேர்த்து பக்தர்களின் மனத்தையும் கண்களையும் கவரும்படியாகப் பெருமாளுடைய திருக்கைகளில் சாத்துவித்தருளினார். (இராமானுச முனிவர்.)

## நரஸிம்ஹப் பெருமாள் :

இனி ஸ்ரீநிவாஸ பகவானுடைய கோவிலில் உள்ள ஸ்ரீநரஸிம்ஹப்பெருமாளின் சரித்திரம் கூறப்படும். 'புனிதமான ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்குக் கரையில் சங்கரன் நரஸிம்ஹப் பெருமாளைப் பரம பக்தியுடன் கூடிப் பூஜை செய்தான் - என்று ஸ்காந்த புராணப் பகுதியைச் சேர்ந்த ஸுவர்ண முகரீமாகாத்மியத்திலுள்ள வசனத்தினாலும், ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் நீலகண்டனாகிய விச்வேசன் (சிவபெருமான்) நரசிங்கப்பெருமாளைப் பிரீதியோடு தியானித்துக் கொண்டு பார்வதியோடு சிலநாள் வசித்து வந்தார் என்ற வாமன புராண வசனத்தினாலும், வராக புராணம் முற்பகுதி 61 எண்ணிட்ட இருபத்தொன்பதாம் அத்தியாயமாகிய அஷ்டோத்தரசத (108) நாமாவளியிலுள்ள, நல்ல பக்தனான நீலகண்டனால் அர்ச்சிக்கத் தக்க நரஸிம்ஹனுக்கு நமஸ்காரம் என்ற வசனத்தாலும் ஸ்வாமி புஷ்கரிணியின் மேலண்டைக் கரையில் சிவகாவும்

தவம் செய்துவந்த சிவபிரானுடைய கண்ணுக்கு இலக்கா ணவராக அறியப்படுகின்றவரும், அவ்விடத்திலேயே ஒரு கோவிலில் ஸ்ரீவைகாநஸாகம விதிப்படியே ஆராதிக்கப் பட்டு வருமவருமான நரஸிம்ஹப் பெருமாள். சிவபெரு மானது தவத்தின் பயனாகத் தோன்றினார் என்னும் அபிமானம் காரணமாகச் சைவர்கள் அவருக்குப் பக்கத்தில் அவரது பக்தரான சிவபெருமானையும் பிரதிஷ்டை செய் விக்க வேண்டுமென்று முன்பொருகால் விவாதம் செய்ய, அப்போது அத்தலத்திலிருந்த வைஷ்ணவர்கள் ராஜஸ பைக்குச் சென்று - இத்திருவேங்கடமலை ஸ்ரீவைகுண்டத் திலிருந்து கொண்டுவரப்பெற்றதனால் அப்ராக்ருதமான (இங்குள்ள பஞ்சபூதங்களால் உண்டாக்கப்படாத) பகவா னுடைய இடமாகும் என்று ஸ்ரீவேங்கடாசல மகாத்மியம் கூறும் புராணங்களில் எல்லாவிடங்களிலும் கோஷிக்கப் பட்டுள்ளது. இப்படிப்பட்ட அப்ராக்ருத விஷ்ணு க்ஷேத் திரத்தில் சிவபிரானைப் பிரதிஷ்டை செய்வது உசிதமல்ல வென்று அத்தாட்சிகளை எடுத்துக்கூறி வெகுசிரமப்பட்டு, அப்போது, அங்கிருந்த வைஷ்ணவர்கள் அனைவரும், இந்த நரஸிம்ஹப்பெருமாள் லக்ஷ்மியோடு கூடியிராமையால் மிக வும் உக்கிர (பயங்கர) உருவமுடையவராக இருக்கிறார். மேலும் அவ்வப்போது சைவர்கள் சச்சரவு செய்வதற்கும் காரணமாக இருக்கிறார். ஆகையால் இனியும் இவர் மிகப் பிரசித்தமான முறையில் பூஜிக்கப்பட்டு வருவாராகில் இக் கொடுமையான கலியுகத்தில் விதிப்படிப் பூஜையும் நட வாது, பூஜையில் சில அம்சங்களுக்குக் குறைவேற்படுமா யின் இவருடைய திருக்கண்களின் ஊரைக்கொளுத்தும் உக்ரமான பார்வைக்கு உள்ள வேகம் தணியாமல் ஓங்கிவி டும். முற்கூறியவாறு சைவர்களின் தொந்தரவுண்டாவதை யும் தவிர்க்க முடியாது. ஆகையால் இவருக்குப் பூஜை முதலியவற்றை நிறுத்திவிட வேண்டுமென்று ஆலோசித்து அப்படியே செய்தனர் என்று பெரியோர்கள் கூறிய கதை யைச் செவியேற்ற இராமாநுசமுனிவர் - புராணத்தில் பிரசித்தமானவரும் திருமங்கையாழ்வாரின் 'வேங்கடத்து

அரியை' (பெரிய திருமொழி 7-3-5) என்ற திவ்யஸூக்திக்கு இலக்கானவரும், 'நல்ல பக்தனான நீலகண்டனால் அர்சிக்கத்தக்க நரஸிம்ஹனுக்கு நமஸ்காரம்' என்று திருவேங்கடவனது நூற்றெட்டு நாமாவளியில் படிக்கப்பட்டு ஸ்ரீனிவாஸனுடைய பஞ்ச பேரங்கள் (ஐந்து மூர்த்திகள்) போல் ஸ்ரீனிவாஸனோடு ஒன்றுபட்டவராகவே அறியப்படுமவரும் இந்த க்ஷேத்திரத்தின் அதிபதியுமாகிய இந்த நரஸிம்ஹப்பெருமாளுக்குப் பூஜையில்லாமலிருந்ததால் இந்த க்ஷேத்திரத்திற்கு மேன்மேலுண்டாக வேண்டிய வளர்ச்சி அழிந்துவிடும் என்று நினைத்து, 'இவருக்கு ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்கரையில் தனிக்கோவில் இருந்தால் தான் முற்கூறியபடி சைவர்களின் உபத்திரவம் உண்டாக நேரும். திருவேங்கடவன் திருக்கோவிலிலேயே ஓரிடத்தில் இவருக்கு இருப்பிடம் கற்பித்தால் அவ்வுபத்திரவம் நேர இடமிராது. ஸ்ரீமதானந்தநிலயமென்னும் திருவேங்கடமுடையானது திவ்ய விமானத்துக்கு எதிர்முகமாக இவரைப் பிரதிஷ்டை செய்வித்தால் இவரது உக்கிரமான பார்வையின் வேகம் தானாகத் தணிந்து, ஒருவேளை இவரது பூஜையில் சில அம்சம் குறைந்த போதிலும் அது ஊரைக் கொளுத்துதல் முதலிய எக்கெடுதலையும் உண்டு பண்ணாது' என்று கூறித் திருவேங்கடமுடையானுடைய கோவிலிலேயே வடகிழக்கு மூலையில் ஆனந்தநிலய திவ்ய விமானத்தைப் பார்த்திருப்பவராக ஸ்ரீ நரஸிம்ஹப் பெருமாளைப் பிரதிஷ்டை செய்வித்து, நரஸிம்மன் பூஜிக்கப்படும் ஸ்தலத்தில் பகைவரின் பரிபவம் நேராது என்ற நூற்கொள்கையைத் திருவுள்ளத்தில் கொண்டு, அப்பெருமானுக்கு நித்திய பூஜையும் முறைப்படி நடக்குமாறு செய்தருளினார்.

## நடுவழி நரசிங்கப் பெருமாள்:

இனி, திருவேங்கடமலையின் வழி நடுவிலுள்ள ஸ்ரீநரசிங்கப் பெருமாளின் சரித்திரம் கூறப்படும். மார்க்கண்டேய புராணப்பகுதி இரண்டாமத்தியாயத்தில் - அம்மார்க்கண்

டேயர் திருவேங்கடமலையேறி நடுவழியிலுள்ளதும் நரசிங்கப்பெருமாள் எழுந்தருளியுள்ளதுமான் உலகப்பிரசித்தி பெற்ற குகையைக் கண்டார். 'லக்ஷ்மீ நரஸிம்மனே பிரகலாதனுக்கு வரமளித்தவனே ஆனந்தம் மிக்கவனே தேவர் தேவனே மதுசூதனனே உன்னடியார்க்கு அடியவனான என்னைக் காத்தருள்க' என்று தீர்த்தயாத்திரை செய்ய விரும்பிச் சுத்தனென்னும் அகத்திய சீடனுடன் செல்லும் மார்க்கண்டேய மாமுனிவர், திருவேங்கடமலையேறும் வழிநடுவில் நரஸிம்ம குகையில் ஸ்ரீலக்ஷ்மீ நரிஸிம்ஹப்பெருமாள் தமக்கு நேரே காட்சியளிக்கக் கண்டு அவரை வணங்கிவிட்டே ஸ்வாமி புஷ்கரிணிக்குச் சென்றதாகக் கூறப்படுவதனால், அத்தகைய குகையிடத்தில் முற்காட்டிய சரிதத்தை நினைவிற்கொள்வதற்காக ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்ஹப்பெருமாளுக்கு ஓர் கோயில் அமைக்க வேண்டுமென்றெண்ணிய இராமாநுச முனிவர் அவ்விடத்தில் புராணம் கூறியபடி அப்பெருமாளுக்குக் கோவில் கட்டிப் பிரதிஷ்டை செய்வித்து நித்ய பூஜையும் நடக்கும்படி ஏற்பாடு செய்தார்.

## பெருமாள் மோவாயில் கருப்பூரமும் கோபுர வாயில் கடப்பாறையும்:

இனி, திருவேங்கடமுடையானது மோவாயில் ஸமர்ப்பிக்கப்படும் பச்சைக் கருப்பூரப்பொடி, தேவாலயத்தின் கோபுரவாசலில் பொருத்தப்பெற்ற இரும்புக் கடப்பாறை ஆகியவற்றின் சரிதம் சொல்லப்படும். ஸ்ரீராமாநுஜ முனிவரால் திருவேங்கடமுடையானுக்குத் தொண்டு செய்வதற்காக நியமிக்கப்பட்ட அனந்தாழ்வான் மிகவும் சிரத்தையுடன் பிறர் ஒருவரையும் எதிர்பாராமல் இக்கைங்கரியத்தைச் செய்ய வேண்டுமென்று நிச்சயித்து தமது மனைவி பூரண கர்ப்பிணியாக இருந்தும் அவளுதவியைக் கொண்டு பூந்தோட்டத்திற்காகக் கடப்பாறை கொண்டு தாமே ஏரி வெட்டும் போது, பாரமான மண் கூடையைச் சுமந்து செல்லும் தம் மனைவியின் வருத்தத்தைப் பொறுமல் அக்

கூடையைத் தான் வாங்கிச் செல்லுகின்ற ஸ்ரீநிவாஸ பகவானது செயலை, பிறருதவியை எதிர்பாராமலேயே இத்தொண்டினை நிறைவேற்ற வேண்டுமென்னும் தமது நினைவுக்கு மாறுபட்டதாக எண்ணிக் கோபித்து ஸ்ரீநிவா ஸனுடைய மோவாயில் கடப்பாறையால் அடிக்க, பின்பு கோவிலில் பகவான் மோவாயில் பெருகும் ரத்ததாரையுடன் இருக்கக் கண்டு மனக் கூச்சமடைந்த அனந்தாழ்வான், ஐயோ வேறு வேடத்துடன் வந்து என்னை இப்படி மதிமயங்கச் செய்தவன் இப்பெருமானேயாவன் என்று நிச்சயித்து அப்போதே ஏழிலைப்பாலை மலரின் மகரந்தப்பொடியை அவன் மோவாய்ப் புண்ணில் வைத்த மூத்திவிட்டுத் தாம் செய்த தவற்றினைப் பொறுக்குமாறு பகவானை வேண்ட, பின்பு தன்னைத் தஞ்சமடைந்தவர்கள் திறத்தில் கடல் போல் அளவற்ற அன்புகொண்ட ஸ்ரீநிவாஸ பகவான் அனந்தாழ்வானுக்குக் கைங்கரியத்திலுள்ள ஊற்றத்தின் பெருமையைக் கண்டு மகிழ்ந்தவனாய், வாரீர் அனந்தாழ்வானே கைங்கரியத்தில் ஊற்றம் மிகக் கொண்ட நீர் கடப்பாறை கொண்டு மோவாயில் உண்டு பண்ணிய புண் தழும்படைந்து, எனது மார்புக்கு ஸ்ரீவத்ஸம் போன்று முகமண்டலத்துக்கும் ஓர் அழகிய அடையாளமாகக் கடவது. நீர் இதற்காக வருந்தவேண்டாமென்று சொல்லி அனந்தாழ்வானுக்குத் தேற்றரவு கூறி, இது முதல் இச்சரிதத்தை நினைவுபடுத்துவதற்காக எனது மோவாயில் நறுமணம் வீசும் பச்சைக் கருப்பூரப்பொடியை எப்போதும் சாத்த வேண்டும், எனக்கு இப்புண்ணினை ஏற்படுத்திய கடப்பாறையை எல்லோரும் காணத்தக்க என் கோவிற் கோபுரத்தில் உயர்ந்ததோர் இடத்தில் பொருத்தி நிறுத்த வேண்டுமென்று (பரிஜனங்களுக்கு) தானே நியமித்தருளினான். அது முதல் தினந்தோறும் திருவாராதன காலத்தில் ஸ்ரீநிவாஸப்பெருமானது மோவாயில் மணமுள்ள பச்சைக் கருப்பூரத்தூளி சாத்தப் பட்டு வருகிறது. கடப்பாறையும் ஸ்ரீநிவாஸ பகவானது கோவிற் கோபுரவாசலில் (உள்ளே வடதிசைச் சுவரின்

மேற்புறத்தில்) பொருத்தப்பட்டு அனைவர் கண்களுக்கும் இலக்காய் விளங்கி வருகிறது.

## அப்ரதக்ஷிணப் புறப்பாடும் மணவாளப்பிள்ளை பகுமானமும்:

இனி, திருவேங்கடமுடையானுக்குப் புரட்டாசி மாதப் பிரம்மோத்ஸவத்தின் ஏழாம் நாள் மாலையில் தோட்டவுலாப் புறப்பாட்டின் போது பெருமாள் அப்ரதக்ஷிணமாக எழுந்தருளுவதும், எட்டாம் நாள் காலையில் திருத்தேர்ப் புறப்பாட்டின் போது அனந்தாழ்வான் பெருமாளுக்கு மணவாளப்பிள்ளை ஸம்பாவனை செய்வதும் பற்றிய சரிதம் சொல்லப்படும்.

ஸ்ரீராமாநுஜ முனிவரின் கட்டளைப்படி அனந்தாழ்வான் திருவேங்கடமலையில் பெரிய தோட்டமும் அதற்கு ஆதாரமான ஏரியும் நிருமித்து அளவற்ற மலர் மாலைகளைத் தொடுத்து ஸமர்ப்பிக்கும் கைங்கரியத்தினால் திருவேங்கடநாதனை மகிழ்வித்துக்கொண்டிருக்கும் போது, பரமதயாளுவாய்ப் பக்தர்களிடம் கடல்போன்று அளவற்ற பேரன்பு கொண்ட அந்த ஸ்ரீநிவாஸப்பெருமான், தன் பக்தரான அனந்தாழ்வான் எல்லையில்லாமல் எப்போதும் செய்யும் புஷ்ப கைங்கரியம் தன்னால் மட்டற்ற மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளப்படுவதையும் அக்கைங்கரியத்தில் ஊற்றத்துடன்கூடிய அவருடைய மனத்தூய்மையையும் அனைவர்க்கும் வெளிப்படுத்த விரும்பி, ஒரு கால் தான் ஒரு ராஜகுமார வேஷந்தரித்து ராஜகுமாரி வேஷந்தாங்கிய தன் மனைவி அலர்மேல் மங்கையுடன் இரவு நேரங்களில் அனந்தாழ்வானுடைய பூந்தோட்டத்துள் புகுந்து இஷ்டப்படி உலாவி அங்குள்ள மலர் தளிர் பழம் முதலானவற்றைப் பறித்துத் தோட்டத்தைச் சீர்குலைத்தான்.

அதன் பின்பு அனந்தாழ்வான் இரவுகளில் பூந்தோட்டம் நன்னிலை குலைக்கப்படுவதைக் கண்டு, பகவானு

டைய தோட்டத்தை இப்படிக் கெடுக்கும் திருடன் யாராக இருக்கலாமென்றெண்ணி மனங்கலங்கித் திருடனைப் பிடிப்பதில் தாம் எவ்வளவோ கவனத்துடன் இருந்தும் திருடன் அகப்படாமல் இங்ஙனமே எட்டு நாள்கள் சென்றபின்பு ஒன்பதாம் நாள் இரவில் அரச தம்பதிகளின் வேடந்தரித்த பெருமாளும் பிராட்டியுமாகத் தம் கருணையினாலேயே அனந்தாழ்வான் கைகளுக்கு அகப்பட, அவர் அவர்களை ஓர் கொடியினால் ஓர் மரத்தில் கட்ட விரும்பி இழுக்கும்போது பெருமாள் எப்படியோ அவருடைய கைகளை விடுவித்துக்கொண்டு மிகவும் அஞ்சியோடி அப்ரதக்ஷிணமாகவே கடுவேகத்துடன் வீதியைச் சுற்றிச்சென்று தன் கோவிலுக்கு ஓட்டம் பிடிக்க, ஓட முடியாத அரசிளங்குமரி வேஷதாரிணியான அலர்மேல் மங்கையை ஒரு செண்பக மரத்தில் கட்டி அச்சமுறுத்தி (நீ யார், உன் கணவன் எங்கே சென்றான் எதற்காக நீங்கள் இங்கு வந்தீர்கள் என்றிவ்வாறு) அவர்களது வரலாறு முழுவதையும் வினவிக்கொண்டே போது விடியும் வரையில் கவனத்துடன் அருகிலேயே இருந்தார்.

அப்பிராட்டி 'வாரீர் அனந்தாழ்வானே, (தவறு செய்த) அந்த என் கணவனைப் பிடித்துக் கொள்ளும், தவறு செய்யாத பெண் பிள்ளையாகிய என்னை விட்டுவிடும். நான் உமக்குப் பெண்ணாக இருப்பேன்' என்று அவரிடம் மன்றாடிக்கொண்டிருந்தாள்.

பிறகு காலையில் பரிஜனங்கள் அனைவரும் கோவிலுக்கு வந்து, பெருமாள் திருமார்பில் கண்டியிலிருந்த அலர்மேல்மங்கைத் தாயார் தென்படாமையால் அர்ச்சகர்களை வற்புறுத்திக்கொண்டிருக்கையில், ஒருவர்மேல் பகவான் ஆவேசித்து நடந்ததை அப்படியே அறிவிக்க, அப்பெருமானது ஆணையின்படிப் பரிஜனங்கள் பிராட்டியையும் அனந்தாழ்வானையும் அழைத்து வருவதற்காகத் தோட்டத்திற்கு வந்து அனந்தாழ்வானிடம் செய்தியை அறிவிக்க, அவர் பிராட்டியைச் செண்பக மரத்தினின்றும்

விடுவித்துத் தாம் செய்த தவறுக்குப் பொறை வேண்டிக் காலையனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, 'நான் உமக்குப் பெண்ணுக இருப்பேன்' என்று தான் சொல்லிய சொல்லை மெய்யாக்க விரும்பி அவருக்குப் பெண்ணுய் மணம்புரிவிக்கத் தக்க ஒரு கன்னிகையின் நிலைமையெய்திய அலர்மேல்மங்கைத் தாயாரை, பூங்குடலையோடுகூட அக்குளில் எடுத்துக் கொண்டு பெருமானிடம் வந்து அவனிடம் அபராதக்ஷாமணம் பண்ணிப் பிராட்டியை ஸமர்ப்பித்தார்.

அப்பெருமானும் தனது பொன்மாலையொன்றை அனந்தாழ்வானுடைய கழுத்தில் அன்போடு அணிவித்துப் பிராட்டியைப் பெற்றுக்கொண்டான். பின்பு அவன் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் பெருமான் திருமார்பிலுள்ள கண்டியில் சேர்ந்து முன்புபோல் அர்ச்சைவடிவந்தரித்துத் தங்கியிருக்கலானாள்.

இவ்வாறு நடந்த கதையைக் கேட்ட் ஸ்ரீராமாநுஜ முனிவர் ஸ்ரீநிவாஸனுக்கு அனந்தாழ்வானிடம் அபிமானம் அதிசயித்துள்ளமையை அறிந்து, முன்பு பெருமாள் அனந்தாழ்வானுடைய சரிதத்தை நினைவூட்டத் தம் மோவாயில் கருப்பூரப்பொடியை அணிவிக்கும்படியும் கோபுரவாசலுக்குள் கடப்பாறையைப் பொருத்தும்படியும் நியமித்ததுபோல், தாமும் இக்கதையை அனைவருக்கும் நினைவுபடுத்துவதற்காக, 'இதுமுதல் ஆண்டு தோறும் நடக்கும் புரட்டாசி மாதப் பிரம்மோத்ஸவத்தின் ஏழாந்திருநாள் மாலையில் திருத்தோட்டவுலாவின் போது முன்பு பகவான் , அஞ்சியோடி அப்ரதக்ஷிணமாகச் சென்ற சரிதத்தை நினைவூட்டும் வகையில் பெருமாளுக்கு அப்ரதக்ஷிணமாகவே புறப்பாடு நடத்தி வைக்க வேண்டுமென்றும், முன்பு போலவே பெருமாள் தோட்டத்திற்கு எழுந்தருளும் போது பெருமாள்மாலையை அனந்தாழ்வானுக்குச் சாத்த வேண்டுமென்றும், எட்டாம் நாள் திருத்தேர்ப் புறப்பாட்டின் போது அனந்தாழ்வான் பெருமாளை மணவாளப்

பிள்ளையாக நினைத்துப் புது வஸ்த்ரம் ஸமர்ப்பிக்க வேண்டுமென்றும் நியமித்தருளினார். அதுமுதல் அப்படியே நடத்தப்படுகிறது. (குறிப்பு இத்தோட்ட வுத்ஸவம் இப்போது புரட்டாசித் திருநாளில் ஏழாம் நாள் மாலையில் நடைபெறுமல் பத்தாம் நாள் மாலையில் நடைபெறுகிறது. பாக்ஸவாரி என்று இதற்குப்பெயர். புஷ்பமாலை பகுமானம் அனந்தாழ்வான் காலம் வரை அவருக்கே நடந்து வந்து, அவர் பரம பதித்த பின்பு அவருடைய தோட்டத்தில் முளைத்து 'எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே' என்று ஸ்ரீ குலசேகரப்பெருமாள் அருளிச் செய்தபடியே அனந்தாழ்வானுடைய அவதாரமாகப் பெரியோர்களால் கருதப்பட்ட பெரியதோர் மகிழ மரத்துக்கு நடைபெறுகிறது.)

## மார்கழி மாதம் முழுவதும் இரவில் கண்ணனுக்கே ஏகாந்த ஸேவை:

இனி மார்கழி மாதத்தில் (இரவில்) கண்ணபிரானுக்குத் திருப்பள்ளிக்கட்டிலில் திருக்கண்வளர்ந்தருளும் போகத்தை நடத்தி வைத்த சரிதம் கூறப்படும். திருவேங்கடமுடையான் கோவிலில் நாள்தோறும் திருமஞ்சனப்பெருமாளான அழகப்பிரானென்னும் போக ஸ்ரீநிவாஸனுக்கே சயன மூர்த்தியாகத் திருப்பள்ளிக் கட்டிலில் சயனித்தருளும் அநுபவமானது ஸ்ரீ வைகாநஸாகமத்தில் கூறியபடி நடத்தப்பட்டு வருமளவில், பகவத் ராமாநுஜ முனிவர் ஸ்ரீ வைகாநஸாகமத்தைச் சேர்ந்ததொரு ஸம்ஹிதையில் மார்கழி மாதத்தில் கண்ணபிரானுக்குக் கட்டிலில் சயனோத்ஸவம் நடத்த வேண்டுமென்றுள்ள விதியையும், ஒருகோவிலில் ஐந்து மூர்த்திகளில்லாமல் மூன்றே மூர்த்திகள் இருந்தால் ஆண்டுமுழுவதும் கண்ணனையே சயனமூர்த்தியாக எழுந்தருளப்பண்ண வேண்டுமென்றுள்ள விதியையும் கண்டருளி, ஆண்டாள் மார்கழி மாதத்தில் கண்ணபிரானொடு கூடவே தனக்குத் திருப்பள்ளிக் கட்டிலில் லீலாரஸாநுபவம் வேண்டுமென்று விரும்பி ஒவ்வொரு

நாளும் ஒவ்வொரு பாசுரமாக ஓதும்படி முப்பது பாசு ரங்கள் அமைந்ததும் கண்ணனைத் திருப்பள்ளி யுணர்த் துவதுமான திருப்பாவையென்னும் திவ்யப்பிரபந்தத்தை அருளிச் செய்ததையும், அர்ச்சாமூர்த்திகளில் மற்றவரைவி டத் திருவேங்கடமுடையானிடத்தில் ஆண்டாளுக்கு அதிக மான ஆதரமுண்டென்பது அவளது இரண்டாவது பிர பந்தமாகிய நாச்சியார் திருமொழியின் முதற்பாட்டிலேயே 'அனங்கதேவா - வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே' என்று வெளிப்பட்டு நிற்பதையும் ஆராய்ந்தருளி, அவளு டைய விருப்பத்துக்கு இணங்கும்படியும் ஸ்ரீவைகாநஸாக மதத்தில் விதித்துள்ள பலத்தைக் கொண்டும், திருவெங் கடமுடையானே கண்ணனாயிருந்து அவ்வாண்டாளுக்குச் சயன போகத்தைத் தருகிறானென்று பாவனை செய்து மார்கழி மாதம் முழுவதும் கண்ணபிரானுக்கே சயனோத் ஸவம் நடத்தி வைக்க வேணுமென்றும், மற்ற மாதங்களில் போகஸ்ரீநிவாஸ மூர்த்தியான அழகப்பிரானுக்கு நடத் தவேணுமென்றும் வரையறை செய்தருளினார். அக்கால முதல் மார்கழி மாதத்தில் கண்ணபிரானுக்கே சயனோத் ஸவம் (ஏகாந்த ஸேவை) நடத்தப்பட்டு வருகிறது.

## அடிப்புளியின்கீழ் இராமாயண காலக்ஷேபமும் ஸ்வயம் வ்யக்தமான திருவடிகளும்:

இனி திருமலையேறும் படிக்கட்டு வழி தொடங்குமி டத்திலுள்ள புளியமரத்தின்கீழ் இருக்கும் திருவேங்கட முடையானுடைய திவ்யமான திருவடித் தாமரையிணை யைப் பற்றிய சரிதம் கூறப்படும். ஆளவந்தாருடைய நியமனம் பெற்றுத் திருமலைநம்பி என்னும் ஆசாரியர் திருவேங்கடமலையில் வசித்துக்கொண்டு முச்சந்திகளிலும் திருவேங்கடமுடையானைச் சேவித்தும் நாள்தோறும் பெரு மாள் திருமஞ்சனத்திற்கு உதவும்படி ஆகாச கங்கையி லிருந்து தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பித்தும் பெருமா ளுக்கு ஐச்வர்யம் அளவற்று மேன்மேலும் தழைத்தோங் குமாறு எப்போதும் மங்களாசாஸனம் செய்வதிலேயே

ஊற்றமுடையவராய் இருக்குமளவில், ஆளவந்தார் பர மபதம் எழுந்தருளும்போது பெரிய நம்பி திருமலை நம்பி திருக்கோட்டியூர்நம்பி திருமாலையாண்டான் முதலி யோரிடம், "ராமானுஜருக்காக என்னால் நிதியைப்போல் மறைத்துக்காக்கத்தக்க ஒவ்வொரு விசேஷார்த்தங்கள் உங் களிடம் உபதேச மூலமாக வைக்கப்பட்டுள்ளன. அவை தக்க தருணத்தில் ராமானுஜரால் அடைய (அறிய)ப்பட வேண்டும். அவர் நான் வாழ்ந்திருக்கும் நாட்களிலே இங்கு வந்திருப்பாராகில் இவற்றை அவர் என்னிடமி ருந்தே அறிந்திருப்பர். எனக்குப் பாக்கியமில்லாமையால் என் வாழ்நாளில் அவர் என்னிடம் வரவில்லை. அவர் வெகு சீக்கிர காலத்திலேயே விஷ்ணுவின் மதத்தை அறி யப்போகின்றார். அதனைப் பிற சமய வாதிகள் யாரும் அசைக்கமுடியாதபடி ஸ்தாபிக்கவும் போகிறார். அது போது காலம் பார்த்து, நான் உங்களிடம் வைத்துள்ள நூற்பொருள்களை அவரிடம் சேர்த்து விடுங்கள்" என்று கட்டளையிட்ட நூற்பொருள்களில், திருமலை நம்பியிடம் ஸ்ரீராமாயண விசேஷார்த்தத்தைக் கேட்டறிவதற்காக வந்த ராமானுஜ முனிவருக்குத் திருமலைநம்பி தம் ஆசாரியரான ஆளவந்தாருடைய கட்டளையை நினைவுபடுத்திக்கொண்டு பேரன்புடன் ராமாயணத்தின் சிறந்த (உட்) பொருள்களை உபதேசித்தார். அப்படி உபதேசிக்கும்போது ராமானுஜர் அபசாரம் நேருமென்றஞ்சித் திருமலையில் தாம் வசிப்ப தைப் பொருமலிருக்க, திருமலை நம்பி தாமும் ஆசார்யர் நியமித்ததாய்த் திருவேங்கடமுடையானுக்குத் தினந்தோ றும் திருமஞ்சன தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பிக்கும் கைங்கரியத்தையும் தினமும் ஸ்ரீநிவாஸனைத் தொழுது மங்களாசாஸனம் செய்வதையும் விட்டு (கீழ்த்திருப்பதியில்) இருக்க முடியாதவராய், வாரீர் இராமாநுச முனிவரே, தினந்தோறும் இராமாயண பாடம் காரணமாக நீரும் நாமும் கூடுமிடம் திருமலையேறும் படிகள் வழியின் தொடக்கத்திலுள்ள புளியமரத்தின் கீழிருக்கும் குண்டுக் கல்லின் கீழ்ப்பகுதியே ஆகத்தக்கது. நான் திருமலையில்

காலைத் திருவாராதனம் முடிந்தவுடன் பெருமாள் பிரசா தத்தையும் எடுத்துக்கொண்டு அவ்விடத்திற்கு வருகிறேன். உமக்கும் கொடுக்கிறேன். நீரும் கீழ்த்திருப்பதியிலிருந்து காலைக் கடன்களை நிறைவேற்றிக் கொண்டு வாரும். பின்பு அவ்விடத்தில் ஸ்ரீராமாயண பாடம் நடக்கும். பெருமாள் திருவாராதனத்தையும் போஜனத்தையும் அவ் விடத்திலத்திலேயே செய்து கொள்ளுகிறேன். உமக்கும் பகலனுஷ்டானம் அனைத்தும் நிறைவேறியபின்பு மறு படியும் பாடம் நடைபெறும். பிறகு பெருமாளுடைய மாலைத் திருவாராதனத்திற்காக நான் திருமலைக்கே சென்று விடுகிறேன். நீரும் திருப்பதிக்குச் செல்லலாம் என்று நியதியை ஏற்படுத்தி அப்படியே ஓராண்டுக்காலம் ஆளவந்தாருபதேசித்த ஸ்ரீராமாயண விசேஷார்த்தங்களை உள்ளபடியே உடையவருக்குக் கற்பித்தருளினார்.

இவ்வாறு கற்பிக்கும் திருமலைநம்பி ஒருகால் திரு வேங்கடமுடையானை மாலைத் திருவாராதன காலத்தில் சேவித்துத் திருமாளிகை சேர்ந்து இரவு சயனித்தருளும் போது பெருமாளைத் தியானித்து, 'திருவேங்கடத்தரச னான ஸ்ரீநிவாஸ பகவானே ஆளவந்தாருடைய கடாக்ஷத் தினால் இதுவரையிலும் முச்சந்திகளிலும் நீர் எனக்கு ஸேவை தந்து கொண்டிருந்தீர். இப்போது ஸ்ரீராமாயண பாடம் காரணமாகப் பகற்காலத் திருவாராதன ஸேவை துர்லபமாகிவிட்டது' என்று நினைத்துக் கொண்டே கண் வளர்ந்தருளினார். பின்பு உறங்கும் திருமலை நம்பிக்கு இரவில் கனவில், 'வாரீர் திருமலை நம்பியே உமக்குப் பகல் திருவாராதன ஸேவையையும் தந்தோம், வருத்தப் படாதீர்' என்று ஸ்ரீநிவாஸன் எதிரே நின்று சொல்ல, காலையில் துயிலுணர்ந்த அவர் வழக்கப்படியே ஆகாச கங்கையிலிருந்து திருமஞ்சன தீர்த்தம் கொண்டு வந்து ஸமர்ப்பித்துப் பெருமாளுடைய காலைத் திருவாராதன ஸேவையையும் பெற்றுப் பின்பு ஸ்ரீராமாயண பாடத் திற்காகத் திருமலையடிவாரத்தில் புளிய மரத்தடியிலுள்ள குண்டுக்கல்லின் அருகில் வந்து அங்குத் தம்மை எதிர்

பார்த்திருக்கும் இராமாநுச முனிவருக்கு இராமாயணம் கற்பித்துக் கொண்டிருந்தார். அதன்பின்பு பகற்பொழுதில் கஸ்தூரி குங்குமப்பூ பச்சைக் கருப்பூரம் ஆகியவற்றின் நறுமணத்தினால் கும்கும்மென்று பத்துத் திசைகளையும் கமழச் செய்துகொண்டு சந்தனம் புஷ்பம் திருத்துழாய் இவற்றால் அலங்கரிக்கப்பட்ட திருவேங்கடமுடையானு டைய திவ்விய பாதங்கள் அங்குள்ள குண்டுக்கல்லின் மீது தோற்றமளித்தன.

பின்பு திருமலைநம்பியும் ஸ்ரீராமாநுஜ முனிவரும் நாற் புறங்களிலும் பரந்த அத்திவ்வியநறுமணத்தை மோந்து இது என்ன பரிமளமென்று ஆராய்ந்தறிவதற்காக உடனே எழுந்திருந்து எல்லாப் பக்கங்களிலும் கண்செலுத்திப்பிறகு அங்குக் குண்டுக் கல்லின் மேல் முற்கூறிய தோற்றமு டைய திருவேங்கடநாதனுடைய திவ்விய திருவடிகளைக் கண்டு வியப்படைந்தனர். இங்ஙனம் தோன்றிய பெருமா ளின் திவ்விய திருவடிகளைக்கண்ட திருமலைநம்பி தமது கனவுச்செய்தியையும் இராமாநுச முனிவர்க்கு அறிவித்து அவருடன் கூடி மனம் மிக மகிழ்ந்திருந்தார்.

அதன்பின் அவ்விருவரும் ஆச்சரியமடைந்து ஸ்வயம் வ்யக்தமான (தாமே தோன்றிய) அத்திவ்விய திருவடியி ணையை ஸேவித்து, அதன்கீழ் அக்குண்டுக்கல்லிலேயே அத்திருவடிகளோடு ஒரே திருமேனியாக ஆழ்வார்களை அவதரிக்கச் செய்து (பிம்பமாக வடித்து) ஒரு கோவி லையும் கட்டுவித்து (அத்திருவடிகளுக்கும் ஆழ்வார்களுக் கும்) ஸ்ரீவைகாநஸாகமம் கூறிய விதிப்படியே பிரதிஷ்டை பூஜை முதலானவற்றையும் நிறைவேற்றித் தீர்த்தப்பிர சாதங்களையும் பெற்றுக்கொண்டு, திருமலை மேலுள்ள முற்கூறிய உறங்காப்புளியமரம் போல் தோற்றமளிக்கும் இப்புளிய மரத்தையும் பெருமாள் திருவடிகள் தோன்று வதற்கு முன்னமே பிடித்து அதற்காகவே அங்கு வந்து சேர்ந்த ஆதிசேஷனாகவே கருதி அத்திருவடிகளின் அரு கிலேயே இராமாயண காலக்ஷேபம் நடத்தி வந்து

சில நாட்களிலே சாத்து முறையையும் செய்து முடித்தனர்.

அதற்குப் பிறகு பரமதயாளுவான பகவத் ராமாநுஜ முனிவர், 'கலியுகத்தில் திருவேங்கட நாயகன் விசேஷமாகச் சக்தியுடையவன்' என்று பிரசித்தமான பெருமையுடையவனும், 'மிகக் கொடிய கலியுகத்தில் பிறரைப் பீடித்துப் பாபமே உருவெடுத்து வந்த மனிதர்களுக்கும் உய்வு பெறத்தக்க இடம் பூகோளமத்தியில் புண்ணியமான தமிழ்நாட்டிலுள்ள திருவேங்கடமலையொன்றே, வேறேது மன்று என்று ஸ்ரீபவிஷ்யோத்தர புராணத்தைச் சேர்ந்த 80 எண் குறித்த ஸ்ரீவேங்கடேச ரஹஸ்யாத்தியாயத்தில் கூறியபடி மிகவும் பிரசித்த வைபவமுடைய திருவேங்கட மலையின் சிகரத்தில் எழுந்தருளியிருப்பவனும், 'பாபத்தில் விருப்பமுள்ளவர்களால் அடக்கியாளப்படும் கலியுகத்தில் எல்லாரையும் விட உயர்ந்த திருமால் பக்தர்களிடம் தான் வைத்துள்ள பேரன்பு காரணமாக அனைவரையும் காப்பாற்றுவதற்குத் திருவேங்கடமல்லயரசனென்னும் பெயர் பெற்ற அர்ச்சாமூர்த்தியாக அவதரித்தான்' என்பது முதலான வசனங்களில் கூறியபடி சாதி நிலைகளின் வேறுபாடின்றி மனிதரெல்லாரையும் காப்பதற்காக அவதாரம் செய்தவனுமான திருவேங்கடநாதனை வணங்கித் தம் வாழ்வைப் பயன்பெறுமாறு செய்து கொள்ளுந்தகுதி அனைவருக்கும் பொதுவாக உள்ளதனால், ஐந்தாம் வருணத்தில் பிறந்துள்ள திருமாலடியார்க்கும் மற்றுமுள்ள தாழ்ந்த சாதியினர்க்கும் திருவேங்கடமலையேறும் உரிமையில்லாமையினால் அவர்கள் அனைவரும், திருவேங்கடமலையின் தெற்குக் கொடுமுடியிலுள்ள பள்ளத்தாக்குகளிலிருந்து பாயுமவையும் அந்தணர் முதலான ஐவகைச் சாதியினரைச் சேர்ந்தவையுமான மிகப் பிரசித்தமான ஐந்து தீர்த்தங்களில் கடைசியான சண்டாள தீர்த்தத்தில் (மாலவாரி குண்ட) நீராடித் தூயவுடையுடுத்துக்கொண்டு திருவேங்கடமுடையானுடைய இந்த ஸ்வயம் வ்யக்தமான (தாமே தோன்றிய) திவ்ய திருவடியிணையை அணுகிக்

கண்டு, வலம் வருதல் வணங்குதல் முதலியவற்றுல் வழி பட்டுப் பாக்கியசாலிகளாய் உய்வார்களாக என்று வரை யறை செய்தருளினார்.

## கோவிந்த நாமோச்சாரணத்துடன் திருவேங்கடமலையேறுதல்:

மேலும் அவ்விராமாநுசமுனிவர், வராக புராணம் முதற்பகுதி 62 எண்ணிட்ட முப்பதாமத்தியாயத்தில் மகர்ஷிகள் கூட்டங்கூட்டமாகக்கூடி, கோவிந்தா கோவிந்தா என்று ஓயாமல் உரக்கக் கோஷம் செய்து கொண்டுசென் ரூர்கள் என்று, முன்பு திருவேங்கடமலையின் மகிமை யைச் சூதமஹாமுனிவர் சொல்லக்கேட்டு அம்மலைக்கு யாத்திரையாகப் புறப்பட்ட மகரிஷிகள் திருமாலின் மற்ற பெயர்களை விட்டு 'எப்போதும் கோவிந்தா என்று சொல் லவேண்டும்' என்று விதிக்கப்பட்ட கோவிந்த நாமத்தையே உயர்ந்த குரலொலியுடன் கோஷித்துக்கொண்டு திருவேங் கடமலை யாத்திரை செய்ததாகக் காண்கையால், இப் போது திருமலையேறுமவர்கள், திருவேங்கடமலை வேறு தேவதைக்கு உரியதென்று நடுவிலுண்டான வாதத்தை முறியடிப்பதற்காக, அந்நாளில்போல் கோவிந்த நாமத் தையே ஓயாமல் உரத்த குரலில் கோஷித்துக்கொண்டும், அதன் மூலமாகத் திருவேங்கடமலை விஷ்ணு க்ஷேத்திரமே என்பதைப் பண்டிதர் பாமரர் என்ற வேறுபாடில்லாமல் அனைவருக்கும் அறிவித்துக்கொண்டும், வெகு தூரத்திலி ருந்து பகவானைத் தரிசிக்க விரும்பி வருமவர்களுக்குத் தரிசனமளிப்பதற்காகப் பரம கருணையினால் திருமலையடிவாரத்திலேயே தோன்றிய இத்திருவடியிணையைச் சேவித்துவிட்டுப் பிறகே திருவேங்கடவனைச் சேவிக்கத் திருமலையேறக் கடவர்கள் என்ற நியமத்தையும் ஏற்ப டுத்தினார்.

## ஸ்ரீராமபிரான்

இனி, திருவேங்கடமுடையான் திருக்கோவிலில், ஸீதை லக்ஷ்மணன் ஹனுமான் ஸுக்ரீவன் அங்கதன்

ஆகியவர்களோடு கூடி விளங்கும் ஸ்ரீராமபிரானது வர லாறு கூறப்படும். முன்பு 'க்ருதமாலை (வைகை)யாற்றின் கரையில் திருமாலின் அவதாரமான சக்ரவர்த்தி திருமகன் விச்வம்பரருக்காக, விபிஷணனுக்கு அபயமளித்த திருக்கோ லத்தோடு தோன்றினான்' என்று வாஸிஷ்ட ராமாயணத் தில் கூறியபடியே, கிருதமாலையென்னும் பெயர் பெற்ற ஆற்றின் கரையில் தென்மதுரை நகரத்தின் மேற்றிசையி லுள்ள குருவித்துறையென்ற நகரில் விச்வம்பரரென்னும் மாமுனிவர் 'குரங்குகட்கு அரசனான ஸுக்ரீவனே இவ்வி பீஷணனுக்கு என்னால் அபயமளிக்கப் பட்டது. இவனை அழைத்துவா' என்று கூறப்பட்டுள்ள - இராமபிரான் விபீஷணாழ்வானுக்கு அபயமளித்த சரித்திரத்தைக் கேட்டு அதில் மனம் ஈடுபடப்பெற்று அப்போதைய அந்த நிலை மையோடு கூடிய ஸ்ரீராமனை நேரே காண்பதற்காக அப்பெருமானைக் குறித்துத் தவம் செய்யுமளவில், அந்த இராமபிரான் தவமியற்றும் அம்முனிவரிடம் தயை புரிந்து அதனால் தூண்டப்பெற்றவனாய், ஒரு சமயம் அவருக்குக் கனவில் - தானும் லக்ஷ்மணனுமாகிய இருவரும் வில் லைத் தாங்கி நிற்பவராகவும், தன்னருகில் 'சுக்கிரிவன் விபீஷணனுக்கு எல்லாச் செய்தியையும் விண்ணப்பித்து வந்து அரசர் பெருமானான இராமபிரானே உமது விருப் பத்தின்படியே செய்யும் என்று கூறிக் கைகூப்பி நின்றான்' என்று கூறியபடி - அச்சமயத்துக்குத் தக்க வார்த்தையை விண்ணப்பம் செய்துவிட்டு, 'அடியேன் விண்ணப்பிக்க வேண்டியதை விண்ணப்பம் செய்துவிட்டேன், இனி நீர் நினைத்தபடியே செய்யத்தக்கீர்' என்று சொல்லிக் கூப் பிய கையனாய் அருகில் நின்று ஸேவிப்பவனாகவும், ஹனுமான் விபீஷணனைச் சேர்த்துக்கொள்வதற்காக 'இதுவே தகுந்த தேசமும் காலமுமாகும்' என்றிது முத லான வார்த்தைகளைப் பேசிக்கொண்டு தமதருகில் நிற் பவனாகவும், அங்கதன் 'பேரொளி படைத்த வாலி தந யன் அதோ விபீஷணன் கிட்டிநின்றானென்று அப்போது கையைத் தூக்கி ஆகாசத்தில் காட்டியவனாய் நின்

ருன்' என்றபடியே மனக்கவலை தீர்ந்த விபீஷணனைத் தன் கைவிரலால் குறித்துக் காட்டிக்கொண்டு நிற்பவனா கவும் வாஸிஷ்ட ராமாயணத்தில் கூறிய இப்படிப்பட்ட வேஷத்தோடு கூடிய இவர்களனைவரையும் நேரே நன் ருகக் காட்டியருளினான்.

இங்ஙனம் கனவில் தாம் விரும்பியதற்கு ஏற்ற நிலை மையோடும் பரிஜனங்களோடும் கூடிய தன்னைத் தன் கருணையினால் இராமபிரான் காட்ட, அப்படியே கண்டு விழித்தெழுந்த அவ் விச்வம்பரமுனிவர் அவ்விடத்திலேயே அப்பரிஜனங்களோடு கூடிய இராமபிரானை அர்ச்சை (பஞ்சலோஹ பிம்ப) வடிவத்தில் திருமாணம் செய்வித்துப் (பிரதிஷ்டை செய்வித்துப்) பூஜை செய்து கொண்டு வந்து தமது விருப்பம் நிறைவேறப்பெற்ருர்.

அது முதலாக அவ்விடத்தில் முற்கூறிய பரிவாரங் களுடன் கூட இராபிரான் ஆராதிக்கப்பட்டுவருமளவில், ஒருகால் அக்குருவித்துறை நகரில் பெரியதொரு கலஹம் (சண்டை) உண்டாக, அப்பெருமான் ஒரு பக்தனுக்கு, அப்பா என்னை இப்போது என் பரிவாரத்துடன் திருவேங்க டமலைக்குக் கொண்டு சேர்த்துவிடு என்று கனவில்கூற, அவன் அப்பெருமானைப் பரிவாரத்தோடு எழுந்தருளப் பண்ணுவித்துக் கொண்டு சென்று, திருவேங்கடமலையடி வாரத்தில் அடிப்புளியமரத்தின் கீழுள்ள குண்டுக்கல்லின் பக்கத்தில் ஸ்ரீராமாயணத்தைச் சொல்லியும் கேட்டும் நற் போதுபோக்கி வருமவர்களும் அப்போதுதான் விபீஷண னுக்குஅபயந்தரும் கட்டத்தைப் பற்றி ஆராய்ந்துகொண் டிருப்பவர்களுமான திருமலைநம்பிகள் இராமானுச முனி வர் ஆகிய இருவரின் பக்கத்தில் எழுந்தருளப்பண்ணி னான். அவ்விருவரும தாம் எதிர்பாராமல் எழுந்தருளிய ஸ்ரீராம லக்ஷ்மண ஸுக்ரீவ ஹனுமத் அங்கதமூர்த்திகள் விபீஷணனுக்கு அபயமளித்த நிலைமைக்குரிய வேஷத் தோடு கூடியிருப்பதனைக் கண்டும் இவர்கள் இங்குத் திடீரென்று எழுந்தருளுவதற்குக் காரணமான சரித்திரம

னைத்தையும் கேட்டும் மிக மகிழ்ச்சியடைந்து, 'இவர்கள் முன்பு எங்ஙனம் விபீஷணனை அபயம் தந்து அருள் செய்தனரோ, அங்ஙனமே, அவ்விபீஷணனாபயதான கெட்டத்தைப்படித்து ஆராய்ந்துகொண்டிருக்கும் நமக்கும் அபயமளிக்க விருப்பம் கொண்டே அச்சமயத்துக்குத் தக்க வேஷத்துடன் கூடி எழுந்தருளினர் என்று சொல்லி, முன்பு ஸ்ரீவிபீஷணனுக்கு அபயமளித்த இந்த ஸ்ரீராமபிரானுக்கு இராவணபவனத்திலிருந்து எழுந்தருளின ஸ்ரீஜானகிப் பிராட்டியோடு எப்படிச் சேர்த்தி உண்டாயிற்றோ அப்படியே இங்கும் (அர்ச்சையுருவமான) ஸ்ரீஜானகிப்பிராட்டியோடு சேர்த்தியை உண்டாக்கவேணுமென்று நினைத்து, ஸ்ரீஜானகீ (ஸீதா) தேவியை நல்லதோர் நாளில் நல்லதொரு வேளையில் அர்ச்சைவடிவமாக அவதரிப்பித்து, முற்கூறிய இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீவைகாநஸாகமத்தில் விதித்த முறைப்படியே ஸம்ப்ரோக்ஷணம் செய்வித்து, ஸ்ரீஸீதைப் பிராட்டிக்கும் ஸ்ரீராமபிரானுக்கும் திருக்கல்யாண மகோத்ஸவத்தையும் நடத்திவைத்து, அவர்களுக்கு நித்தியபூஜை மேன்மேலும் வளர்ந்து வருவதற்காக மங்களாசாஸனம் செய்து, 'கடைந்த திருப்பாற்கடலில் பள்ளிகொண்டு, காலநேமியென்னும் அசுரனை வென்று, இராமாபிரானாய் அவதரித்து மனங்கலங்கிய வாலிசகோதரனாகிய சுக்கிரீவனுக்கு உதவவந்து ஒன்றொடொன்று நெருங்கிய (மரா) மரங்கள் ஏழையும் அம்பினால் துளைத்துத் திருவேங்கடமலை சென்றடைந்த திருமாலாகிய தலைவனின் திருவடிகளையே எந்நாளும் அடைந்து உய்வு பெறுவீர்களாக' என்னும் இப்பொருள்கொண்ட திருமழிசையாழ்வார் அருளிய திருச்சந்த விருத்தமென்று பெயர்பெற்ற பாசுரத்தொகுதியில் எண்பத்தோராம் பாசுரத்தை மெய்யாக்க விரும்பியவர்களாய், திருவேங்கடமலையில் ஸ்ரீனிவாஸப்பெருமாளுடைய திருக்கோவிலிலேயே அவர்களறுவரையும் எழுந்தருளப்பண்ணி, ஆண்டுதோறும் ஸ்ரீராமநவமிக்கு அடுத்தநாளில் இந்த ஸ்ரீஸீதாராமர்களுக்குத் திருக்கல்யாணோத்ஸவம் நடத்தும்படி நியமனம் செய்து அவர்கள்

அனைவர்க்கும் நித்யபூஜையையும் நடத்திவைத்தருளினார்கள்.

## ஸ்ரீவராகப்பெருமாள்

இனி ஸ்ரீவராகப்பெருமாளுடைய வரலாறு கூறப்படும். பாத்மபுராணப்பகுதியில் உள்ள 29 எண் குறித்த ஆருமத்தியாயத்தில் - பொற்குடங்களிலிருந்து தொடர்ந்து இடைவிடாமல் பெருகுகின்ற பசும்பாலால் அரசன் புற்றினுடைய துவாரத்தின் உட்பகுதியை அபிஷேகம் செய்யத் தொடங்கினான். அங்ஙனம் செய்துகொண்டிருக்கையில் அப்புற்றின் உட்பகுதியிலிருந்து பூஜிக்கத்தக்க வராகவுருக்கொண்ட பெருமாள் தோன்றினார் - என்றிது முதலாகக் கூறப்பட்ட பெருமையையுடையவரும், இங்ஙனமே பெரும்பாலும் வேங்கடாசலமாகாத்மியத்தைக் கூறுகின்ற புராணப்பகுதிகள் அனைத்திலும் கூறப்பட்டு மிகவும் பிரசித்தமான வைபவமுடையவரும் ஸ்ரீஸ்வாமிபுஷ்கரிணியின் மேற்குக்கரையில் விளங்குமவருமான இவ்வராகப்பெருமாள் ஸ்ரீஸ்ரீநிவாஸ பகவானுக்கு முன்னமே திருவேங்கடமலைக்கு வந்து எழுந்தளியிருந்த போதிலும், ஸ்ரீநிவாஸப் பெருமானுக்கே இதற்கு முன்பு பிரமன் முதலியோர்களால் பிரபலமாக பிரம்மோத்ஸவம் முதலியன நடத்தி வைக்கப்பட்டமை புராணங்களில் அறியப்படுவதனாலும், இப்போதும் அப்பெருமானுக்கே பிரம்மோத்ஸவாதிகள் செய்விக்கப்பட்டு வருவதனாலும் அவருடைய உத்ஸவங்களைக்குறைத்தல் தகாது. மேலும் ஸ்ரீவைகாநஸானந்தஸம்ஹிதையில் - பலிஸாதிக்கப்படுகிற ஒருவீதியின் நடுவில் (உள்ள இரு தேவதைகளில்) ஒரு தேவதையை பலிஹோமமில்லாமல் அமுக்கியமாகப் பூஜிக்கவேண்டும். உத்ஸவம் முதலியவை செய்யக்கூடாது என்றுள்ள வசனத்தினால், ஒரு தலத்தில் பலிபூஜை நடைபெறும் ஒரு (நான்கு) வீதிநடுவில் எழுந்தருளியுள்ள பெருமான்கள் இருவர்க்கும் ஸமமான முக்கியத்துவம் கொடுத்து பலிபீடார்ச்சனம் நித்யஹோமம் பிரம்மோத்ஸவம் முதலியன செய்யக்கூடாதென்றும்

இருவரில் ஒருவரை அமுக்கியராக ஆக்கி பலிஹோமங்க ளில்லாமல் நித்தியபூஜை மட்டும் செய்யவேண்டுமென்றும் அறியப்படுகிறது. ஆகையால் இவ்வராகப்பிரானுக்கு பலி பீடபூஜை நித்யஹோமம் பிரம்மோத்ஸவம் இவையின்றி முச்சந்திகளிலும் பூஜை மட்டும் செய்யப்படவேண்டும்.

அங்ஙனம் வராகப்பெருமானுக்குச் செய்யப்படுகின்ற பூஜையும் - ப்ராஹ்மபுராணம் எட்டாமத்தியாயத்தில் - மிக வுயர்ந்த இடமான ஸத்யலோகத்தில் இருக்கும் பிதாமஹர் (நான்முகக் கடவுள்) அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் போது 'இப்பகுதி வராகதீர்த்தமென்னும் பெயரால் பிர சித்தியடையப்போகிறது. இங்கு வருமவர்கள் இதன்கண் நீராடாமல் அசுத்தராய் வராகப்பெருமானை வணங்கக்கூ டாது. வராகரை வணங்குவதற்கு முன்பு ஸ்ரீநிவாஸப் பெருமானை வணங்குதல் கூடாது. வராகப்பெருமானைச் சேவிப்பதற்கு முன்பு தன்னைச் சேவித்தால் ஸ்ரீனிவாஸப் பெருமான் திருப்தியடையமாட்டான்' என்று கூறி இப்படி ஒரு நியதியை ஏற்படுத்தினார். பின்பு அவர் ஸ்ரீநிவா ஸப்பெருமானைச் சேவித்துப் பல துதிகளால் துதித்து அவன் திருப்பாதங்களைப் பிடித்துக்கொண்டு, திருமாலே உமக்குப் பூஜை நடப்பதற்கு முன்பாகவே அடியேன் ஸ்தா பித்த வராகப்பெருமாளுக்குத் திருமஞ்சனம் சந்தன புஷ்ப நைவேத்ய தானம் தரிசனம் முதலிய பூஜை நடக்க வேண்டும்' என்று வரம் வேண்டினார். திருவின் மண வாளனான ஸ்ரீநிவாஸன் அப்படியே ஆகக்கடவதென்று வரமளித்து அதை அவ்வாறே நடத்தி வைத்தான் - என்று வசனமுள்ளதனாலும், வராகவுருவம் தரித்த திருமால் அவ் வேடனைக் குறித்து - ஸ்ரீநிவாஸனுடைய தீர்த்தத்தில் (ஸ்வாமி புஷ்கரிணியில்) நீராடுவதற்கு முன்பு எனது தீர்த்தத்தில் நீராட வேண்டும். ஸ்ரீனிவாஸனது விமா னத்தைச் சேவிப்பதற்கு முன்பு எனது விமானத்தைச் சேவிக்கவேண்டும் - என்று தாமே கூறினார். அதுமுதல் அத்தீர்த்தம் முதலில் நீராடத்தக்கதாக ஆயிற்று என்று வசனமுள்ளதனாலும்,

பவிஷ்யோத்தர புராணம் ஐந்தாமத்தியாயத்தில் ஸ்ரீவராகப்பெருமாளுக்கும் ஸ்ரீனிவாஸப்பெருமாளுக்கும் நடந்த ஸம்பாஷணையில் ஸ்ரீனிவாஸப்பெருமாள் வராகரைக் குறித்து, பூதேவிமணவாளனே இம்மலையில் எனது பாக்கியத்தால் உம்மைக் காணலுற்றேன். இங்கேயே வசிக்கவேண்டுமென்ற திடமான எண்ணம் எனக்கு உள்ளது. கலியுகம் முடியும் வரையில் எனக்கு வசிக்க இடம் தரவேண்டுகிறேன் என்று விண்ணப்பிக்க, அதற்கு வராகர் - 'என்னிடமிருந்து விலைகொடுத்து வசிக்க இடத்தைப் பெற்றுக்கொள்ளும்' என்று கூற, அது கேட்ட ஸ்ரீநிவாஸன் 'உம்மையே எல்லோரும் முன்பு வணங்குவர். பால்திருமஞ்சனம் உமக்கே முன்பு நடைபெறும். நைவேத்தியமும் உமக்கே முதலில் நடக்கும். இதையே (இப்படி நான் நடத்தி வைப்பதையே) உயர்ந்த விலையாகத் தருகிறேன். கருணைநிதியான பூதேவிநாதனே நான் கொடுப்பதை ஏற்றுக்கொள்ளும். அப்பனே மாதவா தயாநிதியே இது உயர்ந்த விலைப்பொருளாகும். ஆகையால் என்னிடம் தயை புரியவேண்டுகிறேன்' என்று மிக இனிமையாகப் பேச, அது கேட்ட வ்ராகபகவான் திருமகள்நாதனாய் வசிக்க இடங்கேட்கும் ஸ்ரீனிவாஸபகவானுக்கு நூறடியளவுள்ள ஸ்தலத்தைக் கொடுத்தார் - என்று வசனமுள்ளதனாலும், ஸ்ரீநிவாஸப்பெருமாளுக்குப் பூஜை நடப்பதற்கு முன்பே செய்யப்பட வேண்டும். யாத்திரை செய்யுமவர்களும் முன்பே வராக தீர்த்தத்தில் நீராடி வராகவிமானத்தைச் சேவிக்க வேண்டும் என்று வரையறுத்து, அப்போது வராகப்பெருமாளுக்கு ஒர் உத்ஸவமூர்த்தியை நிருமாணம் செய்வித்துப் பிரதிஷ்டை செய்வித்து, அவருக்கு ஒரு நாள் அத்யயனோத்ஸவம் நடப்பிக்க வேண்டுமென்றும், ஸ்வாமிபுஷ்கரிணியின் கரையில் ஐப்பசிமாதத் திருவோண நன்னாளில் தோன்றிய திருமேனியை உடைய திருவேங்கடமலை வராகப்பெருமாளுக்கு வணக்கம்' என்று கூறப்பட்ட - வராகப்பெருமாள் அவதரித்த நக்ஷத்திரமாகிய ஐப்பசித் திருவோணத்திலும் ஸ்ரீவராகஜயந்தியன்

றும் சிறப்பாக உத்ஸவம் நடத்திவைக்கவேண்டுமென்றும் பகவத்ராமானுஜமுனிவர் நியமனம் செய்தருளினார்.

## பாரபத்யதாரர்

இனித் திருவேங்கடமுடையான் திருக்கோவிலில் கைங்கரியங்கள் அனைத்தையும் நிறைவேற்றிவைக்கும் முக்கிய அதிகாரியாகிய - பாரபத்யமென்னும் அதிகாரஸ்தானத்தை வகிக்கும் ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஒருவகை மரியாதையை நடத்தி வைத்த சரித்திரம் கூறப்படும். திருவேங்கடமுடையானது அபிமானத்திற்கு உட்பட்ட 'ஸ்ரீபதபூரீ' என்ற திருப்பதி க்ஷேத்திரத்தில், கிரிமிகண்டசோழனது கொடுமை காரணமாக ஸ்ரீசித்திரகூடநாதனான ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாள் எழுந்தருளித் திருவேங்கடவனது திவ்யமான ஐச்வரியத்தினால் தம்முடைய ஸகலமான உத்ஸவபோகங்களின் ஸாம்ராஜ்யத்தை (மிக உயர்ந்ததொரு நிலைமையை) அனுபவித்துக்கொண்டு வருகின்ற நாளில், திருவேங்கடமலையும் திருப்பதிநகரமும் ஒரே திவ்யதேசமென்று (ராமானுஜர்) நியமித்தபின்பு, திருவேங்கடமலையில் பெருமான்திருக்கோவிலில் தினந்தோறும் இரவில் திருப்பள்ளிக்கட்டிலில் பெருமாளுக்குச் சயனபோகம் முடியுந்தறுவாயில், அர்ச்சகர் சடகோபனை (பெருமாள் பாதுகைகளை) குடைசாமரம் முதலிய உபசாரங்களுடன் வாசலுக்கெதிரில் உள்ள கிருஷ்ண மண்டபத்துக்கு எழுந்தருளச்செய்து கொண்டு, பகவானுடைய அருள் (உம்மிடம்) வெள்ளமிடுகிறது. (=அருளிப்பாடு) வாரீர், திருவேங்கடமுடையான் திருச்சித்திரகூடமுடையான் ஆகிய எம்பெருமான்கள் இருவரின் ஸர்வகைங்கர்ய பாரத்தையும் வகிக்குமவரே ஸ்ரீவேங்கடாத்ரி திவ்யஸம்ஸ்தானத்தின் ஸகலகார்யங்களையும் நிர்வஹிக்குமவரே விஷ்வக்ஸேனரே' என்று பரிசாரகர் விருதுகூறி அழைக்க, 'இவ்வடியேன் நான் (இங்கு) உள்ளேன்' (=நாயன் தே) என்று விண்ணப்பித்துக்கொண்டு கிட்டிவந்த - திருவேங்கடமுடையான் திருக்கோவிலில் பாரபத்யாதிகாரம் வகிக்கும் ஸ்ரீவைஷ்ணவனுக்குப் பெருமாளுடைய சேஷவஸ்த்ரத்தை

(உடுத்துக் களைந்த பீதகவாடையை) தலையில் சுற்றிக் கட்டி ஸ்ரீசடகோபனை ஸாதிப்பதாகிற (தலையில் வைப்பதாகிற) மரியாதையைச் செய்ய வேண்டும். அதற்குப் பிறகுதான் கோவிற்கதவுகளைச் சாத்தி முத்திரையிட்டுக் கோவிற்காரியங்களைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்று இக்கட்டளையையும் பகவத்ராமானுஜ முனிவர் செய்தருளினார்.

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸ மாலையில் ஐந்தாம் கொத்து முற்றும்.

* * *

# ஆறாம் ஸ்தபகம்

## திருமலை நம்பிகளின் வரலாறு

இனி ஸ்ரீசைல பூர்ணர் (திருமலைநம்பிகள்) என்னும் ஆசாரியரின் சரித்திரம் கூறப்படும். முன்பு பூஜ்யரான யாமுன முனிவர் (ஆளவந்தார்) ஸகல சாஸ்திரங்களாகிய கடலைக் கரை கண்டவராய் ஸ்ரீரங்க திவ்ய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருந்து, ஸகல சாஸ்திரப்பொருள்களையும் பிரவசனம் (போதனை) செய்வதன் மூலமாகப் பரமவை திக ஸித்தாந்தம் (வேதத்தை அத்தாட்சியாக இசையும வர்களில் மிகவுயர்ந்தவர்களது மதம்) என்று அழைக்கப் படும் ஸ்ரீவைஷ்ணவ மதத்தை மேன்மேலும் தழைக்கச் செய்து கொண்டு, ஸ்ரீரங்கநாதனை மங்களா சாஸனம் செய்வதில் முக்கிய நோக்கமுடையவராய் அப்பெரு மானுடைய குணங்களை அனுபவிப்பதிலும் அவருக்குத் தொண்டு செய்வதிலும் பற்றுடையவராக இருந்தார்.

அப்போது ஒருகால் அவ்வாளவந்தார் திருவாய்மொ ழியென்று புகழ்பெற்று நம்மாழ்வார் அருளிய தமிழ் வேதப் பாசுரத்தொகுதியில் மூன்றும் பத்தில் (ஒழிவில் காலமெல்லாம் என்று தொடங்கும்) மூன்றும் பதிகத்தை ஓதி அதன் பொருளைச் சிந்தித்து மனம் ஈடுபடப் பெற் றவராய் 'ப்ரபந்த ஜந கூடஸ்தரான (வீடு பெறுவதற்கா கக் கரும ஞான பக்திகளாகிய உபாயங்களில் இழியா மல் திருமாலையே உபாயமாகக் கருதித் தஞ்சமடையும் ஸ்ரீவைஷ்ணவ மக்களின் மூல புருஷரான) பராங்குசரா கிய நம்மாழ்வார் பாரதந்த்ர்யம் (எல்லா வகையாலும் திருமாலுக்கே வசப்பட்டிருத்தல்) என்னும் தமது உண்

மைத் தன்மைக்கு ஏற்றதான பூரணமான ப்ரபத்தியை (=திருமகளை முன்னிட்டுத் திருமாலிடம், வீடு பேற்றுக் குத் தக்க உபாயம் தமக்கு ஏதுமில்லாமையையும் தமக்கு அப்பிரானைத் தவிர வேறு கதியில்லாமையையும் தாம் அப்பெருமானுக்கே அடிமையென்பதையும் விண்ணப்பித்து இவற்றால் பூர்த்தியடைந்த ப்ரபத்தியை - அவனையே தஞ்ச மாகப் பற்றுதலை) திருவேங்கடமுடையானிடத்திலல்லவா அனுஷ்டித்தார். மிகவுயர்ந்த புருஷார்த்தமான (உயிர்கள் விரும்பும் பயனான)கைங்கரியத்தையும் இப்பெருமானுக்கே யன்றோ செய்யப் பாரித்தார். நாம் எல்லோரும் அடை யத்தக்க மிக உயர்ந்த இடமாகிய பரமபதத்தில் வசிக்கும் நித்ய ஸூரிகளும் இப்பெருமானிடத்திலல்லவா பூஜைக்கு வேண்டிய சிறந்த புஷ்பம் தீர்த்தம் தீபம் தூபம் முதலான வற்றை அன்புடன் ஏந்திக் கொண்டு வந்து ஸமர்ப்பித்து 'நாம் செய்ய வேண்டியதைச் செய்துவிட்டோ'மென்று திருப் தியடைகிறார்கள். இப்படிப்பட்ட இத்திவ்ய தேசத்தில் பெருமாள் திருமஞ்சனத்திற்கான திவ்ய தீர்த்தம் உயர்ந்த மலர்கள் முதலானவற்றைக் கொண்டு வந்து கொடுத் துக் கொண்டிருந்து திருவேங்கடமுடையானை மகிழ்விக்க விரும்புகிறேன். பாக்கியமற்ற எனக்கு இப்படிப்பட்ட கைங்கர்யம் எங்ஙனம் கிடைக்கப்போகிறது' என்று கூறிய வளவில், ஸத்துவகுணம் இதற்கு மேல் யாரிடமுமில்லை என்னும்படி நிறையப்பெற்றவரும் அந்த ஆளவந்தாருடைய சிஷ்யர்களில் ஒருவருமாகிய இத்திருமலை நம்பிகள் தமது ஆசாரியருடைய விருப்பத்தைத் தாமே நிறைவேற்றுவ தற்காக, அவர்தமக்குப் பிரதிநிதியாக (பதிலாக) அவர் விரும்பிய கைங்கர்யத்தைச் செய்ய ஊக்கங்கொண்டு அவரிடம் அனுமதியையும் பெற்றுத் திருவேங்கடமலைக்கு வந்து வசித்துக் கொண்டு பெருமாள் திருமஞ்சனத்திற்குத் தூயதும் சுவையுள்ளதும் ஆரோக்கியமளிப்பதுமாகிய பாபவிநாசனமென்னும் புண்ணியதீர்த்தத்தின் நன்னீரை பக்தியுடன், திருமங்கையாழ்வார் அருளிய தமிழ் மறைப் பாட்டுத் தொகுதியாகிய பெரிய திருமொழியை ஓதிக்

கொண்டே கொண்டு வந்து ஸமர்ப்பித்தும் புஷ்பாதிக ளையும் இயன்றவரையில் கொண்டு வந்து கொடுத்தும் திருவேங்கடவனை மகிழ்வித்துக் கொண்டிருந்தார்.

இவ்வாறு பரம பக்தி நிறைந்த திருமலை நம்பிகள் அன்புடன் அனுதினமும் செய்து வருகின்ற - பாபவிநாச தீர்த்தத்திலிருந்து திருமஞ்சனம் கொண்டு வருதலாகிய கைங்கரியம் தன்னால் பரம ப்ரீதியோடு ஏற்றுக்கொள்ளப் படுகிறதென்னும் இவ்விஷயத்தை மக்கள் அனைவரும் அறிந்து கொள்ளட்டும் என்று ஆலோசித்த பகவான் திரு வேங்கடநாதன் ஒருகால் வேடனுருவம் தரித்து வில்லும் கையுமாய், பாபவிநாசத்திலிருந்து சுசியும் ருசியுமான பெரு மாள் திருமஞ்சன தீர்த்தத்தை மிக்க ஆதரத்தோடு எழுந்தரு ளப்பண்ணிக் கொண்டு வருகின்ற திருமலைநம்பிகளை நடுவழியில் எதிர்ப்பட்டு 'வாரீர் தாத (அப்பா, தகப்ப னாரே) தாகத்தினால் தவிக்கிறேன், எனக்குத் தண்ணீர் தாரும்' என்று கேட்க, 'அடே வேடா, வேங்கடத்தானுக்குக் கொண்டு செல்லும் இத்திவ்விய தீர்த்தம் மனிதருக்கு உரியதன்று' என்று அவர் மறுத்துவிட்டுக் கலியன் அரு ளிய பெரிய திருமொழியை அனுஸந்தித்துக் கொண்டே பகவானை அனுபவிப்பதனாலுண்டான அதிக மகிழ்ச் சியுடன் தீர்த்தக்குடத்தை ஏந்திச் சென்று கொண்டிருக் கும்போதே அவ்வேங்கடவனாகிய வேடன் தானே அவர் பின்னே தொடர்ந்து சென்று வில்லில் தொடுத்த அம்பி னால் மிக்க ஸாமர்த்தியத்துடன் அக்குடத்தைப் பின்புறத் தில் துளைத்துத் துளையுண்டாக்கி அதிலிருந்து சிறிய தாரையாகப் புறப்பட்டு வெளிவந்த நீரைப் பூரணமாகப் பருகினான்.

அத்திருமலை நம்பிகளோவெனில், திருமங்கையாழ் வார்திருமொழியை அனுஸந்தித்துக் கொண்டு அதில் கூறப்படுகின்ற பகவானுடைய குண கணங்களை அனுப விப்பதில் மனம் மூழ்கப் பெற்றதனால் வேட வேஷம் பூண்ட பகவானுடைய செயலைச் சிறிதும் அறியாம

லேயே சிறிது தூரம் சென்று, அதன்பிறகு நீர் கசிவ தனால் மெல்ல மெல்ல இலேசாகி வருகின்ற குடத் திலிருந்து நீர் வெளியே போய்விட்டதென்று அறிந்து, இது என்ன என்று திருமுகத்தைப் பின்பக்கம் திருப்பி நீர்த்தாரையைப் பருகிக் கொண்டிருக்கும் அவ்வேடனைக் கண்டு, 'அடேடே வேடாபாக்கியமற்றவனே பெருமாளுக் காகக் கொண்டு செல்லும் தீர்த்தத்தில் ஏன் இங்ங னம் துரோகம் செய்தாய்' என்று அவனை நிந்தனை செய்ய 'ஓ அப்பா நீர் வருந்த வேண்டாம். இங்கு அருகிலேயே திவ்வியமான தீர்த்தத்தைக் காட்டுகிறேன். அதிலிருந்து பெருமாளுக்குத் தீர்த்தம் கொண்டு செல்லும்' என்று கூறி முன்னே செல்லும் வேடனால் வழிகாட்டப் பெற்று ஆகாச கங்கா தீர்த்தத்தை அடைவிக்கப் பெற்று, அப்போது அவ்விடத்தில் தண்ணீர் தென்படாமலிருக்கப் பிறகு அவ்வேடன் தன் வில்லில் அம்பாக ஒரு துரும் பையேற்றி அங்குள்ளதொரு மலையுச்சியைத் துளைத்து, பின்பு அதன்கண் தைத்துக்கொண்ட அம்பைப் பற்றியி ழுத்துப் பிறகு அதிலிருந்து பெருகி மிகவும் வேகமாகப் பாய்கின்ற நிர்மலமான தாரையையுடைய ஆகாசகங்கா நதியைக் காட்டி, 'ஓ அப்பா, இது ஆகாச கங்கையன்றோ, இது பகவானுக்கு மிகப் பிரியமானதும் ஆகும். இனி மேல் இதிலிருந்தே எனக்குத் தீர்த்தம் கொண்டு வாரும்' என்று சொல்லித் தான் பகவானென்பதை அறிவித்து மறைந்துவிட, இந்த ஆச்சரியத்தைக்கண்டு இதென்ன வியப்பு! பகவான் திருவேங்கடநாதனுக்குத் தன்னைத் தஞ் சமடைந்தவர் திறத்தில் உள்ள விளையாட்டுச் சுவை மிக மிக வியப்பை உண்டு பண்ணுகின்றது என்று நினைத்து, அதன்பின்பு அவ்வாகாச கங்கையாற்றிலிருந்து குடத்தில் தீர்த்ததை நிரப்பிப் பழையபடியே தீர்த்தக் குடத்தைக் கொண்டு வந்து கோவிலில் திருவேங்கடமுடையானுக்கு அருகில் வைத்தனர்.

பின்பு திருவேங்கட நாதனும் அர்ச்சகரை ஆவேசித்து அவர் மூலமாக, 'வாரீர் திருமலை நம்பிகளே நீர் கொண்டு

வந்த ருசியும் சுசியுமான திவ்ய தீர்த்தத்தினால் நடுவ ழியிலேயே எனக்குத் தாகம் தணிந்து விட்டது' என்று கூறி மகிழ்வித்து, அதன் மூலமாக, அவர் திருமஞ்ச னம் கொண்டு வரும் தொண்டு தனக்கு உயர்வறவுயர்ந்த அன்பினை உண்டுபண்ணுகிறதென்பதை உலகோர் அனை வருக்கும் அறிவித்தருளினான்.

அதன்பிறகு திருமலை நம்பிகளும் திருமஞ்சன தீர்த் தம் கொண்டுவருதலாகிய கைங்கரியத்தினால் தம்மிடம் மிகவும் அதிசயித்த கருணையால் குளிர்ந்த பகவானது கடைக்கண்ணோக்கம் விழுந்தபடியை எண்ணித் தம்மை மிகவும் பாக்கியசாலியாக நினைத்து, அதுமுதல் அக் கைங்கரியத்தில் மிகப் பற்றுடையவராய் ஆகாச கங் கையிலிருந்தே தினமும் திருமஞ்சனம் கொண்டு வந்து ஸமர்ப்பித்துப் பெருமாளை ஸந்தோஷிப்பித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

மிகவுமுயர்ந்த ஸத்துவ குணம் புலனடக்கம் மனவ மைதி முதலிய ஆத்ம குணங்கள் நிறையப்பெற்ற இத்திருமலைநம்பிகள், தம்மோடு ஒத்த அழகும் பண்பு முடைய தமது அபிமான புத்திரருக்குப் பிள்ளைத் திரு மலை நம்பிகளென்ற பெயர் உண்டான பிறகு, பெரிய திருமலை நம்பிகளென்றும், ஆளவந்தாரது ஆணையின்ப டித் திருவேங்கடமலைக்கு வந்து நித்தியவாசம் செய்து கொண்டு பெருமாளுக்குத்தொண்டு புரிவதிலேயே மண்டி யிருக்கும்போது வேடனாக வந்த பகவான் 'தாத' (அப்பா) என்று கூப்பிட்ட பிறகு திருமலைநாத தாசார்யரென்றும் பிரசித்தமான (இரு) பெயருடையவராக விளங்கினர்.

இங்ஙனம் பெருமாளுக்கு அபிஷேக தீர்த்தங்கொ ணர்ந்து தருங்கைங்கரியமொன்றிலேயே ஊன்றியவரும் அதுவே காரணமாகப் பெருமாளுடைய மிகவுயர்ந்த பிரீ திக்குக் கொள்கலமானவரும் பரம பாகவதர்களில் சாலச் சிறந்தவருமாகிய இத்திருமலைநம்பிகளுடைய திருவடிக ளில் பேரன்பு படைத்த மனமுடைய பெரியோர்களால்

எப்போதும் ஓதப்படுமவையாய், அவருடைய தொண்டு, அதனால் மகிழ்ந்த பகவானுடைய சிறந்த அருளால் உண்டான பயன் முதலானவைகளைக் குறிப்பிக்கின்ற ச்லோகங்ள் மூன்று உள்ளன. அவற்றின் கருத்து மேலே காண்க:

1. தாமரைக் கண்ணனான திருவேங்கடத்தான் அஞ்ஜ நாத்ரி (திருமலை)யில் யாவரொருவரை 'தாத' என்றழைத்து நீர் நிரம்பிய கலசத்திலிருந்து அன்புடன் நீரைப் பருகி னானோ அந்தத் திருமலை நம்பிகளுக்கு (எனது) வணக்கம் உரித்தாகுக. 2. வயதின் முதிர்ச்சியாலுண்டான தளர்ச்சி யையும் பாராமல் பாபவிநாசத்தில் நீர் நிரப்பிய குடத் தைத் தலையில் வைத்துக் கொண்டு வருகின்ற திருமலை நம்பிகள் என்னும் ஆசாரியரை 'தாத' என்று கூறித் தண் ணீரை யாசித்தான் வேட வேட(ஷ)மணிந்த திருமால். அவர் நீர் தாராமையால் திருவின் மணவாளனாகிய அவ் வேடன் அம்பெய்து குடத்தைத் துளைத்து அப்போது அந்நீரைப் பருகினான். 3. பின்பு தீர்த்தம் திருடு போன தனால் திருமலை நம்பிகள் திருவுள்ளம் கலங்க, அவர் வருத்தமுற்றதனால் கருணைகொண்ட வேடவுருவனான திருமால் அவரைக் கையைப் பற்றி அழைத்துச் சென்று அஞ்ஜநாத்ரியில் (திருமலையில்) அம்பெய்து ஆகாச கங்கா நதியை உண்டாக்கி, 'இத்தீர்த்தம் திருவேங்கடவனுக்கு பிரி யமானது. ஆகையால் இதன் தீர்த்தத்தையே தினமும் எனக்குக் கொணர்ந்து தாரும்' என்று சொல்லிக் கடைசி யில் மறைந்தான். (இதுவே அச்சுலோகங்களின் கருத்து)

## திருமலை நம்பிகளின் மந்த்ரம்

“பிதாமஹஸ்யாபி பிதாமஹாய ப்ராசேதஸாதேச பல ப்ரதாய, ஸ்ரீபாஷ்யகாரோத்தமதேசிகாய ஸ்ரீசைல பூர்ணாய நமோ நம: ஸ்தாத்,” (பிதாமஹர் எனப்படும் நான்மு கக் கடவுளுக்கும் பிதாமஹராயும்=நான்முகற்குத் தந்தை யான திருமாலுக்குத் தகப்பனாராயும், ஸ்ரீபாஷ்யகாரரா கிய இராமானுசமுனிவரென்ற மிகச் சிறந்த ஆசிரியருக்கு

வான்மீகியின் உபதேசமான ஸ்ரீராமாயணத்தின் ஸாரப் பொருளை உபதேசித்த ஆசாரியராயும் உள்ள திருமலை நம்பிகளுக்கு வணக்கங்கள் உரியனவாகுக.) இது அவரைப்பற்றிச் சிஷ்யர்கள் நாள்தோறும் ஓதும் மந்திரமாகும்.

## அவரது அவதார நக்ஷத்திரம்

"ஸ்ரீமல்லக்ஷ்மண யோகீந்த்ர ஸ்ரீராமாயண தேசிகம், வந்தே ஸ்ரீசைலபூர்ணார்யம் மேஷே ஸ்வாதீஸமுத்பவம்" (ஸ்ரீமத் ராமானுஜர் என்னும் முனிவர் பெருமானுக்கு ஸ்ரீராமாயணத்தைக் கற்பித்த ஆசிரியரும், சித்திரை மாதத்தில் ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் தோன்றியவருமாகிய திருமலை நம்பிகளை வணங்கித் துதிசெய்கிறேன்.) இது அவரவதார நக்ஷத்திரம் சித்திரை மாத ஸ்வாதி என்று அறிவிக்கும் ச்லோகம் என்பது நினைக்கத்தக்கது.

இந்தத் திருமலை நம்பிகளுக்கு, ராமானுஜர் என்று பெயருள்ள தமது குமாரர் பரமபதமடைந்த பின்பு தமக்குத் தக்க அழகும் குணமும் பெற்றவரும் அதுவே காரணமாகப் பிள்ளைத் திருமலை நம்பிகள் என்ற பெயரால் பிரசித்தி பெற்றுத் தோழப்பர் என்னும் மறுபெயர் கொண்டவரும் ஸகல வேதாந்தப் பொருள்களையும் ஆராய்ந்தறிந்தவருமான - அபிமானமாக இசையப் பெற்ற குமாரர் ஒருவர் இருந்தார். மிகச் சிறந்த தெய்வ பக்தியுடையவரும் தம்மோடொப்ப நற்பண்புகள் அனைத்தும் அமைந்தவருமான அக்குமாரரிடமுள்ள எல்லையில்லாத அன்பினால் திருமலைநம்பிகள் 'தாத' (அப்பா) என்றே அழைத்து வந்ததனால் இக்குமாரருக்கு 'அப்பர்' என்ற பெயரும், ஸகல வேதாந்தக் கருத்துக்களையும் அறிந்த இவரை, திருவேங்கடமுடையான் ஒரு சமயம் ராமானுச முனிவருக்குக் கனவில் தோன்றி வாதியரை வெல்லும் போது துணை புரியும் தோழராகக் கொள்ளுமாறு கூறியதனாலும், பிறகு உடையவரும் எல்லாவுலகோர்க்கும் உபகாரமான மாயா வாதி விஜயத்தில் (அத்வைதிகளை வெல்லுவதில்) அனுகூலராகப் பெருமாளால் குறிக்கப்

பெற்ற இத்திருமலைநம்பிகுமாரரை உலகோரனைவர்க்கும் தோழராகவே பிரசித்தப்படுத்தியதனாலும் 'தோழர்' என்ற பெயருமாக இரண்டும் ஒன்று சேர்ந்து தோழப்பார்யர் என்னும் திருநாமம் இப்பிள்ளைத் திருமலைநம்பிக்கு மிகப் பிரசித்தமாக உண்டாயிற்று.

இவரைப் பற்றியும் இவ்வாறு மூன்று ச்லோகங்களைப் பெரியோர்கள் அனுஸந்தித்தனர்.

1. ஸ்ரீபாஷ்யகாரரான ராமானுஜ முனிவருக்கு அத்வைத வாதிகளோடு (சங்கராசார்ய மதத்தவரோடு) வாதமென்னும் பந்தயம் தொடங்கியபோது, திருவேங்கடமுடையான் ராமானுஜருக்கு இரவில் கனவில், ப்ரஹ்மத்தோடு ஜீவனுக்கு ஒப்புமை ஒற்றுமை வேற்றுமை இவற்றைக் கூறும் வேதாந்த வாக்கியங்களுக்கு ஒன்றுக்கொன்று முரண்பாடு ஏற்படாமல் கூறவேண்டிய உட்கருத்துக்களை உபதேசித்துவிட்டு, எவரைத் தோழராகக் கொள்ளுமாறு கூறினானோ, எவரை ராமாநுஜ முனிவர் உலகோர் அனைவர்க்கும் தோழராக வெளியிட்டாரோ, திருமலை நம்பிகளின் (அபிமான) குமாரரான அந்தப் பிள்ளைத் திருமலை நம்பிகளைத் தியானம் செய்கிறேன். 2. பாரத்வாஜ கோத்திர (குல)மென்னும் கடலுக்குச் சந்திரன் போன்றவரும் ஜ்ஞான பக்திகளென்ற அமுதமுண்டாகும் கடல் போன்றவரும் திருமலை நம்பிகளின் (அபிமான) குமாரருமான தோழப்பாசிரியரைச் சிந்திக்கிறேன். 3. வேடவுருவம் பூண்ட திருவேங்கட நாயகன் 'தாத' (அப்பா) என்று அழைத்து வார்த்தையருளிய பின்பு எந்தத் திருமலை நம்பிகளின் மகிமை உலகில் பிரசித்தியை அடைந்ததோ, அந்தத், தாதருக்கும் தாதரும் (=அந்நம்பிகளால் 'தாத' (அப்பா) என்று கூப்பிடப்பட்டவரும்) பாரத்வாஜ குலத்தில் உதித்தவரும் தம்மைப் புகலாக நினைத்தவர்களுக்குப் புதையல் போன்றவரும் அறிவுக்குக் களஞ்சியமானவருமாகிய சிறிய திருமலை நம்பிகளைத் தஞ்சமடைகிறேன். இது அம்மூன்று ச்லோகங்களின் கருத்தாகும். (சிறிய

திருமலைநம்பிகள் பிள்ளைத் திருமலைநம்பிகள் தோழப்பா சார்யர் என்ற இம்மூன்று பெயர்களும் ஒருவரையே குறிப் பன.)

## திருமலைநம்பிகள் திருநாடு சேர்தல் :

பெரிய திருமலை நம்பிகள் முற்கூறியபடியே மிகப் பிரசித்தமான குண கணங்களையுடையவரும் தோழப்ப ரென்ற மறுபெயரைப் பெற்றவருமான தமது (அபிமான) குமாரரான பிள்ளைத் திருமலைநம்பிகளோடு கூடி, தம்மா சார்யராகிய ஆளவந்தார் ஆணையிட்ட பெருமாள்திரு மஞ்சன தீர்த்தங்கொண்டு வரும் கைங்கரியத்தை ஆதரத் துடன் செய்து கொண்டிருந்து, சிலநாள் சென்ற பின்பு அக்குமாரரர் முன்பாகத் தாமும் பரம பதம் சேர்ந்தார்.

அப்பெரிய திருமலைநம்பிகள் பரமபதம் செல்ல விருப் பங்கொண்டு தாம் பூஜிக்கும் வெண்ணெய்க்காடும் பிள்ளை யான (வெண்ணையைக் கையில் கொண்டு, அது கிடைத்த மகிழ்ச்சியினால் கூத்தாடும் பிள்ளையான) ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய கோவிலாழ்வார் கதவைத் திறந்து திருத்தி ரையையும் நீக்கி அப்பெருமானெதிரில் நின்று கொண்டு கூப்பிய கையராய் "சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான் இனியுனது வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே" (ஒளியுடன் கூடிய அழகிய நிறத்தை நான் இழந்தேன். (அதாவது இவ்வுடலை விடும் நிலையிலுள் ளேன் என்றபடி) இனி உன் வாயலகுக்குள்ளே இனிய உணவை ஊட்ட வல்லவர்களைத் தேடிக்கொள்) என்று நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழிப் (1-4-8) பாட்டை அனுஸந்தானம் செய்து கொண்டு, "பெருமானே இனி மேல் உனது கோவைப்பழம் போன்ற உதடுகளைக்கொண்ட திவ்யமான திருவாய்மலரில் உயர்ந்த ப்ரஸாதங்கள் ஸமர்ப் பிக்குமவர்களைத் தேடிக்கொள் என்று சொல்லுதற்கு உரிய நிலையை அடைந்த அடியேன் இதோ (இவ்வுடல் நீங்கிச்) செல்லுகின்றேன்" என்று விண்ணப்பம் செய்து விட்டு, திருவேங்கடமுடையானைத் தியானித்து "ஸ்வாமீ,

ஆசார்யரான ஆளவந்தாரின் நியமனத்தையொட்டித் தேவரீர் திருமஞ்சனத்திற்காகத் தீர்த்தங்கொண்டு வரும் கைங்கரியத்தை இன்று வரை இயன்ற வரையில் செய்தேன். இனிமேல் அக்கைங்கரியம் செய்பவரைத் தேடிக்கொள்ளும். தேவரீருடைய நித்யவிபூதியை (பரம பதத்தை) அடியேன் அடையுமாறு அங்கீகரிக்க வேணும்" என்று வேண்டிக் கொண்டு, கோவிலில் பெருமானுக்குத் தொண்டு புரியும் அனைவரையும் மற்ற பகவத் பக்தரையும் அழைத்துத் தாம் ஏதாவது தவறு செய்திருந்தால் அவற்றைப் பொறுக்கும் படிப் பிரார்த்தித்து, த்வய மந்திரத்தை யனுஸந்திப்பதிலேயே ஊன்றியவராய், பரமபதமென்னும் மேலுலகிற்குச் செல்லவுதவும் அர்ச்சிராதி லோகங்களென்னும் வழியாகிய உயர்ந்த ஏணியிலுள்ள படிவரிசைகளில் ஏறுவதற்கு முக்கிய காரணமான ஆளந்தாருடைய திருவடித் தாமரையிணையை நினைத்துக்கொண்டே நித்ய விபூதியில் புகுந்தருளினார்.

## தண்ணீரமுது எதிர்கொள்ளும் உத்ஸவம் :

இவ்வாறு திருமலை நம்பிகளின் அவதாரம் முடிவடைந்தபிறகு அவருடைய திருவடியிணைத் தாமரைகளில் மிகமிக அன்பு கொண்ட பகவத் ராமானுஜ முனிவர் "திருமலை நம்பிகள் செய்தருளிய திருமஞ்சன தீர்த்த கைங்கரியம் பெருமாளுக்குப் பெருமகிழ்ச்சியை விளைத்தனாலும் அதுவே காரணமாகப் பெருமாள் அவரிடம் மிகயுயர்ந்த அருளைச் செய்ததனாலும் அதனை நினைவூட்டுவதான உத்ஸவம் ஒன்று பெருமாளுக்குச் செய்விக்க வேண்டும். அவ்வுத்ஸவத்தையும், அத்யயனோத்ஸவம் முடிந்த மறுநாளில் திருமலை நம்பிகளிடம் பெருமாள் விசேஷானுக்ரஹம் செய்தபடியினால், அந்த நாளிலேயே செய்விக்க வேண்டும்" என்று கோவிலில் கைங்கர்யம் செய்வோரை நியமித்தார். பின்பு ஸ்தலவாஸிகளான பெரியோரும் பகவத் கைங்கரியம் செய்பவருமாகிய அனைவரும், திருவேங்கடமுடையானுடைய அத்யயனோத்ஸவம்

முடிந்த மறுநாளில் முன்பு வேடவுருக்கொண்ட பகவான் திருமஞ்சன தீர்த்தங்கொண்டுவரும் திருமலை நம்பிகளை நடுவழியில் எதிர்கொண்டு சென்று அவர்குடத்திலிருந்த தீர்த்தத்தைப் பானம் செய்த கதையை எல்லோரும் நினைத்துக் கொண்டு நல்வழி செல்லுக என்றெண்ணியவர்களாய், இராமானுச முனிவரை முன்னிட்டுக் கொண்டு திருவேங்கடமுடையானை மங்களகிரியில் ஏறியருளச் செய்து பரிவாரத்துடன் அவரை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு ஆகாச கங்கைக்குச் செல்லும் வழியில் சிறிது தூரம் சென்று, ஆகாச கங்கையிலிருந்து தீர்த்தம் நிறைந்த குடங்களை எடுத்து வருகின்ற சில ஸ்ரீவைஷ்ணவர்களை எதிர்கொண்டு, திருமங்கையாழ்வார் அருளிய பெரிய திருமொழியைத் தொடங்கி ஸேவித்துக்கொண்டே ஊருக்குத் திரும்பிவந்து, நான்கு வீதிகளில் எல்லாவிடத்திலும் சென்று, அங்கங்கு ஸ்ரீவைஷ்ணவர்களால் தம் தம் திருமாளிகை முன்றில்களில் திருவடிகளில் தீர்த்தம் சேர்த்துச் சந்தனம் புஷ்பம் தூபம் தீபம் தாம்பூலம் தக்ஷிணை இவற்றைத் தந்து ஸத்காரம் செய்யப்பெற்று, திரும்பிக் கோவிலுக்குள் புகுந்து ஸ்ரீபுருஷஸூக்தத்தை ஓதா நின்று, அப்போது கொண்டு வந்த ஆகாச கங்கா தீர்த்தக் குடங்களில் சிலவற்றைக் கொண்டு, இடைவிடாமல் சாத்திக்கொண்டிருக்கும் மலர்களால் கும்மென்று நறுமணம் வீசுகின்ற திருவேங்கடமுடையான் திவ்யதிருவடிகளையும் ஸ்ரீசடகோபனென்னும் திவ்ய பாதுகைகளையும் திருமஞ்சனம் செய்வித்துச் சந்தன புஷ்ப தூப தீபாதிகளால் உபசாரம்பண்ணுவித்து, மற்றக் குடங்களில் உள்ள பரிமளம் அனைத்தும் " சேர்த்ததனால் கமழா நின்ற தீர்த்தத்தை ஸ்ரீநிவாஸ பகவானுக்குப் பருகும் நீராக நிவேதனம் செய்வித்தார்கள். அது முதலாக, திருவத்யயனோத்ஸவம் முடிவுபெற்ற மறுநாளில் 'தண்ணீரமுதை எதிர்கொண்டு செல்லும் திருநாள்' என்னும் பெயர்பெற்ற உத்ஸவம் ஒவ்வொரு வருஷமும் அநுஷ்டிக்கப்பட்டு வருகிறது. (இப்போது இது 'தண்ணீரமுது' என்று வழங்கப்படுகிறது.)

## திருமலையனந்தாழ்வான் வரலாறு: அவதாரம் :

பகவத் ராமானுஜராக அவதரித்த ஆதிசேஷ பகவான் ஸகல சாஸ்திரப் பொருள்களையும் உபதேசிப்பதிலேயே ஊக்கங்கொண்டவராய், அவற்றை உபதேச மூலமாகவே யல்லாமல் அனுஷ்டானமூலமாகவும் தெரிவித்து உலகோரை உய்விக்க விருப்பம் கொண்டு, இவ்விரண்டு செயல்களையும் ஒரேயுருவமெடுத்துச் செய்யமுடியாதென்று கருதி, ஸ்ரீபதரிகாச்ரமத்தில் நரன் நாராயணனென்ற இரண்டு உருவந்தரித்த பகவான் போன்று தானும் இரண்டு உருவங்கொள்ள ஆசைப்பட்டு, மேல் நாட்டில் காவேரிக்கரையில் சிறு புத்தூரில் மிகச் சிறந்த பாரத்வாஜ கோத்திரத்தில் உதித்த ஸ்ரீவைஷ்ணவ குலத் தலைவரான கேசவாசார்யரிடமிருந்து, கலி வருஷங்கள் 4154ம் சாலிவாஹன சக வருஷங்கள் 975ம் கழிய, அடுத்த விஜய வருஷத்தில் சூரியன் மேஷராசியில் புகுந்தபோது (சித்திரை மாதத்தில்) சித்திரை நக்ஷத்திரத்தில் தம்முடைய அம்சமாகவே ஒருவரை அவதரிக்கச் செய்ய, அவரே அனந்தாழ்வானாக அவதரித்தார்.

அதற்குப் பிறகு கேசவாசார்யரால், ஆதிசேஷனைத் தாம் கனவிற்கண்டதனால் தமது குமாரரின் அவதாரவுண்மையை ஊகித் தறிந்து அதற்கு ஏற்றபடி அனந்தாழ்வான் என்று பெயரிடப்பெற்று, முறையே சௌளம் உபநயனம் முதலான எல்லாச் சடங்குகளும் செய்யப்பெற்று, அவர் தம்மிடத்திலேயே கலைகள் அனைத்தும் உபதேசம் பெற்று சுக்லபக்ஷ சந்திரன் போல் தினந்தோறும் அறிவு முதலிய ஒளியோடு வளர்ந்துவரும் அனந்தாழ்வான் ஸ்ரீரங்க நகரத்தில் ராமானுசராக எழுந்தருளியிருக்கும் தமது அம்சியான ஆதிசேஷனை, லக்ஷ்மணன் ராமபிரானையும் சத்ருக்னன் பரதனையும் தலைவராக அடைந்தது போன்று ஆசார்யராக அடைய விருப்பங்கொண்டு யஜ்ஞேசர் (எச்சான்) முதலியவர்களோடு ஸ்ரீரங்கநகரம் சென்று சேர்ந்தார்.

## அனந்தாழ்வானை ராமானுஜர் ஏற்றுக்கொண்டது :

இவர்கள் வந்து சேர்ந்த சிலநாட்களுக்கு முன்பே பகவத் ராமானுஜ முனிவர் யஜ்ஞமூர்த்தி என்று பெயர்பெற்றுத் தம்மோடு வாதம் செய்ய வந்த மகா பண்டிதரொருவரை வாதத்தில் வென்று ஸ்ரீவைஷ்ணவராக்கிப் பேரறிவாளராகவும் பரமபாகவதோத்தரராகவும் மாறிய அவருக்குத் தம்முடைய எம்பெருமானார் என்னும் பெயரை உள்ளடக்கிய அருளாளப்பெருமாளெம்பெருமானார் என்ற திருநாமத்தைச் சாத்தி, அவருக்குத் தம்மோடு ஒத்த கௌரவத்தை உண்டாக்க வேண்டுமென்ற விருப்பத்தினால் அவரைத் தனியே ஒரு ஸ்தானத்திலே ஆசார்யராக வீற்றிருக்கச் செய்திருந்தார். இப்பொழுது அனந்தாழ்வான் முதலிய இவர்கள் தம்மை ஆச்ரயிக்க வந்ததும் இராமானுச முனிவர் இவர்களை அந்த அருளாளப் பெருமாளெம்பெருமானாரிடம் ஒப்படைத்து பகவதாச்ரயணம் (பஞ்சஸம்ஸ்காரங்கள்) அவர் மூலமாகவே செய்வித்தருளினார்.

அவ்வருளாளப்பெருமாளெம்பெருமானாரோவெனில், தம்மை ஆச்ரயித்துத் தமக்கே தொண்டு செய்து கொண்டு சிஷ்யர்களாக இருக்கும்படி அனந்தாழ்வான் முதலியோரையும், அவர்களுக்கு ஆசார்யராக இருக்கும்படித் தம்மையும் ஆக்கிய ராமானுஜ முனிவரைப் பார்த்து, 'வாரீர் பகவத் ராமானுஜ முனிவரே, அடியேன் இந்த ஆசார்ய பதவியாகிய சுமையைத் தாங்கவல்லவன் அல்லேன். இவ்வனந்தாழ்வான் முதலியோரை தேவரீர் சிஷ்யர்களாகவே கொள்ள வேண்டுகிறேன்' என்றும், இவர்களைக் கண்டு, 'வாரீர் அனந்தாழ்வான் முதலான பெரியோர்களே, பகவத் ராமானுஜ முனிவர் குருவியின் கழுத்தில் பனங்காயைக் கட்டினாற்போல் அடியேனுடைய கழுத்தில் இவ்வாசார்ய பதவியைக் கட்டினார். இதைச் சுமக்க அடியேனுக்கு ஆற்றல் இல்லை. ஆகையால் தேவரீர்கள் இவ்விராமானுஜ முனிவரின் திருவடியிணையையே தஞ்சமாகக் கொண்டிருங்கள்' என்றும் விண்ணப்பித்து, இவர்களை

எம்பெருமானுடைய திருவடித்தாமரையிலேயே ஸமர்ப்பித்துவிட்டார்.

அதன்பின்பு நாராயணன் நரனோடு சேர்ந்தது போல் ராமாநுஜ முனிவர் தமக்குச் சிஷ்யராக ஆன அனந்தாழ்வானோடு சேர்ந்து முறைப்படியே சாஸ்திரார்த்தோபதேசத்தையும் அநுஷ்டானத்தையும் தம் விருப்பத்தின்படியே நிறைவேற்றிக்கொண்டு வந்தார். உடையவருடைய உபதேசத்தைக் கேட்டு அதற்குச் சேரும்படி சாஸ்திரார்த்தங்களை முறைப்படியே ஊற்றத்துடன் ஆசரித்து வரும் அனந்தாழ்வாரிடமும் பலர் சிஷ்யராக ஆச்ரயித்தனர்.

## ஸ்ரீராமாநுஜரின் திருவாய்மொழி காலக்ஷேபம் :

பின்பு ஒருகால் நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியின் ப்ரவசனத்தில் (பொருளை விளக்கிப் பாடம் சொல்லுவதில்) திருவுள்ளங் கொண்ட ஸ்ரீராமாநுஜ முனிவர் ‘எந்தை தந்தை’ என்று தொடங்கும் (3-3-2) பாட்டுக்குப் பொருள் அருளும் ஸமயத்தில் தமது கோஷ்டியில் விளங்கும் அனைவரையும் அழைத்து, ‘வாரீர் ஆரியர்காள், பரமபதத்தில் வாழும் நித்ய ஸூரிகளும் தமக்கெல்லோர்க்கும் தலைவரான ஸ்ரீஸேனைமுதலியாருடன் கூட இங்குப் பெருமாள் திருவாராதனத்திற்காகத் திவ்யமான புஷ்பங்களைக் கைகளில் ஏந்தி வந்து இத்திருமலையிலுள்ள பகவானுடைய எல்லையில்லாத ஸௌசீல்யம் (=மிகப் பெரியவர் மிகத் தாழ்ந்தவர்களோடு வேறுபாடு பாராமல் பழகுதல்) முதலிய குணங்களை அனுபவித்து அதனால் உண்டான ஆனந்தத்தினால் தம் வசமிழந்து சோர்ந்த கைகளால் இறைக்கப்படும் திவ்ய புஷ்பங்கள்கூட வாடாமல் நறுமணத்தோடு விளங்குதற்கு இடமான திருவேங்கடமலையில், பரம பதத்திலும் அடைய முடியாத குணங்களின் விளக்கத்தைப் பெற்று நீலமேகம் போல் கறுத்த திருமேனியழகையுடைய ஸ்வாமியானவன் என் தகப்பனார் அவர்தகப்பனாரென்று இப்படியே பலர் கூடிய நம்முடைய தலைவர் வரிசையில் முதல்வனன்றோ என்று பணிக்

கின்ற நம்மாழ்வார் - பரமபத வாஸிகளும் இங்கு வந்து தொண்டு செய்வதனால் இத்திருமலை பகவானுக்கு மிக்க திருமுக மலர்ச்சியை உண்டாக்குந் தொண்டுகளைச் செய் வதற்கு ஏற்ற இடமென்றும், திவ்ய புஷ்பங்களைக் கையில் ஏந்திக் கொண்டு வந்தார்களென்றதனால் புஷ்ப கைங்கர் யம் இத்திருவேங்கடநாதனுக்கு மிகப்பிரியமானதென்றும், முறைகெடத் தூவப்படும் மலர்களும் செவ்வியோடு இருப் பதற்குக் காரணமானது இம்மலையென்றதனால் இம்மலை சிறந்த மலர்கள் பூத்துச் செழித்திருப்பதற்குக் காரண மென்றும், எல்லையில்லாத ஸௌசீல்யப் பிரிசித்தியைப் பெற்றுத் திவ்யமான அழகுடன்கூடி உயர்ந்தவர்களெல்லா ரினும் மேம்பட்டு நமக்கு வகுத்தவனுமான தலைவன் இத்திருவேங்கடநாதனென்றதனால் இப்பெருமான் அவசிய மாக ஆராதிக்கப்பட வேண்டியவனுமாகின்றானென்றும் அருளிச்செய்தது கொண்டு இத்திருவேங்கடமுடையான் புஷ்பகைங்கரியம் செய்தே பூஜிக்கத் தக்கவனென்றன்றோ தேறுகிறது. ஆகையால் புஷ்ப மண்டபமென்று பிரசித்தி பெற்ற இத்திருவேங்கடமலையில் திருவேங்கடமுடையானு டைய திருமுக மலர்த்திக்காக நந்தவனம் ஒன்றினை நிரு மித்து நறுமணம்மிக்க மலர்களாலும் திருத்துழாயினாலும் மாலைகளைத் தொடுத்து ஸமர்ப்பித்துக் கைங்கரியம் புரிய விரும்புமவர் யாரேனும் இக்கோஷ்டியில் உளரோ?என்று எல்லாப் பெரியவர்களையும் வினவினார்.

இவ்வாறு இராமானுச முனிவரால் வினவப் பெற்ற பெரியோர்கோஷ்டியில் யாரும் திருமலைக் குளிருக்கு அஞ் சிப் பதிலளிக்காமலிருக்க, அனந்தாழ்வான்-பெருமானுக்கு அடியவனானவன் மிகச் சிறிய இக்குளிருக்கு அஞ்சி நடுங் கலாமா? மேலுலகம் (பரமபதம்) கிடைக்காமற் போகுமே என்ற அச்சத்தாலும், எல்லையில்லாத நற்குண கணங்கள் நிறைந்த ஆசார்யருடைய ஆணையை மீறுவதனாலுண் டாகும் அச்சத்தாலும் சிறிதேனும் நடுங்கவேண்டாமா? இதுதானா சிஷ்யனுக்கு உரிய லக்ஷணம்? இது மிகவும் நன்றாயிருக்கிறது. ஆசாரியர் நியமித்த காரியமன்றோ

உய்வு பெற விரும்பும் சிஷ்யனுக்கு மேன்மையைத்தரு வது? ஆசாரியரின் ஆணையை மீறுமவனுக்கு என்ன சிஷ்யத்வம் வேண்டியிருக்கிறது? ஆதலால் எவ்வளவு கடினமாயினும் ஆசிரியர் கட்டளையிட்ட இத்திருவேங்கட நாதனுடைய கைங்கரியத்தைச் செய்ய இசைவதுதான் சிஷ்யனுக்குத் தக்கதும் உயர்ந்த வீடுபேற்றினைத் தருவ துமாகும் - என்று தம் மனத்தில் நினைத்து உடனே எழுந்து, கைகூப்பிக் கொண்டு, ஸ்வாமீ எம்பெருமானாரே, அடியேன் திருவேங்கடமுடையானுக்குப் புஷ்பகைங்கரி யம் செய்ய ஸித்தனாயிருக்கிறேன், அடியேனை நியமித் தருளவேணும்' என்று தம்முடைய அவதாரத்திற்குப் பய னாகிய கைங்கரியத்தில் (சாஸ்த்ரார்த்தானுஷ்டானத்தில்) ஊற்றத்தை விண்ணப்பித்து வேண்டிக்கொண்டார்.

## அனந்தாழ்வானைத் திருமலைக்கு அனுப்புதல்

இங்ஙனம் வேண்டும் அனந்தாழ்வானைக் கண்ட ஸ்ரீராமானுஜ முனிவர் மிகவும் மகிழ்ச்சியடைந்து, 'வாரீர் அனந்தாழ்வானே, நீரல்லவோ இக்கோஷ்டியில் ஆண் பிள்ளை? ஆத்ம குணங்கள் நிறையப் பெற்று, ஆசார்யரின் ஆணை மீறுதலைப் பொருத உமக்கேயன்றோ ஆசார்ய புருஷன் என்னும் பதம் தகுவது?' என்று அவரைக் கொண் டாடிக் கோஷ்டியிலுள்ள அனைவருடன் உடனே எழுந்து பரபரப்புடன் அவரை அணைத்துக் கொண்டு, ஆண் பிள் ளையென்ற பிரு தளித்துக் கௌரவிக்கப் பெற்ற இவ்வ னந்தாழ்வானைத் திருவேங்கடமலைக்கு அனுப்பினார்.

## அனந்தாழ்வான் செய்த தொண்டுகள் :

பின்பு அனந்தாண்பிள்ளை யாசாரியர் என்று நாற் றிசையும் பரவிய பெயருடைய அனந்தாழ்வான் தம் மனைவியோடு திருமலைக்குச் சென்று திருவேங்கடமு டையானைத் தினந்தோறும் சேவித்துக்கொண்டு, அங்கு விசாலமானதொரு நந்தவனமும் அதற்கு உதவும் ஓர் ஏரியும் நந்தவனத்தின் நடுவில் ஓர் நடைவாவியும் உண்

டாக்கி இவையெல்லாவற்றுக்கும் ஸ்ரீராமாநுஜனென்று திருநாமம் சாத்தி, அவர் நியமித்தபடியே புஷ்பகைங்கர்யத்தை ஊற்றத்துடன் செய்து கொண்டிருந்தார். மேலும் நந்தவனத்திலுள்ள பழமரம் பூமரம் புதர் கொடி முதலியவற்றின் பாத்திகளிலும் நடை வாவியிலும், அவ்வப்போது தெளிப்பது பாய்ச்சுவது தேக்குவது நிறைத்துக் கொள்வது ஆகியவற்றுக்காக நீர் கொண்டு வருவதற்கு உதவுகின்ற மதகு ஒன்றினை ஏரியின் நடுக்கரையில் அவர் ஏற்படுத்தினார்.

இவ்வாறே பெருமாளுடைய கோவிலில் கோபுரத்தோடு கூடிய மதிளையும், அதற்குள் பூங்கிணற்றின் (பூலபாவியின்) அருகில் எம்பெருமானாருத்தரவின்படி அவருடைய பரமாசார்யரான ஆளவந்தாருடைய 'யமுனைத் துறைவர்' என்ற பெயர் சூட்டப் பெற்றதும் அவருடைய அர்ச்சாவிக்ரஹத்தோடு கூடியதுமான பூமாலை தொடுக்கும் மண்டபம் ஒன்றையும் அனந்தாழ்வான் கட்டுவித்தார்.

ஸ்ரீயாமுன முனிவர் (ஆளவந்தார்) முன்பொருகால் சில நாட்கள் இங்கு இருந்து அவ்விடத்தில் ஒரு குடில் அமைத்துக் கொண்டு அதில் பூமாலைகளை நிறையத் தொடுத்து ஸ்ரீநிவாஸ பகவானுக்குச் சாத்திக்கொண்டிருந்தாரென்று பெரியோர் கூறிய கதையைக் கேட்ட ஸ்ரீபாஷ்யகாரர் (ராமானுஜர்) ஆளவந்தாருடைய பெயரால் ஒரு பூமாலை கட்டுதற்குத் தக்க மண்டபம் கட்டி அதற்குள் ஆளவந்தாரை அர்ச்சை வடிவமாக நிருமித்துப் பிரதிஷ்டை செய்வித்துத் திருவாராதனமும் நடத்திவைக்க வேணுமென்று நியமனம் செய்ததனால், அனந்தாழ்வான் அம்மண்டபத்திற்கு யமுனைத் துறைவரென்ற திருநாமத்தோடு தமது ஆசார்யரான எம்பெருமானாருடைய ராமாநுஜன் என்ற திருப்பெயரையும் சாத்தி அவர் கட்டளைப்படியே அனைத்தும் நிறைவேற்றினார். தாமும் அம்மண்டபத்திலேயே ராமாநுஜ நந்தவனத்திலிருந்து புஷ்பங்களைக் கொணர்ந்து வைத்து மாலைகளையும் அங்கேயே தொடுத்

துப் பின்பு மாலைகள் நிறைந்த பூக்குடலையைத் தலை யில் வைத்து, நறுமணம் தமது மூக்குக்கு இலக்கானால் அபசாரம் நேருமென்று அது நேராமலிருக்கத் தம் மூக்கை யும் வாயையும் துணியால் மூடிக்கட்டிக்கொண்டு மிக்க பக்தியுடன் குடை சாமரம் முதலியவற்றுடனும் மங்கள வாத்தியங்களுடனும் அம்மண்டபத்திலுந்து புறப்பட்டுக் கோவிலை வலம் வந்து அதற்குள் எடுத்துச் சென்று பெருமாள் திருவாராதன ஸமயத்தில் தினமும் சாத்துவித் துத் திருவேங்கடமுடையானை ஸேவித்துக் கொண்டிருந் தார்.

## அனந்தாழ்வாவான் அறியாமல் செய்த அபசாரம்

அனந்தாழ்வான் தமது பூர்ண கர்ப்பிணியான மனை வியும் மகனும் தாமுமாய் மிக்க ஆதரத்தோடு ஸ்ரீராமா னுஜனென்னும் ஏரியை வெட்டும் போது அம்மனைவி மண்பாரத்தைச் சுமவா நிற்க, பரம காருணிகனான பக வான் பூர்ண கர்ப்பிணியாய் மண் சுமக்கும் அவளைக் கண்டு பொறுதவனாய் ஓர் பிரமசாரியுருவந்தாங்கி அணுகி வந்து தானே அம்மண்பாரத்தைச் சுமக்கத் தொடங்க, தமது கைங்கரியத்தில் பிறர் தலையிடுதலைத் தாங்காத அனந்தாழ்வான் அதைத் தடுத்தும் அவரது மனைவியின் திறத்தில் அதிகமான கருணை கொண்ட பகவான் நடுவ ழியில் அடிக்கடி வந்து அவள் கையிலிருந்து வற்புறுத்தி வாங்கி மண்கூடையைச் சுமந்து கொண்டிருந்தான்.

இச்செய்தியை அறிந்த அனந்தாழ்வான் பிரமசாரியுரு வங்கொண்ட பகவானைப் பின்தொடர்ந்து ஓடிப்பெரிய கடப்பாரையை அவன் மோவாயில் எறிந்தார். கனமான கடப்பாரையினால் அடிபட்ட பெருமான் மோவாயிலிருந்து ரத்ததாரை பெருக ஓடிச்சென்று தனது ஆனந்த நிலய விமானத்தில் புகுந்தான்.

பின்பு, அனந்தாழ்வான் கோவிலுக்குள்ளே சென்று பகவான் மோவாயில் குருதி பெருகுவதைக்கண்டு தாம்

மிகவும் அபசாரப் பட்டதாக நினைத்து அதற்காக பகவா னிடம் பொறுக்குமாறு வேண்டிச் சேவித்து, மோவாய்ப் புண்ணில் ரத்தப் பெருக்கைத் தணிப்பதற்காகப் பூவிலுள்ள மகரந்தப் பொடியை வைத்து அழுத்தினார்.

பிறகு ஸ்ரீநிவாஸ பகவான் கைங்கரியத்தில் அனந் தாழ்வானுக்கு உள்ள அதிகமான ஊற்றத்தை அறிந்து மகிழ்ந்து அவரை நல்வார்த்தைகளால் தேற்றி, அப்புண் பட்ட அடையாளத்தைத் தன் திருமார்பிலுள்ள திருமறு வைப் போல் உயர்ந்த லக்ஷணமாக எண்ணி, அனந்தாழ் வானுடைய மகிமையை அனைவர்க்கும் வெளிப்படுத்து வதற்காக மோவாயில் புண்பட்ட இடத்தில் நறுமணமுள்ள பச்சைக் கருப்பூரப்பொடியை எப்போதும் தரித்தும், அவரு டைய கடப்பாரையை அனைவரும் காணத்தக்க இடத்தில் (கோபுரவாயிலில்) நிறுத்தியும் அவருக்குத் தனது பீதாம் பரம் ஆபரணம் மலர் மாலை முதலியவற்றை அளித்து கௌரவித்தருளினான்.

## அனந்தாழ்வான் வேங்கடவனுக்கு மாமனாராகியது

ஒருசமயம், அனந்தாழ்வான் அமைத்த தோட்டத்தில், வெகு நாட்களாகத் தம் விருப்பப்படி உலாவித் திரியும் அரச தம்பதி வேஷமணிந்த ஸ்ரீபத்மாதியையும் ஸ்ரீநிவாஸ பகவானையும் அனந்தாழ்வான் ஒரு இரவில் புதரில் மறைந்திருந்து பிடித்து ஓர் கொடி கொண்டு மரத்தில் கட்டுவதற்காக இழுக்க, ஸ்ரீநிவாஸன் அவரது கையை விடுவித்துக் கொண்டு ஓட்டம் பிடிக்க, ஓட முடியாமல் 'அப்பா அப்பா உமக்கு நான் பெண்ணாக இருப்பேன், தவறு ஏதும் செய்யாத பெண் பிள்ளையாகிய என்னை விட்டுவிடும்' என்று பிறர் இரங்கும் வகையில் பேசு கின்ற பத்மாவதியை ஓர் செண்பக மரத்தில் கொடியால் கட்டி அச்சமுறுத்தி அவள் கதையை வினவிக்கொண்டு பக்கத்திலேயே (இரவு முழுவதும் காவலாக) இருந்தார். இது இங்ஙனமாக, காலையில் கோவிலுக்கு வந்த அர்ச் சக பரிசாரகர்கள் பெருமாள் திருமார்பில் கண்டிகையில்

இருக்கும் பத்மாவதியைக் காணுமல், உடனே பகவான் ஒருவனை ஆவேசித்துச் செய்தியை அறிவிக்க அவனது ஆணையின்படி பத்மாவதியையும் அனந்தாழ்வானையும் அழைத்துச் செல்வதற்காகத் தோட்டத்திற்கு வர, அவர் கள் மூலமாகச் செய்தியை அறிந்த அனந்தாழ்வான் 'இது மஹாபசாரம்' (பெருங்குற்றம்) என்று நினைத்து, பத்மாவதி தேவியைச் செண்பக மரத்தில் கட்டிய கட்டிலிருந்து விடு வித்து, தாம் செய்த தவற்றினைப் பொறுக்குமாறு அவனை வேண்டி, தமது காலைக்கடன்களை நிறைவேற்றியவராய், தான் முன்பு கூறிய வார்த்தையை மெய்ப்பிக்க விரும்பி மணம் செய்து கொள்ளத் தக்க கன்னிகையின் நிலையை அடைந்து தமக்குப் பெண்ணுக ஆகிய பத்மாவதியைப் பூக்குடலையுடன் கக்ஷத்தில் எடுத்துச் சென்று ஸ்ரீநிவா ஸபகவானை அணுகி நின்று வணங்கித் தாம் செய்த தவறுக்காகப் பொறைவேண்டினார். பின்பு பகவான் ஒரு மாலையைத் தன் கழுத்திலிருந்து கழற்றி அவர் கழுத்தில் சாத்திக் கௌரவித்து, 'அனந்தாழ்வானே உம்முடைய இக் கன்னிகையை எனக்குத்தாரும்' என்று வேண்ட, அனந்தாழ் வான் ஸ்ரீநிவாஸனுக்குப் பத்மாவதி தேவியை ஸமர்ப்பிக்க, அப்பிராட்டி அர்ச்சக பரிசாரகர் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் திடீரென்று கிளம்பி முன்போலவே பெருமான் திருமார்பில் கண்டியிலுள்ள பொன்மயமான பத்மாவதியுருவமுடையவளாக மாறி நிற்க, அதனை எல் லோருடனும் ஆச்சரியத்தோடு கண்ட அனந்தாழ்வான் அதுமுதற்கொண்டு அலர்மேல் மங்கையின் தந்தையென் றும் திருவேங்கடமுடையானுக்கு மாமனாரென்றும் எங்கும் அனைவராலும் அழைக்கப்படலானார்.

## அவர் தம் மகளுக்கு 'என் திருமகள்' என்று பெயரிட்டது

அனந்தாழ்வான் திருவேங்கடமுடையானைச் சேவிக் குங்காலங்களில் "தென்திருவரங்கத்தைக் கோயிலாகக் கொண்ட பெருமானே, என் பெண்-என் திருமகள் சேர்

மார்பனே என்கிறாள். என்னுடைய ஆவியானவனே என் கிறாள். நின் திருவெயிற்றால் (கோரப்பற்களால்) அண் டபித்தியிலிருந்து (அண்டத்தின் கீழ்ச் சுவரிலிருந்து) நீ பெயர்த்தெடுத்த பூமிதேவியின் மணவாளனே என்கிறாள். முன்பு ஒருகால் இடிபோல் பயங்கரமாக முழங்குகின்ற பெரிய எருதுகள் ஏழினை வென்று நீ ஏற்றுக்கொண்ட நப்பின்னைப் பிராட்டிக்கு அன்பனே என்கிறாள். (இங்ங னம் உம்மையே நினைந்து வருந்துகின்ற) இவளுடைய வருத்தத்திற்கு நான் ஒரு முடிவு அறிகிலேன்" என்னும் கருத்தைக் கொண்ட திருவாய்மொழி ஏழாம் பத்து இரண் டாம் திருவாய்மொழி ஒன்பதாம் பாசுரத்தை, 'ஏகா கந்யா' முதலிய ப்ரமாணங்களில் கந்யா என்பதனால் குறிக் கப்பெற்ற (தமது) மனஸ்ஸைத் (தமது) கந்நிகையாகவும் தம்மைத் தாயாகவும் திருவேங்கடமுடையானைத் திருவ ரங்கப்பெருமாளாகவும் பாவனை செய்து, 'என் திருமகள்' என்ற சொல்லுக்குப் பொருளாகத் தமக்கு இப்போது பெண் ணாக ஆன பத்மாவதியையும் நினைத்துத் திருவேங் கடமுடையானைப் பற்றியதாக அநுஸந்தானம் செய்து கொண்டு வந்தவர், பின்பு தமக்குப் பிறந்த பெண்ணொருத் திக்கு 'என் திருமகள்' என்ற பெயரைச் சூட்டினார்.

## அனந்தாழ்வானை அரவு தீண்டியது.

ஒரு போது அனந்தாழ்வான் ஸ்ரீராமாநுஜனென்னும் தமது தோட்டத்தில் திருத்துழாய் மலர்களைப் பறித்துக் கொண்டிருக்கையில் ஒரு பாம்பு தமது கையில் கடிக்க, எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்று சொல்லி அக்கையை பூவால் துடைத்துவிட்டு ஸ்வாமி புஷ்க ரிணியில் நீராடி, விஷத்தைப் போக்க முயன்ற தமது சிஷ்யர்களை விலக்கிக் கோவிலுக்குச் சென்று பெருமா ளைச் சேவித்திருந்தார். 'விஷந்தீர்க்கும் முயற்சியிலிருந்து மீண்டது ஏன்' என்று பெருமாள் கேட்டதற்கு, ஆதிசேஷ னது அம்சமாகத் தம்மை நினைத்த அனந்தாழ்வான் 'கடித்த பாம்பு வலிதாகில் விரஜையில் நீராடிப் பாபம்

நீங்கப் பெற்று ஸ்ரீவைகுண்டநாதனுக்குத் தொண்டு செய்ய லாம். கடியுண்ட பாம்பு வலிதானாலோவெனில் இங்கேயே ஸ்வாமி புஷ்கரிணியில் ஸ்நாநம் செய்து தேவரீருக்கே அடிமை செய்யலாம். இவ்விரு வகையிலும் தீங்கேதுமில் லையென்றெண்ணி விஷம் தீர்க்க முயலாமல் வெறுமனே இருந்தேன் என்று விண்ணப்பித்து ஸுகமாகவே இருந்தார்.

## அனந்தாழ்வானுடைய ஆசார்ய பக்தியின் உறுதி

ஒருசமயம் யமுனைத்துறைவர் மண்டபத்தில் அதி கமான புஷ்பமாலைகளைத் தொடுப்பதிலேயே ஊன்றி யிருந்த அனந்தாழ்வானுடைய மனவுறுதியைச் சோதிக்க விரும்பிய பகவான் அவரை அழைத்து வரும்படி அர்ச் சகர் வாயிலாக ஓர் தூதனை அனுப்ப, அவன் வந்து அழைக்க, அப்போதே வராமல் புஷ்பமாலை தொடுக்கும் காரியத்தை முடித்துப் பூமாலை நிறைந்த குடலையைச் சிரஸ்ஸில் வைத்துக்கொண்டே வந்த அனந்தாழ்வானை, ‘நான் அழைத்தபோதே நீர் ஏன் வரவில்லை? எனது ஆணையை மறுத்த உம்மை இங்கிருந்து துரத்தி விட்டேனாகில் என் செய்வீர்?’ என்று பகவான் கேட்க, ‘பகவானே திருவேங்கடநாதனே உமக்கு என்ன நஷ்டம்? எனக்கோவெனில், மாலதி (குடமல்லிகை) மலர் மொக் குகள் மலர்ந்துவிட்டால் பிறகு தொடுக்க முடியாமல் போய்விடுமென்றும் மணமும் குலைந்து போகுமென்றும் நினைத்ததனால் அப்போதே வர அவகாசம் இல்லா மற்போயிற்று. மேலும் ஆசார்யரான எம்பெருமானார் ஆணையிட்ட தொண்டையும் விட்டுவிட்டு மற்ற உமது கைங்கர்யத்தைச் செய்ய வேணுமென்ற நிர்ப்பந்தம் ஏது மில்லை. ‘பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை’ என்று (திருவாய்மொழி 3-3-8) பணிக்கும் தத்வ. தர்சிகளில் (ஆத் மாஸாக்ஷாத்காரம் பெற்றவரில்) தலைவராகிய நம்மாழ்வார் - இங்கு விளங்கும் திருவேங்கடமலையில் நடுவில் வந்து தேவரீர் சேர்ந்ததாகக் கூறுவதனால், தேவரீர்க்கும் அடியே னுக்கும் ஸம உரிமையுள்ள இம்மலையில் ஒருவாரம் முந்தி

வந்த மாத்திரத்தினால் தேவரீர் அடியேனை எங்ஙனம் துரத்தத்தக்கவராவீர்? மதுரகவியாழ்வார் அருளிய கண்ணிநுண் சிறுத்தாம்பைக் கற்று அவருடைய நிலையை நடைமுறையில் கொண்டு, ஆசார்யரையே தஞ்சமாகப் பற்றியதனால் மதுரகவிதாஸனாகுந் தன்மையைப் பெற்றுள்ளவனாக அடியேனை தேவரீர் அறிகிலீரோ' என்று பதிலளித்தார். அவருக்கு ஆசாரியர் திறத்தில் ஏற்பட்ட அத்தகைய ஊற்றத்தின் உறுதியைக் கண்ட பகவான் மிக மகிழ்ந்து, 'ஆசார்யரிடம் உமக்கு உண்டான உறுதியான நிலையினால் நாம் மிகவும் இன்பமடைந்தோம். உமக்கு வேண்டியது என்ன? மோக்ஷமோ ராமானுஜர் திருவடிகளையே தஞ்சமாகக் கொண்ட உம்முடைய கையிலேயே இருக்கிறது. ஆதலால் அதை நான் கொடுக்கவேண்டிய அவசியமில்லை. வேறெதையாவது விரும்பிக்கேளும்' என்று கேட்க, தம்மை மிக மிக அதிர்ஷ்டசாலியாக நினைத்த அனந்தாழ்வான் 'தேவரீர்க்குத் தொண்டு புரிவது ஒன்று தவிர அடியேனால் விரும்பப்படுவது வேறென்ன இருக்கிறது? அதுதன்னையே இங்கும் அங்கும் அடியேனுக்கு இடையறுமல் நடக்கும் படி தேவரீர் வளர்த்தருள வேணும்' என்று வேண்டிக்கொண்டார். அவருடைய அவாவற்ற நிலையைக் கண்டு மிக மகிழ்ச்சி எய்திய பகவான் 'உம்மைச் சேர்ந்தவரோடு தொடர்புடைய மனிதர்களுக்கும் விலங்கு பறவை முதலியவற்றிற்கும் நான் மோக்ஷமளிக்கக் கடவேன' என்று விசேஷ வரமாகிய பரிசையளிக்க, அதனைப்பெற்ற அனந்தாழ்வான் மகிழ்ச்சியடைந்து, மதுரகவிகளின் மனவுறுதியைப் பெற்ற நமக்கு இத்தகைய பரமனது அருள் கிடைத்தபடியினால், இது முதற்கொண்டு நம்மைச் சேர்ந்தவர்களுக்கு 'மதுரகவி தாஸன்' என்பதே தாஸ்யநாமமாக (அடிமைப் பெயராக) ஆகக் கடவதென்று நியதியை ஏற்படுத்தினார். அது தொடங்கி அவர் எல்லோராலும் ஆசாரியராகப் பற்றப்பட்டு விளங்கினார்.

## அனந்தாழ்வான் மதிள் கட்டும் வழியிலிருந்து செண்பகமரம் ஒதுங்கி இடங்கொடுத்தது

அனந்தாழ்வான் மதிளும் கோபுரமும் கட்டுவிக்கும் போது, அதன் பக்கத்தில் உண்டானதாய் நாற்புறங் களிலும் பரவிய பல கிளைகளையுடைய செண்பகமரம் ஒன்று மதிள்கட்டத் தடங்கலாய்க் குறுக்கே நிற்க, அதனால் அதனை வெட்ட வேண்டிய சந்தர்ப்பத்தில், அவர் 'திரு வேங்கடமென்னும் எம்பெருமான் பொன்மலைமேல் ஏதே னுமாவேனே' என்று ஸ்ரீகுலசேகராழ்வார் பெருமாள் திரு மொழி (4-10)யில் அருளியபடி எந்த ஆழ்வார் இங்ஙனம் மரமாக அவதரித்தாரோ தெரியவில்லை. இத்திருமலையி லுள்ள ஸ்தாவர ஜங்கமங்கள் (அசையாப் பொருள்கள் அசையும் பொருள்கள்) எல்லாம் அப்ராக்ருத (பரமபதத் திலிருந்து இங்கு வந்த) ப்ராணிகள் என்பதாகவன்றோ புராணத்திலும் சொல்லப்பட்டுள்ளது. ஆகையால் இது வெட்டத்தக்கதன்று என்று நினைத்து, அன்றிரவு பெரு மாளைத் தியானித்து, மரவுருக்கொண்டுள்ள நித்ய ஸூரி யையும் 'ஸ்வாமீ பெருமாளுக்குக் கட்டும் மதிள்வழியினின் றும் சிறிது ஒதுங்கியருளும்' என்று பிரார்த்தனை செய்து உறங்கிக் காலையில் விழித்து எழுந்து, அச்செண்பகம ரம் மதிள் கட்டும் மார்க்கத்திலிருந்து ஒதுங்கி நிற்பதைக் கண்ட அனந்தாழ்வான் கோணலின்றி நேராகவே மதி ளைக் கட்டுவித்தார். அதனால் இம்மதிள் செண்பக மதிள் என்று மிகவும் பிரசித்தியை அடைந்தது.

## அப்பன் அனந்தாழ்வானுக்குத் தனியன் அருளியது

பின்பொருகால், திருமலையப்பனைச் சேவிப்பதற்கா கத் திருவரங்கத்திலிருந்து வாத்ஸ்ய வரதாசார்யர் முத லான சில ஸ்ரீவைஷ்ணவர்கள் வந்து திருமலையேறும் போது மலைப்படிகளின் நீண்ட தொடர்ச்சியில் ஏறியத னால் களைத்துப் பசி தாகங்களால் வருந்தும் சமயத்தில், பரமதயாளுவான திருவேங்கடநாதன் ஒரு ஸ்ரீவைஷ்ண வப் பிரமசாரியின் வேஷந்தரித்துச் சித்ராந்ந (புளியோரை)

பாத்திரத்தைக் கையில் ஏந்தி எதிரே வந்து நின்று அவர்களுக்கு அப்புளியோரையைக் கொடுக்கப்புக, 'இவன் தொட்டதை நாம் உண்ணலாமோ கூடாதோ' என்று ஸந் தேஹப்பட்டு, 'ஓ பிரமசாரீ, நீ யாருடைய சிஷ்யன்? உன் பெயர் என்ன? இப்புளியோரை எவ்விடத்தியது? 'பத்யம் அங்குளி விச்சேத:' (தனியன் இயற்றுதல், ஏகலவ் யன் போல் விரலை வெட்டிக் கொள்ளுதல்) முதலாக சாஸ்திரத்தினால் அடியவனுக்கு லக்ஷணமாக விதிக்கப் பட்டு, சிஷ்யன் தினமும் அனுஸந்தானம் செய்யத்தக்க தான உனது ஆசாரியருடைய தனியன் என்ன இவை எல்லாவற்றையும் சொல்' என்று அவர்கள் என்ன? 'அடி யேன் ஸ்ரீவைஷ்ணவன், திருமலையனந்தாழ்வானுடைய சிஷ்யன், மதுர கவிதாஸனென்பது அடியேன் பெயரா கும். ஒரு வழிப்போக்கன் வாயிலாக தேவரீர்களுடைய களைப்பைக் கேள்வியுற்ற அனந்தாழ்வான் திருவேங்கட முடையானுக்கு அமுது செய்வித்த இப்புளியோரையை தேவரீர்களுக்காக அனுப்பினார். இதைப் பெற்று அமுது செய்யுங்கள்' என்று கூறி, "அகிலாத்மகுணவாஸம் அஜ் ஞாநதிமிராபஹம் । ஆச்ரிதாநாம் ஸுசரணம் வந்தே னந் தார்ய தேசிகம் ।। (ஆத்மாக்களுக்கு இருக்க வேண்டிய நற்பண்புகள் அனைத்துக்கும் இடமாயிருப்பவரும், அறி யாமையாகிய இருளை அறவே அகற்றுமவரும், தம்மைப் பற்றிய சிஷ்யர்க்கு உயர்ந்த தஞ்சமானவருமாகிய அனந் தாழ்வானென்னும் ஆசாரியரை வணங்கித் துதிக்கிறேன்.) என்று ஒரு மந்திரத்தை அப்போதே இயற்றிச் சொல்லி, 'இது தான் அடியேன் தினந்தோறும் ஓதும் மந்திரமாகிய ஆசிரியர் தனியனாகும்' என்று சொன்னான்.

பின்பு அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள், 'ஓ மாணீ ஏன் இந் தத் தனியனில் உனது ஆசாரியருக்கு, பரமாசாரியரான எம்பெருமானாரோடு உள்ள ஸம்பந்தம் கூறப்படவில்லை? இதை இப்போது நீரே இயற்றினீரோ' என்று வினவ, அவன் 'ஆரியர்காள், எமது ஆசாரியரைப் பற்றிய தனி யன் இரண்டு உள்ளன. அவற்றில் ஒன்று ஆசாரியருக்கு

இருக்கத்தக்க லக்ஷணங்களாகிய குணநிசயங்களைக் கூறு வது, மற்றொன்று அவருக்கு ஸதாசார்யரோடு உள்ள தொடர்பின் பெருமையைப் பகர்வது முதல் தனியனை முன்பு சொன்னேன். இரண்டாமதையும் கேட்டருளுங்கள்' என்று சொல்லி, "ஸ்ரீமத்ராமானுஜாசார்ய ஸ்ரீபாதாம்போரு ஹத்வயம், ஸதுத்தமாங்க ஸந்தார்யம் அனந்தார்ய மஹம் பஜே ।। (ஸ்ரீமத்ராமானுஜாசார்யருடைய திருவடித் தாம ரையிணையானவரும், (அது காரணமாக) நல்லோர்களால் சென்னிக்கு அணியாகத் தரிக்கப்படுமவருமான அனந்தாழ் வானென்ற ஆசாரியரைச் சேவிக்கிறேன்.) என்று இரண் டாவதான மற்றொரு தனியனையும் நிருமித்துச் சொன் னான். பின்பு அவர்கள் ஐயம் நீங்கப் பெற்றுப் பிர சாதத்தை வாங்கி உண்ணத் தொடங்க, அவர்களிடம் அனுமதி கொண்டு அப்பிரமசாரி சிறிது முன்பே திரும்பி வந்துவிட்டான்.

அதன்பிறகு அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்தப் பெரு மாள் பிரஸாதத்தை அமுது செய்து களைப்பு நீங்கப் பெற்றவராய் மெல்ல மெல்லத் திருமலையேறிச் சென்று அனந்தாழ்வானை வணங்கி (ஸுகமாக வந்து சேர்ந்தீர் களா என்று) அவர் நல்வரவு கூற, 'ஸ்வாமீ, தேவரீர் சிஷ் யனாகிய மதுரகவிதாஸனென்னும் பிரமசாரியின் கையில் தேவரீர் அனுப்பியருளிய பகவத் பிரஸாதத்தை உண்டு மிக வும் திருப்தியடைந்து வழிநடந்த சிரமம் தீர்ந்து ஸுகமே வந்தோம்' என்று கூறினர்.

'மதுரகவிதாஸனென்று அடியேனுடைய சிஷ்யனாகிய பிரமசாரி யாரும் இங்கு இல்லை. தேவரீர்களுக்கு அடியேன் பகவத் பிரசாதம் கொடுத்தனுப்பவில்லையே, தேவரீர்கள் இங்கு எழுந்தருளும் செய்திகூட அடியேனுக்குத் தெரி யாது. இதெல்லாம் தேவரீர்களின் வழிநடந்து வந்த சிர மத்தைப் பொறுத பகவானது திருவிளையாடல்கள்' என்று அனந்தாழ்வான் சொல்ல, அவர்கள் அந்தப் பிரமசாரி நடுவழியில் செய்த திருவிளையாடல்கள் அனைத்தையும் அவரிடம் விண்ணப்பித்தனர்.

பின்பு அச்செய்தியைக் கேட்டு வியப்படைந்த அனந்தாழ்வானுடைய கோஷ்டியிலுள்ள பெரியோர்கள் அனைவரும் வியந்த உள்ளத்தினராய், 'திருவேங்கடமுடையான் அனந்தாழ்வானுடைய ஸதாசார்ய லக்ஷண பூர்த்தியையும் ஆசார்ய (= ஸ்ரீராமாநுஜ) ஸம்பந்நதத்தின் பெருமையையும் தானே சொல்லி அவருக்குச் சிஷ்யனாயிருக்கும் தன்மையைத் தாங்கி, அவரிடத்தில் தனக்கு மிகவுயர்ந்த அபிமானமுள்ள தென்பதை மக்களைனைவருக்கும் அறிவிக்கிறுன். இது மிகவும் ஆச்சரியம். திருவேங்கடவன் தன்னை அனந்தாழ்வானுடைய சிஷ்யனாக நினைத்ததற்குக் காரணம் என்னவென்றுல் - தனக்குச் சங்கு சக்கரங்களை அளித்த ராமானுச முனிவர் அனந்தாழ்வானுக்கு ஆசார்யராகையாலும், ஆதிசேஷனது அம்சமான இவ்வனந்தாழ்வானுக்கு அம்சியான பகவத்ராமாநுஜ முனிவரோடுள்ள ஒற்றுமையாலும், 'ஸ்ரீமத்ராமாநுஜார்ய ஸ்ரீபாதாம்போருஹத்வயம்' என்று அனந்தாழ்வானை ராமானுஜருடைய திருவடித் தாமரையாகக் கூறும் வாயிலாக ராமானுஜருடைய அம்சமாக (பெருமான்) தானே பிரசித்தமாக்கியதனாலும், ராமானுஜரை ஆசார்யராக நினைத்தற்குப் பரிவாஹரூபமாக - (கலுங்கலின் உருவமாக; பயன்'க) அனந்தாழ்வானுடைய ஆசார்யத்வத்தை நினைத்தமையே அதற்குக் காரணமாகத் தக்கது என்று' நிச்சயித்து, அதனால் அனந்தாழ்வான் திறத்தில் அதிகமான கௌரவத்தை வகித்தவர்களாய், 'இது முதற்கொண்டு திருவேங்கடத்தெம்பெருமான் பரமப்ரீதியோடு இயற்றியருளிய இவ்விரண்டு மந்திரங்கள்தான் அனந்தாழ்வானுடைய சிஷ்யர்களால் ஆசாரியர்தனியன்களாக மிகவும் ஆதரிக்கத்தக்கவையென்றும், முதலியாண்டான் கூரத்தாழ்வான் முதலியோரிடம் இராமாநுச முனிவரின் திரிதண்டம் (முக்கோல்) பாதுகை ஜலபவித்திரம் (முக்கோலின் நுனியில் கட்டப்படும் வெள்ளைத் துணிப்பை) முதலாகுந் தன்மை போன்று, வேங்கடத்தானுடைய வாக்கியத்தில் நம்பிக்கையினால் அனந்தாழ்வானிடம் இராமாநுச முனிவரின்

திருவடித்தாமரையாந் தன்மையும் தவறுமல் அனைவரா லும் அனுஸந்திக்கத்தக்கதென்று ஒரு நியதியை ஏற்படுத் தினர்.

## சிறியாண்டான் அனந்தாழ்வானை முன்னிட்டு முக்திபெற்றது.

ஒருகால் ஸ்ரீரங்கத்தில் பிள்ளையுறங்காவில்லிதாஸர் பிள்ளைமஹாபலிவாணதிராயர் மருதூர்நம்பி (மாருதிச்) சிறியாண்டான் என்னும் இந்நால்வரும் இவ்வுலக வாழ்க் கையில் துன்பமிகுதி கண்டு உடனே மோக்ஷம் பெற வேண்டும்படியான துரிதமுடையவர்களாய் பகவத்ராமா நுஜ முனிவரைத் தஞ்சமாகப் பற்ற, அவர்களில் முதல்வ ரான மூவரும் அம்முனிவரின் ஆணையின்படியே தத்தம் விருப்பம் விரைவு இவற்றின் பக்குவ நிலைக்குத் தக்கவாறு அங்கங்குச் சென்று தாந்தாம் அடையும் பயனைப் பெற்று த்ருப்தியடைந்திருக்குமளவில், நாலாமவரான சிறியாண்டா னும் அப்போதே மோக்ஷம் பெறவிரும்பி, தண்ணீர் கிடை யாமையால் நாக்கு வற்றி இறக்கும் தருவாயில் இருக்கும் தாகமுடையவன் போல், 'ஸம்ஸாரமாகிற (பிறப்புக்களின் தொடர்ச்சியாகிற) பாலைவனத்தில் உடலின்கண் உண்டா கும் ஜ்வரம் முதலிய நோய், மனிதன் விலங்கு முதலான பிராணிகளால்வரும் துன்பம், இடி மின்னல் வெப்பம் தொடக்கமாகத் தேவர்களால் நேரும் துக்கம் என்கிற மூவகைத் தாபங்களினால் வருத்தமுற்ற அடியேன் இப் போதே ஆராவமுதமான மோக்ஷத்தைப் பெறுவிடில் உயிர் தரித்திருக்க வல்லேனல்லேன்' என்று ஸ்ரீராமானுஜமுனி வரிடம் விண்ணப்பிக்க, 'வாரீர் சிறியாத்தானே நீர் விரும் பும் பயனைத் தருமவன் திருவேங்கடமுடையானன்றோ? அவனிடம் சென்று அனந்தாழ்வானுடைய தகுந்த புரு ஷகாரத்தினால் (சிபாரிசினால்) அந்த பகவானைத் தஞ்ச மடைந்து பயனைப் பெறக்கடவீர்' என்று இராமானுஜர் பதிலளிக்க, சிறியாண்டான் திருவேங்கடமுடையானிடம் தமக்குள்ள பற்றின் மிகுதியினால் உடனே புறப்பட்டுத்

திருமலையை அடைந்து அனந்தாழ்வானை ஸேவித்துத் தமது கருத்தையும் ஸ்ரீராமானுஜரின் திருவாணையையும் அவரிடம் தெரிவித்து 'ஸ்வாமீ அனந்தாழ்வானே, உம்முடைய புருஷகாரத்தினால்தான் திருவேங்கடமுடையான் உடனே அடியேனைக் காப்பாற்றக் கடவர். ஆகையினால் இரங்கியருள வேணும்' என்று வேண்ட, அனந்தாழ்வான் இச்சிறியாண்டான் எல்லையான ஆர்த்தியை (= உலக வாழ்வில் துன்பத்தை) உடையவர். எல்லா நற்குணங்களாலும் விளங்குமவராய் நல்லாசிரியரென்ற சொல்லுக்கு முக்கியப் பொருளானவருமான ஸ்ரீமான் ராமாநுஜ முனிவர் இவரை நியமித்த ஆசிரியர், எல்லாமறிந்தவனும் எதையும் செய்யவல்ல ஆற்றல் படைத்தவனும் நற்பண்புகள் அனைத்துக்கும் கடல் போன்றவனுமான திருவேங்கடமுடையான் இவர் விரும்பும் பயனைத் தருமவன், ஆக, இவர் வேண்டும் புருஷார்த்தம் (மோக்ஷம்) இப்போதே ஸித்திக்கத் தக்கதே யாகும். எல்லாமறிந்து எல்லாம் வல்லவனான பரமபுருஷன் இவர் வேண்டியவதைக் கொடுக்க முயன்றவளவில் அதைத் தடுக்கவல்லார் யாருளர்? அனைத்துலகுக்கும் தாயான ஸ்ரீமஹாலக்ஷ்மி இப்பெருமானுடைய திருமார்பை இறையும் அகலாமல் இருக்கிறாள். இவ்வாறிருக்க, இப்போதே இவருக்கு மோக்ஷம் ஸித்திப்பதில் ஐயம் சிறிதும் இல்லை. ஆகையால் இவர் எனது புருஷகாரத்தை வெறுமனே விரும்புகிறார். புருஷகாரம் செய்யுமாறு பகவத் ராமானுஜ முனிவர் என்னை நியமிக்கிறார். ஆதலால் அவசியாக இவர் திறத்தில் புருஷகாரம் செய்ய வேண்டுமென்று நினைத்து மனவமைதி பெற்று வாரீர் சிறியாண்டானே, அப்படியானால் வாரும், பகவத் ராமானுஜரின் திருவாணையின்படி திருவேங்கடமுடையானிடம் செல்வோமென்று கூற, அவருடன் கூடிச் சிறியாண்டான் திருவேங்கடவனை அணுகலானார்.

இப்படி அனந்தாழ்வானும் சிறியாண்டானுமாகப் பெருமாளைத் தண்டனிட்டுக் கோவிலுக்குள் சென்று பெருமாள் முன்னே நிற்க, பெருமாளும் கருணையினால் குளிர்ந்த தன்

கடைக் கண்ணோக்க வெள்ளத்தினால் அவ்விருவரையும் அபிஷேகம் செய்து, தீர்த்தம் ஸ்ரீசடகோபன் திருமாலை உடுத்துக் களைந்த பீதகவாடை சந்தனக் குழம்பு முதலான வற்றை வழங்கியருள, அவற்றைப் பெற்று அலங்கரித்துக் கொண்ட அவ்விருவரும், பெருமாள் பிரசாதத்தைப் பெற்றுக் கொண்ட பிறகும்கூட வெளியே செல்லாமல் சிறிது போது அங்கேயே நின்று கொண்டிருப்பதனைக் கண்டு ஸந்தேகங் கொண்ட திருவேங்கடவன் 'வாரீர் அனந்தாழ்வானே ஏதோ விண்ணப்பம் செய்ய விருப்பமுடையவர்போல் நிற்கிறீரே, அப்படி ஏதேனும் இருந்தால் கூசாமல் விண்ணபப்பம் செய் யுமென்று பணித்தருள, அது கேட்ட அனந்தாழ்வான், வாரீர் பெருமானே இச்சிறியாண்டான் உலக வாழ்வில் துன்பம் மிகப்பெற்று மோக்ஷம் பெறப் பிரபத்தி செய்தவ ராய் பகவத்ராமானுஜரால் நியமிக்கப்பட்டு, மோக்ஷத்தை இப்போதே தேவரீரிடமிருந்து பெறும் பொருட்டு வந்தி ருக்கிறார். ஆகையால் இவருக்கு இப்போதே அதைத் தேவரீர் தந்தருள வேணும். தேவரீர் கருணையுடையவர்க ளில் தலைவரன்றோ? தஞ்சமடைந்தவர்களிடம் கடல்போல் அளவிறந்த பாசமுடையவரன்றோ? எதையும் செய்ய வல்ல ஆற்றல் படைத்தவரன்றோ? இதைவிட, அதிகமாக விண் ணப்பிக்க வேண்டியது என்ன இருக்கிறது?' என்று கூற, பகவான் அதைக் கேட்டு, 'வாரீர், நித்ய ஸூரிகளின் ராஜதானியாய்ப் பரமாகாசமென்னும் பரமபதத்தை நான் உமக்குத் தந்தேன், பெற்றுக்கொள்வீராக' என்று 'வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்ளென்று வீடும் தரும்' என்று நம்மாழ்வார் (திருவாய்மொழி 4-9-9) அருளிச்செய்தபடியே, அடையத்தக்கபயன்களுக்குள் எல்லையான பரமபதத்தைச் சிறியாண்டானுக்குத் தந்தருளினார்.

அதன்பின்பு சிறியாண்டான் திருவேங்கடமுடையா னது பெருவள்ளல் தன்மையைக் கண்டு மகிழ்ந்து, 'அனந்தாழ்வானே, திருவேங்கடமுடையான் தனது தன் மையை மறந்து எனது தன்மையைப் பார்த்தானாகில் பழைய நரகங்கள் போதாமல், தருவதற்காகப் பல புதிய

பெரிய நகரங்களை ஸ்ருஷ்டிக்கவேண்டியேயிருக்கும், அநாதியான எனது ஜநிமபரம்பரைகளில் நான் செய்த பாப பரம்பரைகள் கணக்கில் அடங்காவாகையால் சுதந்திரனான அப்பெருமான் அப்பாவங்களை ஆராய்ந்தால் எனக்குத் தண்டனை கொடுப்பது அவனுக்குத் தவிர்க்க முடியாதல்லவா? எனது தன்மையைப் பாராமல் தனது தன்மையைப் பார்த்தானாகில், பெருவள்ளலான அவனுக்கு இப்போதுள்ள பழைய பரமபதம் போதாமல் எனக்குத் தருவதற்காகப் புதிய பல பரமபதங்கள் படைக்க வேண்டியேயிருக்கும். ‘அலம்புரிந்த நெடுந்தடக்கை’ (திருநெடு-6) என்று கலியனருளிச் செயலினால் நீண்ட பெருங்கைகளையுடைமை (=பெருவள்ளல் தன்மை) அப்பெருமானிடம் அறியப்பட்டதல்லவா? அப்படியன்றாகில் தேவரீருடைய ப்ரார்த்தனை முடிவு பெறுவதற்குள் ‘ஸோऽத்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ: பரமம் பதம்’ ‘(கடோபநிஷத்து 1-3-9) என்கிறபடியே ஜீவாத்மா திரியும் ஜந்ம மரண பரம்பரையாகிய ஸம்ஸாரத்தின் மார்க்கத்திற்கு எல்லைக்கரையாகிய யார்க்கும் கிடைக்கவரிய பரமபதத்தை எனக்கு அவன் தந்தருளியது எங்ஙனம் பொருந்தும்’ என்று விண்ணப்பித்துவிட்டு அப்போதே பரமபதம் சேர்ந்தார்.

அதன்பிறகு அனந்தாழ்வானும் மிகவும் ஆச்சரியமடைந்தவராய் - ‘ப்ரஹ்மத்தை உள்ளபடி அறிந்த தமப்பனாருடைய இறுதிக் காலத்தில் மகன் வைஷ்ணவர்களைக்கொண்டு அவருக்கு ஸ்ரீசூர்ண ஸம்ஸ்ராகம் செய்விக்க வேண்டும். மஹாத்மாக்களான ஆசார்யருடைய மரண காலத்தில் அவர்களுடைய திருமேனியை மந்த்ரத்தினால் பரிசுத்தமாக்கப்பட்ட ஸ்ரீசூர்ணத்தினால் அலங்கரிக்க வேண்டும். புருஷ ஸூக்தத்தினால் திருமஞ்சனமும் பிரமமேத ஸம்ஸ்காரமும் செய்விக்க வேண்டும். இவற்றைக் காலதாமதமின்றிப் பெரியோர்கள் மரணமடைந்தவுடனேயே ஆசரிக்க வேண்டும்’ என்றுள்ள ஸ்ரீ ஸம்ஹிதை வசனத்தின்படியும், ‘குற்றமற்ற அந்தணர்கள் நன்மை தருவதாய் அர்ச்சிராதி மார்க்கமென்று கூறப்ப

டும் மோக்ஷ வழியிலே ஜீவாத்மா செல்லுவதைப் பற்றிச் சிந்தனை செய்வதைக் கூறுகின்ற அத்தியாயத்தையும், மற்ற முனிவர்களும் மனிதர்களும் இயற்றிய பகவானைப் பற்றிய துதிகளையும் பித்ருக்களுடைய மரணவிழாவில் படிக்கக் கடவர்கள். அழகிய பந்தலிட்டு அங்கு உரலில் சுத்தமான மஞ்சளைச் சேர்த்து, பெருமாளுடைய தாஸி களைக் கொண்டு உலக்கையினால் இடித்துப் பொடி செய்வித்து அறிவுள்ள மகன் அதை மந்திரங்களால் பரி சுத்தமாக்கக் கடவன்' என்றுள்ள வேறு ஸம்ஹிதையைச் சேர்ந்த வசனத்தின்படியும், ஸ்ரீபாஞ்சராத்ர உத்தரகண்டத் திலுள்ளதாய், சௌனகருக்கும் பிரம தேவனுக்கும் ஸம்வாத ரூபமான முப்பத்தோராவது அத்தியாயத்தில் 'பூஜிக்கத்தக்க பிரமதேவரே, ப்ரஹ்மமேதிகளின் (ப்ரஹ்மஜ்ஞானமுள்ளவர்க ளின்) ஸம்ஸ்காரத்தைக் (உயிர் பிரிந்த உடலுக்குச் செய்ய வேண்டிய இறுதிக்கடனைக்) கேட்க விரும்புகிறேன். அது வைஷ்ணவர்களுக்கு எப்படி விதிக்கப்பட்டுள்ளதோ அப்படி எனக்குச் சொல்லுவீராக' என்று தொடங்கி வினவிய சௌனகருக்கு, 'இப்படிப்பட்ட ப்ரஹ்மமேதிகளின் ஸம்ஸ் காரத்தை எந்த வைஷ்ணவர்கள் (தம் தகப்பன்மார்களுக் கும் ஆசார்யர்களுக்கும் மற்றுமுள்ள பெரியோர்களுக்கும்) இவ்வுலகில் செய்கிறார்களோ அவர்களெல்லோரும் பாவங் கள் தொலையப்பெற்றுப் பரமபதத்தை அடைகிறார்கள்' என்பதீருகப் பிரமதேவன் சொல்லியபடியும், அச்சிறியாண் டானுக்குச் சிறிதும் தாமதமின்றி ஸ்ரீசூர்ண பரிபாலனம் செய்து ப்ரஹ்மரதத்தில் அவரை எழுந்தருளப்பண்ணிப் பிரமமேத ஸம்ஸ்காரம் தொடக்கமான சரம கைங்கரியங் களைத் தாமே மிகவும் ஆதரத்தோடு செய்து முடித்தார். இங்ஙனமே வளர்த்தான்மங்கலமுடைய ஸ்ரீவைஷ்ணவ ருக்கும் புலிக்கும் அனந்தாழ்வான் மோக்ஷம் அளிப்பித்த வரலாறு முதலியனவும் நினைத்தக்கன.

இவ்வாறு பகவத் ராமானுஜ முனிவருடைய இடை விடாத மிகவுயர்ந்த கருணைக் கடைக்கண்ணோக்கத்திற்கு இலக்கானவரும் அதுவே காரணமாகத் திருவேங்கடநாத

னது கரையில்லாத கருணையாகிய கடலில் நீர்மனிதர் போல் நிரந்தரமாக உறைபவருமான அனந்தாழ்வானு டைய, மிகவும் வியப்பைத் தருமவையாய்த் திருவேங்க டமுடையானது கடாக்ஷ விசேஷத்தினால் விளங்கச் செய்யப்பட்ட பிற சரித்திரங்கள் பிற நூல்களின் வாயி லாக அறியத்தக்கன.

அனந்தாழ்வானுடைய குணம் வைபவம் இவற்றைப் பற்றிப் பெரியோர்கள் சில ச்லோகங்களை அவரைச் சேர்ந் தவர்களால் அனுஸந்திக்கத்தக்கவையாக இயற்றினார்கள். அவற்றின் பொருளாவது:

1. வேத வாக்குக்களுக்கும் எட்டாத பெருமையுடை யவனாய்த் திருவேங்கடமலையாகிய திவ்ய தேசத்தில் உறையும் எம்பெருமான் பின் தொடர்ந்து ஓடிவந்து எவ ருக்குத் தன் மாலையை அணிவித்தானோ அப்படிப்பட்ட உயர்ந்த அனந்தாழ்வானை ஸேவிக்கிறேன். 2. யதிரா ஜரான ராமானுஜருடைய திருவடித்தாமரைகளில் வண்டு போன்றவரும் அருளாளப் பெருமாளெம்பெருமானாரின் தயைக்கு முக்கிய கொள்கலமானவரும் திருவேங்கடமு டையானது திருவடியிணையில் பேரன்பு பூண்டவருமான அனந்தாழ்வானை இடைவிடாமல் பலமுறை வணங்குகி றேன். 3. தமது மனைவியின் உதவி கொண்டு பெரிய ஏரியொன்றை வெட்டும் போது பிரமசாரி வேஷமணிந்த திருவேங்கடமுடையான் வந்து மண்பாரம் சுமக்கப்பெற்ற பெருமைபெற்றவரும் அப்பெருமான் சாத்திக்களைந்து தந் தருளிய அழகிய நறுமணமுள்ள மாலையினால் மணங்கம ழும் திருக்கழுத்தையுடையவருமான அனந்தாழ்வானைத் தஞ்சமடைகிறேன். 4. தமது தோட்டத்தில் அப்போ தலர்ந்து வாசனையை அள்ளி வீசுகின்ற மலர்களாலே வேறு பயனை விரும்பாமல் தொண்டு செய்து திருவேங்க டமுடையானை ஸந்தோஷிக்கச் செய்யும் அனந்தாழ்வான் (அடியேன் தியானம் செய்யுமாறு மனதில்) எப்போதும் தோன்றுக என்பதேயாகும்.

இவ்வனந்தாழ்வான் பகவத்ராமானுஜருடைய திருப் பாதக் கமலங்களில் பக்தி மிக்க மனம் படைத்தவராய், அவர் புறச்சமயிகளை வாதத்தில் வென்று விஜய யாத் திரை செய்தபோது படிக்கத்தக்க விருதகளைக் கூறும் ஐந்து ச்லோகங்கள் கொண்ட நூலையும், அவருக்கு மங் களங்களை உண்டாக்குமதாய் நித்யம் அநுஸந்திக்கத்தக்க பத்து ச்லோகங்களைக் கொண்ட நூலையும், நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியை ஓதுவதற்கு முன்பு, தனிய னாக ஓதத்தக்க மந்த்ரமான (ஏய்ந்த பெருங்கீர்த்தி என்று தொடங்கும்) ஒரு தமிழ்ச்செய்யுளையும் இயற்றினார்.

இவருடைய திருக்குமாரர் இராமானுஜரென்ற பேர் பெற்றவர் இவரைப்போல் தொண்டு செய்வதில் ஈடு பாடு கொண்டவராய்த் தமப்பனாரால் திருவேங்கடவன் கோவிலுக்குத் தென் மேற்குத் திசையில் நிருமிக்கப்பட்டு அவருடைய ஆசார்யராகிய ஸ்ரீராமாநுஜரின் திருநாமம் சூட்டப்பெற்ற தோட்டம் ஏரி முதலியவற்றைக் கண்டு, தாமும் அதற்கு வடகிழக்குத் திசையில் தம்மாசார்யரான அனந்தாழ்வான் பெயரால் தோட்டம் ஏரி முதலியவற்றை நிருமித்துத் தமப்பனாரோடு கூடவே தினந்தோறும் பல் வகைத் தொண்டுகளைப் புரிந்து கொண்டு திருவேங்கட முடையானை மிகவும் மகிழ்வித்துக் கொண்டிருந்தார்.

இப்படி அனந்தாழ்வான் பலவகையான பகவத் கைங் கர்யங்களைச் செய்து கொண்டும் பலவிதமான வைஷ் ணவாசாரங்களை மேன்மேலும் வளர்த்துக் கொண்டும் வாழ்ந்திருந்தார்.

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸ மாலையில் ஆறும் கொத்து முற்றும்.

# ஏழாம் ஸ்தபகம்

இனி ஸ்ரீவேங்கடாசல மாகாத்மியத்தை ஆராய்ச்சி செய்வதன் வாயிலாக இராமானுச முனிவர் அத்திருமலைக்கே ஏற்பட்ட சில தருமங்களை அனுஷ்டிக்கத் தக்கவையாக நியமித்தருளிய சரிதம் கூறப்படும்.

## திருவேங்கடமலையின் வைபவச் சிறப்பு

பகவத் ராமானுஜ முனிவர் திருவேங்கடமலையின் மான்மியங்கூறும் புராணப்பகுதியை முழுவதும் நன்ருக ஆராய்ச்சி செய்யலானார்.

'திருவேங்கடமென்னும் பெயர் பெற்ற விஷ்ணுவின் விளையாட்டுமலை வைகுந்தலோகத்திலிருந்து கொண்டு வந்து பெருமாள் வசிப்பதற்காக ஸுவர்ணமுகி நதியின் சமீபத்தில் கருடனால் வைக்கப்பட்டது' என்று மார்க்கண்டேய புராணம் இரண்டாமத்தியாயத்திலுள்ள வசனத்தினாலும், 'திருவின் மணவாளனாகிய பூவராகப்பெருமாள் உலகோர்க்கு அருள்செய்ய ஆசை கொண்டு பூமியில் தாம் வசிக்கத்தக்க நல்ல இடமொன்றை ஆராய்ந்து அறுதியிட்டு, மகாபலசாலியான கருடனே நீ மிகவும் வேகமாகப் பரமபதம் சென்று விளையாட்டுமலையை இங்கே கொண்டு வா என்று கூறிக் கருடனை அனுப்பினார்' என்றும், 'கருடனும் பரமபதம் சென்று திவ்வியமாய் அளவிடற்கரிய பெருமை படைத்ததாய் மிகப்பெரிய கொடுமுடிகளைக் கொண்டதாய் பஞ்சோபநிஷத்ஸ்வரூபமான (பரமபதத்திய பஞ்சபூதங்களாலான) மலையைக் கண்டான்' என்றும், அங்ஙனம் கண்ட பொன்னிறமுள்ள கருடன்

நாராயணகிரியென்று பெயர்பெற்றதும் ஸ்ரீவைகுண்ட நாதன் விளையாடும் மலையானதும் மூன்று யோஜனை அகலமும் முப்பது யோஜனை நீளமும் கொண்டதும் (ஒரு யோஜனையாவது: எட்டு மைல் என்பர்) ஆதிசேஷனது உருவமுடையதும் ஹரியை மகிழ்விக்குமிடமாகையால் எல்லோராலும் வணங்கத்தக்கதும் மிகவழகிய வடிவமுடையதும் மிகப்புனிதமானதும் காண்போருக்கு மோக்ஷமளிக்கவல்லதும் பகவானுக்கு அடிமை செய்யும் பரிவாரங்களோடு கூடியதுமான இத்தகைய மலையைத் தனது தோளில் வைத்துக்கொண்டு கடுவேகமாகத் திரும்பிவந்தான் என்றும் உள்ள வராக புராண முற்பகுதியில் 34 எண்ணிட்ட இரண்டாமத்தியாய வசனங்களினாலும், அதிலேயே 36 எண் குறித்த நான்காமத்தியாயத்தில் "வைகுண்டத்திலிருந்து வந்ததனால் வைகுண்டாத்ரி என்று கருதப்பட்டது (இம்மலை)' என்ற வசனத்தினாலும், ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும் பஞ்சோபநிஷத்ஸ்வரூபமாய் திவ்யமான பகவானுடைய விளையாட்டுக்குரிய மலையாக மிகவும் பிரிசித்தி பெற்றுள்ளது இத்திருமலை.

அதே அத்தியாயத்தில் 'இம்மலை ஒருசமயத்தில் ஸ்வர்க்க வாஸிகளான தேவர்களுக்கு ஸ்ரீனிவாசன் போல் காட்சியளித்தது. ஆகையால் அவர்கள் இதனை ஸ்ரீநிவாஸகிரி என்று சிறப்பித்துச் சொல்லுகிறார்கள்' என்றுள்ள வசனத்தினால் திருமாலின் அழகிய திருமேனியாகவும் தேவர்களுக்குத் தோன்றியதாகப் பிரசித்தி பெற்றிருக்கிறது இத்திருமலை.

பிரம்மாண்ட புராணம் இரண்டாமத்தியாயத்தில், 'மகிழ்ச்சியினால் மலர்ந்த திருக்கண்களையுடைய பகவான் தன் முன்னே நிற்கும் ஆதிசேஷனையழைத்து மேகம் முழங்குவது போன்ற கம்பீரமான குரலுடன் குற்றமற்ற அனந்தனே எனக்குப் பிரியமானவன் இவ்வுலகில் உன்னைத் தவிர வேறொருவருமில்லை. ஆகையால் எனக்குப் பிரியமானதோர் காரியத்தை நீ செய்யவேண்டும்.

நாரதமுனிவர் கூறியவற்றையெல்லாம் நீ கேட்டாயல்லவா? விளையாடுவதற்குத் தக்கதோரிடத்தில் வசிக்க வேண்டுமென்பது எனது எண்ணம். பூலோகத்தில் நீ உயர்ந்ததொரு மலையுருவங்கொண்டு இருக்கக்கடவாய். உனது படத்தொகுதியின் கீழுள்ள இடத்தில் திருமகளோடு கூடி நான் வசிக்கிறேன் என்று கூற, அதற்கு ஆதிசேஷன், தேவர் பெருமானே அனந்தனாகிய அடியேன் மலையுருவம் தரித்து' நிற்கிறேன். அதன் தாழ்வரைகளில் தேவரீர் திருமகளுடன் கூடிக் களித்திருப்பீராக' என்று கூறியதாக உள்ள வசனத்தினால் ஆதிசேஷரூபமாக அறியப்படுகின்றது இத்திருமலை.

அவ்வத்தியாயத்தின் முடிவிலேயே 'அகஸ்தியர் முதலிய முனிவர்கள், தாங்கள் செய்யும் தவம் பலிக்க வேண்டுமென்ற ஆசையுடன் அம்மலையில் பெருகுகின்ற அருவிகளில் நீராடி நீண்டகாலம் தவம் புரிந்தனர். அம்மலை திருமாலின் மற்றொரு திருமேனியாகையால் அவர்கள் அதனைக் காலால் மிதிக்கவில்லை. நாராயணனுடைய அம்சமாக உதித்த ஆதிசேஷனாகிய அரவரசன் மலைவடிவம் தாங்கியுள்ளான்' என்றுள்ளதனால் ஆதிசேஷனது திருமேனியாகவும் பகவானது திருமேனியாகவும் அறியப்படுகிறது இத்திருமலை.

வாமன புராணம் 21 எண்ணிட்ட இரண்டாமத்தியாயத்தில் 'சுகர் முதலிய சிலமுனிவர்களும் பிருகு முதலான தவச்செல்வரும் பிரகலாதன் தொடக்கமான புண்ணிய புருஷர்களும் அம்பரீஷாதி ராஜாக்களும் உயர்ந்த அம்மலையினை விஷ்ணுவின் வேறொரு திருமேனியென்றே நினைத்து அதனைக் காலால் மிதிக்கக்கூசி அதன் பக்கங்களிலேயே இருந்து அம்மலையிலிருந்து புறப்படும் நதிகளிலேயே ஸ்நானம் தர்ப்பணம் இவைகளைச் செய்து கொண்டு ஜநார்த்தனனாகிய திருமாலை நேராகக்காணவிரும்பித் தவமியற்றுகின்றனர்' என்றுள்ள வசனங்களினாலும், தத்துவமறிந்தவர்களில் தலைவர்களான சுகாதி

பரமரிஷிகள் பிரகலாதாதி பரமபாகவதர்கள் அம்பரீஷாதி ராஜரிஷிகள் முதலியோர்களால் ஸ்ரீவிஷ்ணுவின் திருமேனி யென்ற எண்ணங்கொண்டு தம்முடைய பூதவுடலாலும் பாதத்தாலும் தொடக்கூசி அடிவாரத்திலேயே வசித்துப் பரமனைக் கண்கூடாகக்காண்பதற்காகத் தவம் செய்து கொண்டிருந்தமை வாயிலாக ஸ்ரீமந்நாராயணனுடைய திவ்விய திருமேனியென்று கூறப்பட்டதாக அறியப்படுகிறது இத்திருமலை.

அறியாமை அறவே அகன்ற ஆழ்வார்களும் தமது பௌதிக தேகத்தாலும் பாதத்தாலும் திருவேங்கடமலையைத் தொடலாகாதென்று கருதி அடிவாரத்திலேயே இருந்து பெருமாளுக்குப் பல்லாண்டு பாடினதாகக் கூறப்படுகிறது.

திருவேங்கடமலைமேருமலையின் மகனென்றும், ஆதிசேஷனுக்கும் வாயு தேவனுக்கும் நேர்ந்த ஸம்வாதம் (சொற்போர்) காரணமாக அசைத்துத் தள்ளப்பட்டதென்றும் உள்ள பேச்சு மற்றொரு கற்பத்தைப் பற்றியது. அப்படியிருந்தாலும் இராமபிரான் கண்ணபிரான் முதலியோர்க்கு, தசரதன் வஸுதேவன் முதலியவர்களின் பிள்ளையாயிருத்தலோடு தமக்கென்றே ஏற்பட்ட திவ்யவுருவம் பெற்ற பகவானுடைய அவதாரமாயிருந்தலும் பொருந்துமாப்போலே, மேருமலைக்குப் பிள்ளையாயிருக்குந் தன்மைபெற்ற இத் திருமலைக்கு ஸ்ரீவைகுண்டத்திலுள்ள விளையாட்டுமலையின் அவதாரமாகுந்தன்மையும், ஆதிசேஷனும் பகவானும் ஆவேசித்துள்ளமை காரணமாக அவர்களின் திருமேனியாகுந்தன்மையும் பொருந்துவதில் தடையேதுமில்லை. கருடனால் வைகுண்டத்திலிருந்து நேராகக் கொண்டுவரப் படுதலும் மேருவின் மகனாக அவதரித்து ஆதிசேஷ வாயுதேவ ஸம்வாதத்தினால் கொணரப்படுதலும் ஆகிய இவ்வளவேயான மாறுபாடு வெவ்வேறு கற்பங்கள் காரணமாக உண்டாயிற்று. அதனால்தான் 'எல்லாவுலகோராலும் வணங்கப்பட்ட வேங்காடாத்ரியென்று பிரசித்தமான

மலை - எல்லாத் தேவர்களாலும் வணங்கப்பட்டு மிகப்பு னிதமான மேருமலையின் மகனாகும்' என்றும், 'வேகமுள்ள கருடனால் வைகுண்ட லோகத்திலிருந்து கொண்டுவரப் பட்ட விஷ்ணுவின் பெரிய விளையாட்டு மலையானது தேவர் முனிவர் கணங்களால் பூஜிக்கப்பட்டு ஸ்வர்ணமுகி நதியின் புனிதமான கரையில் இருக்கிறது' என்றும் வேங் கடமலைக்கு வெவ்வேறு கற்பங்களில் ஏற்பட்ட மேருவின் புத்திரத்தன்மை, கருடனால் கொணரப்பட்ட வைகுண்ட லோக விளையாட்டுமலைத்தன்மை ஆகிய இரண்டும் ஒரே மலையில் உள்ளனவாகக் கூறும் - ஸ்காந்த புராணம் முப்பத்தேழாமத்தியாயத்திலுள்ள இரண்டு வசனங்களும் பொருந்துகின்றன.

இங்ஙனமே ஸ்ரீவைகுண்டத்திலுள்ள விளையாட்டு வாவியான ஸ்வாமி புஷ்கரிணிக்கு ஸரஸ்வதியின் அவ தாரத் தன்மையும் முரண்பாடின்றிப் பொருந்தும். ஒரு கற்பத்தில் செயற்கரிய தவம் செய்த ஸரஸ்வதிக்கு அக்கா லத்திலேற்பட்ட விருப்பம் நிறைவேறுவதற்காக ஸ்வாமி புஷ்கரிணியில் புகுவதை மட்டும் பெருமான் இசைந் ததைக் கொண்டு ஸ்வாமி புஷ்கரிணி ஸரஸ்வதியின் அவதாரமென்று சொல்லத்தடையில்லையன்றோ?

மேருமலைக்கு மகனாகப் பெற்றமை மட்டுமே கொண்டு வேங்கடமலைக்காவது, ஸரஸ்வதி புகுரப்பெற்றமை மாத் திரமே கொண்டு ஸ்வாமி புஷ்கரிணிக்காவது ப்ராக்ரு தத்வம் (இவ்வுலகத்திய பஞ்ச பூதங்களினால் உண் டாக்கப்பட்டதென்னும் தாழ்வு) சிறிதும் சந்தேஹிக்க இடமில்லை. அங்ஙனம் ப்ராக்ருதத்வத்தை இசைந்தால் அவ்விரண்டிற்கும் எல்லாப்புராணங்களிலும் - இவ்வுல கத்திற்கு அப்பாற்பட்டதாய் மிகப் பரிசுத்தமாய்ப் பரமப தத்திய பஞ்ச பூதமயமாய்ப் பகவானுக்கு மிகப் பிரியமான பொருளாந்தன்மை கோஷிக்கப்பட்டிருப்பது பொருந்தா மற் போய்விடுமன்றோ? என்றிவ்வாறாக பகவத் ராமானுஜ முனிவர் நன்றாக ஆராய்ந்து நிச்சயித்துப் பிறருக்கும் விவரமாகக் கூறினார்.

அதனால் தான் அவர் முன்பு ஒரு யாத்திரையில் ஆழ்வார்களைப் போல் தாமும் திருவேங்கடமலையில் பாதம் வைத்தேறப் பொறுமல் அதன் அடிவாரத்திலேயே வெகுகாலம் வசித்து வந்தார். திருமலை நம்பிகள் அனந்தாழ்வான் முதலியோர் பலதடவைகள் நிர்ப்பந்தம் செய்து வேண்டிக்கொண்ட போதிலும் அடிக்கடி அங்குச் செல்ல அங்கீகரிக்கவில்லை. பின்பு ஸ்காந்த புராண முதற்பகுதியில் ஒன்பதாமத்தியாயத்தில், 'புண்ணியத்தை மேன் மேலும் வளர்க்கும் அவ்வேங்கடமலையை இவ்விதமாக ப்ரார்த்திக்க வேண்டும். தேவர் அனைவரும் வசிக்குமிடமாய்ப் பிரமன் முதலியோராலும் கௌரவித்து வணங்கப் பெற்று மிகப் புண்ணியமான பொன்மலையரசே உன்னை நான் காலால் மிதித்தேறுகிறேன். பாவமனம் படைத்த என்னுடைய இப்பாவத்தைக் கருணையினால் பொர்றுத்தருளவேணும். உனது சிகரத்தில் உறைந்தருளும் திருமாலை எனக்குக் காட்டியருளவேணும் என்று இவ்வாறு ப்ரார்த்தனை செய்துவிட்டுப் பிறகுதான் மனிதன் புனிதமான திருவேங்கடமலையின் கண் மெல்ல மெல்ல அடிவைத்துச் செல்லக் கடவன்' என்றுள்ள வசனங்களைக் கண்டு, இப்படிப்பட்ட நியமயத்துடன் திருவேங்கடமலையேறுவதில் புராணக்காரர் இசைந்திருப்பதைச் சிந்தை செய்து, இந்த நியமத்தின்படியே எப்போதாவது ஒவ்வொரு தடவை மட்டுமே திருமலையேறிப் பெருமாளைச் சேவித்துக் கொண்டு பெரும்பாலும் திருப்பதியிலேயே தங்கியிருந்து திருமலை அடிவாரத்திலேயே திருமலைநம்பிகள் திறத்தில் ஸ்ரீராமாயணம் படிக்கவாரம்பித்தார்.

## இராமாநுசர் ஏற்படுத்திய ஒழுக்கவிதிகள்:

பின்பு இவ்வாறு சாஸ்திரத்தில் கூறப்பட்ட திருவேங்கடமலையின் வைபவச் சிறப்பை நன்குணர்ந்த இராமாநுசமுனிவர் தம்முடைய ஸ்ரீராமாயணாசாரியரான திருமலை நம்பிகளும் சிஷ்யரான திருமலையனந்தாழ்வானும் திருவேங்கடநாதனது பெருமையை நன்கறிந்து

அபசாரம் ஏதுமின்றி அப்பெருமானுக்குத் திருமுகம் மலரும் படிக் கைங்கரியம் செய்து வருவதைக் கண்டு மகிழ்ந்தும், பெரும்பாலும் மற்ற அனைவரும் அபசாரத்தில் ஊன்றியி ருப்பதைப் பார்த்து மிக்க வருத்தமுற்று நன்னெறியோடு முரண்பட்ட அவர்களது செய்கையினாலுண்டாகும் அப சாரம் உண்டாகாதபடி சில நியமங்களை (ஒழுக்க விதிகளை) ஏற்படுத்த வேணுமென்று கருதி, திருமலைநம்பிகளையும் திருமலையனந்தாழ்வானையும் அழைத்து - வாரீர் ஆரி யர்களே இத்திருமலையில் இதன் பெருமையை அறியாத மக்கள் தம்மனம்போனபடி நடப்பதனால் உண்டாகும் அபசாரம் நேராமலிருப்பதற்காகச் சில நியமங்களை ஏற் படுத்த விரும்புகிறேன். அவற்றைத் தேவரீர்கள் இருவரும் இங்கு அவசியமாக நடத்திவைக்க வேண்டுமென்றும் வேண்டுகிறேன்.

'தொண்டு செய்வதில் பற்றுடையவர்கள் சிலரும் பிரம மத்தினிடம் ஊன்றித் தியானம் செய்வோர் சிலரும் தவம் புரிவோர் சிலரும் ஆராமம் அமைப்போர் சிலரும் பெருமான் மேனியழகைச் சேவிப்போர் சிலருமாக முனிவர்பெருமக்கள் அத்திருமலையில் இருந்தனர். சிலர் திருமலையில் இருந்து கொண்டே தினமும் பகவானை வணங்குகின்றனர். சிலர் அதன் சுற்றுப் புறங்களிலேயே எப்போதும் வசிக்கின்ற னர். மற்றும் சிலர் வந்து பெருமானை சேவித்து விட்டு மறுபடியும் வருகிறோமென்று விடைபெற்றுச் செல் கின்றனர். பூஜிக்கத்தக்கவரும் மஹாபாக்யசாலியுமாகிய அகத்திய மகாமுனிவர் தமது சீடர்களுடன் அத்திருமலை யில் வாசம் செய்துகொண்டு உயர்ந்த நந்தவனமொன்றை நிருமித்துப் பலவகை மலர்களாலேயே திருவேங்கடமு டையானை அர்ச்சித்துக்கொண்டு வெகுநாட்கள் ஆனந் தாமுதத்தைப் பருகினர்' என்று வராகபுராணம் முதற்பகுதி 53 எண்ணிட்ட இருபத்தோராவது அத்தியாயத்திலுள்ள வசனங்களால், பெருமாள் பக்கத்தில் இருந்து செய் யத்தக்கவைகளும் தொலைவில் இருந்துகொண்டு செய்ய முடியாதவைகளுமான பெருமான் திருமுக மலர்த்திக்கு

உறுப்பான கைங்கர்யங்களைச் செய்யும் சிலர் மட்டுமே திருமலைமேல் இருந்ததாக அறியப்படுவதனால், மற்றவர் கள் மலையின் கீழ் இருந்துகொண்டும் செய்யத்தக்க பகவத்குணுபவம் முதலிய செயல்களில் ஈடுபட்டவர்கள் மலையின் கீழேயே இருக்கவேண்டும். திருவிழாக்காலங்க ளில் மட்டுமே அவர்கள் மலைமீது செல்லக்கடவர்கள். மற்றபோது 'செல்லக்கூடாது என்று நியமம் ஏற்படுத்த வேண்டும்.

இங்ஙனமே 'அத்திருமலையில் உண்டான காய் கனி கிழங்கு முதலியவற்றை, அர்ஜுனா யாரும் தம் விருப் பப்படி உண்ணக்கூடாது. அம்மலை வைகுந்தநாட்டு மலையல்லவா' என்று ஸ்காந்த புராண ஸுவர்ணமுகரீ மாகாத்மியத்திலுள்ள பாரத்துவாச முனிவரின் வசனத் தினால் அப்ராக்ருதமான வேங்கடமலையில் உண்டாகிப் பெருமாளுக்கு நிவேதனம் செய்யத் தக்கதாகச் சாஸ்திரங் களில் அறியப்பட்ட காய் கனி கிழங்கு முதலிய பொருள னைத்தையும் திருவேங்கடவனுக்கு நிவேதனம் செய்யாமல் புசிக்கக்கூடாதென்று அறிவிக்கப்பட்டமையாலும், 'உண் ணத்தக்க கந்த மூல பலாதிகளையும் அன்னங்களையும் பெருமாளுக்கு முன்பு வைத்து நிவேதனம் செய்து அவர் பிரசாரத்தை உண்கின்றனர்' என்று அவ்விடத்திலேயே மறுபடியும் கூறியிருப்பதனாலும் கோவில்களுக்கு உபயோ கிக்கத் தக்கவையாக விஷ்ணுவாகமங்களில் விதிக்கப் பட்ட எல்லாப் பொருள்களையும், திருமலையில் நித்ய வாசம் செய்பவரும் யாத்திரிகராய் வருபவரும் பெருமாள் கோவிலிலேயே சமையல் செய்வித்துத் திருவேங்கடநாத னுக்கு நிவேதனம் செய்வித்து, அந்தப் பிரசாதத்தையே தமது வீட்டிலுள்ள மூர்த்திகளுக்கு நிவேதனம் செய்து அதைக் கொண்டே அவ்வக் காலத்துக்குத் தக்க ச்ராத் தங்களில் (திதிகளில்) தேவ பித்ருக்களுக்கு நிவேதித்துத் தாமும் உண்ணக்கடவர்கள் என்றும் நியமம் ஏற்படுத்த வேண்டும்.

இப்படியே 'மகரிஷிகள் அத்திருமலையில் எம்பெருமானுக்குச் சாத்திய சந்தனம் புஷ்பம் நிவேதித்த அன்னம் முதலியவற்றைக் கொண்டு ஆசிரமங்களில் தாம் பூஜிக்கும் மூர்த்திகளுக்கு ஆராதனம் செய்து கொண்டு வாழ்ந்தனர்" என்று பிரம்மோத்தரகாண்டம் ஏழாமத்தியாயத்திலுள்ள வசனத்தின் மூலம், வீட்டில் அர்ச்சிக்கும் மூர்த்திகளுக்கு, திருவேங்கடநாதனது பிரசாதமான சந்தன புஷ்பாதிகளாலேயே பூஜை நடந்ததாக அறியப்படுவதனால், மக்கள் திருவேங்கடமுடையானுடைய தோட்டங்களில் வீடுகளிலுள்ள அர்ச்சாமூர்த்திகளுக்கென்று தனிப்படப் புஷ்பம் முதலியவற்றைப் பறிக்காமல், திருவேங்கடமுடையானுக்காகவே அவற்றைப் பறித்து வந்து அவனுக்கு ஸமர்ப்பித்து அவற்றையே கொண்டு வந்து தமது வீட்டில் பெருமாளுக்கும் சாத்தித் தாமும் உபயோகிக்கடவர்கள் என்ற நியமமும் ஏற்படுத்த வேண்டும்.

இதை உதாரணமாகக்கொண்டு, திருமலையில் வசிப்பவர்கள் தாம் உண்ணவிரும்பி இனிமையாகச் சமைக்கும் க்ஷீராந்நம் (பாற்சோறு) பாயஸம் பருப்பு அப்பம் முதலியவற்றையும் தத்தம் இல்லங்களில் சமைக்காமல் கோவிலிலேயே சமைப்பித்துத் திருவேங்கடவனுக்கு அமுது செய்வித்தே அவற்றைத் தாம் உண்ணக்கடவர்களென்றும், 'கலியுகதத்தில் பிராணிகள் எல்லோரும் உணவு கொண்டே உயிர் தரிப்பவர்களல்லவா' என்று கூறியுள்ளபடி கலியில் மக்களனைவரும் அன்னத்தினாலேயே பிராணனைத் தரிக்கவேண்டியிருப்பதனாலும், கோவிலில் நாம் விரும்பும் போதெல்லாம் உணவு கிடைத்தல் அரிதாகையாலும், பசியைக் கட்டாயமாகத் தீர்க்க வேண்டியிருக்கையாலும் கோவிலுக்கு உபயோகப்படாத கறி காய் முதலியவற்றையும் அன்னத்தையும் தத்தம் வீடுகளில் சமைத்து உண்ணக்கடவர்களென்றும் நியமம் ஏற்படுத்த வேண்டும்.

இவ்விதமே, திருமலையில் வாசம் செய்பவர்களுக்கு மரணம் நேரிடும் போது அவர்களை மரணமடைவதற்கு

முன்பாகவே மலையிலிருந்து இறக்கிக் கொண்டுவரவேண்டுமென்றும், எதிர்பாராமல் திடீரென்று மரணம் நேர்ந்து விடுமானால் அவ்வுடலைக் கீழுக்கு இறக்கிக் கொண்டு வந்தே ஸம்ஸ்காரம் (எரித்தல் அல்லது புதைத்தல்) செய்யவேண்டுமென்றும் நியதி ஏற்படுத்த வேண்டும்.

இவ்வாறே 'பரமாத்மாவாகிய திருமால் மான் முதலிய விலங்கு கிளி முதலான பறவை இவற்றின் உருவந்தரித்து நித்திய சூரிகளோடும் திருமகளோடும் கூடி அத்திருமலையில் விளையாடுகிறார்' என்று வராகபுராணம் முதற்பகுதி 44 எண்ணிட்ட பன்னிரண்டாமத்தியாயத்து வசனத்தினாலும், 'தேவர்கள் அத்திருமலையில் மான் பறவை குதிரை இவற்றைக் கண்டு பகவானாகவே எண்ணி மனத்தில் வியப்பு உண்டாகப்பெற்று அவற்றை நன்றாகக் காண வேண்டுமென்று விரும்பிப் பின் தொடர்ந்தனர்' என்று அதிலேயே உள்ள வேறு வசனத்தினாலும், திருவேங்கடமலையில் சஞ்சரிக்கும் விலங்கு பறவை முதலியவைகளைப் பகவானாக ஊகிக்க இடமுள்ளமை அறியப்படுவதனால் தமோகுணம் மிக்க மக்கள் (ஊனுக்காக) அவற்றைக் கொல்லலாகாதென்றும் நியதி ஏற்படுத்த வேண்டும்.

இவ்விதமாகவே வராகபுராணம் முதற்பகுதி 51 எண்ணிட்ட பத்தொன்பதாமத்தியாயத்தில், 'இத்திருநாளைக் குறித்து என்னைச் சேவிப்பதற்காக யாவனொருவன் தன்னிருப்பிடத்திடத்திலிருந்து திருமலைக்குச் செல்ல ஓரடியேனும் எடுத்து வைக்கிறானோ அவ்வோரடியின் பயனாக அவனுக்கு என் பாதமடைதலாகிய வீடு பேறு கிட்டும். முனிவர் பெருமக்களே திருவேங்கடயாத்திரை செய்யும் போது மனிதன் எடுத்துவைத்த ஒவ்வோரடியும் பிரமஹத்தியை முதலியவற்றினால் நேரும் பாவங்களைப் போக்கிப் பிறவிக்கடலைத் தாண்டுவிக்கவல்லது. இம்மைப் பயன்களும் அவனுக்குத் தானே கிடைக்கும்' என்றுள்ள பகவானது வசனங்களினாலும், வாமன புராணம் 43 எண் குறிந்த இருபத்துநான்காமத்தியாயத்திலுள்ள 'வாம

தேவரே திருவேங்கடமுடையானுடைய திருவிழாக்களில் நாராயணகிரிக்கு (திருமலைக்கு) எந்தப் புண்ணியவான்கள் செல்லுகின்றூர்களோ அவர்களுக்கு உண்டாகும் பயனையும் கேட்பீராக. முனிவரே அந்தணரும் மற்றவருமாகிய மக்கள் நாராயணகிரியைக் குறித்துச் செல்வதாகக் குறுகக் குறுக வாகிலும் கால்களை வைத்து நடக்கும் அடிகளுக்கு நேரும் பலனையும் கேட்பீராக. தமது வீட்டிலிருந்து திருவேங்க டமலைவரை எத்தனை அடிகள் உள்ளனவோ அவற்றில் ஒவ்வோரடிக்கும் ஒவ்வொரு யாகம் செய்த பயன் இவ்வுலக மக்களுக்கு உண்டாகும்' என்று பிரமதேவன் கூறிய வச னத்தினாலும், பிரமஹத்தியை முதலியவற்றுலுண்டாகும் பாவம் நசித்தல், பிறவித்துயர் நீங்கி மோக்ஷமுண்டாதல் முதலிய பயன்களுக்கு உபாயமாகச் சொல்லப்பட்ட திரு வேங்டமலை யாத்திரையில்கூட, உடலைக்காக்க ஏற்பட்ட வாகனமேறுதல் முதலியவை உசிதங்களல்லவென்று அறி யப்படுவதனால், நேராகக் காலை வைத்து ஏறிச்செல்லும் ஸமயத்திலும், பெருமான் திருவிழாவில் திருமலையில் திக் குக்பலி ஸாதிக்கும் வீதிகளில் திக்குப்பலி ஸாதிக்கும் வீதிகளில் செல்லும் ஸயத்திலும் மனிதர்கள் செருப்பு அணிதலும் வாகனமேறிச் செல்லுதலும் கூடாதென்றும் நியதி கற்பிக்க வேண்டும்.

'சண்டாளர் துலுக்கர் தத்தம் சாதி நிலைகளுக்குரிய அறங்களினின்றும் நழுவியர் மற்ற பாவிகள் ஆகிய மனி தர்களாலே ஏற முடியாதல்லவா இவ்வுயர்ந்த திருவைகுந்த மலை' என்னும் வராக புராண வசனத்தாலும், 'சண்டாளர் துலுக்கர் முதலியவர்களாலும் வேதத்தை இசையாத நாத்திகர்களாலும் இவ்வுயர்ந்த புனிதமான திருமலை ஏற முடியாததாகும்' என்ற வாமன புராணம் 21 எண்ணிட்ட இரண்டாமத்தியாய வசனத்தாலும், சண்டாளர் முதலிய தாழ்ந்தவர்களுக்கு மலையேறும் தகுதி இல்லையென்று அறியப்படுவதனால் அத்தகையோர் இம்மலையின் கண் ஏறக்கூடாதென்றும் நியமம் விதிக்கவேண்டும்.

இத்தகைய சிறந்த ஆசாரநியமம் திருவேங்கடமலையில் எவ்வளவான பகுதியில் நடைபெறவேண்டுமென்றால், 'இங்ஙனம் திருமாலால் வினவப்பட்ட சிவபெருமான், ஐயனே திருவேங்கடநாதனே நீர் எங்கு நித்யவாஸம் செய்வீரோ, அங்கேயே நானும் நித்யவாஸம் செய்ய வேண்டுமென்று பதிலளிக்க, அதற்குக் காளமேகம் போன்ற காந்தி கொண்ட பகவான் மகாதேவா பார்வதீபதியே வல்லவனே, வேங்கடமென்னும் இம்மலையில் இக்கற்பம் முடியும்வரை வசிக்கப்போகிறேன், ஈசுவரனே நீயும் இம்மலைத் தாழ்வரையில் தென்கிழக்குத் திசையில் நித்யமாக வசிக்ககடவாய்' என்று கூறினாரென்று வராகபுராணம் முதற்பகுதி 49 எண்ணிட்ட பதினேழாமத்தியாயத்திலுள்ள வசனத்தினால், திருவேங்கடமலையில் தோன்றிய ஸ்ரீநிவாஸப்பெருமானைச் சேவிக்கவந்த பிரமன் சிவன் முதலியோரை விடைகொடுத்தனுப்பும் ஸமயத்தில் ருத்திரன் நீர் வசிக்குமிடத்தில் நான் வசிக்குமாறு அருள்புரியவேண்டுமென்று கேட்டதற்கு, திருவேங்கடமலைத் தாழ்வரையில் தென்கிழக்கே ஒரு யோஜனை தூரத்தில் நித்தியமாக வசிப்பாயென்று ஆணையிட்ட பகவானால், அப்ராக்ருதமான திருவேங்கடமலையில் ஸ்வாமி புஷ்கரிணி முதலாகக் கபிலதீர்த்தத்தின் கீழ்க்கரை வரையாக உள்ள பகவானுடைய ஸந்நிதியாகிய பகுதியில் வேறு தேவதைகள் வசிக்கலாகாதென்பது குறிப்பாக அறிவிக்கப்பட்டுவிட்டபடியினாலும், 'பிரம்மாண்டத்தில் திருவேங்கடமலையோடு ஒத்த இடம் வேறொன்றுமில்லை. செல்வம் நிறைந்த இச்சேஷகிரியானது புனிதங்களில் புனிதமானது' என்று திருவேங்கடமலை முழுவதுமே எல்லாத் தலங்களைவிட உயர்ந்ததாகவும் புண்ணியமானதாகவும் எங்கும் பிரசித்தமாயிருந்த போதிலும், 'முனிவர் பெருமக்கள் ஸ்வாமி புஷ்கரிணிக்கரையின் புண்ணியமான நான்கு பக்கங்களிலும் ஒரு யோஜனை தூரமுள்ள இடங்களில் மனமகிழ்ச்சியுடன் திருவேங்கடவன் திருவருளை விரும்பி உயர்ந்த தவத்தை மேற்கொண்டு வசித்தனர்' என்னும் வசனத்

தால் சில பரமரிஷிகள் ஸ்வாமி புஷ்கரிணிக்கு நான்கு திசைகளிலும் ஒரு யோஜனை தூரமுள்ள பகுதியானது மிகமிகப் பாவனமாய்ப் பகவான் மிகவும் விரும்பித் தங்கியிருக்கப் பெற்றதென்று நிச்சயித்து அவ்விடத்தில் தவமியற்றிக்கொண்டு நித்யவாஸம் செய்ததாக ஸுவர்ண முகரீமாகாத்மியங்கூறும் பகுதியில் அறிவிக்கப்பட்டுள்ள தனாலும், ஸ்வாமி புஷ்கரிணி முதலாகச் சுற்றும் ஒரு யோஜனை தூரத்தளவான பகுதியில் இத்திருமலையில் முற்கூறிய சிறந்த நியமம் நிலைபெறத்தக்கதென்று அறியப்படுகிறது.

இப்படி பரமபாவநமான திருவேங்கடமலையைத் திருவேங்கடமுடையானுடைய திருக்கோவிலாகவே கௌரவித்து இத்தலத்தில் வசிப்பவர்களும் யாத்திரையாக வரும் மற்றவர்களும் அவசியமாக ஆசரிக்கவேண்டியவையென்று அடியேன் நிச்சயித்த இந்தநியமங்களை அடியேனோடு கருத்து ஒருமித்து நிறைவேற்றிவைக்கத் திருவேங்கடமுடையான் ஸங்கல்பம் செய்து கொள்ளவேணும். இத்தகைய நியமங்கள் கடைப்பிடிக்கப்பட்டால் பெரும்பாலும் மக்கள் அபசாரப்பட இடமிராதென்று நினைக்கிறேனென்று (இராமானுச முனிவர்) கூறினர்.

## திருவேங்கடவன் திருவாணை :

அதன்பின்பு ஸ்ரீராமாநுஜ முனிவர் கூறியவையும் சாத்திரங்களுக்கு இணங்கியவையுமாகிய சிறந்த நியமங்கள் அநுஷ்டிக்கத் தக்கவையென்று நினைத்த திருமலை நம்பிகளும் திருமலையனந்தாழ்வானும் இவை திருவேங்கடமுடையானால் நடத்தப்பட வேண்டியவையென்றெண்ணி, 'பகவானே யதிராஜரது விருப்பத்தைப் பயன்பெறும்படிச் செய்வாயாக' என்று பெருமாளைக்குறித்து மனதினால் வேண்டிக் கொண்டனர். பின்பு அன்றிரவு திருமலை நம்பிகளின் கனவில் திருவேங்டநாதன் எதிரில் வந்து 'வாரீர் திருமலை நம்பிகளே எம்பெருமானாராகிய யதிராஜருடைய உத்தரவின்படி, முன்பு ஒரு காரணத்தினால்

விடப்பட்ட சங்கு சக்கரங்களை மறுபடியும் கைக்கொள்ளுகை எனக்கு எப்படி இஷ்டமாக ஆயிற்றோ, அப்படியே இப்பொழுதும் அவரிட்ட மற்ற கட்டளைகளும் எனக்கு இஷ்டமானவையே' என்று கூற, இதைக்கேட்டு விழித்தெழுந்த திருமலை நம்பிகள் இதனைப் பண்டிதர் பாமரரென்ற வாசியற அனைவர்க்கும் பகவான் மூலமாகவே அறிவிக்கவேணுமென்று திருவுள்ளங்கொண்டு மறுநாள் கோவிலுக்கு வந்து 'வாரீர் பகவானே திருவேங்கடமலை நாயகனே அலர்மேல் மங்கையுறைமார்பனே தேவரீர் அடியேனுக்குக் கனவில் இட்ட கட்டளையை நேராக மக்கள் அனைவரும் அறியும்படிச் செய்தருள வேண்டு'மென்று பிரார்த்தித்தனர். அப்போது திருவேங்கடநாதனும் ஒருபக்தனை ஆவேசித்து 'ஹேஜனங்களே எனது இவ்வாணையை நீங்களனைவரும் கேளுங்கள். நான் முன்பு செய்த ஸ்ரீராம க்ருஷ்ணாதி யவதாரங்களில் வசிஷ்டர் முதலான குருக்களின் ஆணையைப்போல, இப்போது ஸ்ரீபாஷ்யம் முதலிய நல்ல நூல்களை இயற்றியதன் மூலமாக நானே பரம்பொருளென்பதை வெளியிட்டவரும் எனக்குச் சங்கு சக்கரங்களை அளித்தவருமான ஸ்ரீபாஷ்யகாரருடைய (இராமானுசருடைய) ஆணையையும் ஆதரித்து அதன்படி அனுஷ்டிக்கிறேன். என்னைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் பாஷ்யகாரர் ஆணையிட்ட நியமங்கள் எல்லாவற்றையும் எனக்கு இஷ்டமானவையென்று நினைத்து நம்பிக்கையுடன் அநுஷ்டியுங்களென்று கூறியருளினான். திருவேங்கடமுடையானுடைய இவ்வாணையைக் கேட்ட அங்குள்ள மக்கள் அனைவரும் மகிழ்ந்து அப்போது அப்பெருமானுடைய அந்தரங்கத்தொண்டரான செங்கனிவாயன் என்னும் அர்ச்சகர் ஸ்ரீசடகோபனை (பெருமாள் திருவடி நிலைகளை) எல்லார் தலைகளிலும் ஸாதித்து 'வாரீர் பாகவதவர்களே இத்திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு இஷ்டமாகவும் சாஸ்திரங்களுக்கு ஸம்மதமாகவும் ஸ்ரீபாஷ்யகாரர் ஏற்படுத்திய இந்த நியமங்களை அனுஷ்டிப்பவர்கள் பெருமாளுக்கு மிகவும் பிரி

யமானவர் ஆவர். அனுஷ்டியாதவர்கள் பகவானுடைய திருவாணையான வேத சாஸ்திரத்திற்குப் புறம்பானவர் ஆவர்' - என்று நியமிக்கப்பட்டவர்களாய் இராமானுசமுனி வரின் நியமங்களை அப்படியே அனுஷ்டித்து வந்தனர்.

## திருமலையில் பூமாலை முதலியன அணியத்தகா

இனித் திருவேங்கடமலையில் பூமாலை முதலிய வற்றை உபயோகிக்கக்கூடாதென்னும் செய்தி கூறப்படும். இங்ஙனம் பகவானுடைய ஆணையினால், பகவத் ராமா னுஜரால் ஏற்படுத்தப்பட்ட - சாஸ்திர விதிக்கும் ஒட்டிய - பெருமாளுக்குச் சிறப்பாகத் திருமுக மலர்த்தியை உண்டாக்கும் நியமங்களை அனைவரும் கபடமில்லாமல் அனுஷ்டித்து வருமளவில், திருமலை நம்பிகளின் சிஷ்ய னொருவன் ரஜோகுண தமோகுணங்கட்கு வசப்பட்டு ஒரு நாள் பெருமாளுக்குச் சாத்தாத பூமாலையைத் தலையில் சூட்டிக்கொள்ள, அன்றிரவு அத்திருமலை நம்பிகளின் கன வில் பெருமாள் தோன்றி எதிரில் நின்று 'வாரீர் திருமலை நம்பிகளே உமது சிஷ்யன் தீக்குணங்கட்கு வசப்பட்டவ னாய் எனக்குப் பரிமளத் துரோகம் (வாசனைப்பொருள் விஷயமான தீங்கு) செய்தானென்று கூற, இதைக்கேட்ட அவர் நித்திரை விழித்தெழுந்து மறுநாள் கோவிலுக் குச் சென்று 'பகவானே இன்று முதலாகத் தினமும் உன்னுடைய மாலைப் பிரசாதத்தை யாருக்கும் அளிக் கவேண்டாம். கலியின் தோஷத்தினால் நல்லோர்க்கும் தீய ஒழுக்கங்கள் விளைய இடமுண்டு. திருமலையில் நீ யாருக்கும் பூமாலையைத் தராதிருந்தால், பெருமாளுக்குச் சாத்தின மாலையைத் தான் நான் சூட்டிக்கொண்டிருக் கிறேனென்று ஏமாற்ற முடியாதையாகையால் அரசன் தண்டிப்பானென்னும் அச்சத்தினால் தீய ஒழுக்கம் ஏற்பட இடமிராது. ஆகையால் இத்திருமலையில் பூமாலையே தரிக்கக் கூடாதென்ற தடையானது அரசதண்டனைவச மாக ஏற்பட்டுவிட்டால் அதுபோன்ற சாதாரணமான சகல போகங்களும் போகப் போக குறைந்துவிடும். ஆகையால்

அடியேனுடைய இக்கோரிக்கையை நிறைவேற்றி வைக்க நீ உறுதியான விரதம் கொள்ள வேண்டும்' என்று வேண்டிக்கொண்டனர்.

பிறகு ஸ்ரீ நிவாஸ பகவான் அவரது விண்ணப்பத்தைக் கேட்டு அர்ச்சகர் மூலமாக 'வாரீர் திருமலைநம்பிகளே எனது அர்ச்சாவதாரமானது என் பக்தர்களின் இஷ்டத்தை நிறைவேற்றுதலையே பயனாக உடைத்தாதலின் உம்முடைய கோரிக்கையை நிறைவேற்றுதற்காக, நான் சாத்திக்கொண்ட புஷ்பமாலை முதலியவற்றை இன்று முதலாக யாருக்கும் அளிக்கமாட்டேன், ஆகையால் இனி மேல் நான் அணிந்து களைந்த மாலை முதலியவற்றை ஸேனை முதலியார் முதலிய பரிவார தேவதைகளுக்குச் சாத்த வேண்டும். அல்லது பூலபாவியில் சேர்க்கவேண்டு மென்று விளக்கமாகத் திருவாணையிட்டருளினன். பின்பு இச்செய்தியைக் கேட்டு இராமானுச முனிவரும் மகிழ்ச் சியடைந்தனர்.

## ஸ்ரீஸேநாபதி ஜீயரென்னும் ஏகாங்கியை ஏற்படுத்தல்

இனித் திருவேங்கடமலையில் நித்ய வாசம் செய்து கொண்டு பெருமானின் திவ்யமான ஐச்வர்யத்தைப் பாது காப்பதற்காக, இராமானுசமுனிவர் தமக்குப் பிரதிநிதியாக (பதிலாக) ஸ்தாபித்த ஸ்ரீஸேநாபதி ஜீயரென்ற பெயரையுடைய நைஷ்டிகப் பிரம்மசாரியான (ஆயுள் முழுவதும் மணம் செய்து கொள்ளாமல் மாணியாகவே இருந்த) ஏகாங்கி ஸ்வாமியின் சரித்திரம் கூறப்படும்.

பகவத் ராமாநுஜ முனிவர் முற்கூறிய சிறந்த நியமங்களை ஏற்படுத்திய பின்பு, திருமலை நம்பிகளின் சிஷ்யனாகிய ஒரு ஸ்ரீவைஷ்ணவன் கலியின் தோஷத்தினால் முற்காட்டியபடி ஓர் நியமத்தை மீற நேரிட்டபடியைக் கண்டு, அந்நியமங்களை உள்ளபடியே அனுஷ்டிப்பதற்கும், ஸ்தல வாசிகளுக்கு அப்போதப்போது அந்நியமங்களின் பெரும்பயனை உபதேசித்து அவற்றை அவர்க

ளும் அனுஷ்டிக்கும்படிச் செய்வதற்கும், தேசாதிபதியான அரசனுக்கு அவ்வப்போது ஸ்ரீவைஷ்ணவ தருமங்களைக் கற்பிப்பதன்மூலம் நம்பிக்கையை உண்டாக்கி அதன் வாயிலாகத் திருவேங்கடமுடையானது திவ்யோத்ஸவம் முதலிய ஐச்வர்யங்களை வளர்ப்பதற்குமாக இத்திவ்ய தேசத்தில் பற்றற்ற மேற்பார்வையாளர் ஒருவர் ஸ்திரவாஸம் செய்து கொண்டிருக்க வேண்டுமென்று சிந்தித்து, திருமலை நம்பிகளையும் திருமலையனந்தாழ்வானையும் அழைத்து 'ஆரியர்காள் இத்திருப்பதியில் திருவேங்கடவனது திருச்செல்வங்களைப் பரிபாலிக்கவும், மக்கள் தீயொழுக்கமில்லாமல் இம்மை மறுமைப்பயன்களை அனுபவித்து இன்பமாக வாழ்வதற்குக் காரணமாக அடியேன் ஏற்படுத்திய நியமங்களை உள்ளபடியே நடத்திவைக்கவும் கோவிலிலுள்ள ஸர்வ பரிஜனங்களையும் அடக்கியாளுபவராக வைராக்கியத்தை முக்கியமாகக் கொண்ட உயர்ந்த ஒரு அதிகாரியை இத்திருமலையில் நித்யவாஸியாய் இருக்கும்படி ஸ்தாபிக்க வேண்டுமென்று சிந்தித்திருக்கிறேன். எப்போதும் பெருமாளுடைய குணங்களை அனுபவிப்பதிலும் தொண்டுகளைச் செய்வதிலுமே முக்கிய நோக்கமுடையவர்களாய்க் கோவில் பரிஜனங்களின் குணதோஷங்களைக் கண்டு அதற்குத் தக்கவாறு அவர்களைத் தண்டித்தல் முதலிய காரியங்களில் திருப்தியில்லாதவர்களான தேவரீர் இருவருக்கும் அவ்வக்காலங்களில் கோவிலில் தவறுமல் இருந்து அவ்வச் சந்தர்ப்பங்களுக்கேற்பச் செய்ய வேண்டிய காரியங்களில் குழப்பத்தினால் உண்டாகும் சிரமத்தைப் பொறுக்கவோ செய்யவோ முடியாமையினால், தேவரீர்களுக்கு அடங்கியவராய்த் தேவரீர்களின் ஆணையைப் பின்பற்றுமவராய் முற்குறித்த காரியங்களை நிறைவேற்றுவதில் ஊக்கங்கொடவராய்ப் பற்றற்றவரான அதிகாரியொருவரை ஸ்தாபிக்க விரும்புகிறேன். ஆகையால் தேவரீர் இருவரும் இசைந்து, அடியேன் ஏற்படுத்தும் அதிகாரி தமது கடைமையினின்றும் வழுவாமல் நடந்து கொள்ளும்படி அவரைப் பாதுகாக்க வேண்டும். அடியேன்

இங்கேயே ஸ்திரமாக இருக்கவல்லேனல்லேன். இருந்தால் அடியேனே இக்காரியத்தைச் செய்வேன்' என்று கூறி,

'ஒரு பிரம்மசாரி தனக்கு பற்றற்ற நிலையில் உறுதியான எண்ணம் இருப்பதாகத் தெரிந்தால் புத்திசாலியான அவன் அவ்வெண்ணத்தையே ஸங்கல்பித்து (ஆயுள் முழுவதும் மணம் செய்து கொள்ளாமல் இவ்வுறுதியான எண்ணத்தோடு இருக்கக்கடவேனென்று அறுதியிட்டு) காஷாயத்தை உடுத்தக்கடவன்' என்று பாரமேச்வர ஸம்ஹிதையிலுள்ளபடி, இல்லற வாழ்க்கையில் ஆசையற்று வீரியத்தை (கீழே விழவிடாமல்) மேல்நோக்கிச் செலுத்தி (அடக்கி) மந்திர பூர்வமாகக் காவித்துணியைத் தரித்த பிரம்மசாரியே நைஷ்டிகப் பிரம்மசாரியாகையால் அப்படிப்பட்ட ஒருவரைத் தேடப்பிடிக்க வேணுமென்று சொல்லி, அப்போது அனந்தாழ்வானுடைய சிஷ்யரொருவர் பிரம்மசாரியாய்க் குருகுல்வாஸத்தில் மிகவும் விரும்பி ஆசார்யகைங்கரியமொன்றிலேயே ஊன்றியவராய்ப் பற்றற்ற தன்மையராயிருக்கக்கண்டு அவரையழைத்து நல்லுபதேசம் செய்து, தாம் எண்ணியபடிக் காவியுடையணிந்துகொள்ளவும் திருவேங்கடமுடையான் கோவிலில் முன்சொல்லியபடி எல்லாக் கைங்கரியங்களையும் செய்யவும் அவரை இசைவித்து அவருக்கு அனந்தாழ்வானுடைய அனுமதியும் பெறுவித்து, நைஷ்டிகப் பிரம்மசரிய நிலைக்கு அங்கமாக முற்கூறிய ஸம்ஹிதாவசனத்தினால் அறியப்பட்ட காவியுடையை மந்திர பூர்வமாகத் தரிக்கும்படிச் செய்து, சேனை முதலியார் போன்று பகவத் கைங்கர்யபாரத்தை வகிப்பதனாலும், துறவறத்திற்கு அங்கமான முக்கோல் காவியுடையாகிய இரண்டில் ஒன்றாய்ப் பற்றற்ற தன்மையைத் தெரிவிக்கும் காவியுடையைத் தரிப்பதனாலும் விஷ்வக்ஸேனைகாங்கியென்றும் ஸேனாபதிஜீயரென்றும் திருநாமம் சாத்தி, 'வாரீர் ஏகாங்கியே திருவேங்கடமுடையானது திருச்செல்வத்துக்குக் குறைவு வராமலும் கோவிலில் கைங்கர்யம் செய்பவர்கள் அபசாரம் செய்யாமலும் இருக்கும்படி நல்ல உபதேசம் செய்து

அவர்கள் மூலமாகப் பெருமாள் கைங்கரியங்களை நடத்திவையும். திருவேங்கடமுடையானுடைய திருமேனிக்கும் திருப்பவள வாய்க்கும் தக்கவாறு ஔபசாரிகம் (கிட்டிநின்று செய்யும் தூப தீபங்கள் காட்டுதல் முதலியவை) ஸாம்ஸ்பர்சிகம் (தொட்டுச் செய்யும் பீதாம்பரம் சந்தனம் புஷ்பமாலை யணிவித்தல் முதலியவை) ஆப்யவஹாரிகம் (பாற்சோறு பாயஸம் சர்க்கரைப் பொங்கல் முதலிய இனிய பொருள்களை நிவேதனம் செய்தல்) என்கிற எல்லாவிதமான போகங்களையும் முறைப்படி நிறைவேற்றிவையும். தேசாதிபதியான அரசனை அவ்வப்போது அணுகி அவனுக்குப் பெருமாள் கைங்கரியத்தில் ஊற்றத்தை வளரச்செய்யும். அவனைக் கொண்டு, நின்று போன தொண்டுகளை மறுபடியும் உண்டாக்கியும், அவ்வக்கால தேசங்கட்கு ஏற்றவாறு புதிதான கைங்கரியத்தை ஏற்படுத்தியும், நடந்துவரும் கைங்கரியங்களை மேன்மேல் வளர்த்தும், திருவேங்கடமுடையான் கைங்கரியப்பொறுப்பை ஏற்றவர்களும் அதனால் அப்பெருமானது மிகவுயர்ந்த அபிமானத்திற்குப் பாத்திரமானவர்களுமான திருமலை நம்பிகள் அனந்தாழ்வான் ஆகிய இருவரிட்ட கட்டளையைத் தலையால் ஏற்று நடத்தியும் திருவேங்கடவனது திவ்யைச்வர்யத்தைப் பரிபாலனம் செய்யும்' என்று நியமித்தருளினார். (இராமாநுச முனிவர்).

## அந்த ஏகாங்கிக்கு மடம் முதலானவற்றை உண்டாக்குதல்

மேலும் அவ்விராமானுச முனிவர், இராமாவதாரத்தில் பெருமாளுடைய குற்றமற்ற நித்யகைங்கரிய பாரத்தை அனுமான் வகித்தபடியினால் அவருடைய அபிமானம் ஏற்படுத்துவதற்காக அவர் ஸந்நிதிக்குச் சமீபத்திலேயே அவ்வேகாங்கிக்கு வாஸம் செய்ய மடமொன்றைக் கட்டுவித்து, ஸ்ரீராமாயண க்ரந்த சாத்துமுறைச் சமயத்தில் திருமலைநம்பிகளால் அருளப்பட்டுத் தம்மால் ஆராதிக்கப் பட்டு வரும் சக்ரவர்த்தி ' திருமகனாரை (இராமபிரானை)

அம்மடத்தில் எழுந்தருளப்பணணி அப்பெருமானுக்குத் திரு வாராதனம் ஊக்கமாகச் செய்யும்படி அவ்வேகாங்கியை நியமித்து, திருவேங்கடமுடையான் கைங்கர்ய பாரத்தை ஏற்பவரும் இராமபிரானைப் பூஜிப்பதில் முழுநோக்குடை யவருமான இந்த ஏகாங்கிக்கு, முன்பு அந்த ஸ்தானத்தை வகித்த ஹனுமானுடையதான லக்ஷணங்களே பகவத் கைங்கரியபாரத்தை வகிக்குத் தன்மையைத் தெரிவிக் கின்ற சிறந்த லக்ஷணங்களாக இருக்கத்தக்கனவென்றும், ஹனுமானுடைய அபிமானத்தை வளர்ப்பதனால் குற்றமில் லாத பகவத் கைங்கரியத்தை ரக்ஷிப்பதற்கு உறுப்பானை வையென்றும் நினைத்து அனுமானுருவம் பொறித்தவை களான ஒரு மோதிரம், கோவில் வாசற்கதவில் பூட்டும் பூட்டுக்கு ஒரு திறவுகோல், ஒரு மணி, கொடித் துணி, ஒரு கொடித்தடி ஆகியவற்றை நிருமாணம் செய்வித்துத் திரு வேங்கடமுடையான் முன்பே வைத்து, அப்பெருமானது ஆணையைப் பெற்று அவ்வேகாங்கிக்குக் கொடுப்பித்து, அது முதற்கொண்டு அவர் கைங்கரியத்திற்குச்செல்லும் போது அம்மணியோசையுடனும் அக்கொடியுடனும் செல் லவேண்டுமென்றும், அனுமனுருவம் பொறித்த மோதிரத் தால் கருவூலம் தானியக்கூடம் கோவில் முதலியவற்றின் வாசற்கதவுப்பூட்டுக்களிலும் பணப்பெட்டிகளிலும் ஆப ரணப்பெட்டிகளிலும் முக்கியமாகக் காப்பாற்றவேண்டிய எல்லாவிடங்களிலும் பாதுகாப்புக்கு உறுப்பாக முத் திரை (ஸீல்) வைக்க வேண்டுமென்றும், அனுமானுருப் பொறித்த திறவுகோலால், தினந்தோறும் இரவும் பக லும் பெருமாள் திருவாராதனம் முடிவு பெற்ற பிறகு கோவிற்கதவில் பதித்த பூட்டைப் பூட்ட வேண்டுமென் றும் இங்ஙனம் பெருமாளுடைய திவ்யைச்வர்யத்தின் பாதுகாப்புக்கான நியமங்களைச் செய்தருளினர்.

## யாதவராஜனுக்குக் கட்டளையிடுதல்

பின்பு அந்த பகவத்ராமானுஜர் தமது திருவடிகளில் சேவித்திருக்கும் யாதவ மன்னனை அழைத்து 'வாராய்

யாதவராஜனே நாடோறும் நன்றாக வளர்ந்து வருகின்ற கலியுக ஆடம்பரத்தின் பலத்தினால் திருவேங்கடநாத னது திவ்யைச்வர்யத்திற்கு எல்லாவிதமாகவும் தீங்கு நேரிடுமென்று என்மனம் அஞ்சுகிறது. ஆகையால் நான் இக்கட்டுப்பாடுகளைச் செய்தேன். இவற்றை முறைப்படி நிறைவேற்றி வைக்கக்கடவாய். இக்கோவிலில் உள்ள கைங்கரியம் செய்வோரும் மற்ற பரிஜனங்களும் ஆகிய அனைவரும் எனக்குப் பிரதிநிதியாக என்னால் ஏற்ப டுத்தப்பட்ட இந்த விஷ்வக்ஸேன ஏகாங்கிக்கு எல்லாவ கையிலும் அடங்கி நடக்க வேண்டுமென்றும் இவருடைய ஆணையை மீறியவர்கள் அவ்வுரிமையிலிருந்து நீக்கப் படுவரென்றும் மிக பலமுள்ள கடுமையான உத்தரவை மிகவுறுதியாகப் பத்திரிகை மூலம் அறிவிக்கக் கடவாய். இவர் மரணமடைந்தாலும் தமது கடைமையில் ஊக்க மின்றி வரம்புமீறி நடந்தாலும், எனக்கும் கௌரவித்தக்க மிகப் பெரியவர்களாய் வயது முதிர்ந்தவர்களான திரு மலை நம்பிகள் அனந்தாழ்வான் ஆகிய இருவரின் அனுமதியை ஆதரித்து இவருடைய ஸ்தானத்தில் வேறொ ருவரை நியமிக்கக் கடவாய். இப்படிப்பட்ட ஏகாங்கி ஒருவர் இல்லாவிடில் பெருமாள் கைங்கரியங்கள் குறையற நடைபெறமாட்டா. ஆதலால் அவசியமாகக் கீழ்க்கூறியபடி உத்தரவுப்பத்திரிகை வெளிப்படுத்தக்கடவாய்' என்று நிய மித்து அதை வெளியிடவும் செய்து அர்ச்சகர் பரிசாரகர் மற்ற அதிகாரிகள் ஆகிய யாவரையும் அந்த ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவருக்கு அடங்கி நடக்கும்படிச் செய்து அவர் மூலமாகத் திருவேங்கடமுடையானுடைய தொண்டுகள் அனைத்தும் நடைபெறச் செய்தருளினார்.

இங்ஙனம் இராமாநுச முனிவர் தம்முடைய ஸ்தானத் தில் ஸ்ரீசேனாபதியதி என்னும் மறுபெயரைப் பெற்ற விஷ்வக்ஸேன ஏகாங்கியை நிலைபெறுத்தி, திருமலை நம்பிகளால் தமக்கு அளிக்கப்பட்ட சக்ரவர்த்தி திருமக னுக்குத் திருவாராதனம் செய்யும்படி அவரை ஏற்படுத்திச் சிந்தையில் கவலையற்று, முன்பே கீழ்த்திருப்பதியில் பிர

திஷ்டை செய்விக்கப்பட்டவராய் ஆண்டாளோடு சேர்ந்த, திருச்சித்திரகூட நாதரான ஸ்ரீகோவிந்தராஜப்பெருமாளு டைய திவ்யைச்வர்யத்தையும் இடையூறின்றி நன்ருகக் காப்பாற்ற வேணுமென்று யாதவராஜனுக்கு உத்தரவிட்டு ஸ்ரீரங்கநகரத்துக்குச் சென்று சேர்ந்து அவ்வப்போது திருவேங்கடமலையின் வைபவத்தைய்ும் ஆராய்ந்துவந்த னர்.

## ஸ்ரீவேங்கடேச சடகோப ஜீயர் ஸ்வாமி

இனித் திருமலையில் ஸ்ரீபகவத் ராமாநுஜமுனிவரால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீவேங்கடநாத (அப்பன்) சடகோப ஜீயர் ஸ்வாமியின் சரிதம் கூறப்படும். ஆதிசேஷாவதார மாய் ஸகலதிவ்யதேச ரக்ஷணத்திலேயே ஊன்றியிருந்த ஸ்ரீபகவத் ராமானுஜ முனிவர் திருவேங்கடமலையாகிய திவ்ய தேசத்தைக் குறித்து எழுந்தருளிய பல யாத்திரை களுக்குள்ளே முதல் யாத்திரையில் விட்டலதேவனென்னும் ஓரரசனை மிகப் பிரிய தொண்டனாக ஆக்கிக் கொண்டு அவன் மூலமாக, ஜீவனத்திற்காக இளையமண்ட்யமென்று பெயரைப் பெற்றதாய் ஆற்றுநீர்ப் பாய்ச்சலையுடைய கிராமமொன்றைக் கொடுப்பித்துத் தம் திருவடித்தாமரைக ளைத் தஞ்சமாக அடைந்த சில ஸ்ரீவைஷ்ணவர்களைக் கீழ்த்திருப்பதியில் வசிக்கச்செய்து அவர்களுக்குத் தத்து வப்பொருள்கள் அனைத்தையும் உபதேசித்துக்கொண்டும், ஆழ்வார்கள் புராணப்பிரசித்தரான சுகர் முதலிய பரம ருஷிகள் பிரகலாதன் முதலான பாகவதர்கள் அம்பரீஷாதி ராஜருஷிகள் ஆகிய இவர்கள் போன்று, ஆதிசேஷாவதார மாகவும் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து வந்த அப்ராக்ருதமான பகவான் விளையாடும் மலையாகவும் பகவானுடைய திவ் யமான திருமேனியாகவும் புராணத்தினால் அறியப்பட்ட திருவேங்கடமலையைத் தாமும் ஏற இசையாதவராய்க் கீழிலிருந்தே திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் செய்துகொண்டும் அடிவாரமாகிய கீழ்த்திருப்பதியிலேயே சிலநாட்கள் இருந்து, பின்பு முன்னொருகால் (ஸ்ரீரங்

கத்தில்) திருவாய்மொழி காலக்ஷேப ஸமயத்தில் தாமே இட்ட ஆணையின்படி இங்கு வந்து நந்தவனம் ஏரி முதலியவற்றைத் தொண்டாகச் செய்து தினந்தோறும் நறுமணம் மிக்க திருத்துழாய் மலர்மாலை ஸமர்ப்பிக்கும் கைங்கரியத்தினால் திருவேங்கடமுடையானை மகிழ்வித்து அதனால் மிகமிக உயர்ந்து பரந்த பகவத் கருணையாகிய வெள்ளமானது தம்மேலே பாயப்பெற்ற அனந்தாழ்வான் பல ஸ்ரீவைஷ்ணவர்களுடன் திருமலையிலிருந்து இறங்கி வந்து வேண்டத் திருவேங்கடமலையேறிச் சென்று, அங்குப் பெருமான் திருக்கோவிலின் தென்மேற்குத் திசையில் அவ்வனந்தாழ்வான் தமதாணையைப் பின்சென்று நிருமித்த தோட்டம் ஏரி முதலியவற்றைக் கண்டு மகிழ்ந்து தமது கருணையினால் குளிர்ந்த கடைக்கண்ணோக்கமாகிய பிரவாஹத்தினால் அவரை நனைத்தல் அணைத்தல் முதலியவற்றால் கொண்டாடி, ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி ஸ்ரீவராகப்பெருமானையும் திருவேங்கடமுடையானையும் ஸேவித்து, ஆளவந்தாரின் ஆணையின்படி வெகுநாட்களுக்கு முன்பே இங்குவந்து, பெருமாளுக்குத் திருமஞ்சன தீர்த்தம் கொண்டுவருதல் முதலான தொண்டுகளினால் திருவேங்கடவனை ஆனந்திப்பித்து வரும் தம் மாதுலராகிய (தாய்மாமன்) திருமலைநம்பிகளின் உத்தரவின்படி மூன்றுநாட்கள் உண்ணுமலேயே திருமலையில் தங்கிப் பெருமாளைச் சேவித்துக்கொண்டிருந்து, பின்பு கீழிறங்கித் திருப்பதியிலேயே ஒரு வருஷகாலம் வாசம் செய்து கொண்டு திருமலைநம்பிகளிடத்தில் ஸ்ரீராமாயணத்தின் விசேஷார்த்தங்களைக். கேட்டறிந்து அவ்வப்போது நேர்ந்த சில கைங்கரியங்களையும் செய்து கொண்டிருந்து, மறுபடியும் ஸ்ரீரங்கம் செல்லவிரும்பித் திருமலையேறித் திருவேங்கடமுடையானைச் சேவித்து விடைபெற்றுக்கொண்டு தமது மிகப்பிரிய சிஷ்யராய்த் தமது பிரிவைப் பொருது வருந்தும் அனந்தாழ்வானுக்கு, தமது அர்ச்சைத் திருமேனி (விக்ரஹம்) ஒன்றை நிருமாணம் செய்வித்து அதைத் தாம் தழுவிக்கொண்டு கொடுத்தருளி, திருமலைநம்பிக

ளிடமிருந்து கோவிந்தபட்டரைத் (சிறிய தாயார் குமாரரான எம்பாரைத்) தாரைவார்த்துக் கொடுக்கப்பெற்று அவரையும் அழைத்துக் கொண்டு சிஷ்யபரிவாரத்துடன் ஸ்ரீரங்கத்துக்கே எழுந்தருளினார்.

அதன்பின்பு வேறொரு யாத்திரையில் அந்த பகவத் ராமானுஜமுனிவர் - சைவர்கள் திருவேங்கடமுடையானை வேறு தேவதையென்று வாதித்துச் செய்த கோலாகலத்தைப் பரிஹரிக்க வந்து அவ்வாரவாரத்தை அடியோடு பரிஹரித்துத் தேசாதிபதியாகிய யாதவமன்னனைத் தமக்கு அந்தரங்கத்தொண்டனாக்கி அவன்மூலமாக விமான மண்டப கோபுராதி கைங்கரியத்தைச் செய்து, கிரிமிகண்ட (புழுத்த கழுத்தை உடைய) சோழனது உபத்திரவம் காரணமாக எழுந்தருளிய திருச்சித்திரகூடநாதனான கோவிந்தராஜனைத் தேவாதிதேவனோடுகூடத் திருப்பதியில் பிரதிஷ்டை செய்வித்து, அப்பெருமானுக்குத் தேவியாக பூதேவியின் அவதாரமாய் இடத்திருக்கையில் செங்கழுநீர்மலர் விளங்கப்பெற்ற ஆண்டாளை அப்பெருமாளுக்கு வலதுபுறத்தில் பிரதிஷ்டை செய்வித்து, அவ்விருவரின் திருநாள் முதலியவற்றைத் திருவேங்கடமுடையானுடைய திருநாள்களுக்குத் தடங்கலில்லாதபடி நடத்த நியமித்து அவ்வப்போது ஏற்படும் பலவகைக் கைங்கரியங்களையும் செய்துகொண்டு இருந்து, மறுபடியும் திருவரங்கம் செல்ல விருப்பமுடையவராய்த் திருமலை நம்பிகளையும் அனந்தாழ்வானையும் முன்னிட்டுத் திருமலையில் இராமதூதரான அனுமார்க்கு முன்பு மடமொன்றைக் கட்டுவித்து முன்பு ஸ்ரீராமாயண சாத்துமுறை ஸமயத்தில் திருமலை நம்பிகள் தமக்குத் தந்தருளிய ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனை அதில் எழுந்தருளப் பண்ணித் தமக்குப் பிரதிநிதியாக அவரை ஆராதிப்பதன் பொருட்டும் திருவேங்கடமுடையானுடைய ஸகல கைங்கரியங்களையும் நிர்வகிப்பதன் பொருட்டும், திருமலையனந்தாழ்வானுடைய சிஷ்யராய்க் குருகுலவாசத்தில் பேரன்பு கொண்டு அவருக்கு ஸகல கைங்கரியங்களையும் செய்வதொன்றிலேயே ஊன்றியவரு

மான ஒரு நைஷ்டிகப்பிரமசாரியை, பாரமேச்வர ஸம்ஹிதையில் கூறியவாறு விதிப்படியே காஷாயவுடை தந்து ஏகாங்கியென்று கூறத்தக்கவராகவும் ஸேனாபதிஜீயரென்னும் திருநாமமுடையவராகவும் அனுமனுருவம் பொறித்த மோதிரம் மணி கொடி திறவுகோல் முதலிய சில லக்ஷணமுடையவராகவும் செய்வித்து அம்மடத்தில் நிறுவி, யாதவராஜன் மூலமாக - திருவேங்கடமுடையான் கோவிலைச் சார்ந்த பரிஜனங்கள் பரிசாரகர்கள் அதிகாரிகள் இவ்வனைவரையும் எல்லாவிதத்தாலும் அவ்வேகாங்கிக்கு அடங்கி நடப்பவர்களாகவும் அந்த ஏகாங்கியைத் திருமலைநம்பிகளுடையவும் திருமலையனந்தாழ்வானுடையவும் வசத்தில் இருப்பவராகவும் செய்வித்து அவ்விருவரின் அனுமதியைப் பெற்று மனத்தில் சிறிதும் கவலையின்றி ஸ்ரீரங்க நகரம் எழுந்தருளினார்.

அதற்குப் பிறகு பிறிதொரு யாத்திரையில் பூஜ்யரான அவ்விராமானுச முனிவர் திருமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடமுடையானைச் சேவித்துக்கொண்டிருந்து, அப்போது கலியுகத்தில் நாலாயிரத்திருநூற்றிருபதாண்டுகளும், சாலிவாஹனசகத்தில் ஆயிரத்து நாற்பத்தோராண்டுகளும் கழிந்து தமக்கு நூற்றிரண்டு பிராயங்கள் சென்றபடியை நினைத்து அனந்தாழ்வானை அழைத்து, வாரீர், அனந்தாழ்வானே நான் நூற்றிரண்டு வயதுடையவனாக ஆகிவிட்டேன். இனிமேல் இங்கு அடிக்கடி வந்து செல்லத்தக்க வலிமையுடையேனல்லேன். திருமலைநம்பிகளும் அவருடைய புத்திரர்களும் பரமபதம் சென்று சேர்ந்தனர். ஆகையால் இப்போது இங்கு நீர் ஒருவரே திருவேங்கடநாதனது கைங்கரியப்பொறுப்பை ஏற்று அறுபத்தாறு பிராயமுடைய முதியவராயிருக்கிறீர். ஆகையால் நீரே இங்குத் திருவங்கடமுடையானுக்குத் தொண்டுபுரியும் அனைவரையும் நிர்வாகம் செய்யத் தகுதிபெற்றிருக்கிறீர்.

என்னுடைய பெருமாளான சக்ரவர்த்தி திருமகனாரை ஆராதிப்பவராகவும் திருவேங்கடமுடையானது கைங்க

ரிய பாரத்தை வகிப்பவராகவும் என்னால் முன்பு நிய மிக்கப்பட்டு நைஷ்டிகப் பிரமசாரியாய் உமது சிஷ்யராய் ஸேனாபதிஜீயரென்று மறுபெயரையுடைய இந்த விஷ் வக்ஸேன ஏகாங்கியாகிய தனிமனிதர் எல்லாக் கைங்கரி யப் பொறுப்பையும் வகிக்க வல்லவரல்லர். ஆகையால் இவருக்குத் துறவறம் தந்து பிரதானராக்கி இவருக்கு உதவியாக மூவர் அல்லது நால்வர் ஏகாங்கிகளை ஏற் படுத்தி அவர்களை இத்துறவிக்கு அதீனராகச் செய்து அவர்கள் அனைவராலும் திருவேங்கடமுடையானது கைங்கரியத்தை செய்விக்க விரும்பியுள்ளேன்.

இப்படியே திருவாய்மொழி என்னும் தமிழ்வேதத்தில் மூன்றும்பத்து மூன்றுந் திருவாய்மொழியில், 'எங்கெங்கு எம்பெருமான் செல்லுகின்றானோ அங்கங்கு முக்தியடைந்த ஜீவாத்மாவும் தொண்டு செய்வதற்காக அப்பெருமானுடன் கூடச் செல்லுகின்றான்' என்று சுருதி கூறியபடியே, திருவேங்கடமுடையானுக்கு எல்லாவிடத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லாநிலையிலும் கூட இருந்து செய்யத் தக்க எல்லாவிதமான கைங்கரியங்களையும் செய்யக்க டவே'னென்று பாரித்த நம்மாழ்வாருடைய அப்படிப்பட்ட பாரிப்பைப் பூர்த்திசெய்வதற்காக, அவர் பெயரைப் பெற்ற வராக ஒருவரை இங்கு ஸ்தாபித்துத் திருவேங்கடமுடை யானுடைய ஸகலவித கைங்கரியங்களையும் செய்விக்க வேணுமென்று வெகுநாட்களாக விருப்பம் கொண்டிருக்கி றேன்.

ஆகையால் ஸேநாதிபதியென்னும் விஷ்வக்ஸேன ஏகாங்கியாகிய உமது இந்த சிஷ்யரையே துறவறம் பூணச் செய்து நம்மாழ்வாரின் பெயரை அவருக்குச் சாத்த ஆசைப்படுகிறேன் என்று கூறி, அனந்தாழ்வானுடைய அங்கீகாரத்தைப் பெற்று, விகாரிவருஷம் தை மாதம் சுக் லபக்ஷம் வெள்ளிக்கிழமை ஒரு சுபமுகூர்த்தத்தில் விஷ்வக் ஸேன ஏகாங்கிக்கு சாத்திரமுறைப்படி ஸந்நியாஸாச்ரமம் தந்து திருவேங்கடநாத (அப்பன்) சடகோப ஜீயரென்று

திருநாமம் சாத்தி அவரையே தமது மடத்தில் முக்கியமாக சக்ரவர்த்திதிருமகனுக்கு ஆராதனம் செய்யுமாறு நிறுத்தி, அவரைக்கொண்டே அனந்தாழ்வானுடைய சிஷ்யர் நால்வருக்கு ஏகாங்கிகாஷாயத்தைக் கொடுப்பித்து அவர்களைத் திருவேங்கடமுடையான் தொண்டிலேயே ஊன்றினவர்களாகவும் அந்த ஜீயரை அனுஸரித்துக் கொண்டிருப்பதவர்களாகவும் செய்து இவர்கள் அனைவரையும் எல்லாப்படியாலும் அனந்தாழ்வானுக்கு வசப்பட்டவர்களாக ஆக்கி, யாதவராஜனை அழைத்து, வாராய் யாதவமன்னனே நூற்றிரண்டு பிராயங்கள் செல்லப்பெற்றுக் கிழவனான நான் இனி இச்சரீரத்தை விடும் வரையில் ஸ்ரீரங்கத்திலேயே வாழ விழைந்துள்ளேன். அடிக்கடி இங்கு வந்து செல்லுவதற்கும் எனக்கு வலிமையில்லை. ஆதலால் இவ்வனந்தாழ்வானை முன்னிட்டுக் கொண்டு, நான்கு ஏகாங்கிகளுடன் கூடிய இச்சடகோபஜீயர் மூலமாகத் திருவேங்கடமுடையானது கைங்கரியம் அனைத்தையும் நன்றாக நிறைவேற்றி வைக்கக்கடவாய்.

கலியின் பெருங்கொடுமையினால் ஆஸ்திகர்களுக்கும் துரோகசிந்தனை உண்டாகக்கூடும். ஆகையால் பற்றற்றவராய்க் கைங்கரியத்திலேயே கண்ணுங்கருத்துமாயிருக்கின்ற இவர்கள் கைங்கரியம் நன்றாக நடைபெறுகிறதா இல்லையா என்று ஆராயும்பொருட்டு நியமிக்கப்பட்டுள்ளனர். திருவேங்கடமுடையானுடைய பொருள்களின் வரவு செல்வுகள் திருவாபரணங்கள் முதலிய விஷயங்களில் அப்பன் சடகோபஜீயரைச் சேர்ந்த பரிஜனங்க்ளாலும் ஒரு கணக்கு (அமுல்நாமா) எழுதப்படவேண்டுமென்று வரையறை செய்து, கோவில் காரியம் பார்க்கும் அதிகாரிகளால் திருவேங்கடவனது செல்வம் களவுபோகாமலிருக்குமாறு உறுதி செய்யக்கடவாய்.

இந்நால்வர் ஏகாங்கிகளும் முன்பு நியமிக்கப்பட்ட ஸேநாபதிஜீயரென்ற ஒரு ஏகாங்கியின் ஸ்தானத்தில் ஒருவருக்கொருவர் உதவியாக அவ்வக்கைங்கரியங்களை ஸங்கமா

கச் செய்வதன்பொருட்டு நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்களுடன்கூட எல்லாக் கைங்கரியங்களையும் செய்யுமவராகவும் ஸகலகைங்கர்ய நிர்வாஹ பாரத்தை வகிப்பவராகவும் இச்சடகோபஜீயர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

இவ்வனந்தாழ்வானை முன்னேயிட்டுக்கொண்டு இவ்வனைவர் மூலமாகவும் முறைப்படிக் கைங்கரியங்கள் நடைபெறுமாறு பாதுகாக்கக் கடவாய்.

இவ்வனந்தாழ்வான் திருவேங்கடமுடையானது எல்லையற்ற கருணைக்குக் கொள்கலமானவர். நமக்கு மிகமிகப் பிரியரானவர். சாத்திரக்கருத்துக்களை நன்கறிந்தவர். சாஸ்திரங்களில் கூறிய தருமங்களையும் ஆசாரங்களையும் நிலைநிறுத்துவதில் ஆற்றல் படைத்தவர். ஆகையால் இவர் ஆசார்யஸ்தானத்தை நிர்வஹிக்குமவராக (ஸ்தலாசார்ய புருஷராக) நம்மால் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

ஆகையால் இவரை முன்னிட்டு இவருடைய நியமனத்தின்படியே ஸகலசாத்திர தருமங்களும் வரம்பழியாமல் கோவிலில் நடக்கும்படி செய்யவேண்டும்.

இத்தகைய ஆசார்யஸ்தானத்தை நிர்வாகம் செய்யும் புருஷர்களை திவ்யதேசங்களில் கௌரவித்து வம்சபரம்பரையாக ஸ்தாபிக்கவேண்டும். இல்லையேல் ஸகல சாஸ்திர தரும வரம்புகளும் அழிந்துபோய்விடும்.

ஆகையினால்தான் சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட தரும நியமங்களை நிலைநிறுத்துவதற்காக, கல்வி குலம் முதலியவற்றால் கௌரவிக்கத்தக்கவர்களும் பிரமஞானம் படைத்தவரில் தலைவர்களும் சாஸ்திரப் பொருள்களைப் போதிப்பதில் ஊக்கமுடையவர்களுமான ஆசார்ய புருஷர்கள் எழுபத்துநால்வர் எல்லாவிடங்களிலும் நம்மால் ஸ்தாபிக்கப்பட்டு ஆசார்ய ஸ்தானத்தை நிர்வஹித்து வருகின்றனர்.

## ஆசார்ய புருஷ லக்ஷணம்:

பாத்மோத்தர கண்டம் முதலத்தியாயத்தில் - வேதத்தில் கூறிய தருமானுஷ்டானம் நிறைந்தவனும் விஷ்ணு பக்தனும் பொறுமையற்றவனும் மந்திரமறிந்தவனும் மந்திரத்தில் பக்தியுடையவனும் எப்போதும் மந்திரத்தையே ஆதாரமாகக் கொண்டவனும் பரிசுத்தமானவனும் நல்ல குருவின் உபதேச பரம்பரையைச் சேர்ந்தவனும் வேதாந்த சாஸ்திரத்தில் வல்லவனும் பகவதனுபவ கைங்கரியங்களையே புருஷார்த்தமாகக் கொண்டவனும் அதற்குப் பகவானையே உபாயமாகக் கொண்டவனும் பிரம்மத்தை நன்கறிந்தவனும் பிறவற்றில் ஆசையற்றவனும் கோபம் உலோபம் (பற்றுள்ளம்) இவையில்லாதவனும் நன்னடத்தையைக் கற்பிப்பவனும் மோக்ஷமடைய விருப்பமுள்ளவனும் பரமாத்வாவைப் பற்றிய விசாரம் செய்பவனுமாகிய இத்தகைய நற்பண்புகளோடு கூடியவன் ஆசாரியனென்று சாஸ்திரத்தில் கூறப்படுகிறான். யாவனொருவன் பிறரை நன்னடத்தையில் இருக்கும்படித் திருத்துகின்றானோ அவன் ஆசாரியனென்று சொல்லப்படிருக்கிறான் - என்று ஆசார்ய லக்ஷணம் கூறப்படுகின்றதன்றோ.

ஹாரீத விசிஷ்ட பரமதர்ம சாஸ்திரத்திலும் இரண்டாமத்தியாயத்தில் - குற்றமற்றவனும் ப்ராஹ்மணனும் விஷ்ணு பக்தனும் கலப்பற்ற ஸத்துவ குணமுடையவனும் புதிது புதிதான யாகம் பூஜை தானம் ஆகிய கருமங்களைச் செய்பவனும் நல்ல ஆசார்யனுடைய உபதேச பரம்பரையைச் சேர்ந்தவனும் த்வய மந்திரத்தின் பொருளை நன்கறிந்தவனும் அறிவும் ஆசையின்மையும் நிறைந்தவனும் வேதங்களிலும் அவற்றின் அங்கங்களான சிக்ஷை வியாகரணம் முதலியவற்றிலும் கரைகண்டவனும் நல்ல ஆசாரத்தில் இருக்குமாறு பிறரை நியமிப்பவனும் தருமம் அனைத்தும் அறிந்தவர்களில் உயர்ந்தவனும் பரமபாகவதனும் தன்னையும் பிறரையும் பாவச்செயல்களில் புகாமல் காப்பவனும் நல்ல ஆசாரங்களை அனுஷ்டிப்பவ

னுமாகிய ஆசார்யனை முதலில் பற்ற வேண்டும். விஷ்ணு பக்தனாய் எல்லா சாஸ்திரங்களையும் புராணங்களையும் கண்டறிந்து அவற்றில் கூறிய தருமங்களை யாவ னொருவன் ஆசரிக்கின்றானோ அவனே ஆசார்யனென்று கூறப்பட்டுள்ளான் என்று சொல்லப்பட்டுள்ளது.

இங்ஙனமே சாஸ்திரங்களின் பொருளான தருமங் களை எவன் அறிந்து தானும் அனுஷ்டித்துப் பிறரையும் அவற்றில் நிலைத்திருக்கச் செய்கின்றானோ அவனே ஆசார் யனாகக் கூறப்படுகிறான் - என்றிது முதலிய வேறு வசனங்களும் காணத்தக்கன.

## யாதவமன்னனுக்கு இட்ட இறுதிக் கட்டளை

இவ்வாறு சாஸ்திரங்களில் கூறப்பட்ட லக்ஷணங்க ளையுடைய ஆசார்ய புருஷர்கள் ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் அவ்வத் திவ்ய தேச தருமங்களைப் பரிபா லிப்பதற்காக அவசியம் வம்ச பரம்பரையாக ஸ்தாபிக் கப்பட வேண்டும். இப்படிப்பட்ட ஆசார்ய புருஷர்கள் இல்லாவிட்டால் திவ்ய தேச தருமானுஷ்டான வரம்பு கள் அழிந்தே போய்விடும். ஆகையால் இத்தகைய லக்ஷணம் நிறைந்தவர்களில் முதல்வரான இவ்வனந்தாழ் வானை முன்னிட்டுக்கொண்டே அந்தந்த தருமகாரியங்கள் இங்குச் செய்விக்கப்படவேண்டும்.

பகவானுடைய பரிஜந பரிசாரகர்கள் திறத்தில் அவ் வக் கைங்கரியத்திற்குத் தக்க தகுதி தகுதியின்மைகளுக்குக் காரணமான நல்லொழுக்க தீயொழுக்கங்களை ஆராய்ந்து இவ்வனந்தாழ்வான் எப்போதாவது ஒருவரைச் சேர்த்துக் கொள்ளவேணுமென்றாவது ஒருவரை நீக்கிவிடவேணுமென் றாவது தெரிவிப்பாராகில் அதில் ஸந்தேஹங்கொள்ளாமல் அப்படியே நீ செய்யவேண்டும்.

இப்படிப்பட்ட ஆசார்யஸ்தானத்தை நிர்வஹிக்கும் புருஷர்கள் அவ்வத் திவ்ய தேசத்தின் ரக்ஷணத்தையும் ஸ்ரீவைஷ்ணவ தருமங்களின் வளர்ச்சியையுமே குறிக்கோ

ளாகக் கொண்டுள்ளவர்கள் இனிமேல் வருங்காலத்திலும் ஒருகால் வந்து இங்கு வாஸம் செய்ய விரும்பினார்க ளானால் அவர்களையும் நீ கௌரவித்து இத்திவ்ய தேச ரக்ஷகர்களாக இங்கு ஸ்தாபிக்க வேண்டும்.

இவர்கள் போன்ற ஆசார்ய புருஷர்கள் கிடைத்தற்கு அரியவர்களல்லவா. மிக மிகக் கௌரவிக்கத் தக்க இவ் வாசாரிய புருஷர்களை, பெருமாள் திருக்கோவிலில் நடக் கும் கோஷ்டியில் கௌரவிக்கும் தருணங்களில், கோவிலை ஆதாரமாகக்கொண்டு ஜீவிக்கும் பரிஜந பரிசாரகர்களைக் கௌரவிப்பதற்கு முன்பாகவே கௌரவிக்கவேண்டும். அப் போதும் இத்தகையோர் பலர் சேர்ந்துவிட்டால் அவரவர் தகுதிகட்கு ஏற்றவாறு முறைப்படி கௌரவிக்கவேண்டும்.

சாண்டில்ய விசிஷ்ட தரும சாத்திரம் நான்காமத் தியாயத்தில் - அங்குச் சேர்ந்த பகவத் பக்தர்களில் பெரியவர்களை முதலில் முறைப்படியே மிக்க பக்தியுடன் சுத்தமான அர்க்யம் முதலியவற்றாலும் தனத்தாலும் பூஜிக்கவேண்டும் என்றும், என்னைப் பற்றிய பக்தியும் ஜ்ஞாநமும் செயல்களும் யார் யாருக்கு அதிகமாக உள் ளனவோ அவரவர்களை அந்தந்த முறைக்குச் சேர்ந்த வாறு வரிசையாக முதலில் கௌரவிக்கவேண்டும் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

ஆகையால் இங்கு இப்போது ஆசார்ய ஸ்தானத்தை நிர்வஹித்துக்கொண்டு வாழ்ந்துவரும் அனந்தாழ்வா னுக்கும், திருவேங்கடமுடையானுடைய ஸகல கைங்கரி யப்பொறுப்பையும் ஏற்பவராக இப்போது நியமிக்கப்பட்ட சடகோப ஜீயருக்கும், அவருக்கு உதவியாக ஏற்படுத்தப் பட்டு அவரோடொப்பக் கைங்கரியத்தில் ஊன்றியிருக்கும் இந்த ஏகாங்கிகளுக்கும் தக்கபடி அடைவிலே கௌரவம் செய்யவேண்டும். பூஜிக்கத்தக்கவர்களைப் பூஜியாமல் விடுவதும் பூஜிக்கத்தகாதவர்களை முதலில் பூஜிப்பதும் பெருங்கேட்டை விளைவிக்குமென்பது - மஹாபாரதம் ராஜ ஸூயயாக ஸபையின் ஸந்தர்ப்பத்தில் பீஷ்மர் கூறிய

வசனம் முதலிவயற்ருலும் விளக்கமாக அறியப்படுகின்றது.

ஆதலால் உயர்ந்த தகுதி பெற்றவர்களை முதலிலே கௌரவியாலிருத்தல் தகுதியற்றவர்களை முதலிலே கௌரவித்தல் ஆகிய வரம்புமீறிய செயல்களை, யான் எனது என்னும் செருக்குக் கொண்டு யாரும் ஒருகாலும் செய்யலாகாது என்று யாதவமன்னுக்குக் கட்டளையிட்டு அவன் மூலமாக அப்படியே ஒருநியதியைச் செய்வித்தார். (பகவத்ராமானுஜ முனிவர்)

முற்கூறிய இவ்வாசார்ய புருஷர்களை வம்ச பாரம்பரியமாகத் திவ்யதேச பரிபாலகர்களாக ஸ்தாபிக்கவேண்டும். ஜீயருக்கு உதவியான ஏகாங்கிகளும், மேன்மேலும் இப்படியே நால்வராகவேயோ ஒருகாலத்தில் ஸ்தான விசேஷங்கள் காரணமாகப் பெருமை அதிகமாகி அதனால் காரியங்ளும் அதிகமாக ஏற்படுமானால் இதைவிட அதிகமான எண்ணிக்கையுடையவர்களாகவோ அவ்வக்காலத்திய கார்ய நிர்வாஹிகளால் ஸ்தாபிக்கப்படவேண்டும்.

இங்ஙனம் ஸ்தாபிக்கப்பட்ட இவர்களில் யாவரொருவர் கலியுகத்தின் தோஷம் காரணமாகவோ தாம் முன் செய்த கொடுவினையின் வலிமை காரணமாகவோ எப்போதாவது வரம்புமீறி நடந்துகொள்ளுகிருர்கள், அவர்களை, தக்க இடம் காலம் நடத்தை இவற்றை அறிந்தவர்கள் தருமமறிந்தவரில் தலைவர்கள் ஆகிய அனைவரும் கூடிப் பெருமாள் கைங்கரியத்திற்குக் கேடு வரும்படியை நன்கு ஆராய்ந்து, சிறிதும் ஸந்தேஹப்படாமல் அவ்வதிகார ஸ்தானத்திலிருந்து நீக்கி விடவேண்டுமென்று பகவத்ராமானுஜர் யாதவராஜனைக் கொண்டு வரம்பிட்டு வைத்தார். திருவேங்கடமலையில் திருமலை நம்பிகளின் சிஷ்யனொருவன் முன்பு செய்த தருமவரம்பை மீறி நடந்ததையும், ஸொத்தைத் திருடுவதில் ஆசை கொண்ட ஒருவன் தமக்கும் விஷமிட்டதையும், பொருளின்கண் நசையினால் மனிதர்கள் எல்லாப் பாபங்களையும் செய்யக்காண்பதையும்,

முற்பட்டவர்கள் பிற்பட்டவர்கள் என்னும் வாசியில்லா மல் பெரியோர்களுக்கும்கூட ஆசை காரணமாகத் தகாத செயல்களில் மூளுதல் காண்பதையும் உதாரணமாகக் காட்டி, சில சமயம் தருமவரம்பை மீறி நடத்தல் எல் லோர்க்கும் ஏற்படலாமென்று கூறியே அவ்வரம்பை அவர் ஏற்படுத்தினர்.

இங்ஙனம் வரம்பேற்படுத்திய பின்பு பகவத் ராமா னுஜ முனிவர் ஸ்ரீனிவாஸ பகவானுடைய அனுமதி யைப் பெற்று ஸ்ரீரங்கம் செல்ல விருப்பமுடையவராய் யாதவராஜனை அழைத்து 'இப்போது இங்கு இருப்பவர்க ளில் இவ்வனந்தாழ்வான் ஒருவரே எல்லாவிதத்திலும் மிக மேம்பாடுடைய ஆசாரியராவர். ஆகையால் இவரது கட் டளையின்படி எல்லாவற்றையும் பரிபாலிக்கக் கடவாய்' என்று உத்தரவு செய்து, அனந்தாழ்வானை அழைத்து "வாரீர் அனந்தாழ்வானே நீர் ஒருவரே இங்கு இப்போது தலைநரைத்த கிழவராயிருக்கிறீர். உம்மைச் சேர்ந்த சட கோபஜீயர் முதலியவரையும் அவ்வக் கைங்கரியங்களில் முறைப்படி ஏவிக் காக்கக்கடவீர். உமது ஸ்தானத்தில் உம்மைச் சேர்ந்தவர்கள் போலவும், எனது ஸ்தானத் தில் சடகோபஜீயர் முதலியவர்கள் போலவும் திருமலை நம்பிகளின் ஸ்தானத்திலும் சிலரை ஸ்ரீநிவாஸனுக்குத் தொண்டு செய்பவர்களாக ஸ்தாபிக்க வேண்டும். அப் படிப்பட்ட சிலர் இங்கு இப்போது இல்லையென்பதே எனக்குக் குறையாகத் தோன்றுகிறது. அதையும் ஒரு சமயம் நீர் பூர்த்தி செய்யக்கடவீர்.

சடமர்ஷண குலத்தில் அவதரித்த பூஜ்யரான ஸ்ரீமந் நாதமுனிகள் பகவத் பக்தர்களில் முதல்வராகி, அப்போது சிறிது அதிகமான கிளைகளைக்கொண்டதும் சடமர்ஷண கோத்திரத்தில் உண்டானதுமான அக்காலத்திய வம்சஸ மூஹம் அனைத்தையும் தம்முடைய வம்சமாகவே எண் ணிக் கௌரவித்து 'எவன் பிறந்தது முதலாக இறக்கும் வரையில் வாஸுதேவனைத் (திருமாலைத்) தெய்வமாகக்

கொள்ளமாட்டானோ அப்படிப்பட்டவன் நம் குலத்தில் பிறவாதொழிக, பிறந்துவிட்டாலும் விரைவில் இறந்துவிடுக' என்று ஸங்கல்பம் செய்து கொண்டமை பிரசித்தம்.

ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவடிகளைத் தஞ்சமாகப்பற்றிய குருகைக்காவலப்பனென்னும் ஆசாரியர் வீரநாராயணபுரத்தில் யோகம் செய்து கொண்டிருக்க, எமது பரமாசார்யரான ஆளவந்தார் அவரிடமிருந்து யோக ரகசியத்தைத் தெரிந்து கொள்ள விரும்பிச் சென்று அவருடைய ஸமாதிக்குக் (அவருடைய மனம் பரமனிடத்தில் ஒன்றுபட்டிருக்கும் நிலைக்கு) கேடு விளையுமென்றஞ்சித் சுவர்ப்புறத்தே மறைவாக இருக்க, அப்பன் ஸமாதி நிலையின்கண் தமது தோள்களை அமுக்கிச் சுவருக்கு வெளிப்புறத்திலுள்ள ஒருவரை பகவான் கண்டுகொண்டிருந்ததைக் கண்டு உடனே ஸமாதிநிலையைக் கலைத்துக்கொண்டு எழுந்து திருமுகத்தைத் திருப்பி 'சடமர்ஷண குலத்தில் உதித்தவர் யாரேனும் இங்கு வந்தார் உண்டோ' என்று கூற, பின்பு ஆளவந்தார் 'அடியேன் யாமுனன் இதோ விடைகொண்டுள்ளேன்' என்று கூறிக்கொண்டே வந்து அவருடைய திருவடிகளில் விழுந்து 'ஸ்வாமீ சுவர் மறைவாக இருந்த அடியேனைத் தேவரீர் அறிந்து கொண்டபடி எங்ஙனே' என்று விண்ணப்பிக்க, அப்பன் 'யோகநிலையில் என்னால் இஷ்டப்படி அனுபவிக்கப்படுகின்ற பகவான் - பிராட்டி தனது திருமுலைத் தடத்தால் நெருக்கியணைத்தாலும் அவள் முகத்தையும் பாராதவன் இப்போது எனது தோள்களை அமுக்கி இரண்டு மூன்று தடவைகள் திருமுகத்தைத் தூக்கித் தூக்கிச் சுவரால் மறைப்புண்ட இடத்தைப் பார்த்தான். அதனால் சடமர்ஷண குலத்தில் தோன்றியவர் யாராவது இங்கு வந்திருக்க வேண்டுமென்று நினைத்தேன்' என்று பதிலளித்து ஸ்ரீமந்நாதமுனிகளின் ஸங்கல்பத்தை பகவானும் பயனுடையதாகச் செய்தானென்று கூறினர். ஆகையால் பகவானுக்கு மிகப் பிரியமானதும் ஸ்ரீமந்நாதமுனிகளின் அபிமானத்திற்கு இலக்கானதுமான அத்

தகைய சடமர்ஷண கோத்திரத்தில் பிறந்த ஒருவரை இங்குத் தக்க சமயத்தில் ஸ்தாபிக்கக் கடவீர்' என்று நியமித்து, சடகோப ஜீயரே ஏகாங்கிகள் நால்வருடன் கூடி அனந்தாழ்வான் நியமனத்தைப் பின்சென்று திருவேங்கடமுடையானுடைய திவ்யைச்வர்யத்தையும், (மடத்தில்) ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனாருடைய திருவராதனத்தையும் குறைவின்றி நிறைவுறச்செய்து வாரும்' என்று நியமனம் செய்துவிட்டுத் திருமலையிருந்து இறங்கியருளினார்.

அதன் பின்பு ஆண்டாளுடன் ஸ்ரீகோவிந்தராஜனையும் ஸேவித்து, அவருடைய திவ்யைச்வர்யமும் குறைவின்றிப் காக்கப்படுவதைக் கண்டு மிக மகிழ்ச்சியடைந்த பகவத் ராமானுஜ முனிவர் யாதவ மன்னவனை அழைத்து 'ஓ யாதவமன்னா ஸ்ரீகோவிந்தராஜனும் திருவேங்கடமலை மஹாராஜனுமாகிய இருவரும் சைவ ஜனங்களால் நேர்ந்த பெரிய ஆபத்தென்னும் கடலில் வீழ்ந்து எப்படியோ கரை சேர்ந்தார்கள். இனி அத்தகைய உபத்திரவம் அவர்களுக்கு நேராதபடிக் காக்கக்கடவாய், சங்கு சக்கரப் பொறிகளை (தோளில்) ஒற்றிக்கொள்ளாதவர்களான வேறு தேவதைகளின் பக்தர்களுக்கு, எவ்வளவு கஷ்டம் வந்தாலும் இத்திவ்யதேசத்தில் பெருமாளுடைய கைங்கரியங்களைக் கண்காணிக்கும் அதிகாரம் முதலியவற்றைக் கொடுத்தல் மூலமாகக் கூடப் புகுவதற்கு ஒருபோதும் இடம் கொடாதே.

இப்போது இத்திவ்ய தேசத்தை விட்டுச் செல்கின்ற நான் அதிகப்பிரீதி காரணமாக, பெருங்கேடு விளையுமென்றஞ்சி உனக்கு நான் செய்யும் இவ்வுத்தரவை, முன்பொருகால் பகைவரை அழிப்பதற்காகத் துவாரகையை விட்டுச் செல்லும் க்ருஷ்ணபகவான் 'நான் வரும்வரையில் சக்கரப்பொறியொற்றிக்கொண்டவரை உள்ளே புகுரவிடுங்கள், நான் திரும்பும் வரையில் சக்கரப் பொறியொற்றிக்கொள்ளாதவர்களை உள்ளே புகுரவிடாதீர்கள்' என்று துவாரகா பட்டணத்து வாயிற் காவலர்களுக்கு இட்ட உத்தரவைப்

போல் நினைத்து ஊக்கமாக இருக்கக்கடவாய் என்று கட்டளை செய்து கருணை பொங்கிய தமது குளிர்ந்த கடைக்கண்ணோக்கத்தினால் அவனை அனுக்ரஹித்துப் பரிபூரண மங்களாசாஸனம் செய்து அவனைக் கொண்டாடிவிட்டு அவ்விராமானுச முனிவர் தமது பிரிவைப் பொறுத அனந்தாழ்வான் சடகோபஜீயர் யாதவராஜன் முதலியோர் கண்ணுங்கண்ணீருமாக வெகு தூரம் வரையில் பின்தொடர்ந்து வர, தாமும் நீர்மல்கு கண்ணினராய் மிகச் சிரமப்பட்டு அவர்களது இசைவைப் பெற்று ஸ்ரீரங்கதிவ்ய நகரத்துக்கே எழுந்தருளினார்.

## ஸ்ரீராமாநுஜவிக்ரஹ ப்ரிதிஷ்டையும் இராமாநுச நூற்றந்தாதி ஸேவித்தலும்

இனித் திருவேங்கடமுடையான் திருக்கோவிலில் ஸ்ரீராமாநுஜரின் அர்ச்சாமுர்த்தியாகிய திவ்யமங்கள விக்ரஹத்தை ப்ரதிஷ்டை செய்தல் அவரைப் பற்றிய பிரபந்தத்தை அநுஸந்தித்தல் ஆகிய இவற்றின் வரலாறு கூறப்படும்:

இங்ஙனம் ஸ்ரீராமாநுஜரின் திருவாணையை அநுசரித்துத் திருவேங்கடமலையாகிய திவ்ய தேசத்தில் தரும காரியங்கள் அனைத்தும் குறைவின்றி நடத்தப்பட்டு வருமளவில், ஒருசமயம் ஸ்ரீராமானுஜரின் அவதாரமுடிவை ஒரு வைஷ்ணவர் கூறக்கேட்ட அனந்தாழ்வான் மிக மிகக் குழம்பிய மனத்தராய், தகப்பனாரைக் குறித்துத் தனயன் போல ஒரு வருஷகாலம் துக்கதீக்ஷைகொண்டு ஸ்ரீராமானுஜநந்தவன கைங்கரியத்தையும் கவனியாமலும் திருவேங்கமுடையானையும் ஸேவியாமலுமே இருந்தார்.

அப்போது திருவேங்கடமுடையானும் எல்லையில்லாத் துன்பத்தை அடைந்து பரமகருணையுடன் அனந்தாழ்வானை அழைத்துவரும்படி அர்ச்சகர் வாயிலாக ஒரு தூதனை நியமிக்க, அவனால் வருந்தியழைத்துச் செல்லப்பட்ட அனந்தாழ்வான் கோவிலையடைந்தவராய்ப் பெருந்

துன்பக்கடலில் மூழ்கி முகத்தை நிமிர்த்தாமல் கவிழ்த்துக்கொண்டே நிற்க, பகவான் 'வாரீர் அனந்தாழ்வானே நானன்றோ ராமாநுஜமுனியாகிய ஒரு பெரிய நிதியை இழந்து விட்டேன். உமக்கு அவருடைய ஸ்தானத்திலே நானே இருக்கிறேன். வருந்தாதீர். உமக்குக் குறையேதும் வாராது. உமது விருப்பம் அனைத்தையும் நானே நிறைவேற்றுகிறேன்' என்று மிக்க ஆதரவோடு தேற்றரவு கூறி, எப்போதும் (அர்ச்சனை செய்யப்பட்ட) மலர்த்தொகுதியோடு சேர்ந்தேயிருப்பதனால் கும்குமென்று மணம் வீசப்பெற்ற தனது திருவடியிணை ஸ்ரீசடகோபன் தீர்த்தம் பிரசாதம் முதலியவற்றை அளித்துக்கௌரவிக்க, அவற்றைப் பெற்ற அனந்தாழ்வான் சிறிது முகம் நிமிர்த்துத் திருவேங்கடமுடையானுடைய சந்திரமண்டலம் போன்ற திருமுகத்தை ஸேவித்தவராய், 'பகவானே திருவேங்கடநாதனே ஸ்ரீநிவாஸா ஸ்ரீராமாநுஜமுனிவரைப் பற்றி அடியேன் செய்யும் இவ்விண்ணப்பத்தைத் தேவரீர் நிறைவேற்றிவைக்கவேணுமாய் வேண்டுகிறேன்' என்று விண்ணப்பம் செய்தார்.

பின்பு பகவானால் உமது கோரிக்கையைக் கூசாமல் கூறுமென்று சொல்லப்பட்ட அனந்தாழ்வான், 'பிரகிருதி மண்டலத்திற்கு மேலுள்ள பரமபதத்தில் வாழ்பவன், சங்கு சக்கரம் கதை ஆகியவற்றைத் தாங்குமவனாய் அனைவரையும் போஷிப்பவன்' என்று பரம்பொருளாவதற்கு முக்கிய லக்ஷணங்களாகச் சொல்லப்பட்ட சங்கு சக்கரங்களைக் கலியுகாரம்பத்தில் பரமகருணையுடன், தொண்டைமான் சக்கரவர்த்தியென்னும் ஒரு பக்தன் வெல்லுவதற்கு அரிய பகைவர்கூட்டத்தைக் கண்டு அச்சங்கொள்ள, தேவரீர் அவனுக்கு அப்பகைவர்களை அழிப்பதற்காகக் கொடுத்தருளினீர். தேவரீரது அத்தகைய இப்பெருவள்ளல்தன்மையாகிய நற்பண்பை அறியாத மூடர்களான இவ்வுலகத்தவர், தேவரீர்க்கே உரிய சங்கு சக்கரங்கள் தேவரீரிடம் தென்படாமையால் தேவரீரை வேறு தெய்வமாக மயங்கி மதிகேடரானார்கள். அவர்கள் உள்ளபடியே

தேவரீரிடம் பரம்பொருளாந்தன்மையை அறிந்து அதன் மூலமாக முக்தியடைவதன் பொருட்டு, சைவஜனங்களின் பொருளற்ற கோலாஹலத்தை ஓயச் செய்து பெருமுயற்சி யுடன் யாதவராஜனையும் நல்வழிக்குக் கொண்டுவந்து முன்புபோல் சங்குசக்கரங்களைத் தேவரீர் ஏற்றுக்கொள் ளும்படி ராமாநுஜமுனிவரன்றோ செய்தருளினார்.

இவ்வாறே குற்றம் சிறிதுமின்றி நற்குணக்கூட்டங் களுக்கு நிதியான தேவரீர் திறத்தில் குணமின்மை முதலிய குற்றங்களைக் கூறுகின்ற - வேதத்துக்குப் புறம் பானவர்களையும் வேதத்திற்குக் கெட்டநோக்கங்கொண்டு அவப்பொருள் கூறுமவர்களையும் மறுப்பதற்காக, தேவரீரை மூவகைப்பட்ட சேதந அசேதனங்களினுடையவும் (உயிர்க ளுடையவும் மற்ற அறிவில்லாப் பொருள்களினுடையவும்) உருவம் நிலைத்தல் செயல் ஆகியவற்றைத் தமக்கு வச மாகப் பெற்றவராகவும் எல்லாவுலகின் படைப்பு காப்பு அழிப்பு ஆகிய இவற்றை விளையாட்டாக உடையவ ராகவும் எல்லா வேதாந்தங்களாலும் கூறப்படுமவராகவும் குற்றமனைத்துக்கும் பகையாய் அறிவும் ஆனந்தமுமே உருவமாக உடையவராகவும் அப்ராக்ருத (பரமபதத்திய பஞ்சபூதமயமான) திவ்விய திருமேனியோடு கூடியவராக வும் ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளின் கேள்வராகவும் பிரமன் , உருத்திரன் முதலானவர்களால் தஞ்சமடையத் தக்கவராகவும் இவ்வுலகம் பரமபதம் என்னும் இரண்டு விபூதிகளையும் (தம் கீழ் அடங்கி நடக்கும் உலகங்க ளையும்) பராமரிப்பவராகவும் நித்ய சூரிகளாலும் முத்தி யடைந்தவர்களாலும் அனுபவிக்கத்தக்கவராகவும், எல்லா உபநிடத வாக்கியங்களைக் கொண்டு பொருத்தமாக மூதலித்துக் காட்டி ஸ்ரீபாஷ்யம் முதலான நூல்களை இயற்றி உண்மையான அறிவை உண்டாக்கி இவ்வுல கோரைக் கருணையுடன் இவ்விராமாநுச முனிவரன்றோ காப்பாற்றினார்.

ஆகையால் உலகனைத்துக்கும் பேருதவி புரிந்த பகவத்ராமாநுஜ முனிவரின் குணகணங்களைப் பற்றியதும் பிரபந்த காயத்ரி என்ற பெயரால் பிரசித்திபெற்றதும் நூற்றெட்டுப் பாசுரங்களை உருவமாகவுடையதும் இராமாநுச நூற்றந்தாதி என்று மறுபெயர் கொண்டதுமான - திருவரங்கத்தமுதனார் அருளிய பிரபந்தத்தையும் திருவத்யயனோத்ஸவத்தில் தனியாக ஒருநாள் கேட்டருளவேணும் என்றும்,

ஆழ்வார்கள் திருமலையேறித் தேவரீரைப் பல்லாண்டு பாடாத குறைதீர எப்போதும் தேவரீருக்கு இடைவிடாமல் ஸ்ரீராமாநுஜமுனிவரின் மங்களாசாஸனம் உண்டாவதற்காகவும் கலியின் தோஷத்தினால் வேதத்தை இசையாதவர் அதற்கு அவப்பொருள் உரைப்பவர் ஆகியவர்களின் வஞ்சனைகளை அழிப்பதற்காகவும் ஸ்ரீராமாநுஜ முனிவரை அர்ச்சை(பிம்ப) வடிவமாக இத்திவ்ய தேசத்தில் பிரதிஷ்டை செய்விக்க அநுமதி தந்தருள வேணுமென்றும் வேண்டிக் கொண்டார்.

இங்ஙனம் பிரார்த்திக்கப்பட்ட திருவேங்கடமுடையான் மிகவும் மகிழ்ச்சிகொண்டு, 'வாரீர் அனந்தாழ்வானே நீர் வேண்டிய இவ்வரமிரண்டும் எனக்கு மிக மிக இஷ்டமானவை. என்னைப்பற்றி நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் முதலான திவ்யசூரிகள் அருளிய திவ்யபிரபந்தத் தொகுதிகள் போல, என்னுடையவரான ராமானுஜ முனிவரைப் பற்றிய திவ்யப் பிரபந்தமாகிய இராமாநுச நூற்றந்தாதியும் அத்தயயனோத்ஸவத்தில் தனியாகவே ஒருநாளில் ப்ரபந்நர்களால் (என்னைத் தஞ்சமாகப் பற்றினவர்களால்) தம்விருப்பப்படி அனுஸந்திக்கப்படட்டும், ஸ்ரீராமாநுஜமுனிவரும் உமது கோரிக்கைக்குச் சேர எனது கோவிலிலேயே ஒருபகுதியில் ஆதிசேஷன் கருடன் ஸேனாபதி ஆகியவர்கள் போலவே அர்ச்சைவடிவத்தில் விதிப்படி பிரதிஷ்டை செய்விக்கப்படட்டும்' என்று விடையருளிச் செய்தான்.

பின்பு அனந்தாழ்வானும் இவ்வாறு பகவான் விசேஷ கடாக்ஷம் செய்ததனால் மிக மகிழ்ந்த மனமுடையவராய்த் தமது அபிமான விசேஷத்திற்குப் பொருந்துமாறு அத்ய யனோத்ஸவத்தின் முடிவு நாளில் அநுஸந்திக்கத்தக்கதாக ஸ்ரீராமாநுஜ முனிவரால் நியமிக்கப்பட்ட கண்ணிநுண் சிறுத்தாம்பை அனுஸந்திக்கும் தினத்திற்கு மறுநாளில் இராமானுசநூற்றந்தாதியைத் தனியாக அனுஸந்திக்கும் படி நியமித்து, அதன்பிறகு, முன்பு ராமாநுஜ முனிவர் நியமித்ததும் திருமலைநம்பியின் வரலாற்றினை நினை வூட்டுவதுமான தண்ணீரமுதை எதிர்கொண்டு செல்லும் உத்ஸவத்தைச் செய்யக்கடவதாக ஏற்பாடு செய்து, முன் பொருகால் இராமானுசமுனிவர் இறுகத் தழுவித் தூய் மையாக்கித் தமக்குத் தந்ததும் அது முதலாகத் தமது திருமாளிகையில் தம்மால் ஆதரத்தோடு ஆராதிக்கப்பட்டு வருவதுமான அவர்தம்முடைய திவ்யமங்கள விக்ரஹத் தையே ஸ்ரீவைகாநஸாகமத்தில் கூறியபடியே முறைப்படி ஸம்ஸ்கரித்து (மந்திரங்களினால் மேன்மைபெறச் செய்து) பெருமாள் திருக்கோவிலிலேயே இடப்பக்கத்தில் ஒரு மண்டபத்தில் பிரதிஷ்டை செய்வித்து, 'ஸ்ரீமத்ராமாநுஜா சார்ய ஸ்ரீபாதாம்போருஹத்வயம்' (ஸ்ரீமத்ராமானுஜாசார்ய ருடைய திருவடித்தாமரையிணை) என்று பகவான் தம்மைப் பற்றிக் கூறியருளிய தனியனுடைய மெய்ம்மையினால் தமக்கு ஸ்ரீராமானுஜருடைய திருவடித்தாமரையாந் தன் மையும், 'ராமாநுஜபதச்சாயா கோவிந்தாஹ்வாऽநபாயிநீ' (கோவிந்தனென்னும் பெயர்பெற்று ராமாநுஜர் திருவடி யைவிட்டுப் பிரியாத அத்திருவடி நிழல்) என்ற வசனத் தின் மெய்ம்மையினால் எம்பாருக்கு ராமானுஜருடைய திருவடி நிழலாந்தன்மையும், 'பாதுகே யதிராஜஸ்ய கத யந்தி யதாஹ்வயா' (யாருடைய (முதலியாண்டானுடைய) பெயரினால் ராமானுஜரின் பாதுகையை வழங்குகின் றூர்களோ) என்ற வாக்கியத்தின் ஸத்தியத்தன்மையினால் முதலியாண்டானுக்கு ராமானுஜரின் பாதுகையாந் தன் மையும் தனித்தனியே நிலைபெற்றிருக்கச் செய்தேயும்,

இந்தத் திவ்ய தேசத்தில் தமக்குள்ள பற்றின் மிகுதியி னால் ராமாநுஜருடைய திருவடித்தாமரை அதன் நிழல் ஆகிய இவ்விரண்டோடு கூடிய அவருடைய பாதுகைக்கு (அதாவது இம்மூன்றுக்குமே) அனந்தாழ்வானென்ற தமது திருநாமத்தையே சாத்தி, இவ்வாறு பல ஸ்ரீவைஷ்ணவ மத தருமங்களையும் மேன்மேலும் வளர்த்துக்கொண்டு, 'எல்லா நிலைகளிலும் ராமாநுஜருடைய திருவாணையா னது நாடோறும் ஒளிமல்கியதாய்க் கொண்டு ஒவ்வொரு திசையின் கோடிவரையில் பரந்திடுக. அது உலக நன் மையை விரும்புமதல்லவா?' என்று ஒவ்வொரு வேளையி லும் பெருமாளருகில் ஸ்ரீராமாநுஜார்யருடைய திருவா ணையின் வளர்ச்சியையே (இராமாநுசரால்ஆணையிடப் பட்ட தருமகாரியங்களின் வளர்ச்சியையே) பிரார்த்தனை செய்து வருமவராய், திருவேங்கடமுடையானுக்கு மங்களா சாஸனம் செய்வதொன்றையே பெரும்பயனாகக் கருதி அப்பெருமானுடைய குணங்களை அனுபவித்துக் கொண் டும் அவனுக்குத் தொண்டுகளைச் செய்து கொண்டும் இனிதே வாழ்ந்துவரலானார்.

## இயற்பாவை முதலிலும் கண்ணிநுண் சிறுத்தாம்பை இறுதியிலும் ஓதும்படி ராமானுஜமுனிவர் உத்தரவுசெய்தல்

இனித் திருவேங்கடமலைத் திருக்கோவில் முதலான இடங்களில் திவ்யப் பிரபந்தத்தைப் பூர்ணமாக ஓதும் ஸந் தர்ப்பங்களில், முதலாழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களை முதலில் ஓதுவதற்கும், இறுதியில் தனியாக ஒருநாளில் மதுரகவியாழ்வாரின் திவ்யப்ரபந்தத்தை ஓதுவதற்கும் ஏதுவான வரலாறுகள் கூறப்படும்.

ஒருகால் ஸ்ரீராமாநுஜமுனிவருக்கு, ஆழ்வார்கள் அரு ளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களை உபதேசித்த ஆசார்யரும் எழுநூறு தமிழ்க்கவிஞர் பெருமக்களுக்குத் தலைவரா கப்பட்டாபிஷேகம் செய்யப்பட்டவரும் ஸ்ரீரங்கநாதனது திருமேனியழகை அனுபவிப்பதில் ஈடுபட்ட திருவுள்ள முடையவரும் தேவகான முறையின்படித் திவ்யப்ரபந்

தங்களைப் பாடவல்லவரும் அதுவே காரணமாக ஆளவந் தாரால் முனிவாஹனர் (திருப்பாணாழ்வார்) என்று மறு பெயரிடப்பெற்றவரும் ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரைய ரென்று பிரசித்தியடைந்தவருமான ஆசார்யர்தலைவர் ஒரு கால் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் திருக்கார்த்திகைத் திருநாளில் திருவரங்கப் பெருமானுக்கு மங்களாசாஸனம் செய்து விட்டு ஸ்ரீராமானுஜராகிய யதிராஜருடைய மடத்திற்கு எழுந்தருளி, அவ்விராமாநுசரால் எதிர்கொண்டு வந்து வணங்கி வழிபடப்பெற்று, "வாரீர் இராமானுச முனி வரே திருவேங்கடயாத்திரையை ஆழ்வார்கள் விசேஷமா கக்கொண்டாடுகிறார்கள்.

ஆழ்வார்களில் தலைவராய்ப் பூஜிக்கத்தக்க நம்மாழ் வார் திருவாய்மொழி மூன்றும்பத்து மூன்றும்பதிகம் பத் தாம் பாசுரத்தில் (மனிதர்காள் எம்பெருமான் உங்கட்கு) ஏற்படுத்தி வைத்த ஆயுளின் முடிவான எல்லையை (நீங்கள்) குறுகி இந்திரியங்கள் (பொறிகள்) தளர்ந்து (மன மும்) வலிமையிழப்பதற்கு முன்பே பரந்த படங்களோடு கூடின ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்ட பெரு மானுடையதாய்ச் செறிந்த சோலையையும் அழகிய மலர் மயமாய் விசாலமான தாழ்வரைகளையும் பெற்ற திருவேங் கடமலையைச் சென்று அடையுங்கள் என்றும், அறுசம யக் கடலின்கண் ஸாராஸாரப் பொருள்களைக் கரைகண்ட பூஜிக்கத்தக்க திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதி நாற்பத்திரண்டாம் பாசுரத்தில் - மிகவும் உயர்த்தியையு டைய திருவேங்கடமலையைச் சென்று வணங்குமின்கள், அது தனது நற்பண்பினால் நிலைத்து நின்று பாவங் களைப் போக்கும், அங்கு, நறுமணம் மிக்க தாமரை மலரில் சேர்ந்த நான்முகக் கடவுளும் முக்கண்ணனுமாகிய இருவரும், எல்லாத் தேவராலும் அசுரராலும் வணங் கத்தக்க விஷ்ணுவின் திருவடிகளில் தாமரை மலர்களை ஸமர்ப்பித்துத் துதிக்கின்றனர் -என்றும்,

அவர்தாமே திருச்சந்த விருத்தம் எண்பத்தோராம் பாட் டில் - (தான்) கடைந்த பாற்கடலில் பள்ளிகொண்டருளிக்

காலநேமியென்னும் அசுரனை வென்று, மனங்கலங்கிய இந்திர புத்திரனான வாலியின் தம்பியாகிய சுக்ரீவ னுக்கு உதவி செய்வதற்காக, இராமனாய் அவதரித்து நெருங்கிய ஏழ்மரங்களையும் அம்பெய்து துளைத்துவிட் டுத் திருவேங்கடமலையை அடைந்த திருமாலாகிய தலை வனது பாதங்களையே நாடோறும் பற்றி அமைதியாக வாழுங்கள் - என்றும் அருளிச்செய்தனர்.

இங்ஙனமே பலவிடங்களிலும் ஆழ்வார்கள் ஆசை யோடும் மகிழ்ந்தும் புகழ்ந்தும் பாடிய திருவேங்கட யாத்திரையைச் செய்து திரும்பி வருகிறேன்" என்று கூறி இராமானுச முனிவரின் இசைவைப் பெற்றுத் திருவேங் கடமலைக்குக் புறப்பட்டு நடுவழியில் ஸ்ரீகாஞ்சிமாநகரில் ஸ்ரீதேவராஜரென்று பிரசித்தராய்க் கேட்போர் கேட்பதை எல்லாம் வழங்கும் விரதம் பூண்டவருமான வரதராஜப் பெருமாளை வணங்கி, திருவேங்கடமலையடிவாரமாகிய திருப்பதியை அடைந்து இராமானுச முனிவரின் அபி மானத்திறக்கு இலக்கான ஸ்ரீகோவிந்தராஜப்பெருமாளைத் தொழுது, திருவேங்கடமலையேறும் படிவழித்தொடக்கத்தி லுள்ள புளியமரத்தையும் அதன்கீழ்க் குண்டுக்கல்லின் மீது விளங்கும் திருவேங்கடமுடையான் திருவடித்தாமரை யிணையையும் அதன்பக்கத்தில் ஸேவை ஸாதிக்கும் நம்மாழ்வார் கலியன் முதலிய ஆழ்வார்களையும் பின்பு திருமலையேறும் நடுப்பாதையில் பிரகாசிக்கும் காட்டழ கிய சிங்கரையும் தொழுது ஏறிக் கல்வேலியளவும் சென்று, பின்பு திருமலையனந்தாழ்வானால் எதிர்கொண் டழைக்கப்பட்டு ஒருவர்க்கொருவர் வணங்கி நல்வரவு கூறி யோகக்ஷேமம் விசாரித்தல் நடந்தபிறகு அனந் தாழ்வானோடு பேசிக்கொண்டே சென்று, திருவேங்கடமு டையான் திருக்கோவிலின் பெரிய கோபுர வாசலின் முன்பு தண்டனிட்டுப் பெரிய திருவீதிகளில் பிரதக்ஷிண மாக வந்து புகழ் பெற்ற ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி நித்யானுஷ்டானத்தைச் செய்து, நம்மாழ்வார் அருளிய

திருவிருத்தத்தில் - (நான் கூறுவது யாரும் கேளாமை யாலே) பொருளற்ற பேச்சாகவே ஆகட்டும். வீசுகின்ற அலைகளைக் கொண்ட பிரளயக் கடலிலிருந்து உலக முழுவதையும் வராகவுருவந்தரித்து எடுத்து மஹோபகா ரம் செய்தவனும், மிகப்பெரிய கற்பக மரங்கள் நிறைந்த சுவர்க்கத்தில் உள்ளவர்க்கும் அல்லாத மனிதர்க்கும் மற்ற எல்லார்க்கும் விளக்கமாய் உயர்ந்ததாய் விளங்குகின்ற (மோக்ஷோபாயமான) ஞானத்தை விதித்து உதவி புரிந் தவனுமான பெருமானையல்லது நான் கண்ட நல்ல பொருள் வேறொன்றில்லை என்னும் பொருள் பெற்ற தொண்ணூற்றொன்பதாம் பாசுரத்தைச் சொல்லி அவ்வாழ் வாருக்கு இஷ்டரான ஸ்ரீ ஜ்ஞாநவராஹப்பெருமாளுக்கு மங்களசாஸனம் செய்து, மறுபடியும் திருவேங்கடவன் கோயிலின் பெரிய கோபுரவாசலின் முன்பு தண்டனிட்டு, ஸேவிக்கும் முறைப்படி கோவிலில் பலிபீடம் த்வஜஸ் தம்பம் இவற்றினருகே தண்டனிட்டுத் திருமடைப்பள்ளி நாச்சியாரைத் தொழுது ஸ்ரீதேவியின் தீர்த்தமாகிய அழ கப்பிரானார் திருக்கிணறென்னும் மறுபெயரையுடைய பொற்கிணற்றை (பங்காருபாவியை) வலம் வந்து ஸ்ரீமதா னந்த நிலய விமானத்தை ஸேவித்து ப்ரதக்ஷிணமாக வந்து தொட்டித் தீர்த்தத்தில் பெருமாள் தீர்த்தம் பருகி ஸ்ரீஸேனைமுதலியாரையும் பின்பு வேங்கடத்தரியெனப்ப டும் நரஸிம்ஹப் பெருமாளையும் வணங்கி, கருடாழ்வாரை வலம்வந்து (த்வாரபாலர்களும் கருடாழ்வாரும் எழுந்தருளி யுள்ள) ஸ்ரீக்ருஷ்ணமண்டபத்தை அடைந்து த்வாரபாலர் களின் அருகே நின்று, கோலம் செய்த மதயானைபோல் விளங்குமவனும், பெரியாழ்வார் திருமொழி - முதற்பத்து ஆறுந்திருமொழியின் 'செங்கமலக்கழலில்' என்று தொடங் கும் பத்தாம் பாசுரத்தில் கூறியபடி ஸகல திருவாபர ணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவனுமாகிய ஸ்ரீநிதியை (மூலமூர்த்தியை) தரித்திரன் பெருநிதியைக் கண்டாற்போல் தூரத்திலிருந்து கண்டு அப்பாசுரத்தை அனுஸந்தித்துக் கொண்டே மகிழ்ச்சியுடனும் மயிர்க்கூச்செறிதலுடனும்

ஸேவித்து வாசலுக்குள்ளே சென்று, தமது ஆசாரியரா கிய ஆளந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்னத்தை, மூன்றடி கள் வைத்து, மூவுலகுமளந்தவனே சங்கு சக்கரம் கற்பக மரம் கொடி தாமரைமலர் மாவட்டி வஜ்ராயுதம் ஆகிய வற்றை (இரேகை வடிவத்தில்) அடையாளமாகப் பெற்ற உன்னுடைய திருவடித் தாமரையிணையானது என்னு டையதான தலையை எப்போது அலங்கரிக்கப்போகிறது - என்னும் பொருள் கொண்ட 'கதா புந:' என்னும் ச்லோகம் வரையில் அனுஸந்தித்துக்கொண்டேயிருக்க, இந்த அரை யரை 'ஸ மஹாத்மா ஸு துர்லப: (அப்படிப்பட்ட பெருமை வாய்ந்தவர் கிடைத்தற்கு மிக அரியவர், கீதை 7-9) என்று கூறப்பட்ட பெருந்தகுதியுடையவராக எண்ணிய திருவேங்கடமுடையான் அர்ச்சகர் மூலமாக ஆழ்வார் திரு வரங்கப்பெருமாளரையரை அருள்பாடிட்டு (அழைத்தருளி) 'அடிக்கீழ் அமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின்' (திரு வாய்மொழி 6-10-11) என்று கூறியருளியபடி நியமிக்க, அரையரும் பரமானந்தம் பொங்கிய உள்ளத்தராய் அருகே சென்று 'படியாய்க்கிடந்து உன் பவளவாய் காண்பேனே' (பெருமாள் திருமொழி 4-9) என்று குலசேகராழ்வாரின் பாரிப்பை அனுஸந்தித்துக் கொண்டு அங்குள்ள பொற் படியைக் குலசேகராழ்வாராகவே பாவித்து அதனைத் தாண்டாமல் அதனருகிலே நின்று முற்கூறிய திரு வாய்மொழியில் ஆறும்பத்து பத்தாந்திருவாய்மொழியை முதலிலிருந்து அனுஸந்தித்து வந்து அதன் பத்தாம் பாசுரத்தில் கூறியருளிபடி 'அலர்மேல்மங்கையுறை மார்பா உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்' என்று பிராட்டியைப் புருஷகாரமாக (சிபாரிசு செய்பவளாக) முன்னிட்டுப் (பெருமாளைத் தஞ்சமாகப் பற்றுதலாகிய) பிரபத்தியைச் செய்து, திருவாபரணங்களின் அழகையும் திருவடி தொடங் கித் திருமுடிவரையிலான திவ்யமான அழகையும் அனு பவித்துக்கொண்டிருக்க, பின்பு திருவேங்கடமுடையான் தீர்த்தம் ப்ரஸாதம் ஸ்ரீசடகோபன் உடுத்துக்களைந்த பீதக வாடை எப்போதும் அர்ச்சித்த மலர்க்கூட்டங்களினால்

கமகமவென்று பரிமளம் வீசப்பெற்ற தன் திருவடித்தா மரையிணை ஆகியவற்றை அருளுதல் முதலான உபசா ரத்தினால் கௌரவித்து, 'வாரீர் விண்ணப்பம் செய்யும் அரையரே நம்மிராமாநுச முனிவரின் திவ்யப்பிரபந்தாசா ரியரான நீர் நமது எல்லையற்ற அன்புக்குக் கொள்கலமா யிருக்கிறீர்' என்று கூறிய பின்பு 'வ்யாஸ பராசரர்களால் முன்பு பணிக்கப்பட்ட நூல்கள் போல், முதன்முதலில் முத லாழ்வார்கள் எனப்படும் பொய்கையார் பூதத்தார் பேயார் என்று பெயர் பெற்ற ஆழ்வார்களால் அருளிச் செய்யப் பட்டு நம்மைப் பற்றியவையும் நமக்கு மிகப்பிரியமான வையுமான திவ்ய ப்ரபந்தப்பாசுரங்களில் ஏதாவதுதொரு பாசுரத்தைக் கானம் செய்யக்கடவீர்' என்று நியமிக்க, அரையர் மிகவும் நீசனான அடியேனை, ஆழ்வார்களிடம் தான் வைத்துள்ள அன்புக்கு வசப்பட்ட பகவான் இங் ஙனம் நியமித்தருளுகிறானென்றெண்ணிப் பெருமகிழ்ச்சி கொண்டு முதலாழ்வார்கள் அருளிய பிரபந்தங்களில் முதற்பாட்டு முடிவுப்பாட்டுக்களையும் இரண்டாந்திருவந் தாதியில் ('மனத்துள்ளான் வேங்கடத்தான்' 'நெறியார் குழல் கற்றை') இருபத்தேழாம் பாசுரத்தையும் ஐம்பத்து மூன்றும் பாசுரத்தையும் தேவகான முறைப்படிப்பாடி, அத னால் முத்திபெற்றவன் ஸாமகானத்தினால் பரமபதநா தனை மகிழ்விப்பது போன்று திருவேங்கடமுடையானை மகிழ்விக்க, அதற்கு மிக மகிழ்ந்த பகவான் மறுபடியும் தீர்த்தம் ஸ்ரீசடகோபன் முதலியவைகளை ஸாதித்து உபசரிக்கப்பெற்றுத் திருப்தியடைந்திருக்க, பின்பு அனந் தாழ்வான் 'வாரீர் ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரே தேவரீர் நாளை முதலாக இங்கு நடைபெறும் திருவத் யயனோத்ஸவத்தில் ஆழ்வாரருளிச் செயல்களைத் திரு வேங்கடநாதன் திருச்செவிகட்கு இனிமையாகத் தேவகான முறைப்படிப்பாடக்கடவீர்' என்று விண்ணப்பிக்க, அது கேட்ட அரையர் அதனைத் திருவேங்கடவனது திரு வாணையாகவே கருதி மறுநாள் தொடங்கிப் பெரியாழ் வார் அருளிய திருப்பல்லாண்டு முதலாக முறைப்படி

நாள்தோறும் திவ்யப்பிரபந்தங்களைப் பாடி மனநிறைவு பெற்று உத்ஸவம் முடிந்தவுடன் திருமலையனந்தாழ்வானால் அன்போடு விசேஷமாகக் கௌரவிக்கப்பெற்றுத் திருவேங்கடமுடையானிடம் அனுமதிகொண்டு திருவரங்கம் சென்று சேர்ந்து ஸ்ரீராமாநுஜ முனிவரிடம் சென்று அவரால் வணங்குதல் முதலியவற்றால் கௌரவிக்கப் பெற்றவராய், வாரீர் இராமாநுச முனிவரே தேவரீருக்கு திவ்ய ப்ரபந்தங்களை உபகரித்தேனென்பதனால் என்னிடம் திருவேங்கடவன் செய்த திருவருளின் பெருமை வாசகங்கட்கு எட்டாதது' என்று கூறி, திருவேங்கடமுடையான் முதலாழ்வார்களருளிய திவ்யப்பிரபந்தங்களைப் பாடும்படிக் கட்டளையிட்டதையும் பின்பு திருமலையனந்தாழ்வான் அத்யயனோத்ஸவத்தில் அருளிச் செயல் முழுவதையும் பாடுமாறு பணித்ததையும் மேலும் நடந்த எல்லாவற்றையும் ராமாநுஜமுனிவரிடம் தெரிவித்தனர்.

இவ்வரையரைப் பற்றிப் பெரியோர் ஒரு ச்லோகத்தை அருளினார். அதன் கருத்து - யாவரொரு கவிஞர்பெருமான் ராமாநுஜ முனிவருக்கு நம்மாழ்வாருடைய நல்ல ஸ்ரீஸூக்திகளை உபதேசித்தாரோ, யாவரொருவர் திருவேங்கடமுடையானது திருவாணை கொண்டு அவர் முன்பே அயோநிஜரான (ஒருதாய் வயிற்றில் பிறவாத) முதலாழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளைத் தேவகானத்தில் பக்தியோடு பாடினாரோ, அத்தகைய முநிவாஹனரென்னும் பெயர் பெற்றவரும் ஸ்ரீமந்நாதமுனிகளின் குலத்தில் உதித்தவருமான திருவரங்கப்பெருமாளரையரென்ற ஆசாரியரை ஸேவிக்கிறேன் என்பதாகும்.

பின்பு பகவத்ராமானுஜமுனிவரும் அரையர் கூறிய இவையனைத்தும் கேட்டு மிக மகிழ்ச்சியடைந்து திருவுள்ளத்தில் ஆராய்ந்து, முதலாழ்வார் மூவரும் தம் பிரபந்தங்களில்,

முதல் திருவந்தாதி - இருபத்தாறும் பாசுரத்தில் - (செல்வம் வேணுமென்னும் ஆசையினால்) உயர்வாரும்,

(கைவல்ய மோக்ஷமே போதும் எம்பெருமான் வேண்டா மென்றெண்ணி) அகன்று செல்வாரும், இனிய திருத்து ழாய்மாலையணிந்த பெருமாளை அகலாத(தம்) நிலையை நினைந்து எப்போதும் தொழு(ம் முக்தியை விரும்பு) மவரும் ஆகிய இவர்களுடைய பாவமாகிய நெருப்பை அணைக் கும் திருவேங்கடமலைதான் நித்ய சூரிகளின் மனமா கிய விளக்கை (பெருமானது நீர்மையைக்காண இங்கு வாருங்கள் என்று) தூண்டுகின்ற மலையாகும் என்றும், முப்பத்தேழாம் பாசுரத்தில் - ஒவ்வொரு திசையிலும் உள்ள வைதிகர்கள் வந்து ஸேவிக்குமிடமான திருவேங்கட மலையே (பாரதப்போரில்) வெண்சங்கமூதும் வாயனாய்த் தன்னையடைந்தவரிடம் மையல்கொண்ட பெருமான் உகந் தருளிய ஊராகும் - என்றும், எழுபத்தாறும் பாசுரத்தில் - பூமியையளந்த நீர்மையை உடைய பெருமான் எழுந்தருளி யிருக்கும் திருவேங்கடமலை, ஒரு குறையும் நேராதவாறு பரமபதத்தை அளிக்கும் என்றும், தொண்ணூற்றொன்பதாம் பாசுரத்தில் - திருப்பாற்கடல்வெள்ளத்தில் வசிப்பவனும் திருவேங்கடமலையில் பொருந்தியுள்ளவனுமான திருமால் உள்ளத்தில் உள்ளானென்று நெஞ்சே நினைக்கக்கடவாய் என்றும்,

இரண்டாந் திருவந்தாதி - இருபத்தைந்தாம் பாசு ரத்தில் - பரமபதவாஸிகளான நித்யசூரிகளின் துதி யினால் உயர்ந்த இயற்கையான நற்குணங்களையுடைய திருமால் வந்து நின்ற இடம், மூங்கில்கள் ஓங்கி வளரப்பெற்ற குளிர்ந்த சாரலைக் கொண்ட வேங்கடம லையாகும் என்றும், முப்பத்து மூன்றும் பாசுரத்தில், என் சிந்தை திருத்துழாய்மாலையணிந்த பெருமானுடைய திரு நாமங்களைப் பலகால் நினைப்பதில் துணிவுகொண்டது. எனது உடல் அவனைப் பலகால் பணிவதில் துணிவு கொண்டது. எனது வாயும் மூங்கில்கள் உயரப்பெற்ற குளிர்ந்த சாரலைக்கொண்ட மிடுக்குடைய வேங்கடத்திலே யுள்ளவனுடைய குணகணங்களைச் சொல்லும் வழியிலே சொல்லுவதில் துணிவுகொண்டது என்றும், ஐம்பத்து

மூன்றும் பாசுரத்தில், வேங்கடமே நாங்கள் ஆதரிக்கும் மலையாகும் - என்றும், எழுபத்தைந்தாம் பாசுரத்தில் - மேகத்தையொத்த மேனிநிறத்தைக்கொண்ட பெருமானுடைய மலை திருவேங்கடமன்றோ என்றும்,

மூன்றும் திருவந்தாதி - முப்பத்தொன்பதாம் பாசுரத்தில் - சந்திரமண்டலத்திலே கிட்டின வெள்ளத்தையுடைய அருவிகளின் மிக்க ஒலியையுடைய நீரைக் கொண்டதான திருவேங்கடமலையில் வாழும் எம்பெருமான் (எனது) உள்ளத்திலே உள்ளான் - என்றும், அறுபத்தொன்பதாம் பாசுரத்தில் - (என்மகள்) மலையைக் கூறும் சந்தருப்பங்களில் (மற்றமலைகளைப் பாடாமல்) வேங்கடமலையைப் பாடுகின்றாள் - என்றும் அருளிச்செய்வதனாலும், இவ்வாறே பல பாசுரங்களிலும் திருவேங்கடமலையையும் அஃதுடையானையும் விசேஷமாக அருளிச்செய்யக்காண்கையினாலும், (முதலாழ்வார்கள்) திருவேங்கடத்தையும் அங்கு அனைவர்க்கும் எளியவனாக நித்யஸந்நிதி பண்ணிக்கொண்டிருக்கும் பெருமானையும் தமது நித்யானுபவத்திற்கு இலக்காயுள்ளவனாகத் தாமே அருளிச்செய்கின்றனர்.

இங்ஙனமே, அவர்கள் வேங்கடயாத்திரை செய்து அதன் தாழ்வரைகளில் வெகுநாட்கள் மங்களாசாஸனத்தில் ஊன்றியவராய்ப் பகவானை அனுபவித்துக்கொண்டிருந்தனரென்று பார்க்கவ புராணமும் கூறுகிறது.

அதற்குப்பிறகு, திருமங்கையாழ்வாரும் - அம்முதலாழ்வார்களின் திருவுள்ளக்கருத்தைப் பின்சென்று பெரியதிருமொழி இரண்டாம் பத்து எட்டாந் திருமொழி இரண்டாம் பாட்டிலுள்ள '(பிறமொழிக் கலப்பற்றதனால்) விரும்பத்தக்க தமிழ்ப்பாசுரங்களைப் பாடுமவர்கள் வணங்குந் தேவனாகத் திருவேங்கடவனைத் தெரிவிக்கிற 'செந்தமிழ்பாடுவார் தாம் வணங்கும் தேவர் இவர் கொல்' என்ற தம் ஸ்ரீஸூக்தியினால், விரும்பத்தக்க தமிழ்ப்பாட்டுக்களைப் பாடுமவர்களாக இசையப்பெற்ற முதலாழ்வார் மூவர்க்கும் திருவேங்கடமுடையானே அனுபவத்திற்கு இலக்

கான பொருள் என்று வெளிப்படுத்தியுள்ளார் என்னும் இவ்வம்சமும் பெரிய பெருமாள் சிஷ்யபரம்பரையின் உபதேசத்தினால் அறியப்படுகிறது.

ஆகையினால் முதலாழ்வார்களுடைய பிரபந்தங்கள் (மூன்று திருவந்தாதிகளும்) அவர்களின் திருவுள்ளக்கருத்தின் திண்மைக்குச் சேர, திருவேங்கடமுடையான் ஒருவனையே முக்கிய விஷயமாகக்கொண்டவை என்று அறியக்கிடக்கின்றது.

ஆதலால்தான் திருவேங்கடமுடையானும் அவர்களுடைய பாட்டுக்களையே கேட்கவேணுமென்று, ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரை அவற்றைப் பாடுமாறு நியமித்தான் என்று நினைத்துக்கொண்டு,

## திருமலையில் அரையரை நியமித்தல்:

பகவத் ராமானுஜர் ஸ்ரீமந்நாத முனிவம்சத்தில் தோன்றிய ஒரு அரையரை அழைத்து அவருக்குத் திருவேங்கடநாதரரையர் (=மலைகினியநின்றாரரையர்) என்று திருநாமம் சாத்தி “வாரீர் மலைகினிய நின்றாரரையரே? இனி நீர் திருவேங்கடமலையில் நித்யவாஸம் செய்துகொண்டு ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களைத் தேவகான முறைப்படித் தினந்தோறும் பாடி அப்பெருமானை உகப்பித்து வாரும்.

திருவேங்கடநாதன் ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரைக் குறித்து, முதலாழ்வார் மூவரும் தன்னைப் பற்றி அருளிய பாசுரங்களை முதலில் பாடும்படி நேராகவே நியமித்தனால், இனிமேல் ஆண்டுதோறும் நடக்கும் திருவத்யயனோத்ஸவம் முதலிய காலங்களில் நாலாயிர திவ்யப்பிரபந்தம் முழுவதையும் ஓதும் ஸந்தர்ப்பங்களில் திருவேங்கடமலையாகிய திவ்யதேசத்தை முக்கிய விஷயமாகக் கொண்ட முதலாழ்வார்களின் பிரபந்தங்களை ஆரம்பித்து இயற்பா முழுவதையும் முதல் நாளில் ஓதி, மறுநாள் முதலாக ஸ்ரீரங்கநாதனுடைய திருக்கோவிலில் போல்

பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டு தொடங்கி மற்றப்பிரபந்தங்களை (முதலாயிரத்தையும் பெரிய திருமொழியையும் இருதாண்டகங்களையும்) ஓதி, அதன்பிறகு ஏகாதசி முதலாகப் பத்துநாள்களில் ஒவ்வொரு நாளும் திருவாய்மொழியில் ஒவ்வொரு பத்தாக வரிசைப்படியே ஓதி முடித்து அதன் மறுநாளில், முன்பு நம்மாழ்வார் திருவாய்மொழி மூன்றும்பத்து மூன்றும் பதிகம் முதற்பாசுரத்தில் பாரித்த - திருவேங்கடமுடையானுக்கு எல்லாத் தேசங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் அடியவன் செய்யத்தக்க எல்லாத்தொண்டுகளையும் அவ்வாழ்வாருடைய ஆசையைப் பூர்த்தி செய்வதற்காகச் செய்துவருமவரும், முக்திபெற விரும்பும் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவர்க்கும் திவ்யப்பிரபந்தானுஸந்தானம் கைகூடுவதற்காக அப்பிரபந்தங்களைப் பிரவசனம் செய்து (கற்பித்து) வருமவரும், நம்மாழ்வார் திறத்தில் மதுரகவியாழ்வார்போல் சரமபர்வநிஷ்டையை (ஆசார்ய கைங்கரியத்தில் உறுதியை) உடையவரும், அவ்வுறுதியை அறிவிக்கிற மதுரகவிகளின் திவ்யப்பிரபந்தத்தை அதில் கூறியபடி ஆசரித்துக்கொண்டே ஊக்கமாக அனுஸந்தித்துவருமவரும், அவ்வுறுதியைப் பெற்றதனாலுண்டான - திருவேங்கடமுடையான் கடாக்ஷத்திற்கு முக்கிய பாத்ரமாகையாலே தமக்கும் தம்மைச் சேர்ந்தவர்கட்கும் மதுரகவிதாஸனென்ற பெயரையே எப்போதும் தரிக்கத்தக்கதாக நியமித்தவருமான அனந்தாழ்வானால் ஆதரத்துடன் அனுஸந்திக்கப்படுகின்ற கண்ணிநுண்சிறுத்தாம்பை முக்கியமாகத் தனியே அனுஸந்தியும்” என்று கட்டளை செய்து அனந்தாழ்வானுக்கு ஒரு திருமுகமும் எழுதிக்கொடுத்து அந்த அரையரைத் திருமலைக்குப் புறப்படச் செய்தருளினார்.

அதன்பிறகு அந்த அரையர் அத்திருமுகப்பத்திரிகையைச் சிரமேற்கொண்டு குடும்பத்துடன் சென்று திருமலை சேர்ந்து முதலில் அனந்தாழ்வானை அடைந்து ஒருவர்க்கொருவர் வணங்குதல் க்ஷேமம் விசாரித்தல் முதலியவை நடந்த பின்பு, ஸ்ரீராமானுஜமுனிவர் கொடுத்தனுப்பிய திரு

முகத்தையும் அவரிடம் கொடுத்து அம்முனிவர் சொல்லியனுப்பிய செய்தி அனைத்தையும் விண்ணப்பித்தனர்.

பின்பு அனந்தாழ்வான் அத்திருமுகத்தைத் தலையால் தாங்கி மிக்க ஆதரத்துடன் ஸேவித்து (வாசித்து) மலைகினியநின்றாரரையரோடு திருவேங்கடமுடையான் ஸந்நிதிக்குச் சென்று, 'வாரீர் திருவேங்கடநாதரே பகவத் ராமாநுஜமுனிவர் ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களை ஒவ்வொருநாளிலும், திருவத்யயனோத்ஸவத்திலும் தேவரீர் திருமுன்பே அனுஸந்திக்கவேணுமென்று கட்டளையிட்டு தேவரீர் திருநாமத்தைச் சாத்தி ஒரு அரையரை அனுப்பி, ஸ்ரீமுகமும் எழுதிக்கொடுத்தனுப்பி அதன்மூலமாக, தேவரீர் ஸந்நிதியில் திவ்யப்பிரபந்தம் ஓதும்படி ஏற்பாடு செய்யுமாறு அடியேனுக்கு உத்தரவிட்டிருக்கிறார். அவருடைய உத்தரவை அடியேன் நிறைவேற்றுமாறு தேவரீர் கருணைகொண்டு அன்புடன் இசைய வேண்டும்' என்று பெருமானை வேண்டிநிற்க, அப்பெருமானும் அர்ச்சகர் வாயிலாக, 'வாரீர் அனந்தாழ்வானே ஸ்ரீராமானுஜருடைய தயைக்குத் தனியிலக்கான உம்மிடத்தில் நமது கருணைவெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. ராமாநுஜமுனிவர் நியமித்த திவ்யப்பிரந்தானுஸந்தானத்தை அவர் விதித்தபடியே ஏற்படுத்தி உமது விருப்பப்படி நிறைவேற்றக்கடவீர். நாமும் அவரது நியமனத்தைப் ப்ரமாதரத்தோடு ஏற்றுக்கொள்ளுகிறோம்' என்று நியமிக்க, அனந்தாழ்வான், திருமுகத்தில் எழுதப்பட்ட திருவாணையின்படி ஒவ்வோராண்டும் அத்யயனோத்ஸவத்தில் முதலில் முதலாழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களைத் தொடங்கி இயற்பாவை முழுதும் ஸேவித்துப் பின்பு மற்ற ஆழ்வாரருளிச் செயல்களை ஸேவித்துப் பிறகு திருவாய்மொழியைப் பத்துநாட்களில் ஒவ்வொரு பத்தாக ஸேவித்து முடித்து, அதன் மறுநாளில் தமக்கு இஷ்டமான மதுரகவிகளின் கண்ணிநுண் சிறுத்தாம்பை முக்கியமாகத் தனியே ஸேவிக்கத்தக்கதாக வகம்பு செய்து அப்படியே நடத்தி வைத்துத் திருவேங்கடமுடையானை

மகிழ்வித்துக்கொண்டு அந்த மலைகிளியநின்றுரரையரை அத்திருமலையிலேயே வாழுமாறு செய்தார்.

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸ மாலையில் ஏழாங்கொத்து முற்றும்.

(இதிஹாஸமாலை முடிவுபெற்றது.)

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## மொழிபெயர்ப்பாளரின் முடிவுரை:

அறிவில் மிகச் சிறந்த அனந்தார்யர் தொடுத்த 'ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலா' என்ற வடமொழிநூல், திருவேங்கடமுடையான் எம்பெருமானார் திருமலை அனந் தாழ்வானாகிய இவர்களின் இன்னருளைத் துணையாகக் கொண்டு, அறிவில் மிகத் தாழ்ந்த அடியேனால் இயன்ற வரையில் கவனமாகவே தமிழில் மொழிபெயர்க்கப்பெற்று 'திருவேங்கடமலை வரலாற்று மாலை' என்னும் பெயரால் 1982 மே மாதம் தொடங்கி 1985 நவம்பர் மாதம் வரை யில் திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழில் சிறிது சிறிதாக வெளியிடப்பட்டு முடிவு பெற்றது. இது தன்னில் அடியேனுடைய அறியாமை அஜாக்கிரதை முத லிய காரணங்களால் நேர்ந்த சொற்குற்ற பொருட்குற்றங் களை அறிஞர் பெருமக்கள் தமது இயற்கையின்னருளால் பொறுத்தருளவேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

இவ்வடமொழி நூலை இயற்றிய அனந்தார்யர், பகவத்ராமானுஜருடைய உத்தரவின்படியே திருமலைக்கு வந்து திருவேங்கடமுடையானுக்குப் புஷ்பகைங்கர்யம் செய்தவராகவும், தமது குருவான அவ்விராமாநுச முனிவரு டைய சிலதருமக் கட்டளைகளை நிறைவேற்றியவராகவும் இந்நூலில் 5, 6, 7ஆம் ஸ்தபகங்களில் கூறப்பட்ட திருமலை யனந்தாழ்வானகவே இருக்கலாமென்று சில காரணங்கள் காட்டி எழுதியிருத்தலை இந்நூலின் முன்னுரையில் காணுமாறு வாசகர்கள் வேண்டப்படுகிறார்கள்.

அடியேனுடைய ஆசாரியரும் உபய வேதாந்த ரஹஸ்யக்ரந்தங்களில் சிறந்த புலமை பெற்றவரும் தி.தி. வேதபாடசாலையில் வெகு நாட்கள் திவ்ய பிர்பந்த ஸ்ரீபாஞ்சராத்ராகமப் பேராசிரியராக விளங்கியவருமான கீர்த்தி மூர்த்தி கச்சிக் கடாம்பி யாமுனாசார்யஸ்வாமி, தம்மிடம் பிறமதத்தவர் ஒருவர் தாமியற்றியதொரு சிறுநூலைக் கொடுக்க, அதில் திருவேங்கடமுடையானை முருகனாகவும் சிவபெருமானாகவும், எழுதியிருக்கக் கண்டு அவரெதிரிலேயே அடியேனிடம் ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலா என்னும் வடமொழி நூலுக்குத் தமிழிலும் தெலுங்கிலும் அனுவாதம் வெளிவந்தாலன்றி இப்படிப்பட்ட திரிபுணர்ச்சிகள் நீங்கா' என்று கூறுயருளினார்.

அவரது திருவாக்கு இன்று பலிக்கப்பெற்று அந்நூல் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வெளிவந்து விட்டது. தெலுங்கில் மொழி பெயர்ப்பும், ஓய்வு பெற்ற எஸ்.வி. ஓரியெண்டல் காலேஜ் ஸாஹித்யத் தலைமைப் பேராசிரியரும் பன்மொழிப்புலவருமான ஸ்ரீமான் N.C.V. நரஸிம்ஹாசாரியர், எம்.ஏ., சிரோமணி வித்வான் அவர்களால் இயற்றப்பட்டு முடிவடைந்து வெளிவந்து விட்டது. அடியேன் தமிழ்மொழி பெயர்ப்பு எழுதுங்கால் வடமொழி முதனூலில் நேர்ந்த சில ஐயங்களைப்போக்கி உதவி புரிந்த அவ்வாசாரியரவர்கள் திறத்தில் வணக்கத்துடன் நன்றியை விண்ணபித்துக்கொண்டு விநயத்துடன் விடைபெறுகிறேன்.

முற்றும்.

T.T.D. Religious Publication Series No.465 Price Rs.30/-

ஸ்ரீ:

**'திருவேங்கடமலை வரலாற்று மாலை'**

என்னும் இந்நூலில் திருவேங்கட மலை திருமாலின் திருப்பதியே என்றும், ஸ்வாமி புஷ்கரிணி திருமாலின் தீர்த்தமே என்றும், மலையப்பன் விஷ்ணுமூர்த்தியே என்றும், இராமாநுஜரால்நிறுவப்பட்ட செய்திகள் அடங்கியுள்ளன. மேலும், மூலவருக்கு வெள்ளிக் கிழமைத் திருமஞ்சனம், திருமண்காப்பு, திருமார்பில் லக்ஷ்மீ பிரதிஷ்டை, கீழ்த்திருப்பதியில் கோவிந்தராஜ ஸ்வாமி ப்ரதிஷ்டை, திருமலை அனந்தாழ்வான் வரலாறு, பெரிய ஜீயர் ஸ்வாமிகளின் தொண்டு, திருமலையில் மக்கள் பின்பற்றவேண்டிய ஒழுங்கு முறைகள் ஆகிய பல முக்கியமான செய்திகள் அடங்கிய பெட்டகமாகும்.

ஒன்பது நூற்றாண்டுகளுக்கு முன்பு இராமாநுசரின் சீடரான திருமலை அனந்தாழ்வானால் வடமொழியில் 'ஸ்ரீவேங்கடாசல மகாத்மியம்' என்னும் பெயரில் இயற்றப்பட்ட இந்நூலை, அத்திருமலை அனந்தாழ்வான் வம்சத்தவரும், திருப்பதி திருவேங்கடவன் கீழ்த்திசைக் கல்லூரி முன்னாள் நியாய சாஸ்திரத்துறைத் தலைமை விரிவுரையாளருமான ஸ்ரீமான். சிரோமணி வித்வான் உ.வே. தி.அ. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி தமிழாக்கம் செய்தது பெருமையுடையதாகும். காஞ்சீ மஹாவித்வான் ப்ர.ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் பல வைணவ நூற்பதிப்புக்கு உசாத்துணையாகயிருந்த இவ்வாசிரியர், பல கட்டுரைகள் எழுதுவதன் மூலமும் உபன்யாஸங்கள் மூலமும் வைணவத்தை வளர்த்து வருபவராவர்.

இந்நூல் திருமலையின் பெருமையை அறியவும் திருமலை அப்பனின் அருள் பெறவும் வழிவகுக்கும் சிறப்புடையதாகும்.

Printed and published by Dr. I.V. Subba Rao, I.A.S., Executive Officer, T.T.Devasthanams and Printed at T.T.D. Press, Tirupati.